உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

# சிவஞானசித்தியார்

## பரபக்கம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனர்

1955.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி
தழைக மாதோ"

திருவாவடுதுறையாதீனவெளியீடு — 91.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனுர்
அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் பரபக்கம்

மூலமும்

திருவொற்றியூர் – தத்துவப்பிரகாசர்
உரையும்

மெய்கண்டார் யாண்டு
732.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

திருவாவடுதுறையாதீனவெளியீடு — 91.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் பரபக்கம்

## மூலமும் உரையும்

திருக்கயிலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீனத்து

21-வது குருமஹாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறையாதீன வித்துவான்

**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**

பலபிரதிகளைக்கொண்டு

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.



1955.

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந் தீயிரும்பு
பாணி யுப்பு
விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல்
விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிறிவரிய வத்துவிதக்
கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச் சிவாயகுரு
சரணம் போற்றி.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமகாசன்னிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**

உ

சிவமயம்

# முகவுரை

---

## தேவாரம்

*திருச்சிற்றம்பலம்*

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே.

*திருச்சிற்றம்பலம்*

— திருநாவுக்கரசு சுவாமிகள்.

மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்றும் சிவஞானசித்தியார் என்னும் சித்தாந்த சைவ நூல் என்பர். சித்தாந்தசைவசாத்திரங்கள் இவை என்பதைக் கீழ்வரும் செய்யுள் உணர்த்தும்

"உந்தி களிறு வுயர்போதம் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம் – வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று." என்பது அது.

'சிவத்துக்குமேல் தெய்வமில்லை, சித்திக்கு மேல் நூலில்லை' என்னும் பழமொழி சிவஞானசித்தியாரின் சிறப்பை நன்கு வலியுறுத்தும். மற்றும், "பார்விரிந்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே — ஓர்விருத்தப் பாதிபோ தும்" என்றருளிச் செய்தனர் சிவபோக சாரமுடையார். "பாதி விருத்தத்தால் இப் பார்விருத்த மாக வுண்மை — சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தென்னாளோ" என்று தாயுமானவ சுவாமிகள் அருளினர். திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் இதனைச் "சிவாகமார்த்தங்களுக்கெல்லாம் உரையாணி" எனப் போற்றியருளினர். சைவசமயம் முழுமுதற் பரம்பொருளைச் சிவம் எனவும், உயிர்களைப் பசு எனவும், அறியாமையைச் செய்யும் இருளைப்பாசம் எனவும் அறுதியிட்டுக் கூறும் சித்தாந்தசைவத்தில் பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களின் ஆராய்ச்சி செய்யப்பெறும்.

ஸ்ரீ மெய்கண்டதேவநாயனர் அருளிச்செய்த சிவஞானபோதத்தை நன்கு விரித்துத் தடைவிடைகளால் தெளிவிப்பது சிவஞானசித்தியார் என்னும் இந்த நூலாம். இதனை அருளிச்செய்தவர்கள் ஸ்ரீ அருணந்திதேவநாயனர். இது சிவஞானபோதத்தின் வழிநூல். இது பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பெரும் பகுதியினையுடையது. பரபக்கம் பிற சமயக் கொள்கைகளை எடுத்துக்கூறி அவற்றின் பொருந்தாமையை நன்கு விளக்கிக்காட்டும். சுபக்கம் சித்தாந்த சைவ வுண்மைகளையே நன்கு வலியுறுத்தி நிலைநாட்டும். பரபக்கம் — 301 திருவிருத்தங்களையும், சுபக்கம் — 328 திருவிருத்தங்களையும் கொண்டு விளங்குவது.

இனி, சிவஞானசித்தியார் பரபக்கப் பகுதியாகிய இந்நூலுள் 1. உலகாயதம், 2. சௌத்திராந்திகம், 3. யோகாசாரம், 4. மாத்தியமிகம், 5. வைபாடிகம், 6. நிகண்டவாதம், 7. ஆசீவகம், 8. பட்டாசாரியம், 9. பிரபாகரம், 10. சத்தப்பிரமவாதம், 11. மாயாவாதம், 12. பாற்கரியம், 13. நிரீச்சுரசாங்கியம், 14. பாஞ்சராத்திரம் முதலிய சமயக்கொள்கைகளும் அவைகளின் பொருந்தாமையும் ஆராயப்பட்டுள்ளன.

ஆன்மாக்கள் அநாதியாய் உள்ளவை. அவை எண்ணில்லாதன. ஆன்மாக்களுக்கு அறிவு இச்சை தொழில்கள் இயல்பாகவே உள்ளன. அவைகளை அநாதியே பலதிறப்படத் தடை செய்திருப்பது ஆணவமலம். ஆன்மாக்கள் மாயையில் வசிப்பன. கடவுள் கைம்மாறில்லாத கருணைப்பெருக்கால் ஆன்மாக்களின் பந்தத்தை நீக்கத் திருவுளங்கொண்டு படைத்தல் முதலிய ஐந்தொழில் இயற்றியருளுவர். அவர் மாயையினின்றும் ஆன்மாக்களுக்குத் தநு கரண புவன போகங்களைத் தமது சத்தியால் தோற்றுவித்து உபகரிக்கின்றார். அவைகளின் உதவியால் உயிர்களுக்கு அறிவு இச்சை செயல்கள் முறை முறையாக விளங்குவன. அவ்வாறு விளங்குங்காலத்திலே உயிர்கள் பல இன்ப நிலைகளை அடைகின்றன. அவைகளை அடைதற்கு ஏற்ற வழிகளே சமயங்கள் என்று பேசப்படும் உலகத்திலே உள்ள சமயங்கள் பல ஆகும்.

சமயங்கள், மனிதர்கள் அறிவு விளக்கம் பெற்று நன்னெறியிலே ஒழுகி, மேலான சுகவாழ்வை அடைதற்குச் சாதகமாயுள்ள ஞான ஆலயங்களாம். சமயங்கள்

நாம் கண் முதலிய இந்திரியங்களால் அறியும் அசேதனப் பிரபஞ்சத்தின் சொரூபத்தையும், கண் முதலிய இந்திரியங்களால் அறியவாராமல் அநுமானப் பிரமாணத்தால் அறியக்கிடக்கும் சேதனப்பிரபஞ்சமாகிய உயிரின் சொரூபத்தையும், முழுமுதற் கடவுளாகிய பரமான்மாவின் சொரூபத்தையும் ஐயம் திரிபு இல்லாமல் அவரவர் தகுதிக்கு ஏற்பத் தெளிவாக விளக்கிக் காட்டுகின்ற காரணத்தினால் அவை ஞான தீபமாம். சமயம் மனிதர் சரீர சுகத்திற்கும், ஆன்ம சுகத்திற்கும் அநுகூலமாகும் நன்மைகளை விதித்து அவ்விரண்டு சுகத்திற்கும் பிரதிகூலமாகும் தீமைகளை விலக்கி அவரைக்காக்கும் ஞான அரணமாம். சமயம் மனிதர் தாம் பெறும் கல்வி, செல்வம், அதிகாரம், முதலிய பேறுகளுக்கு ஏற்றபடி தாரதம்மியம் பெற்று அன்புசெய்து அளவளாவி வாழ்தற்குரிய லௌகிக வைதிக ஒழுக்கங்களைப் போதிக்கும் நீதி நிலயமாம். சமயம் மனிதர்களுக்குக் கருமசாதனங்களை அறிவிக்கும் தந்திர கலாரூபமாம். சமயம் மனிதருக்கு நித்தியா நித்திய வஸ்து விவேகத்தினை உணர்த்தும் உபதேச கலாரூபமாம். சுருங்கச் சொல்லின் சமயம் மனிதர்களுடைய இகபரசுகங்களுக்கு இன்றியமையாத சாதகங்கள் எல்லாவற்றினையும் அவர்களுக்குக் குறைவறக் கொடுக்கும் சர்வசத்தப்பிரம ரூபமான ஒரு கற்பகதரு எனப்படும்.

சமயங்கள் புறப்புறச் சமயங்கள், புறச்சமயங்கள், அகப்புறச்சமயங்கள், அகச்சமயங்கள் என நால்வகைப் படும்.

புறப்புறச்சமயங்கள் வேதசிவாகமங்களாகிய ஆதி நூல்களைப் பிரமாணமாகக்கொள்ளா. புறச்சமயங்கள் வேதத்தை உடம்பட்டுச் சிவாகமத்தைப் பிரமாணமாகக் கொள்ளா. அகப்புறச்சமயங்கள் வேத சிவாகமங்களை உடம்பட்டு அவற்றோடு அவைகளுக்கு விரோதமான பசு நூல்களையும் பிரமாணமாகக்கொள்ளும். அகச் சமயங்கள் வேதசிவாகமங்களையே பரமப் பிரமாணமாகக் கொண்டு முத்திநிலைகளில் மாறுபடும்.

புறப்புறச்சமயங்களாவன: உலோகாயதம், நால் வகைப் பௌத்தம், ஆருகதம் என்னும் ஆறுமாம்.

நால்வகைப் பௌத்தமாவது மாத்தியமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம் என்பன.

ஆருகதத்தில் நிகண்டவாதம் என்னும் உட்பிரி வுண்டு. ஏசுமதம், மகம்மதியமதம் முதலிய புதிய மதங்கள் பலவும் புறப்புறச்சமயங்களிலே அடங்குவன வாம்

இனி, **1. உலகாயதமாவது:—** காட்சி அளவை ஒன்றே பிரமாணம். அதற்குப் பொருந்தாது உரைப் பன எல்லாம் பிரமாணம் ஆகா. காணப்படும் நிலம் நீர் தீ வளி என்னும் நான்கே தத்துவங்கள், இவை நித்தப்பொருள்கள். இவற்றின் சேர்க்கையால் ஆவதே உடம்பு. மண் முதலிய நான்கு பூதங்களின் சேர்க்கை யால் ஓர் அறிவு உண்டாம். உடம்பு வளர அவ்வறிவு வளரும், தேயத் தேயும். உடம்புக்கு இன்பதுன்பங் கள் இயல்பாக உள்ளன. ஆகலின், உடம்புக்கு வேறாக உயிர் உண்டு என்பதும், இன்பதுன்பங்களுக்குக்

காரணம் வினை என்பதும், உடம்போடு உயிரைக்கூட்டி வினைக்கு ஈடான இன்பதுன்பங்களைக் கொடுத்தற்கு ஒரு கடவுள் உண்டு என்பதும் பொய்யாம். அரசன் ஆணைக்குப் பொருந்தநடந்து, மங்கைப்பருவ மகளிரை மணந்து வாழ்வதே வாழ்க்கை. மகளிரது ஊடலை உணர்வதும் அதனைத் தீர்க்கும் வழியை அறிவதுமே கல்வி. ஊடியமகளிரை எண்ணி யெண்ணி உடல் மெலிதல், ஊடல் நீங்கும்பொருட்டு அவர் பாதங்களில் வீழ்ந்து வருந்திப் பிரார்த்தித்தல் இவையே பெருந் தவம். ஊடல் நீங்கிய மகளிரைப் புணர்ந்து அவாவே வடிவாய் வேறோர் உணர்ச்சியுமின்றி இன்புறுதலே முத்தி. இங்ஙனம் இன்புற்று வாழ்வாரே சீவன் முத்தர் ஆவார் என்பதேயாம். இது காட்சிவாதம் எனவும், சாருவாகம் எனவும் சொல்லப்படும்.

உலகாயதமதம்: தூலதேகான்மவாதம், சூக்குமதேகான்மவாதம், இந்திரியான்மவாதம், அந்தக்கரணான்மவாதம், பிராணான்மவாதம், சமுதாயவாதம் என்று பல திறப்படும் என்பர்.

பௌத்தமாவது:— உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லை. ஆதலால், சற்காரியவாதம் அடாது. ஞானமே ஆன்மா, அது நீரோட்டம் போலச் சந்தானமாய்க் கணந்தோறும் தோன்றி அழியும். அங்ஙனம் தோன்றியழியுங்காலைத்து மான்மத நாற்றம்போல, முற்கணத்தில் அழிவெய்தும் ஞானத்தில் தோன்றிய வாசனை பிற்கணத்தில் தோன்றும் ஞானத்தில் பற்றுதலால் அறிவு முதலாயின நிகழும்.

மற்றுமுள்ள பொருள்களெல்லாம் கணந்தோறும் தோன்றி அழியும். இந்த ஞானத்தில் தோன்றிய வாசனை அழிவதே முத்தி என்பதாம். ஞானம் கூடக் கெடுதல் முத்தி என்பாரும் உளர்.

பௌத்தம் கணபங்கவாதம் எனவும் படும். இப் பௌத்தமதத்தர் மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகர் என நால்வகைப்படுவர். இவர்கள் ஆதிபுத்தனாகிய மாத்தியமிகர் முதலியோரால் நிறுவப்பட்ட மதங்களை அநுட்டிப்பவர்கள். அந்த நால்வகையினரில் இந்த நூலில் முதற்கண் சௌத்திராந்திகன்மதம் ஆராயப்படும்.

**2.** சௌத்திராந்திகமாவது:— உலகத்துப் பொருள்களில் அகத்துப் பொருள்களைப்போலப் புறத்துத் தோன்றுவனவும் உள்பொருள்களே ஆம். ஆனால், அவைகாட்சிப்பொருள்களன்று. கணத்தில் தோன்றி அழியும் பொருள்கள் தத்தம் வடிவினை ஞானத்தின் வைத்திட்டு அழியும். ஞானத்துட்பற்றிய வடிவானே அங்ஙனம் அழிந்தபொருள்கள்வழியளவையின்வைத்து உணரப்படும். இவற்றிற்குக்காரணம் புறம் அகம் என்னும் இருவகைச் சமுதாயங்களாம். புறச்சமுதாயம் நிலம்முதலாயின. அவற்றிற்குக்காரணம்பரமாணுக்கள், அகச்சமுதாயம் சித்தமும் சித்தப்பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் ஐவகைப்படும் கந்தங்கள். அவை நாற்பத்துமூன்று வகையாக எண்ணப்பட்ட உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்பனவாம். கந்தம் என்பது சமூகம்: உலகம் முழுவதும் இவ்விரு வகைச்சமுதாயங்களுள் அடங்கும். இவற்றிற்கு

வேருய் ஆன்மா இல்லை. இவைகளே பந்ததுக்கமாவன. ஐவகைக்கந்தங்களும் அறக்கெடுவதே முத்தி என்பதாம்.

**3.** யோகாசாரமாவது :— உலகத்துப் பொருள்களில் புறப்பொருள்களெல்லாம் சூனியம். ஞானம் சூனியமன்று. ஞானம் உள்ளது. அது சாகாரம், நிராகாரம் என இருவகைப்படும். சாகாரஞானமாவது வட்டம் சதுரம் கறுப்பு சிவப்பு முதலிய வடிவிற்ருய் அகத்தேதோன்றும் ஞானம். நிராகாரஞானமாவது பந்தம் நீங்கியவழி அங்ஙனம் வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் எழுவதாகிய ஞானம். இத்தன்மைத்தாகிய ஞானமேயன்றிப் பொருளென வேறில்லை என்பதாம்.

பௌத்தமதத்தில் ஆசிரியன் மொழி உடம்படுதலை ஆசாரம் எனவும், அதற்குமேல் வினவுதலை யோகம் எனவும் குறியிட்டு வழங்குவர். ஆகலின், அவ்விரண்டானும் பெற்ற பெயர் யோகாசாரம் என்பது.

**4.** மாத்தியமிகமாவது :— உலகத்துப் பொருள்கள் உள்பொருளாயின் அழியா ; இல்பொருளாயின் தோன்ரு ; உள்ளவும் இல்லவுமாம் என்னின் முரணும். இரண்டும் அல்ல என்னில் உணர்ச்சிகூடா. ஆகலின், இந்த நான்கு பகுதியும் இன்மையின் எல்லாப்பொருளும் சூனியமே. அவைகள் மயக்கத்தால் காட்சிப் பொருள் போலப் புலப்படுகின்றன என்பதாம் இவ்வாறு ஆசிரியன் பிடகநூற்பொருள் உணர்த்தினன். உணர்த்தியவழி அதனை உண்மையாகக்கொண்டு மேல்

வினுவாது நிற்றலின் வந்தபெயர் மாத்தியமிகம் என்பது. மத்தியமநிலையையுடையது : காரணக்குறி : தத்திதபதம்.

**5.** வைபாடிகமாவது :— சௌத்திராந்திகத்தில் கூறியவாறு கொண்டு, புறப்பொருள் ஞானத்தால் அநுமித்து அறியற்பாற்றன்று, அது காட்சிப்பொருளே என்பதாம்.

புறப்பொருள் வழியளவையான் உணரப்படும் என ஆசிரியன் உணர்த்தினுன். அதனை மாணவன் உடம்படாது, ஞானம் தமக்குக் காட்சிப்பொருள் ஆகலானும், காட்சிப்பொருள் ஒன்றுமின்றுயின் நியதமான உடனிகழ்ச்சி உணர்ச்சிக்கு இடமின்மையால் வழியளவை நிகழாது ஆகலானும், இது மாறுகோள் உரை போலும் என்றுன். அதனுல் வந்தபெயர் இது. விபாடை — மாறுகோளுரை.

**6.** நிகண்டாவாதம், **7.** ஆசீவகம் என்னும் இரண்டும் ஆருகதமதமாம். ஆருகதமாவது:—சீவனும், அசீவனும், ஆச்சிரவமும், சமுவரமும், நிர்ச்சரமும், பந்தமும், வீடும் எனப்பதார்த்தங்கள் ஏழு உள்ளன. அவற்றுட் சீவன் அநாதிசித்தனும் முத்தனும் பெத்தனும் என மூவகைப்படும். இவற்றுள் அநாதிசித்தன் அருகக்கடவுள். முத்தன் மோகம் முதலிய பந்தத்தின் நீங்கியவன். மோகம் முதலியன — மோகம், அந்தராயம், கோத்திரம், நாமம், ஆயுஷ்யம், வேதனீயம், தரிசனுவரணீயம், ஞானுவரணீயம் என்பன. பெத்தன் — அவற்றுட்கட்டுண்டவன். இச்சீவன் எடுத்த

உடம்பளவின் வியாபகமாய் உடம்புதோறும் வெவ் வேறும் என்பது.

இனி அசீவன், புற்கலமும் ஆகாயமும் தன்மமும் அதன்மமும் என நான்கு வகைப்படும். அவற்றுள் உருவப்பொருளான நிலம் முதலிய நாற்பெரும் பூதமும், மரம் புல்லு முதலிய நிலையியற்பொருளும், பை முட்டை முதலியவற்றிற் பிறக்கும் இயங்கியற் பொருளும் எனப் புற்கலம் அறுவகைப்படும். இவற் றிற்குக் காரணம் பரமாணுக்கள். உலகாகாயமும் உலகம் கடந்த ஆகாயமும் என ஆகாயம் இருவகைப் படும். உலகங்களுக்கு உட்படும் ஆகாயம் உலகாகாயம் எனவும், உலகங்கட்குப் புறத்தே எல்லையின்றி உள்ளது உலகம் கடந்த ஆகாயம் எனவும் உணர்க. தன்மம் புற்கலத்தின் வேறாய் நன்மையைப் பயப்பது. அதன் மம் தீமையைப் பயப்பது. அசீவ பதார்த்தவகை நான்கும் இங்ஙனம் கண்டுகொள்க. இவையெல்லாம் அத்திகாயம் என்னும் வாய்பாடு கூட்டி வழங்கப்படும்.

மீமாஞ்சையாவது :— வேதம் ஒருவரால் செய்யப் பட்டதன்று. அநாதியே சுயம்புவாயுள்ளது. ஆகலின் வேதம் பிரமாணமாகும். அது விதியும், புனைந்துரை யும், மந்திரமும், குறியீடும் என நான்கு வகைப்படும். அவற்றுள், விதி அங்கியும் ஏனை மூன்றும் விதிக்கு அங்கமுமாம். விதிவாக்கியம் விதித்தலும் விலக்குத லும் என இருவகைப்படும். அவைபற்றிச் செய்யும் வினையும் அறமும் பாவமும் என இருதிறப்படும். வினை செய்தவர்க்கு வினையே துறக்கம் முதலிய பயன்களை உதவும். காமிய வினை காமியப்பயனைக் கொடுக்கும்.

நிஷ்காமியவினை முத்தியைக் கொடுக்கும். ஆன்மாக்களுக்கு வேருய்ப் பரமான்மா ஒருவன் உண்டு என்பதும், உலகம் தோன்றி அழியும் என்பதும் பொய். உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பதாம்.

இது மீமாஞ்சை நூலிற் கண்ட கொள்கை ஆதலின் மீமாஞ்சை எனப்பெற்றது.

மீமாஞ்சை வேதத்தில் ஞானகாண்டத்தை இகழ்ந்து கருமகாண்ட ஆராய்ச்சிசெய்வதற்கு எழுந்த நூல். இதுவும் வேதம் எனப்படும். பூர்வமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என இது இரு திறப்படும். மீமாஞ்சை நூல் செய்தவன் சைமினி பகவான். இது பிரமாணவியல், கருமபேதவியல், அங்காங்கி இயல், பிரயோகவியல், முறைமைப்பாட்டியல், பயனியல், மாட்டேற்றியல், ஊகவியல், விலக்கியல், பிரசங்கவியல் எனப் பன்னிரண்டு அத்தியாயங்களையுடையது. இதிலுள்ள சூத்திரங்கள் இரண்டாயிரத்து எழுநூற்று நாற்பத்தொன்பது. இந்நூலுக்குப் பாடியம் சபர முனிவரால் செய்யப்பட்டது. சூத்திரத்திற்கும் பாடியத்திற்கும் சிறுபான்மை வேறுபாடுகொண்டு பட்டாசாரியன் சூத்திரம்பற்றி வழிநூல் செய்தான். பட்டன் மாணுக்கனுகிய பிரபாகரன் பாடியமதம்பற்றி வழிநூல் செய்தான். பட்டாசாரிய மதத்திற்கும் பிரபாகர மதத்திற்கும் உள்ள வேறுபாடு இப்பரபக்கத்தில் நன்கு உணர்த்தப்படும்.

**8.** பட்டாசாரியன் மதமாவது :— கன்மமே பயன் கொடுக்கும். வேதத்துட் கூறப்பட்ட வேள்வி

முதலாயினவே தத்துவஞானத்தைக் காட்டும். நையாயிகம் கூறுவதுபோல முத்தியில் ஆநந்தம் உண்டு என்பதாம் இது சுவர்க்க முத்தி எனப்படும்.

**9.** பிரபாகரன் மதமாவது :— கன்ம நாசத்தில் அபூர்வம் என ஒன்று தோன்றி நின்று பயன் கொடுக்கும். அபூர்வமாகிய ஞானமும் கெட்டபோது வைசேடிகர் கூறுவதுபோலப் பாடாணம்போல் கிடப்பதே முத்தி என்பதாம். இது வினை கெடு முத்தி எனப் பெயர் பெறும்.

ஏகான்மவாதமாவது : வேதத்தின் கன்மகாண்டத்தை இகழ்ந்து ஞானகாண்டத்தைப் பிரமாணமாகக் கொண்டது. இது மாயாவாதம், பாற்கரியவாதம், கிரீடாப்பிரமவாதம், சத்தப்பிரமவாதம் என நான்கு வகைப்படும். இவற்றுள் இங்கே முதற்கண் கூறப்பட்டது சத்தப்பிரமவாதமாம். இந்த நால்வகைப்பட்ட ஏகான்மவாதநூல் செய்தவர் வியாத முனிவர்.

**10.** சத்தப்பிரமமாவது :— காரணமாகிய பரப்பிரமம் இறுதிக்காலத்தில் சத்தவடிவிற்றாய் இருக்கும். அஃது அவிச்சையினால் சடமும் சித்துமாய உலகங்களாய் விரியும். முடிவின்கண் சத்தமாத்திரையே உள்ளது என அறிவதே முத்தி என்பதாம்.

**11.** மாயாவாதமாவது :— சச்சிதானந்தமாய், நித்தியமாய், வியாபகமாய் நிற்பது பிரமம். பரமார்த்தத்திலே சத்தொன்றே மெய்ப்பொருள். ஏனையவெல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில்

வெள்ளிபோல அவிச்சையினாற் காணப்படுவன ஆகலிற் பொய். இங்ஙனம் தோன்றும் உலகத்திற்கு முதற் காரணமாகிய மாயை, பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல அசத்தும் அன்றி அநிருவசனமா யிருக்கும். அநிருவசனம்—சொல்லொணாதது. நிர்மல மாயிருக்கின்ற பிரமம் அந்த மாயா உபாதிகளிலே வாதிக்கப்பட்டு இந்த உடலிலே மயங்கி நிற்பதே ஜீவான்மா. ஆகாயத்திலே காற்றுத்தோன்றி மேகத்தை நீக்கியதுபோல ஜீவான்மாவிடத்தில் வேதாந்தவிசாரத் தால் தோன்றிய ஞானமே துணையாக இந்த மாயைக்கு வேறாகிய பிரமரூபமேயான் என அறிவதே முத்தி என்பதாம். மாயாவாதிகள் பரமான்மாவிற்கும் சீவான் மாவிற்கும் உள்ள சம்பந்தம் பொன்னும் பணியும் போல் அபேதம் என்றும், பிரமப்பொருள் அவிச்சை வயத்தான் ஞாதா எனவும் ஞேயம் எனவும் பகுக்கப் பட்டு ஏற்ற சாதகங்களில் நின்று அறியப்படினும் அவிச்சை நீங்கிய வழி ஞேயம் ஆமாறு இன்றிக் கேவல ஞானமாத்திரையாய் நிற்பதொன்று என்றும் கூறுவர். அசத்தை அசத்தெனக்கண்டு ஒருவியவழித் தோன்று வது சூனியமே அன்றிப் பிறிதில்லை என்பதும் இவர் கொள்கை.

**12.** பாற்கரியமதமாவது:— முன் கூறப்பட்ட பிரமமே சடமும் சித்தும் ஆகிய உலகங்களாய்ப் பரிண மித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினால் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒருபொருளே. கன்மத்தை அநுட்டிக்கும் முறையில் தோன்றிய வேதாந்தஞானத்தால் உடம்பிற்கு

வேறாகிய ஆன்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமம் என்று அறிந்து அதன்கண் இலயித்தலே முத்தி என்பதாம். இஃது உயிர்கெடுமுத்தி என்று கூறப்படும்.

இனி, கிரீடாப்பிரமவாதமாவது — முன்கூறப்பட்ட பிரமமே நான். நான் ஒருபடித்தன்றிப் பலவேறு வகைப்பட்ட விகாரப்பொருள்களோடு கூடிப் பலவாற்றான் விளையாடுகின்றேன் என்று இவ்வாறு அறிவதே முத்தி என்பதாம். குடம் உடைந்தவழிக் குடாகாயம் மகாகாயத்தோடு கூடுமாறுபோல, கிரீடாப்பிரமவாதிகள் உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுவதன்றி இறந்த உயிர் மீளப்பிறப்பதில்லை என்பர்.

**13.** சாங்கியமாவது :— மூலப்பகுதி, நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்கும் காரணமாய் முக்குணங்களும் ஒப்பநின்ற அவதரமாய் அருவாய் உள்ளது. இஃது இருபத்துநாலாம் தத்துவம். இருபத்தைந்தாம் தத்துவம் புருடன். புருடன் பெத்தம் முத்தி இரண்டினும் ஒருதன்மையனே. புருடனுக்கு மலினம் என்பதில்லை. தாமரையிலை நீர்போல் ஒட்டற்று நிற்பன். மூலப்பகுதியின் பரிணமம் புத்தி. அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றும் கூறப்படும். அநாதியே புத்தியைச்சார்ந்த அவிச்சைவயத்தால் பெத்தன் எனப்பட்டு இன்பதுன்ப உணர்வு தோன்றுநின்றது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்து உணர்வதால் அவிச்சை நீங்கும்; அதுவே முத்தி எனப்படும். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவன் ஒருவன் உண்டு என்பதும் அவன் உணர்த்துவான் என்பதும் பொய் என்பதாம்.

எல்லாப் பொருளும் சத்தாதலின் அளந்தறி பொருளும் சத்தேயாம் என்பதும், மலத்தால் மறைக்கப்பட்ட உயிர் கருவிகளுடன் கூடியவழி பலவேறு அவத்தைகளை அடையாது ஒருதன்மைத்தாய் அறியும் என்பதும் இதன் கொள்கையாம். இது நிரீச்சுரசாங்கியம் எனப்படும். இந்நூல் செய்தவன் கபிலமுனிவன். இதனுட் கூறும் சற்காரியவாதம் சைவம் முதலிய சற்காரியவாத நூல்கட்கெல்லாம் உபகாரமாம். இதனுட் கூறும் அத்தியாசவாதம் மாயாவாதத்துக்கு உபகாரமாம் என்க.

இனி, நிலம் முதல் புருடன் ஈறாகிய இருபத்தைந்து தத்துவமும் பெத்த முத்திகளும் நிரீச்சுரசாங்கியர் கூறிய வாறேயாம். மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரும் விவேக உணர்வுபோல எண்வகை உறுப்பிற்றாகிய யோகமும் முத்திக்கு ஏதுவாம். இருபத்தாறாம் தத்துவமாக இறைவன் ஒருவன் உளன். அவன் முற்றுணர்வுடையவனாய்ச் சாத்திரங்களை அருளிச்செய்து புருடருக்கு ஞானத்தை அறிவுறுப்பன். அதனால், அணிமா முதலிய அட்டமாசித்திகளைப் பெற்றிருப்பதே முத்தி என்பதாம். இந்நூல் செய்தவன் பதஞ்சலி முனிவன். யோகநூலில் கூறப்படும் தியான பாவனைகளில் 'இப்பொருள் கோசரமாகும் என்பதும் இதன் கொள்கை. இதற்குச் சேசுரசாங்கியம் என்றும் பெயருண்டு.

**14.** பாஞ்சராத்திரமாவது :— இருபத்துநாலாம் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாம் தத்துவமாக வாசுதேவன் என்று ஒருவன்

ளன். அவனே பரம்பொருள். அவனிடத்தினின்றும் கண்ணன், அநிருத்தன், மகரத்துவசன், இரௌகிணே யன் என்னும் நான்கு வியூகர்கள் தோன்றினர். அவர் களால் சடமும் சித்துமாகிய எல்லா உலகமும் படைக் கப்பட்டன. ஆகலான், உலகம் எல்லாம் வாசுதேவன் பரிணமமேயாம். இங்ஙனம் கூறும் பாஞ்சராத்திரத்தி னன்றி வேதங்களின் உறுதிப்பயன் உண்டாகாது. ஆதலால், பாஞ்சராத்திர முறையே தீக்கைபெற்று வாசுதேவனை வழிபட்டு வாசுதேவன் உருவில் இலய மாதலே முத்தி என்பதாம். இந்த நூல் செய்தவன் வாசுதேவன். பாஞ்சராத்திரிகள் மாயை என்பது முதல்வனின் வேறு பொருள் அன்று என்றும், உலகைத் தோற்றுவிக்கும்போது முதல்வனுக்குத் துணைக்காரணம் முதலியன வேண்டுவதில்லை என்றும், முதல்வனுக்கும் உயிர்களுக்கும் உள்ள சம்பந்தம் சொல்லும் பொருளும்போல் பேதாபேதம் என்றும் கூறுவர்.

**இனி, மாயாவாதிகள் கூறும் சில கருத்துக்களை யும் எடுத்து இங்கே ஆராய்வதால் சில நலங்கள்பெற இருப்பதைக் காணலாம்.**

பிரமம் ஒன்று என்பதும், இரண்டாவது பொரு ளில்லை என்பதும் யாவருக்கும் சம்மதமாம். இரண்டா வது பொருளில்லை என்றபோது பிரமத்தை வாதிப்பவர் யார்? வாதிப்பவரே இல்லாதபோது அவ்வாதிக்கு முன்னிலைப்புருடர் ஒருவர் இருப்பது யாங்ஙனம்?

பிரமவாதி என்பவர் யார்?

பிரமம் ஒன்றுளது, அதனை ஆசிரயித்து வாழும் சீவர்கள் பலர், அவருள் யாமும் ஒரு சீவன். எம்மைப் பந்தித்துள்ள பாச நிவிர்த்தியின்பொருட்டு அந்தப் பாசம் ஆகாமலும், எம்மைபோலப் பசு ஆகாமலும் விளங்கும் பதியாகிய பிரமத்தின் உண்மையை அங்கீ கரித்து வாதிப்பவர் எவரோ ? அவரே பிரமவாதி எனப்படுவார்.

பதி எனப்படுவார் சிவனன்றோ? பிரமமெனச் சொல்லலாமா ?

பதிப்பொருள் சிவன் என்பது சத்தியம். பிரமம் என்பது அச் சிவன் பெயர்களுள் ஒன்றே. சிவன் ஒருபொருள், பிரமம் ஒருபொருள் ஆகா. ஒரு பொரு ளுக்கே அவ்விரு பெயரும் உண்டு.

**" ஏக ஏவருத்ரோநத்விதீயாயதஸ்தே "**
**" ஏக மேவாத்விதீயம் பிரஹ்மா "**
**" ஸர்வோஹ்யேஷ ருத்ர : "**
**" ஸர்வம் கல்பிதம் ப்ரஹ்மா. "**

என்னும் இந்த சுருதிகளில்: உருத்திரமூர்த்தி ஒருவரே இருக்கின்ருர் இரண்டாவது இல்லை எனவும், பிரமம் ஒன்றே உளது இரண்டாவது இல்லை எனவும், உருத் திரமூர்த்தியே எல்லாமாயிருக்கின்ருர் பிரமமே எல்லா மாய் இருக்கின்றது எனவும் போந்த அர்த்த வைபவங் களால் உருத்திரமூர்த்தி வேறு பிரமம் வேறு என்று சொல்ல இடமில்லையன்ருே ? இவ்விரு பெயர்களே அன்றி மற்றும் பல பெயர்கள் உள்ளன. ஆகையால்,

3

பல பெயர்களாலும் அந்த வஸ்துவை வாதித்து இன்புறுவர் பெரியோர். சிவன், பிரமம், சம்பு, சங்கரன், உருத்திரன், மகேசுவரன், பசுபதி முதலிய நாமங்களால் சிவனை அவனடியார் வாதிப்பர்.

'பாஷாணம், உலோகம் மண் இந்த ரூபமான விக்கிரகங்களிலே செய்யும் பூசையானது புனர்சென்மத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது. எதியானவன் இதயார்ச்சனையே செய்யவேண்டும்' என்று மைத்திரேயோபநிடதம் கூறுவதற்கு ஏதேனும் சமாதானமுண்டோ ?

ஸ்ரீ மார்க்கண்டேயருக்காக எதினின்றும் வெளிப்பட்டுச் சிவபெருமான் இயமனை உதைத்தருளினர் ? ஸ்ரீ சண்டேசுரநாயனுர் தமது பிதாவை எதற்காகக் காலைத் தடிந்தனர் ? ஸ்ரீ காசி காஞ்சி முதலிய தலங்களில் உள்ள சிவலிங்க வடிவங்கள் வேதபடிதமாயின வன்றோ ? உமாதேவி, கணபதி, கந்தர், விஷ்ணு, பிரமன், இந்திரன், ஏனைத்தேவர்கள், வசிட்டர் முதலிய முனிவர்கள் முதலியோர் சிவலிங்கபூசையுடையவரன்றோ ? ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் ஐந்து இலிங்கங்களை ஐந்து இடங்களில் பிரதிட்டை செய்தாரன்றோ ?

மற்றும், **1. "தவச்ரியே"** என்னும் ருக்ஸம்ஹிதா வசனம் சமஸ்ததேவர்களும் சிவலிங்க ஆராதனத்தால் தங்கள் ஐஸ்வரியங்களை அடைந்தார்கள் எனவும், லட்சுமி சமேதராகிய விஷ்ணுமூர்த்தியானவர் சிவலிங்க பூசை செய்து பரமபதநாட்டு அரசைப்பெற்றுர் எனவும் கூறுகின்றது.

**2.** "யோவாமபாதார்ச்சித" என்னும் பைப்பலாத சுருதி விஷ்ணுவானவர் தமது கண்ணைச் சிவபிரானது திருவடியில் அர்ச்சித்துச் சக்கரம் பெற்றார் என்று கூறுகின்றது.

**3.** " லிங்கரூபிணாம் " என்னும் பஸ்மஜாபால சுருதி ஸ்ரீ காசியில் பூர்வதிக்கில் பிரமனும், தெற்கில் விஷ்ணுவும், மேற்கில் இந்திரனும், வடக்கில் உருத்திரரும் சிவோபாசனை செய்துகொண்டிருக்கிறார்கள் என்று கூறுகின்றது.

**4.** " அஹரஹரப்யர்ச்ய " என்னும் மற்றொரு வாக்கியம் மேலேகண்ட உபநிஷத்திலே விசுவேசுவர லிங்க பூசையையும், அபிஷேக நைவேத்திய விபவங்களையும் இனிது தெரிவிக்கின்றது.

**5.** மீண்டும் ருக்ஸம்ஹிதாவசனம் : "தமுஷ்டு ஹியஸ்விகஸ்ஸாதந்வாயோ" என்று தொடங்கி ஸ்ரீ ருத்ரபகவானைக்குறித்து உத்ஸவகாலத்தில் திரவியத் தியாகம் செய்திடுக எனவும், மோட்சஸித்தியர்த்தமாக நமஸ்காரங்களால் வழிபடுக எனவும் தெவிக்கின்றது.

**6.** எஜுர்ச்சாகையில் : " நிதநபதயே நம: " என்று தொடங்கப்பட்டு, ஊர்த்வலிங்கம், ஹிரண்ய லிங்கம், ஸுவர்ணலிங்கம், திவ்யலிங்கம், பவலிங்கம், சர்வலிங்கம், சிவலிங்கம், ஜ்வலலிங்கம், ஆத்மலிங்கம், பரமலிங்கம் ஈறாக இலிங்கபேதங்களைப் பிரகாசப் படுத்தியிருக்கின்றது.

**7.** மஹாநாராயணோபநிஷத்தில் " சைவமீசாந " என்று தொடங்கி அபிஷேகம், அர்ச்சனை, அலங்காரம்,

பிரதக்ஷிணம், நமஸ்காரம், வாத்யஸேவை முதலியவைகள் போற்றப்பட்டுள்ளன. மற்றும் பலவுள. மேலே கூறப்பட்டுள்ள பல சுருதிகளால் விக்கிரக பூசை உயர் நலமுடையது என சித்திக்கின்றது காண்க. சுருதி இருதயம் அறியாமல் சிவார்ச்சனையை தூஷிப்பார் சிலர். அஃது அவர் பாவகன்மம் என்க.

இனி, பூசைகளில் வைதிகபூசை சிவாகமபூசை என இருவகையுண்டு. இவற்றுள், வைதிகத்தின்படி பாஷாணம் உலோகம் மணி மண் முதலிய ரூபமான விக்கிரகங்களைப் பூசிப்பதன் பயனாகவே புனர்ஜென்மத்தையும் யோகப்பிராப்தியையும் அந்த உபநிஷத்து ஒப்பியது. சிவாகம விதிப்படி அமைந்த பூசையை நிஷேதிக்க அதற்கு அதிகாரம் கிடையாது. சிவாகமசித்தமான ஆராதனைக்கே சரியையாதி நாமங்கள் உள. அவையெல்லாம் மேலே கூறப்பட்ட சிவாகமசித்தமான அர்ச்சனையின் பயன் என அறிக.

மந்திரி அதிகாரத்தை அரசன் அநுசரிப்பான், அரசனுக்குள்ள அதிகாரத்தை மந்திரி அனுசரிக்க முடியுமோ? அரசன் தன்னுடைய அதிகாரத்தையும், மந்திரியின் அதிகாரத்தையும், கீழிட்ட பிற அதிகாரங்களையும் அநுசரிப்பது ஆவசியகம். மந்திரியும், அவனில் தாழ்ந்தவர்களும் தங்கள் அதிகாரத்துக்கு மேற்பட்ட அதிகாரங்களில் பிரவேசிக்கமுடியுமோ? ஞானியானவன் ஞானம் முதல் நான்கினுக்கும் உரியன். யோகியாவான் யோகம் முதல் மூன்றினுக்கும் உரியன். கிரியாவான் கிரியை முதல் இரண்டினுக்கும் உரியன்.

சரியாவான் அச்சரியை ஒன்றினுக்கே உரியன். இப்படியே ஆகமிகன் ஆகமத்தையும் வேதத்தையும் அநுசரிப்பன். வைதிகன் வேதம் ஒன்றனையே அநுசரிப்பன். சிவத்துவிசர் முதலிய பெரியோர்களுக்கு வைதிகசம்ஸ்காரம் முதலினும், சிவாகமசம்ஸ்காரம் (தீக்ஷை முதலியன) பின்பும் நடைபெற்றுவருவது பிரசித்தமாம். வைதிக சம்ஸ்காரமே போதுமான தாயின் சைவசம்ஸ்காரம் பின்பு வேண்டியதில்லை. வைதிகசம்ஸ்காரத்துடன் சைவசம்ஸ்காரமும் பெற்றவர்களே வைதிகாநுட்டானத்தையும் சைவாநுட்டானத்தையும் செய்ய உரியவர்கள். வைதிக சம்ஸ்காரம் பெற்று அம்மட்டிலே நின்று சைவ சம்ஸ்காரம் பெறுதவர்கள் வைதிக தருமத்தையன்றிச் சைவ தருமத்தைத்தழுவி வாழ இடமில்லை. அத்தகைய சாமானியர் பொருட்டே வைதிக சம்ஸ்காரம் போதும் என விதித்தது என்க. ஆகலின், வேதத்தினும் சிவாகமம் முக்கியம் என்றும், சிவாகமப்பிரதிபாதிதமான சரியையாதிகளை வேதம் குறைகூறியதின்று என்றும் அறியக் கடவர்.

“சாதன சதுஷ்டயமாகிய நித்தியாநித்திய வஸ்து விவேகம் முதலியனவைகள் முமுக்ஷுவால் அடையத் தக்கனவே, அதுவே மோட்ச முயற்சி” என வராகோப நிடதம் கூறும். ஆனால், “அத்வைத ஞானத்தை அடைதற்குரிய உபாயம் சாதன சதுட்டயமே” எனக் கூறிற்றில்லை. சாதன சதுட்டயத்துள் முதலாவது— நித்தியாநித்திய வஸ்து விவேகம்; இரண்டாவது— இகமுத்திரார்த்த பல போகவிராகம்; மூன்றாவது—

சமாதிஷட்கசம்பத்தி; நான்காவது—முமுக்ஷுத்துவம். இந்த நான்கு சாதனமும் கைகூடிய பிறகே ஒருவனுக்குத் தெய்வ வழிபாடு சித்திக்கும். அத்தெய்வம் வேதத்திற் கூறிய எதுவாயினும் ஆகலாம். சரியையாதிகள் தெய்வவழிபாடாம். அந்தத் தெய்வம் சிவபரஞ்சுடர் ஒன்றே ஆம். சிவனை வழிபடும் பரிபாகிகளுள் உயர்வு தாழ்வுகளை உணர்த்தவே ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் வியவஸ்தை உண்டாகியது. இவைகளை முறையே சன்மார்க்கம், சகமார்க்கம், புத்திரமார்க்கம், தாசமார்க்கம் எனப் பெரியோர் கூறுவர். வேதத்தில் கூறிய சாதன சதுஷ்டயங்களை அடைந்து, அவற்றால் பல தெய்வங்களை வணங்கி, மேற்சென்ற உத்தம பரிபாகிக்கு முடிவாகப் பிராப்தம் ஆகத்தக்கது சிவோபாசனை. அவ்வுபாசனையின் பேதமாக வெளிப்படுவது சரியை முதலியன. சரியை முதலியவற்றிற்கும் சாதனசதுஷ்டயத்துக்கும் உள்ள வேறுபாடு: ஒரு கன்னிகையினது கல்யாணத்துக்குப் பூர்வம் நடத்திய போக போஷணைபோன்றது சாதன சதுட்டயமாம்; அக்கன்னிகையின் கல்யாணம் தொடங்கி நடத்தும் கர்ப்பாதானம், பும்ஸவனம் முதலிய சடங்குகள் போன்றது சரியையாதிகள் என அறியத்தக்கது. புறச்சமயநெறி நிற்றல் முதலியன எல்லாம் மோட்சசாதனமே. சாதனசதுட்டயம் என்பது "புறச்சமயநெறி நின்றும் அகச்சமயம் புக்கும்'; என்னும் சிவஞானசித்தியார் சுபக்கத் திருவிருத்தத்தில் "வேதச்சிரப்பொருளை மிகந்தெளிந்தும்" என்ற பகுதியில் அடங்கியிருத்தல் காண்க.

இனி, 'பிரமம்சத்தியம், ஜகத்துப்போய்' என்று நிராலம்போபநிஷத்துக் கூறுவதன் கருத்து; அது பிரமத்தைப்போல நிலை திரியாமலிராமையால் என்க. ஒரு சேர் பொன்னை எடுத்து ஒரு பெரிய பாத்திரம் செய்கிறோம். அதனை அழித்து மீண்டும் கைவளைகளாகச் செய்கிறோம். மறுபடியும் அதனை அழித்துக் கண்டசரமாக்குகிறோம். இப்படியாவதால் காரியபேதத்தால் பொய்யும், காரணமூலத்தால் மெய்யுமாதல் சித்தம். இதனால் ஜகத்து சுத்தப்பொய்யாகமாட்டாது. மற்றும், பிரமம் காரணமும் ஜகத்துக்காரியமும் ஆகின்றன. பிரமமே ஜகத் ஆயினமையின் காரணத்தால் ஜகத்து மெய்யும், காரியத்தால் ஜகத்துப் பொய்யும் ஆதலே நியதம். அங்ஙனமாதலின் ஜகத்து அபாவபதார்த்தமன்று. ஆகலின், பிரமம் காரண ஜகத்தும் மற்றது காரிய ஜகத்துமாம் என்க. காரிய ஜகத்துப் பொய்யானால் காரண ஜகத்தும் பொய்யாம். இவ்வாறு ஆராய்ந்து தெளியின் பொய் என்பதற்கு இல்பொருள் என்பது பொருளன்றாம். பொய் என்பதற்குத் திரிவு எனப் பொருள் கொள்ளுதலே அமைவுடைத்தாம். ஜகத்துக்கு உபாதானம் பிரமம் என்பதைச் சைவர் மாயை என்கின்றனர். பிரமம் நிர்மலசேதனமும், ஜகத்துக் கேவலம் மலமாகிய அசேதனமும் ஆதலால் ஜகத்துக்குப் பிரமத்தை உபாதானமாகக்கொள்ளாமல், கேவலம் நிமித்தமாகக் கொள்ளவேண்டும்.

இனி, "காண்பானும் காட்டுவதும் காட்சியுமாய் நின்றவந்த — வீண்பாவம் போயதுவாய் மேவுநாள் எந்நாளோ" எனவும், ஞாதுருஞான ஞேயங்க ளற்றவர்க்

கருத நட்புடைக் கலப்பே" எனவும் தாயுமானவ அடிகள் அருளிய பாடலில் சரியை முதலியன தள்ளத்தக்கனவாம் எனக் கூறியிருக்கின்றனர் என்றும்; இதனை அநுசரித்ததுபோலத் தேவிகாலோத்தரமும் "மந்திரம் செபந்தியானம் பூசனை வணக்கம் வேண்டா — அந்தமிலாத முத்திக் குபாயமே அறியவேண்டும்" எனச் சாலோக முதலியவற்றைப் பயக்கும் சரியை முதலியன வேண்டா எனக் கூறிற்று என்றும் சிலர் கூறி மகிழ்வார். அவர் கூற்றையும் ஆராய்தல் வேண்டுமன்றோ? காண்பான் பசு, காட்டுவது பதி, காட்சி பாசம்: இம் மூன்றும் போவதென்றால், எப்படிப்போவது? இல்லாமற் போவதா? முன்னுள்ள இவை எப்படிப் பின் இல்லாமற் போகும்? அதுவாய்ப்போவது என்று மேலே சொன்னது எது எதுவாய்ப்போதலை? திரிபுடியில் மூன்று பொருள்களும் இல்லாமற் போனபிறகு அதுவாய் மேவுதற்கு ஒரு பொருளுண்டாதல் யாங்ஙனம்? அது என்னும் பொருள்தான் எது? அற்றவர்க்கு என்றது யாரை? அருத நட்புடைக்கலப்பு என்றது எதனை? இவ்விரண்டும் சத்தியமும், ஞாதுரு ஞான ஞேயங்கள் ஒழியத்தக்கனவுமாக அன்றோ? இதனால் பெறப்படுகிறது என்னும் வினாக்கள் எழுமன்றே! அதன் உண்மைக்கருத்து இது என விளங்க ஆராய்வாம்.

காண்பான் பசு, காட்டுவான் பதி, காட்சி பாசம்; இம்மூன்றும் போகவேண்டும் என்றது பசுவானது பாசத்தைக் காணாமலும், பதியானது பாசத்தைக்காட்டாமலும், பாசமானது பசுவாற் காணப்படாமலும்

போவதனையே ஆம். இஃது இவ்வாறு ஒழியவே, பசுவானது பதியைக்கண்டும், பதியானது தன்னை அப் பசுவுக்குக்காட்டியும், பாசமானது பசுவை மயக்கும் ஆற்றல் சிவியாதுவிளங்கியும்நிற்பதனை அறிஞர் எவரும் அங்கீகரிப்பர். இதனைத் தெளிந்தவரே உண்மைப் பொருள் காண்பர். 'ஞாதுருஞானஞேயங்களற்றவர்க்கு' என்றுகூறித்திரிபுடியை முன் மறுத்தாராயினும், 'அற்ற வர்க்கறாத நட்புடைக்கலப்பே'' எனத் திரிபுடியையே மீண்டும் தாபித்தவரானார். முன்னது 'சகல கேவலத் தாக்கற்றவர்க்கு' எனவும், பின்னது 'நின்மலாவத்தை யுடையார்க்கருளும் பரசிவம்' எனவும் பொருள்கொள் ளுதலே அமைவுடையதாம் என்க. தேவிகாலோத்தரம் கூறியதன் கருத்து அன்பில்லாமல் அவைகளைச் செய் வதிற் பயனில்லை என்றதேயாம்.

சரியை தேகத்தைச் சிவார்ப்பிதம் செய்தலும், கிரியை இந்திரியங்களைச் சிவார்ப்பிதம் செய்தலும், யோகம் கரணங்களைச் சிவார்ப்பிதம் செய்தலும், ஞானம் ஆன்மாவாகிய தன்னைச் சிவார்ப்பிதம் செய்த லும் ஆம். இந்த நான்கு வழிபாடுகளும் அன்பு நிகழாத போது பயன் பெறமாட்டா. அன்பில்லாத ஞானமும் ஒரு ஞானமா? கட்டையைக் கட்டை என்று அறி கிறதுபோலச் சிவத்தைச் சிவம் என்று அறிந்துவிட் டதனாலேயே முத்தி சித்தித்துவிடுமா? அறிந்து, அறிந்த பொருளிடத்து அன்பு செய்து பாராட்ட வேண்டும். அன்பினது உயர்வுதாழ்வுகளுக்கு ஈடாகவே மேல் அடையத்தக்க பேறுகளின் உயர்வு தாழ்வுகளும் ஆம் என்க.

இனி, சிவனும் பாவப்பொருள், சீவனும் பாவப் பொருள். அந்நியோந்நிய பாவப் பொருள்களாகிய இவைகளுக்கு இருமையற்ற சையோகம் எப்படிக் கூடும்? கூடாதபோது இரண்டறக் கலத்தல் என்பது யாங்ஙனம்? என்னில், சிலர் கூறுவதுபோல ஒன்று பாவப்பொருள், மற்றொன்று அபாவப்பொருள் அன்று. அபாவப்பொருளைச்சுட்டி விதிவிலக்குகளைக் கற்பித்துப் பந்த மோட்ச வியாபாரத்தில் இறங்குவதும் அன்று, சிவனும் சீவனும் ஆகிய இரண்டு பாவப்பொருள்களும் வியாபக வியாத்திகளாக அவை உள்ளபோதே கலந்திருக்கின்றன. அவை புதிதாய்க் கலக்கவேண்டிய தின்று முத்தியிற் கலந்ததென்று சொல்லுவது தன்னோடு தானுள்ளபோதே கலந்திருந்த சிவத்தைப் பந்த காலத்தில் அநுபவிக்க நேர்ந்தபடியினால் என்க. இரண்டு பாவப்பொருள்களையும் அவற்றின் தன்மையுண்மையால் இரண்டென்றும், அவை பிரியாமையால் இரண்டறக் கலந்ததென்றும் பெரியோர் கூறுவர். இதனையே அத்துவிதம் என வேதம் கூறும். ஆன்மா தனித்து நிற்கும் இயல்பினதன்று. அது பந்தத்தில் மலமாயாதிகளையும், முத்தியில் சிவத்தையும் பற்றி நிற்கும். இதனையே,

> "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு"

என்றருளினர் திருவள்ளுவநாயனார். 'பற்றுவிடற்கு' என்பது மலம் விட்டுப்போதற்கு எனவும், 'பற்றுக' என்பது சிவத்தைப்பற்றுக எனவும் பொருள்கொள்ளக்

கிடந்தமையும் காண்க. இவ்வுண்மையை விளக்கவே தாயுமானவ அடிகளும்,

**''ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்**
**தாணுவினே டத்துவிதம் சாருநாள் எந்நாளோ''**

எனக் கூறியருளினர்.

**சிவஞான சித்தியார் பரபக்கப் பகுதியாகிய இந்நூலுள் உள்ள திருவிருத்தங்கள்-301. அவை வருமாறு:**

| | | | |
|---|---|---|---|
| | விநாயகர் காப்பு | | 1 |
| | மங்கலவாழ்த்து | | 10 |
| | | மதம் | மறுதலை |
| 1. | உலகாயதன் | 21 | 31 |
| 2. | சௌத்திராந்திகன் | 31 | 40 |
| 3. | யோகாசாரன் | 1 | 2 |
| 4. | மாத்தியமிகன் | 1 | 2 |
| 5. | வைபாடிகன் | 1 | 1 |
| 6. | நிகண்டாவாதி | 8 | 14 |
| 7. | ஆசீவகன் | 10 | 6 |
| 8. | பட்டாச்சாரியன் | 13 | 10 |
| 9. | பிரபாகரன் | 2 | 2 |
| 10. | சத்தப்பிரமவாதி | 4 | 8 |
| 11. | மாயாவாதி | 15 | 18 |
| 12. | பாற்கரியன் | 2 | 5 |
| 13. | நிரீச்சுரசாங்கியன் | 1 | 3 |
| 14. | பாஞ்சராத்திரி | 7 | 31 |

மேலே கூறிய அட்டவணையிற்கண்ட பதினுன்கு மதங்களின் கொள்கையைத் தனித்தனி கூறி, அவை களில் பொருந்தாதனவற்றையும் உடன் வைத்து மறு தலையிற்கூறியமைகாண்க. அவ்வவர் மதக்கொள்கைகளின் பிழிவு என்று சொல்லும்படி சாரமாக இந்நூலாசிரிய ராகிய ஸ்ரீ அருணந்திதேவநாயனர் அருளிச் செய்தமை காண்க. இவற்றுள், உலகாயதம், நால்வகைப்பௌத்தம், ஆருகதம் என்னும் ஆறும் புறப்புறச்சமயங்கள். நிகண்டாவாதம், ஆசீவகம் இரண்டும் ஆருகதசமயமாம். பட்டாசாரியம், பிரபாகரம், ஏகான்மவாதம், சாங்கியம், பாஞ்சராத்திரம் முதலியன புறச்சமயங்கள். பட்டா சாரியம் பிரபாகரம் ஆகிய இரண்டும் மீமாஞ்சையின் உட்பிரிவுகள். சத்தப்பிரமவாதம், மாயாவாதம், பாற் கரியவாதம் என்பன ஏகான்மவாதத்தின் உட்பிரிவுகள். மற்றொரு பிரிவாகிய கிரீடாப்பிரமவாதம் இந்நூலில் தனியே கூறப்பட்டிலது. எனவே, இந்நூலுள் எடுத்து ஆராயப்பட்டன புறப்புறச் சமயங்களும், புறச்சமயங் களுமேயாம். சுபக்கத்துள் ஏற்ற பெற்றி முக்கூற்றுப் புறச்சமயங்கள் எடுத்து ஆராய்ந்து பரிகரிக்கப்பட்டுள. அகச்சமயமும் அதனுள் நன்கு ஆராயப்பட்டமை காண்க. புடைநூலாகிய சிவப்பிரகாசத்துள் "புறச் சமயத்தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்" என அருளிய ஆசிரியர் ஸ்ரீ உமாபதிதேவநாயனர் தாமருளிய சங்கற்ப நிராகரணத்துள் அகச்சமயங்களான பாடாண வாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுவர அவிகாரவாதம், நிமித்தகாரண பரிணமவாதம் என்னும் ஆறனையும் எடுத்து ஆராய்ந்து பொருந்தாதன

வற்றைத் தக்க காரணங்காட்டி நிராகரித்தருளினர். எனினும், புறச்சமயமாகிய மாயாவாதத்தையும் அகப்புறச்சமயமாகிய ஐக்கியவாதத்தையும் அதனுட் கூறி நிராகரித்தமையையும் அறிக.

## நூலாசிரியர்

இந்த நூலைத் தமிழகத்துக்குத் தந்தருளியவர்கள் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனாருடைய மாணவர் நாற்பத்தொன்பதின்மருட் சிறந்த ஸ்ரீ அருணந்திதேவநாயனார் ஆவார்கள். இவர்கள் புறச்சந்தான குரவருள் இரண்டாவது குரவர். சகலாகமபண்டிதர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கியவர்கள். சிவஞானபோதத்தின் வழிநூலாகச் சிவஞானசித்தியாரை அருளிச்செய்ததன்றி இருபா இருபஃது என்னும் சித்தாந்த சாத்திரத்தையும் அருளிச்செய்தார்கள். சிவஞான போத நூலுக்கு ஒரு சிறந்த பேருரையாகப் பாட்டு வடிவில் அமைந்தது சிவஞானசித்தியார் என்னும் சாத்திர நூலேயாம். தமது ஞானாசிரியர் பாலிருந்து நன்கனம் உபதேசம் பெற்றவகையில் சிந்தித்துத் தெளிந்து, அத் தெளிவாகிய அமுதத்தைச் சித்தியாயாகிய கலத்திலடைத்துச் சிவஞானப்பசிமிக்கோருக்கு நல்கிய பெருங்கருணைக்கு நாடு செய்யத்தக்க கைம்மாறி யாது? இவ்வாசிரியர் பெருமான் அவதரித்தருளிய தலமும் சிவபரிபூரணமடைந்த தலமும் திருத்துறையூரே. இவர்கள் காலம் பதின்மூன்றும் நூற்றாண்டாம்.

சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு உரையியற்றிய மறைஞானதேசிகர் தமதுரையில்குறிப்பிடும் சில செய்தி வருமாறு ;— "இதனுடைய பரபக்கமானது சங்கராசாரியர் செய்த சர்வதரிசன சங்கிரகத்தும், சர்வமதோபந்நியாசத்தும் ; இராமநாதாசாரியர் பண்ணின பரமத நிராகரணத்தும், சர்வான்மசம்புபண்ணின சித்தாந்த தீபிகையினும், அகோரசிவாசாரியர் பண்ணின சித்தாந்தார்த்த சமுச்சயத்தும் பார்த்து அவைகளின் கருத்தைப்பற்றிச் செய்ததென அறிக."

"சுபக்கமானது முன்னூலாகிய சிவஞானபோதத்தின் கருத்தினையும், வழிநூலாகிய சூத்திரம், சூரணி, வெண்பா இவைகளையும் சிவாகமங்களையும் முற்று நோக்கி அவ்வழியே பன்னிரண்டு சூத்திரமாகச் செய்ததென அறிக." என்பன.

பரபக்கத்தை அதன் உரையோடு கற்கவிரும்புவோர் ஸ்ரீ சத்தியோஜோதி சிவாசாரியர் அருளிச்செய்த மோக்ஷகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகைகளையும் அவைகளுக்கு ஸ்ரீ நாராயணகண்டரின் புதல்வராகிய ஸ்ரீ பட்டராமகண்டர் செய்தருளிய விருத்திகளையும் உடன்வைத்துக் கற்றலால் மிக்க நன்மைபயக்கும் என்க. அன்றியும், ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிச் செய்த திராவிடமாபாடியத்தானும் பரபக்கப் பொருள்கள் தெளிவாம்.

இனி, "ஏகான்மவாதிகள் வேதாந்தம் என்னும் பெயரோடு விளங்குகின்ற சர்வசாரம், பைங்கலம் முதலிய மாயாவாத உபநிடதப் பொருள்களைப் பொருட்படுத்தி, அம்மாயாவாதப் பொருளுக்கு இயைவுபட

(ஆன்மாவையும் பரமான்மாவையும் சிவாகமங்களுக்கு மாறுபடாது நித்திய பதார்த்தங்கள் என்று உரைக்கும் மெய்ம்மை வேதாந்தமாகிய முண்டகம், சுவேதாசுவதரம், கடவல்லி முதலிய உபநிடத) பரசுருதிகளை அலைத்துத் திரித்து மாயாவாதபரமாகப் பொருள் கொள்வர். பாஞ்சராத்திரர் வேதாந்தம் என்னும் பெயரொடு விளங்கும் நாராயணம், சுபாலம் முதலிய உபநிடதங்களைப் பொருட்படுத்தி, இந்த வைணவ உபநிடதங்களுக்கு இயைய (ஈச, கேன, கட, பிரசின, முண்டக, மாண்டூக்கிய முதலிய) உபநிடதபரசுருதிகளை அலைத்துத் திரித்துப் பாஞ்சராத்திர பரமாகப் பொருள் கொள்வர்" என அறிக.

இனி, "உபநிடதங்களினும் சுபாலம் முதலிய உபநிடதம் உலகம் தோன்றி ஒடுங்கும் முறைமையும், தோற்றி ஒடுக்குதற்கு ஒரு கருத்தா உண்டு என்னும் மாத்திரையும் போல்வன உணர்த்துதலின் பொது எனப்படும். சாந்தோக்கியம் முதலிய உபநிடதம் இருவகையும் கூறுதலின் பொதுவும் சிறப்புமாம். அதர்வசிகை, அதர்வசிரம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம் முதலிய உபநிடதங்கள் முத்திநிலையேபற்றிச் சாதகமும் பயனும் கூறுதலின் உண்மை எனப்படும். ஆதலான், அதர்வசிகை முதலிய உபநிடதப்பொருள்பற்றிச் சுபாலம் முதலிய உபநிடதங்களுக்குப் பொருள்கொள்வதன்றிச், சுபாலம் முதலியவற்றின் பொருள்பற்றி அதர்வசிகை முதலியவற்றிற்குப் பொருள் கோடல் பொருந்தாது என்பது நுண்ணறிவான் உணர்ந்துகொள்க. இக்கருத்தறியாத இராமாநுசர் முதலியோர் கூறும்

பொருள் போலி என்றெழுக." மற்றும் சிவஞானபாடியத்து விரித்துரைத்தவாறுபற்றி யுணர்க.

## உரையாசிரியர்

இச் சிவஞானசித்தியார் பரபக்கத்துக்கு உரை வரைந்தார் பலர். அவருள் திருவொற்றியூர்-ஸ்ரீ ஞானப்பிரகாசரும், அவர் மாணவர், திருவொற்றியூர்—ஸ்ரீ தத்துவப்பிரகாசரும், திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீ வேலப்ப பண்டாரமும் பிரசித்தமுடையவர்கள். ஸ்ரீ ஞானப்பிரகாசர் எழுதிய உரை மிகவிரிந்தது; ஆகலின், அவர் மாணாக்கராகிய தத்துவப்பிரகாசர் பதவுரை யொன்று செய்தருளினர். அவ்வுரையே இப்பதிப்பில் கண்டவுரையாம். இதனையடுத்து ஸ்ரீ ஞானப்பிரகாசர் உரையும், ஸ்ரீ வேலப்பபண்டாரம் அருளிய உரையும் வெளிவரவுள்ளன. ஸ்ரீ வேலப்பபண்டாரம் திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து ஐந்தாவது குருமஹாசந்நிதானம். இவர்களும் இவர்கள் மாணவர் ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகளும் சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றிற்கு உரைவரைந்துள்ளனர். இவர்கள் காலம் கி—பி. 1678. ஸ்ரீ ஞானப்பிரகாசர், ஸ்ரீ தத்துவப்பிரகாசர் ஆகிய இவ்வுரையாசிரியர்களைப்பற்றிய விவரமொன்றும் கிடைத்திலது. மேலும் செய்யும் ஆராய்ச்சிகளால் அது கிடைத்தல் கூடும் என்னும் திருவருட்டுணிபுடையேன்.

இந்நூலுரை ஆராய்ச்சிக்கு இன்றியமையாததாக வுள்ள ஏட்டுச்சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் வருமாறு:

**1.** திருவாவடுதுறையாதீனத்துக் கல்விக்களஞ்சியம் எனச் சிறப்பித்துச் சொல்லப்படும் சரஸ்வதி மஹால் ஏட்டுச்சுவடி—1

இதனை எழுதியவர்கள் இவ்வாதீனத்து ஸ்ரீ அம்பலவாண முனிவர். எழுதிய காலம் (கி. – பி. 1842) பிலவஹூ ஏடுகள் பழுதில்லாமல் இருந்தன. மூலமும் உரையும் மிகத் தெளிவானது. இந்தச்சுவடியில் சிவஞானசித்தியார் சுபக்கத்துக்கு ஸ்ரீ மறைஞானதேசிகருரையும் உள்ளது.

2. திருவாவடுதுறையாதீனத்து அடியார் கூட்டத்துள் ஒருவரும், ஷை ஆதீனத்துக் காறுபாறும் ஆகிய ஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரான் சுவாமிகள் (1892) கையெழுத்துக் காகிதப்பிரதி——1

3. திருவாவடுதுறையாதீனத்து 17–வது ஸ்ரீ அம்பலவாணதேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி காஞ்சி–நாகலிங்க முதலியாரால் கி–பி. 1897ல் அச்சிட்ட மெய்கண்டசாத்திரம் முழுவதும் உரையுடன் உள்ள அச்சுப்புத்தகம்.

இதனை இவ்வாதீனத்து 16-வது ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்பால் சாத்திரோபதேசம் பெற்ற ஆதீனத்துச் சீடரும், மதுரைவாசியும் ஆகிய ஸ்ரீ இராமசாமிப் பிள்ளை என்னும் ஞானசம்பந்தப்பிள்ளையவர்கள் பல இடங்களில் திருத்தியுள்ளார்கள்.

4. கொன்றைமாநகரம் — ஸ்ரீ சண்முகசுந்தர முதலியார் பரிசோதித்துப் பதித்த பிரதிக்கிணங்க

5

ஆ. சிங்காரவேலு முதலியாரவர்களால் (சாதாரண—மார்கழி) அச்சிடப்பட்ட புத்தகம் முதலியன.

இது பெரும்பாலும் ஆதீன ஏட்டுச்சுவடியை ஒத்திருந்தது. எனினும், அச்சுப்பிழைகள் மிக மலிந்திருந்தன.

இனி, இந்நூலாசிரியராகிய ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் சகலாகம பண்டிதர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று, இருமொழியிலும் வல்லுநராய் வீற்றிருந்து, திருவருள் வாய்ப்பும் குருவருள் வாய்ப்பும் ஒருங்கே பெற்றவர்கள் ஆதலின், இவர்களால் அருளிச்செய்யப் பட்ட இச்சிவஞானசித்தியார் நூலில் வழங்கும் குறியீடுகள் முதலியன பெரும்பாலும் வடமொழியாதலானும், கூறப்படும் விஷயங்கள் நூல்வழக்கும் சமய வழக்கும் பற்றியுள்ளன ஆதலானும், இது தமிழுடன் வடமொழியும் தருக்கமும் பிறசமயக்கொள்கைகளும் சிறிதேனும் பயின்றார்க்கல்லது பொருள் இனிது விளங்குதல் அரிது. சமயநூற்பயிற்சிக்கு இன்றியமையாத சாதனங்கள் கைவரப்பெற்றார்க்குத் திருவருள் வாய்ப்பும் கிடைக்க அது நன்குவிளக்கமாம் என்க.

'இந்நூல் தன்னைக் கற்பார்க்கு மனமகிழ்ச்சியும் எழுச்சியும் உண்டாக அரியபொருள்களை யெல்லாம் எளிதின் விளக்கி அறிவை வளர்க்கும் ஆற்றல் மிகப் படைத்தது. ஆதலால், இந்த நூலையும் உரையையும் கற்பவர்க்குப் பொருள் எளிதின் விளங்குமாறு ஓர் உரைநடையையும் எழுதி இதன் முன்னர்ச் சேர்க்க' என ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் கருணைகூர்ந்து கட்டளையிட்டருளியது. ஆதீனத்தில் நிர்வாகநிலையில் உள்ள

அன்பர்களும், பெரியோர்களும் 'வண்ணப்பணித் தென்னை வாவென்றழைத்துச் சிறந்த எளியநடையில் சாத்திர நூல்கள் வசனமாக எழுதி உடன் வைத்தாலன்றி உங்கள் நூற்பதிப்பால் உலகிற்குச் சிறிதும் பயனில்லை' என்று அன்புகனிந்த அறிவுரைகளால் வற்புறுத்திக் கூறினர். அவர்களுள் முக்கியமாகஉள்ள அன்பர் திரு. சங்கரம்பிள்ளை ஆவார்கள் என்பதைக் குறிப்பிடாமல் இருக்க இயலவில்லை. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் வழங்கிய அருளுரையுடன் அன்பர்கள் அறிவுரையும் கலந்து 'பரபக்கம் உரை நடைப்பகுதி' என ஒன்றெழுதிவைக்க இப்பதிப்பில் என்னையும் ஊக்கியது. பரபக்கநூலையும், உரையையும் படிக்கத் தொடங்குமுன் இவ்வுரை நடையைப் பல முறை படித்து மனத்திருத்திக்கொள்ளுதல் நல்லதாம். படிப்போருக்கு உதவியாயிருக்குமெனக்கருதித் திரு விருத்தத்தின் எண்கள் உரைநடையிலும் குறிக்கப்பட்டுள்ளன. உரைநடையைப் படித்தபின் செய்யுளையும் உரையையும் படித்தற்கு எளிதாம் எனக் கருதுகின்றேன்.

இனி, இந்தச் சாத்திர நூலுக்குக் கிடைத்த ஸ்ரீ தத்துவப்பிரகாசருரை பதப்பொருளை இனிது விளக்கி, உரிய இடங்களில் சொற்களை முடித்துக்காட்டி, இலக்கணக்குறிப்புக்களையும் நன்கு புலப்படுத்துவதாம். நூலிலும் உரையிலும் உள்ள பரிபாஷைகளும் பல. ஆதீன ஏட்டுச்சுவடியினால் நூலும் உரையும் நன்கு திருத்தமடைந்துள்ளன. உதாரணமாக: சௌத்திராந்திகன் மதமறுதலை செய்யுள்—3 : 'தோனுரை நீர்பெருகிச்

சென்றுறுகும்' என அச்சிட்ட பிரதிகளில் உள்ளது. ஏட்டுப் பிரதியில்மட்டும் 'தேரை நுரைநீர் பெருகி' எனப் பாடமும் அப்பாடத்துக் கியையப் பொருளும் கண்டிருந்தன. அன்றியும், 'தேரைநுரைநீர் பெருகி என்றது பாடம்' என உரையின்கீழ் வரையப்பட்டுள்ளது (பக்கம் 125) காண்க. ஒவ்வொரு செய்யுளின் உரை முடிவிலும் 'இச்செய்யுள்...கூறிற்று' எனக் கருத்துரைத்துச் செல்வது இவ்வுரையே.

இப்பதிப்பில் முதலில் உரைநடை எழுதிச் சேர்த்திருப்பதுடன் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பகராதியும் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. எனினும், அரும்பத முதலியவற்றின் அகராதி ஒன்று எழுதிச் சேர்க்க வேணவாவிருந்தும் சில நாட்களாக உள்ள நெஞ்சுநோயின் காரணமாக அவ்வேலை இயலாததாயிற்று. படிப்போர் வருந்தாவண்ணம் பதங்கள் பிரித்தே அச்சிடப்பட்டுள.

**21**-வது குருமஹாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகள் அருளாணையின்படி இந்நூலும் உரையும் சய-மகரத்தலைநாட் குருபூசை நாளிலே வெளிவரச் சித்தமாயிருந்தும் உரைநடையெழுதிச்சேர்க்க வொண்ணாதபடி என் உடல்நிலை இருந்தமையால் இத்நூலைத் தாமதமாக வெளிவருதலை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். உரியகாலத்தில் உரிய அலுவல்கள் ஒவ்வொன்றும் செவ்வே நிறைவேறத்தக்க அருளாணைகளால் சிறந்து விளங்கும் நமது ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானம் அவர்கள்

இப்புத்தக விஷயத்தில் எளியேன் செய்துள்ள கால தாமதங்குறித்துப் பெருங்கருணையுடன் மன்னித்தருளிய செயல் உள்ளுந்தோறும் விம்மிதமுண்டாக்குவதாயினும், அருளாணைக்குப் பிழைத்தசெயல் உள்ளத்துள் நின்று என்னைப் பெரிதும் வருத்துகின்றது.

சித்தாந்த சாத்திரநூல்களின் பரிசோதனைக்கும் எனக்கும் எத்தனையோதூரம் என்பதை அறிஞரெவரும் எளிதிலறிவர். ஒன்றுக்கும் பற்றாத நாயினேனையும் இம்முயற்சியிற் புகுத்தி நடத்தி, மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கையும் உரையுடன் ஆதீன வெளியீடாக வரச்செய்து, நிறைவேற்றியருளிய எல்லாம்வல்ல ஸ்ரீ ஞானமாநடராசரது திருவருளையும், ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரிய மூர்த்தியையும், ஞானதான வள்ளலாக எழுந்தருளியிருந்து எளியேனுடைய கருவிகரணங்கள் முற்றும் சிவப்பணிக்கே உரியனவாகச் செய்வித்துப் பாதுகாத்தருளும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானத்தையும் அனவரதமும் சிந்தித்து வந்திக்கின்றேன். குற்றம் பொறுத்தருளுக.

இங்ஙனம்,
சித்தாந்தசைவமணி—
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.

திருவாவடுதுறை
2—6—55.

# சிவஞானசித்தியார் பரபக்கம் உரைநடை

## 1. (அ) உலகாயதமதம்

1. தேவகுருவாகிய பிருகஸ்பதி பகவான் ஆன்மாக்கள் போகம் காரணமாய் அருளிச்செய்த நூலை மெய் எனக் கொண்டு மகளிர் போகமே முத்தியெனக் கூறுவார் உலகாயதர். ஒருகாலத்து இந்திரன் தவத்தைச் செய்து வீடு பெற எண்ணினான். அதனையறிந்த தேவகுரு அவனைத் தவத்தினின்று விலக்கி, உலக போகத்திலே நிலைபெற வேண்டி மயக்கி, விடயத்திலே வீழ்வித்தார். அஃது எதனைப் போல? என்னில், அருச்சுனன் தவத்தைப்புரிய வாசுதேவன் தேர்ப்பாகனாக இருந்து கீதை என்னும் நூலினாலே அவனை மயக்கிக் கொல்லுவித்தது போல எனக் கொள்க.

2. உலகாயதன் பிருகஸ்பதி பகவான் அருளிய நூலையே பரம பிரமாணமாகக் கொண்டு உரைப்பான் என்க. அது வருமாறு :

பொருள்களை அறிவதற்குக் கருவி காட்சியே. அக்காட்சி ஆறுவகைப்படும். அவை — ஐயக்காட்சி, வாயிற்காட்சி, விகற்பக்காட்சி, அந்நுவயக்காட்சி, வெதிரேகக்காட்சி, திரிவுகாட்சி என்பன. இவற்றுள், ஐயக்காட்சியாவது—இருளில் பாம்போ? பழுதையோ? என்று ஐயுறுதல். இதனை மனக்காட்சி என்பர். வாயிற்காட்சியாவது — கண் ஒழிந்த இந்திரியங்களால் காண்பது. விகற்பக் காட்சியாவது — பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்னும் ஐந்தினாலும் காண்பது. அந்நுவயக்காட்சியாவது—புகையினால் அனல் அறிதல். வெதிரேகக் காட்சியாவது — நாற்றத்தால் பூ அறிதல். திரிவுகாட்சியாவது — பழுதையைப் பாம்பு என்று கொள்வது. காட்சியையன்றி அநுமானப் பிரமாணம், ஆகமப் பிரமாணம் வேண்டுவதின்று. காட்சிப் பிரமாணத்தானும் அதன் விகற்பத்தானும் அறிந்து கைக்கொள்ளப்பட்ட பொருள்கள் நான்கே. அவை நிலம், நீர், தீ, வளி என்னும் பூதங்கள். அவை களின் குணம் முறையே கடினம், சீதம், வெம்மை, சலனம் என்பனவாம்.

3. பிருதிவி, அப்பு, தேயு, வாயு எனவும் அப் பூதங்கள் கூறப்படும். அவற்றின் குணங்களும் கந்தம், இரதம், உருவம், பரிசம் என்று பேசப்படும். மேலே கூறிய பூதங்கள் நான்கும் அழியாத இயல்புடையன இவை கூடுமிடத்து வாயுவுக்குப் பரிசமும், தேயுவுக்கு உருவம் பரிசம் என இவ்விரண்டும், அப்புவுக்கு இரதம் உருவம் பரிசம் என இம்மூன்றும், பிருதிவிக்குக் கந்தம் இரதம் உருவம் பரிசம் என நான்கும் அடைவே

கூட்டப்படும். வாயு கண்ணுக்குத் தெரியாததாயினும், பரிசத்தைக் கொண்டு காண்கிறோம். வாயுவின் துணை கொண்டே மற்றைப் பூதங்கள் மூன்றும் தம்முட் கூடுவனவாம்வாம்.

4. மண்ணிலிருந்து பலவகையான பாண்டங்கள் உண்டாகின்றன. அதுபோல, இப்பூதங்களும் தம்மில் ஒத்துக்கூடும் புணர்ப்பினால் பலவகை உருக்கள் தோன்றுவன. நீரில் எழும் குமிழியைப்போன்று அவ்வுருக்களிலே புத்தியும், குணமும், பொறியும், புலன்களும் உண்டாம். உருக்கள் பலவாவன — எறும்பு முதல் யானை ஈறாக உள்ளனவாம்.

5. மண், நீர், அனல், வளி ஆகிய நான்கு பூதங்களில் ஒன்றாகிய வாயுப் பிரிய இந்திரியங்கள் கெடும் புலன்கள் கெடவே பொறி குணம் புத்தி முதலியனவும் கெடும். இம்முறைமையால் தாவர சங்கமங்களும் இல்லையாம். வாயுவாகிய பூதம் பிரியவே மற்றைப் பூதங்களும் பிரிந்து, தங்குணமற்றுத் தனி நிலையை அடையும். எனவே, இவற்றை இந்த முறையில் அறிவதே ஞானமாம்.

இதுவரையில் உலோகாயதன் தன் மதத்தைக் கூறி, மேல் பிறர்மதம் கூறத் தொடங்குகின்றான். அவை வருமாறு :—

6. மேலே கூறியவாறு இப்படிப் பூதக்கூட்டத்தினால் உருக்கள் தோன்றி வாயுக்கெடக் கெடும்; அல்லாமல், முன் செய்த கன்மம் பின் தொடரும்

எனவும், கன்மத்தைப் புசிப்பது ஆன்மா எனவும், கன்மத்தை ஆன்மாவுடன் கூட்டிப் புசிக்கச் செய்பவன் ஒரு கர்த்தா எனவும்; கன்மம் உண்டு ஆன்மா உண்டு கடவுள் உண்டு எனவும் சமயிகள் கூறுகின்றனர், உலகை ஏமாற்றுகின்றனர்; அவர் கூறுவன யாவும் பொய். பூதமே தெய்வம், பூதக் கூட்டத்தின் மிகுதி குறைவுகளே கன்மம், பூதக்கூட்டத்தில் நிகழும் உணர்வே ஆன்மா. இவைகளையன்றி வேறே தெய்வமும், கன்மமும், ஆன்மாவும் இல்லை. சமயிகள் கன்மம் முதலியன உண்டு எனக் கூறுவது 'மலடி பெற்ற மகன் முயற்கொம்பில் ஏறி ஆகாயப் பூவைத் தப்பாமற் பறித்தான்' என்று கூறுவதோடு ஒக்கும்.

இனி, சமயிகள் பொய்யைப் பெருக்கிப் புராணம் செய்தனர். தீர்த்தயாத்திரை, தவம், அக்கினிஹோத்திரம், தானம், தர்மம், செபம், தியானம், சமாதி, விரதம், உபவாசம் எனப் பேரிட்டுப் பகற்காலத்தைப் போக்குகின்றனர். பொய்ப் பொருள் பேசிப் பொழுதுபோக்கி, உலகத்தார் கைப்பொருள் கவர்ந்து, அவமே காலங்கழிக்கின்றனர்; அந்தோ! என்பது அவன் கருத்து.

7. ஆன்மாக்கள் முற்பிறப்பில் செய்த கன்மங்களெல்லாம் இப்பிறப்பில் பொருந்தி நின்று ஊட்டும் எனச் சமயிகள் கூறுவர். ஆனால், இப்பிறப்பில் செய்த புண்ணிய பாவங்கள் இவ்வுடம்போடே கெடும். ஆதலால், அவை பிற்பிறப்பில் வந்து கூடுவது எவ்வாறு?

காயத்தோடு தூலமாயுள்ள முறைமை கெட்டுச் சூக்கும மாய்ப் பொருந்தும் என அவர் கூறின், திரியிலே கூடிநின்ற விளக்கொளி அத்திரியை நீங்கின் தனியே நின்று ஒளிவிடும் என்று கூறுவதையே அஃது ஒக்கும்.

8. இன்னும், வயலுக்கு உரமாக வைக்கோலும், தழையும் போடுகிறோம். வைக்கோலும் தழையும் அழிந்து உருமாறிப் பின்பு பயிருக்கு நன்மையைச்செய் கிறது. அதுபோல, வினை தோன்றாமல்நின்று பின்பு உயிருக்கு அநுபவமாக வேறு உடம்பில் வந்து பொருந்தும் என்று கூறுவர். அப்படியாயின், உவமை யாகக் கூறிய வைக்கோலும் தழையும் இட்ட இடத்தி லன்றி வேறு இடத்திற் சென்று பயன்தரா. வினை கெட்டுப் பயன் கொடுக்கும் என்று கூறுவது உணவு கெட்டு மலமாய் ஒழிந்தபின்பு அது உடம்புக்குப் பயன்தரும் என்பது போலாம்.

9. பலவேறு வகைப்பட்ட உருவமும் செயலும் ஒத்திராமல் பேதப்படுவதற்குக் காரணம் கன்மத்தின் பயன் என்னில், கைவிரல்கள் ஒன்றுக்கொன்று ஏற்ற மும் குறைச்சலும் ஆகியிருப்பதற்கு அவை என்ன கன்மத்தைச் செய்தன? பூதங்கள் தம்மில் மிக்கும் குறைந்தும் கூடுதலினால் காயமும் உணர்வும் பேதிக்கப் பட்டன; அல்லாமல், கன்மத்தின் பயன் என்பதில்லை.

10. இன்பதுன்பங்கள் கன்மத்தால் வந்து பொருந்துவன என்னில், நீரானது சந்தனம் முதலிய வாசனைப் பொருளோடுகூடி மண முறவும், நெருப்பின் சார்பைப் பெற்றுச் சுடவும் ஆவியாக மாறவும் எந்த

நன்மை தீமைகளைச் செய்தது? ஆதலால், இவை பதார்த்தங்களின் இயல்பு எனவே கொள்ள வேண்டும். தோல் முதலியன நெருப்பைக் கண்டால் சுருண்டும், நீர்கூடினால் நெகிழ்ந்தும் வருவது பதார்த்த இயல்பன்றோ! வினையால் நிகழ்வன அன்று. இதுவரை கன்மம் என்பது ஒன்றில்லை எனக் கூறியது காண்க.

11. உடம்பின் வேருக உயிர் என்பது ஒன்றுமில்லை. பாக்கும் வெற்றிலையும் சுண்ணும்பும் கூடிய கூட்டத்தில் முன்பு இல்லாத ஓர் சிவப்பு நிறம் உண்டாம். அதுபோல, பூதப்புணர்ப்பால் உடம்பு உண்டாய போது உள்ள அதன் குணமே அறிவு என்பதாம். உடம்பின் வேருக உயிர் உள்ளது எனக்கொள்ளின் அது காட்சிக்குப் புலனுக வேண்டும். அஃது எப்படிப்பட்ட காட்சிக்கும் புலனுவதில்லை. அத்தகைய உயிரைக்கருதல் அளவையானும், உரையளவையானும் கூறிவிரித்தல் கொம்பில்லாத முயலுக்குக் கொம்பு உளதாகக் கூறி அதற்கு அளவும் வடிவும் விரிப்பதுபோலாம்.

12. கடவுள் உண்டு, அஃது அருவப் பொருள் என்று கூறின், அறிவு இல்லாததாய், ஆகாயம்போன்று அது சூனியப் பொருளாம். கடவுள் உருவப் பொருள் என்னில், பூதக்கூட்டத்தினுல் உண்டாகிய பொருள்களுள் ஒன்ருதல் வேண்டும். அஃது அருவுரு என்னில், அருவமாகிய ஆகாயத்தில் எறிந்த உருவமுள்ள கல் நம்மில் கூடிநிற்கக் காணேம். ஆதலால், அருவமும் உருவமும் கூடிநில்லா. எனவே, பூதமே தெய்வமன்றி மற்ருெரு தெய்வமில்லை என்று அறிக.

13. பூதக்கலப்பால் உணவு உண்டாகிறது. அவ்வுணவால் உடம்பும், உடம்பிலே புத்தியும், புத்தியிலே பேதிக்கப்பட்ட மனமும் உண்டாகின்றன. இவையாவும் பூதத்திலே தோன்றுகின்றன, பின்பு ஒடுங்குகின்றன. இம்முறைமையை உலகாயத வேதம் கூறும். உலகத்தார் அவ்வேதவுண்மையை உணராமல் வழியல்லா வழியைக் கேட்டு வருத்தத்திலே வீழ்தல் என்ன காரணம்?

14. இந்தப்பூமியிலே பெண்களிடமாக அநுபவிக்கும் பேரின்பசுகத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்டுவைத்தும் அப் பெண்ணின்பத்தை அநுபவியாமல் கைவிட்டுச் சுவர்க்க போகம் உண்டு எனக்கேட்டு, அதனைப் பெற ஆசைகொண்டு, தவம் என்னும் சிறையிலே அகப்பட்டுத் துன்புறுவார் பலர். அந்தோ! அவருடைய செயல், நீர்வேட்கையுடையவன் பக்கத்திலுள்ள நீர்நிலையில் மிக்க தெளிந்த குடிநீரை உண்டு தாகம் தணியாமல், நெடுந்தூரத்தில் நீர் உள்ளது என ஒருவன் கூறக்கேட்டு அதனை உண்ணக் கருதி வருந்திச் சென்று படும் துன்பத்தையே ஒக்கும். எனவே, பிரத்தியக்ஷமாகக் காணப்படும் பெண்ணின்பத்தைக் கைவிட்டுக் காணப்படாத சுவர்க்க இன்பத்தைக் கேட்டு வருந்தித் தவம்செய்தல் அறிவன்று என்றபடி.

15. வாமதந்திரி ஒருவனை உலகாயதன் கண்டு மகிழ்ந்தான். வாமதந்திரியே! வருக. எம்மைப்போல நீயும் இவ்வுலகத்திலே வாழவல்லவன். என் உயிர்க்குத் தோழன் நீயே. வேறு எவரும் இல்லை. மானம்

என்பது சிறிதும் இல்லாத மானிடர் சிலர் கொலை, களவு முதலியவற்றைப் பொல்லாங்கு என்பர். நீ எம்மைப் போலவே அவைகளையெல்லாம் நன்று எனக் கொண்டு மகளிர் குழுவின் மத்தியிலே மாபெருஞ்சுடர் எனப்பிரகாசிக்கின்றாய். ஆதலால், மகிழ்ச்சிக்கு அறிகுறியாக எனக்கு உன் வலக்கையைத் தா.

16. மற்றும், உருத்திரன் பிரமன் மால் இந்திரன் முதலியோர் பெரியோர் என யாவராலும் பேசப்படுகின்றனர். அதற்குக் காரணம் பெண்கள்பால் மதிப்பு வைத்து அவருடன் கூடிக் குலவி வாழ்கின்றமையே. உருத்திரன் பெண்ணைத் தலையில் சுமந்தான், பிரமன் மனைவியை நாவில் வைத்துப் போற்றுகின்றான், மால் மார்பிலே சுமந்து திரிகின்றான், இந்திரன் பெண்ணாசை மிகுதியால் கௌதமர் சாபத்தையும் ஏற்று உடம்பு முழுவதும் பெண் குறியே வடிவமாகக் கொண்டு இன்புறுகின்றான். 'மகளிர் போகமே மாபெரும் பதமாம்' எனக் கொண்டதனாலன்றோ! இவ்வாறு புகழ்பெற்றார்கள். நாமும் அவர்போலப் பெரியோர் என்று யாவராலும் கொண்டாடப்பட வேண்டுமாயின் ஒல்லும் வகையிலெல்லாம் அம் மகளிர் நல்லாருடன் கூடி இன்பம் நுகர்ந்து வாழ்வோமாக.

17. மகளிர் ஊடுங்காலத்து அவர் ஊடலைத்தீர்த்து மகிழ்ந்தும், அவர் தாமரை போன்ற பாதங்களில் செம்பஞ்சுக்குழம்பு ஊட்டியும், அவருடைய அடிமலர்களை வருடியும், சிரத்திலும் உடம்பிலும் எங்கும் அவர் திருவடிகளைச் சூடிக் கொண்டும் இன்புற்று வாழத்

தெரியாதார் பலர் மயங்கிப் பொய்வழியாகிய தவத்திற் புகுந்து மாய்கின்றனரே!

18. ஆபரணம் அணிந்த மகளிரின் அல்குல் தடத்திலே மூழ்கி, ஆம்பல் வாயினின்று ஊறும் அமுதத்தை நிறையப்பருகி, அவர் மெல்லிய தோள்களை அணைந்து, இம்மையிலே பேரின்பம் பெற்று வாழாமல், அந்தோ! பரசமயிகள் எல்லாம் இம்மைப் பெரும்பயனை வெறுத்து மறுமைப் பயன் உண்டு என்று கருதி அழிகின்றனரே!

19. மாதரோடு மணி நிலா முற்றத்தில் ஏறிச் சென்று, முழுமதிபோன்ற முகத்தில் நகையொளி தோன்ற, முத்துவடம் அணிந்த நகில்கள் தம் மார்பகத்திலே நன்கு அழுந்த மூழ்கிப், போகம் நுகர்ந்து, நாடோறும் புதிதுபுதிதாக உண்டு தேக்கி, அநுபவிக்க அறியாமல் கைவிடுவார் புல்லிய சமயத்தார் எல்லாம்.

20. மங்கைப்பருவ மகளிருடைய ஊடலை நீக்கக் கருதித் தளர்ந்து மெலிதலும், அம்மகளிர் அடிகளில் விழுந்து வருந்துதலுமே அரியதவமாம். அத்தவத்தின் பயனாக அவருடன் உணர்வழிந்து கூடிமகிழ்வது முத்தியாகும். இந்திரியங்களெல்லாம் ஒருமைப்படநிலை பெறுவதே முத்தியின்பமாம். இவ்வழியிலே நின்ற பெரியோரே முத்தராவார். இதுவே அறிவும், தவமும், மோக்ஷமுமாம் என்றபடி.

21. கண்ணுற் காணப்பட்ட பேரின்ப சுகமாகிய பெண்ணின்பத்தை அநுபவித்து இன்புறாமல், இதனினும் வேறாகிய பேரின்பம் உண்டு என நம்பி,

அவ்வீட்டின்பத்தைப்பெற விரும்பி, தடுமாறித் தவஞ் செய்து வருந்துவது யாது காரணம்? அந்த வீட்டைக் காட்டினவர் யார்? கண்டோர் யார்? கேட்டோர் யார்? அவைகட்கெல்லாம் சான்று தான் யாவர்? என ஒன்றும் காட்டமாட்டீர். ஆகையால், நாட்டில் அரசன் ஆணைவழி நடத்தல், நாடோறும் தேடும் பொருள் கொண்டு கண்கண்ட பேரின்பமாகிய பெண்போகத்தை நன்கு அநுபவித்தல் முதலியனவே செய்யத்தக்கன வாம் என்று அறிவீராக.

---

# 1. (ஆ) உலகாயதமதமறுதலை

1. உலகாயதனே! உனக்குக் காட்சியளவையே பிரமாணம், அதுவே மெய். அநுமானப்பிரமாணம், ஆகமப்பிரமாணம் முதலியன வேண்டா. அவை பொய் எனக் கூறுகின்றாய். நீ அவ்வாறு கொள்ளுமிடத்து உன்னைப் பெற்ற தாய் உன்னைப் பெற்றவுடனேயே இறந்தாள், உன் தந்தை நீ கருவில் வந்த காலத்தே நீ பிறக்கு முன் இறந்தான். பிறந்து வளர்ந்து உரிய பருவம்வர உன் தாய் தந்தையைப்பற்றிய செய்தியைப் பிறர்கூற நீ அறிகின்றாய். அதனால் தாய் தந்தையர் உளர் என்று கருதுகின்றாய். இது நீ கூறிய காட்சி அளவை யன்று, கருதலளவையே ஆம். ஆகையால், காட்சியளவையுடன் கருதலளவையும் உண்டு என அறிவாய்.

2. மற்றும், மேகமானது இடித்து மின்னிக் கறுத்து எழுந்தபோது மழை பெய்யும் என்று நினைவுண்டாகின்றது. ஆற்றுவெள்ளமானது அகிற்கட்டை, சந்தனமரத்துண்டு இவைகளை வாரி அடித்து எடுத்துக் கொண்டுவர அதனைக்கண்டு மலையினிடத்தே மழை நன்கு பெய்துள்ளது என்று துணிகின்றோம். இது கருதுதலே அன்றிக் காட்சிப்பிரமாணம் அல்லவே!

3. 'பூதக்கூட்டத்தினுள் ஓர் அறிவு எழும்' என்று நீ கூறினாய். பூதங்கள் சேர்ந்து இவ்வுடம்பு உண்டானது என்பதைக் கண்டார் யார்? பூதக் கூட்டத்தினுள் ஓர் அறிவு உண்டாவதைக் கண்டார் யார்? பூதங்களாகிய உருக்களையே நாம் காண்கிறோம், அவைகட்குக் காரணமாய தனிநிலையில் உள்ள பூதங்களைக் கண்டார் யாவர்? பூதங்கள் அழிவில்லாதன என்று நீ கூறுவது எதனால்? இவையெல்லாம் அநுமானத்தினால்தானே கூறப்படுகின்றன. நீ கூறும் காட்சியளவையுடன் கருதலளவையும் இப்போது உனக்குத் துணைசெய்வதைக்காண். ஆதலால், நீ காட்சியளவை மட்டுமே பிரமாணம் எனக் கூறுதல் தவறாகும்.

இவைகளால் காட்சியளவையுடன் அநுமான அளவையும் உண்டு என்பது சாதிக்கப்பட்டது.

4. இனி, ஆகம அளவையும் பொருளாராய்ச்சிக்கு வேண்டப்படும். சோதிட நூல்வல்லோர் எதிர்காலத்து நிகழ்ச்சிகளை முன்னரே அறிந்து நிகழ்காலத்திலே கூறுவர். அவைதவறாமல் பலிக்கக்காண்கிறோம். அதுவன்றியும், சில நூற் பிரமாணங்களைக் கொண்டு

பூமியில் புதைக்கப்பட்டு மறைந்து கிடக்கும் பொருள்களையும் எடுக்கக் காண்கின்றோம். இவையெல்லாம் நூற்பிரமாணமேயன்றிக் காட்சிப்பிரமாணம் அன்று.

5. பூதங்கள் நான்கும் நித்தம் என்றும், அழியாத இயல்பையுடையன என்றும் கூறினாய். பூதக் கூட்டத்தில் உருத்தோன்றுதலும் கெடுதலும் உண்டு. இவற்றைக் கூட்டுவான் ஒரு கர்த்தா வேண்டும். மண்ணிலிருந்து பலவகையான பாண்டங்கள் உண்டாகின்றன என்று சொன்னாய் மண்ணிலிருந்து குடமுதலிய பல பாண்டங்களும் தாமாகத் தோன்றக் கண்டிலம். அவையெல்லாம் குயவனாலே மண்ணிலிருந்து உண்டாக்கப்படுகின்றன. அதுபோல, பூதவடிவங்களையும் தோற்றுவிப்பதற்கு ஒரு கர்த்தா வேண்டப்படும். இவை இயற்கை என்னில், தோன்றுதலும் கெடுதலும் ஆகிய இருவேறு செயல்கள் காணப்படுதலின் இயற்கையாகா. ஆதலின், அவற்றைத் தோற்றுவிக்கவும் ஒடுக்கவும் ஒரு முதல்வன் வேண்டும். நீரினிடமாகக் குமிழி தோன்றுமாறு போல மனம் முதலாயின தோன்றும் என்று கூறினாய். குமிழியும் வாயுவால் உண்டாம். ஆகையால், உருவிடத்திலும் மனம் முதலியவற்றைக் கூட்டுதற்கு ஒரு கர்த்தா வேண்டும் என அறிக.

6. நீரினிடத்துத் தோன்றுகின்ற குமிழியும் நீரே ஆம்; அதுபோல, விசாரிக்குமிடத்துப் பூதங்களில் தோன்றுவதும் பூதம் ஆமே அன்றி அறிவாகாது. சுண்ணாம்பும் பாக்கும் வெற்றிலையும் கூடிக்

கலந்தவிடத்து ஒரு சிவப்புண்டாம். அதுபோல, பூதக் கூட்டத்திலே ஓர் அறிவு எழும் என்னில்; சிவப்புநிறம் அம்மூன்றின் கலவையை விட்டுப் பிரிதல் இல்லை. அது போல, புத்தியும் அவ்வுடலை விட்டு நீங்காதாக வேண்டும். அவ்வாறின்றி, உடல் கிடக்கும்போதே புத்தியானது அதனைவிட்டு நீங்குகிறது. ஆகலின், நீ கூறியது பழிப்புக்கு இடமாம்.

7. சுண்ணும்பும் பாக்கும் வெற்றிலையும் கூடிக் கலந்த கலவையிலே சிவப்பு என்னும் ஒரு குணமே காணப்படும். அப்படி ஒரு தன்மையின்றிப் புலன், பொறி, குணம் எனத் தனித்தனி உடலில் வந்து பொருந்தக் காரணம் யாது? அன்றியும், நூறு காய் அடை முதலியவற்றைச் சிவப்பேறக் கூட்டுதற்கு ஒருவன் வேண்டப்படுவதுபோல, பூதச் செயலுக்கும் ஒருவன் வேண்டும் எனத் தெளிக.

8. சிலம்பியினிடத்தில் நூல் தோன்றுவது போல முன்பு இல்லாத ஐம்பொறி, உணவு, துயில், பயம், மைதுனம் முதலியவை காயத்தின் குணமாக இப்போது உண்டாம் எனக் கூறுவாய். அப்படியா னல், பெண் ஆண் அலியாகியும் மானுடாதியாகியும் ஆகாயத்தினின்றும் தோன்றுதல் வேண்டும். பூதக் கூட்டம் ஒருதன்மையுடையதாகையால் மிருக பசு பட்சி தாவரம் முதலிய யோனிபேதமும் இல்லையாம்: ஆகலின், நீ கூறியது பொருளன்று.

9. நீ 'கன்மம் இல்லை' என்று கூறுகின்றாய். உன் கொள்கைப்படியே கன்மம் இல்லையாயின் யோனி பேதங்களும் இல்லையாய், அவ்வவயோனிபேதங்களின்

உண்டாம் உடலங்களின் இந்திரியங்களும் ஒன்று முதல் ஐந்து என்னும் அறிவுகளும் இல்லையாய் முடியும். புத்தியால் அறியும் வன்னமும் புசிப்பும் குணபேதமும் ஆகிய இவற்றைப் பூதக் கூட்டம் தரமாட்டாது. ஆகலின், இந்திரியம் மிகக்குறைவாகவும் சாதிபேதமாகவும் குணபேதமாகவும் வரும் பலவகைப் பேதங்களும் உண்டாதற்குக் காரணம் 'கன்மமே' என்று நன்றாக அறிவாய்.

10. பூதங்களே அறிவாம் எனக்கூறின், காணப் பட்ட மண், நீர், நெருப்பு, காற்று ஆகிய இவற்றில் ஓர் அறிவும் கண்டிலம். உடலிலே செறிந்தபோது அறிவு தோன்றும் என்னில், பிணமாய்க் கிடந்த காலத்து அறிவு கண்டதில்லை. வாயுப் பிரிந்தவாறே அறிவில்லை என்பையாயின், உறக்கத்திலே வாயுப் பிரியாது நிற்கவும் அறியாமலிருப்பானேன்? ஆகையால், பூதக் கூட்டத்திலே அறிவு தோன்றாது; வேறோர் அறிவுண்டு என்று அறிவாயாக.

11. அறிவென்று வேறொரு முதல் இல்லை, உடற் குணமே அறிவு என்று நீகூறின், ஆனை முதல் எறும்பு ஈறாக எடுத்த உடலில் பெரிதானவற்றின் உதிக்கும் அறிவு பெரிதாயும், சிறிதானவற்றின் உதிக்கும் அறிவு சிறிதாயும் இருக்கவேண்டும். அவ்வாறன்றி, பரிணமத்தையுடைய யானை உடலுக்கு அறிவு சிறிதாயும் சிறியஉடலையுடைய மானுடருக்கு அறிவு பெரிதாயும் இருப்பதற்குக்காரணமென்ன? ஆகையால், அறிவு உடற்குணம் அன்று; வேறுண்டாயிற்சொல்.

12. பூதக்கூட்டத்திலே ஒருவகைப் பூதமிகுதிப் பாட்டால் அறிவு சிறுத்துக் காயம் பெருத்தது, அப் பூதக் குறைவுபாட்டால் அறிவு பெருத்துக் காயம் சிறுத்தது என்னில், அறிவு சிறுத்தற்கும் பெருத்தற் கும் காரணம் யாது? ஏதாவது ஒரு பூதத்தின் மிகுதி குறைவுகளே என்னில், அப்பூதத்திலே அந்தத் தன்மை யிருப்பதைக் கண்டார் யாவர்? ஒரு காலத்தில் பெரிதாயிருந்த உடல் சிறுத்தும், மற்றொரு காலத்தில் பெருத்தும் மாறுபடுவதைக் காண்கிறோம். பூதக் கூட்டத்தில் தோன்றும் உடல் பெருத்தது சிறிதா யிடாது, சிறிதான உடல் பெரிதாயிடாது. முன்னம் உள்ள முறைமைப் பாட்டிலேயே நிற்க வேண்டும். அங்ஙனம் நில்லாது பெரிய உடல் காலம் சென்றால் சிறிதாயும், சிறியவுடல் காலம் சென்றால் பெரிதாயும் இருத்தலால் பூதக்கூட்டத்தில் தோன்றும் அறிவன்று; கன்மத்துக்கு ஈடாக வடிவு எடுத்துக் கொள்ளுதலே யாம் என்க.

13. கன்மமானது தானே உடலை எடுத்துக் கொள்ளுவதற்கு அறிவில்லாதது; இவைகளெல்லாம் பூத இயல்பே என்று நீ கூறினால், இயல்பு என்றும் ஒருதன்மைப்பட்டது, இருவேறு தன்மையுடையது அன்று. ஆகலின், ஆண் பெண் என்னும் இரண்டு முறைமையைக் கொள்ளாது அவ்வாறு பிறத்தற்குக் காரணம்தான் யாது? இயல்பாம் என்ற உடல் பூத காரியமும் அன்று, பூத இயல்பும் அன்று. அதனால், நீ கூறுவது மயக்கம் தருவதாம். கன்மத்துக்கு ஈடாக ஒரு முதல்வனால் உண்டாக்கப்பட்ட தன்மையிலே உருக்கள் வருவனவாம்.

14. உருக்கள் தோன்றுதற்குக் காரணம் ஆண் பெண் செய்தியே எனக் கூறுவாய். மண்ணில் கடம் முதலியன தோன்றுவதுபோல பூதகாரணத்தில் ஆண் பெண் காரியப்பட்டுத் தம்மில் கூடிய கூட்டத்திலே உருச்சமைந்திடும் என நீ கூறுவது பொருந்தாது. நீ கூறிய பூதங்கள் நான்கும் தம்மில் மாறுபடும். அவை மாறுபடாமல் கூடுமாயின், நீரும் தீயும் ஓரிடத்தில் பொருந்திநின்ற தன்மையை உன் காட்சியளவையால் கண்டதுண்டாயின் சொல்வாய்.

15. பூதக்கூட்டமே காயத்துக்குக் காரணம் ஆனால் ஆணும்பெண்ணும் விரும்பிப்புணர்தலால்காரண உருக்கள் தோன்றுவானேன்? அநாதியிலேயே கர்த்தா நாயகியோடு கூடிப் போகத்தை விரும்ப அக்காரணத் தால் ஆணும் பெண்ணும் கூடிக் காரியப்பட அதனால் உருக்கள் காரியப்பட்டு வந்தன; அன்றிப் பூதக்கூட்டம் காரணமாகமாட்டாது. ஆதலால், சீவனும் உருக்களை வகுத்துக்கொள்ள அறியாது. ஆண் பெண்களும் அப் படியே கர்த்தாவும் வடிவு கொள்ளச் சந்நிதிமாத்திரத் திலே கன்மத்துக்கு ஈடாக உருக்கள் தோன்றும் என்க. எனவே, உருக்களுக்குப் பூதம் காரணம் அன்று கர்த்தாவே நிமித்த காரணன் என்பதாயிற்று.

16. நீரானது சந்தனம் முதலிய பொருள்களைக் கூடிக் குளிர்ச்சியடைகிறது. நெருப்பைக்கூடி வெப் பத்தை அடைகிறது. ஆதலின் அவை செய்த கன்மம் யாது? எனவே, கன்மம் என்பது ஒன்றில்லை என்று நீ கூறினாய். உவமானமாகக் கூறிய நீர் சந்தனத்தையும்

தீயையும் பொருந்த ஒரு பொருள் இரண்டு தன்மைப்பட்டதை அறிந்தாய். கன்மம் இருவேறு வகைப்படப் பொருந்தி நின்று சுகதுக்கங்களைக் கொடுக்கும். அந்தச் சுகதுக்கங்களை உற்றறிவது சேதனமான உயிருக்கோ? அன்றி, அசேதனமான உருக்களுக்கோ இல்லை என்று அறிவாயாக.

17. பெண்களுடன் கூடி இன்பத்தை அனுபவித்திருந்தும் அஃது இயல்பே அன்றிக் கன்மமில்லை என்று நீ கூறினால் அப்பெண்களோடு கூடியிருப்பதை விட்டுப் பிரியுங்காலத்தில் துக்கப்படுவானேன்? இது எதனால் வந்தது? பெண்களைக் கூடிப் போகத்தை அநுபவிப்பதும் அவரைப்பிரிந்து துன்பத்தை அநுபவிப்பதும் முன் செய்த புண்ணிய பாவங்களாலேயாம். அப்புண்ணிய பாவங்களும் தாமாக வந்து பொருந்துவன அல்ல. அறிவுகள் செய்த கன்மத்தைக் கர்த்தா அறிந்து அதற்கு ஈடாக அநுக்கிரகத்தாலே அவற்றைக் கூட்டி முடிப்பான். ஆகலின், அறிவும் கன்மமும் அதனைக்கூட்டுதலும் அநாதியே உள்ளன.

18. நீர் கூறியவை அநாதியேயாமாகில் ஒருவர் கூட்டவேண்டாவே என்று கூறுவாய்: ஆனால், மலமும் மாயையும் கன்மமும் ஆன்மாவும் கர்த்தாவும் அநாதி, கன்மத்தை ஆன்மாக்கள் செய்ய அக்கன்மம் அசேதனம் ஆகையால் ஆன்மாவை அறிந்து கூடமாட்டா, அநாதியே காரியப்பட்டுவரும் உடல்களும் அசேதனம் ஆகையால் அவையும் ஆன்மாக்களை வந்து கூடமாட்டா, அநாதியாகிய கர்த்தா ஆன்மாவையும் கன்மத்தையும்

கன்மத்துக்குப் பொருந்தின உருவத்தையும் ஆதியாகக் கூட்டல் வேண்டும். அப்படிக் கர்த்தா கூட்டின கூட்டரவும் அநாதியே என்றறிக.

19. புறக்கரணங்களால் உயிர்காணவொண்ணாதது; காட்சிக்குப் புலன்ஆகாமையின் ஆன்மா என்று ஒன்றில்லை என்றால், சரீரத்தைக் கண் காண்கிறது; ஆனால், தன்னைக் கண்ட கண்ணைச் சரீரம் காண்பதில்லை. உயிர் சேதனம் ஆகையால் கரணங்களைக் கண்டு நிற்கும்; ஆனால் கரணங்கள் ஆன்மாவைக் காணமாட்டா. ஆகையால், ஆன்மா உண்டு என்பதனை அறிவாயாக.

20. மற்றும், நெருப்பானது ஒரு விறகைப்பற்றி நின்றே தன் வடிவைக்காட்டும். தனித்து நின்று தன் வடிவைக் காட்டாது. அதுபோல, ஆன்மாவும் ஒரு உருவைக் கூடி நின்றே தன்னை அறிவிக்கும். தகளியில் நிறைந்துள்ள எண்ணெயைக் குடித்து நின்றே தீபம் எரியும்; அப்படிக் கன்மத்தால் எடுத்துக்கொண்ட காயத்தினின்று கன்மத்தைப் புசிப்பது ஆன்மாவேயாம் என்க. திரி போன்றது காயம், எண்ணெய் போன்றது கன்மம், தீபம் போன்றது ஆன்மாவாம். இதனால், ஆன்மா ஒன்றனோடு கூடி யல்லது தனித்து நில்லாது என்பதை அறிதல் வேண்டும்.

21. அறிவு என்பது இவ்வுடம்பின் வேறுபட்டு இறந்தும் பிறந்தும் திரியுமாயின், அவ்வறிவு முன்பு உள்ளதாயின் இப்பிறப்பினும் அறியாமை என்பது இன்றி அறிவேயாய் இருக்க வேண்டும்; அஃது

இல்லையே! எனக் கூறின்; நீ கனவு காண்கிறாய், அக் கனவை நனவு என்பதன்றிக் கனவு என அறிகின்றாயோ? இல்லையே! நீ தாய் வயிற்றில் இருந்தபோது உள்ள அறிவுதானோ? பிறந்தபின் உள்ள மயக்கமுடைய அறிவு. ஆதலால், ஆன்மாவுக்கு அறிவும் அறியாமையும் குணமாம் என்க.

22. இறந்த அறிவே பிறக்கும் என்று இங்கே கூறியது பொருத்தமுடைத்தன்று எனக் கூறின், நீ தூங்கும்போது உன் முகத்திலே பாம்பு ஏறுகின்றது, அதனை நீ அறியாய்; விழித்தபோது பாம்பைக் கண்டவுடன் பயப்படுகின்றாய். அன்றியும், இந்த உடம்பு அழியுமாயின் பின்பு வேறொரு உடம்பு உண்டாவது எப்படி என்னில், கனவிலே நனவை மறக்கிறோம், கனவே நனவாக இருக்கிறது, கனவில் வேறு உடம்பு வந்து பொருந்துகிறது, அத்தன்மை போன்றதே இதுவாம்.

23. ஒருவன் மூர்ச்சிக்கிறான், அப்போது கருவி கரணங்கள் சேட்டைப்படவில்லை. பின்பு அவன் தெளிந்து எழுந்தவிடத்துக் கருவி கரணங்கள் சேட்டைப்படக் காண்கின்றோம். அதுபோலவே, ஒருவன் இறந்த விடத்து இந்திரியங்கள் கெட்டு, பிறக்கும் போது அவை தோன்றுகின்றன. அன்றியும், சந்திரனுடைய கலைகள் தோன்றுதல் மறைதல்களை உலகோர் இறத்தலும் பிறத்தலுமாகவே கூறுவர் என்பதனையும் அறிவாயாக.

24. மற்றும், நீ கூறிய பூதங்கள் காரியப்பட்டு விளங்கி நின்று அழிவன. ஆதலால் இவைகளை ஆக்கியும் அழித்தும் செய்யும் ஒரு கர்த்தா உண்டு. மண்ணினிடத்துக் கடம் முதலாயின வந்தாற்போல, பூதகாரியமே உடல் என்னில்; அறிவில்லாத மண்ணும் அறிவுடையவனாகிய குலாலனாலே காரியப்படும்: அதுபோலவே, பிரபஞ்சமும், கர்த்தாவினுடைய ஆணையால் காரியப்படுவன ஆம் என்க.

25. ஆதலால், பிரமவிஷ்ணுக்களுக்கும் வேதங்களுக்கும் அறிவதற்கு அரிய பரம்பொருளாகிய சிவன் அடியார்களுக்கு எளியன், எண்ணிய எண்ணியாங்கு இம்மையிலேயே கொடுத்தருளும் பேரருளாளன்; ஆதலின், அவனுடைய சீபாதங்களை விருப்பத்தோடு வழிபடுவாயாக. நீ விரும்பிய போகத்தையும் இம்மையிலேயே தருவன் அப்பெருமான்.

26. மணிகள் அழுத்திய பொன்னாபரணங்களாயினும் மலத்தில் விழுந்தால் அவ்வசுத்தக் கலப்பினால் கையில் எடுக்கக் கூசுகிறோம். நாற்றமும் அசுத்தமும் மிக்க உடம்பில் உள்ள உயிரைத்தழுவி இன்புற விரும்புவதும் அத்தன்மையுடையதே. உடம்பும் இரத்தம் மலம் மூத்திராதிகள் நிறைந்து கசியும் பாண்டம் போன்றதே அவைகளில் விழுந்து கிடந்து முழுகி எழுவது என்ன பெற எண்ணியோ? ஆதலின், அதனை நீங்குவதே அறிவுடைமையாம்.

27. மற்றும், தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் இவற்றால் ஆயது உடல்.

அழுக்குடன் வழுக்குப் பொருந்தியது, புழுத்திரள் நெளிவது, கோழை ஈரல் இவைகளால் பொங்கியது, மூத்திரபாண்டம்: இந்த நிலையில் உள்ளதே மகளிர் உடம்பும். எனவே, அவர் கண் முதலிய அழகுகளில் ஈடுபட்டு அழிவது எற்றுக்கோ?

28. அறிவுடைய ஒருவன் நினைத்துப் பார்ப்பானாயின் பன்றிகள் மலத்தில் விழுந்து புரண்டு அதனை நுகர்ந்து மகிழ்ந்து இன்புறுவதையே ஒக்கும் 'மகளிர்பால் இன்பம் நுகர்வது' என உறுதியாகக்கொள்ளுவான்; அந்த இன்பத்தை இன்பம் எனக்கொள்ளான். கர்த்தாவுக்கு அடிமைத்திறம் செய்து நாம் பெறும் இன்பம் குற்றமற்றது, அழியாதது, நின்மலமுடையது என அறிந்து அந்த நெறியில் ஒழுகுக.

29. இயல்பாகவே கோபமிகுதி யுடையவர் பொறுமையினால் விளையும் நன்மையைச் சிறிதும் அறியார். ஆசை மிகுதியுடையார் நிராசையால் விளையும் இன்பத்தை அறியார். அதுபோல, சிற்றின்பத்திலே மூழ்கிக்கிடக்கின்றோர் பேரின்பத்துறையைச் சிறிது முணரார். அப்பேரின்பத்தை அறிய விரும்புவாயாயின் பிரமவிஷ்ணுக்களால் போற்றப்படும் சுத்தமான பரைக்கு மேலான பராபரனுடைய ஸ்ரீபாத கமலங்களையே பற்றுக்கோடாகக்கொள்வாயாக. அப்பொழுதே உன்னிடத்து என்றும் நீங்காத இன்பம் தோன்றி விளங்கும். இது சத்தியம்.

30. குளிர் மிக்க காலம், ஒருவனுக்கு வெப்பத்தில் விருப்பம், புகையோடு கூடிய நெருப்பு அவனுக்கு

இன்பமூட்டுகிறது. வெப்பம் மிக்க கோடைக்காலம், அப்போது குளிர்ச்சி மிக்க நீர் அவனுக்கு இன்பம் செய்யும். காமமாதிகளை இன்பமெனக்கொண்டு மகளிர் பால் அடையும் இன்பமும் அத்தன்மையுடையதே. ஆகலின், நிலைத்த பேரின்பமயமாகிய சிவ நெறியிலே சேர்க.

31. பிருகஸ்பதி பகவான் ஒரு காரணத்தால் இந்திரனை மயக்கச் சொன்ன வழியைக் கைவிட்டுச் சிவ நெறியையே கைக்கொண்டு வழிபடுவாயாக. அந்த நெறியைப் பற்றுவோர் படிக்கத்தக்க நூல்கள் வேத சிவாகமங்கள். அவை சொல்லும் பொருள்கள் பதி பசு பாசம் என்னும் முப்பொருளின் ஆராய்ச்சியே. சிவ பெருமானுடைய ஸ்ரீபாதத்தை வணங்குகையே செய்யத்தக்கதொழில். கைவிடத்தக்கவை காமம் முதலியன. விரும்பிப் பெறத்தக்கது திருவருள் ஒன்றுமே. ஆணவம் மாயை கன்மம் ஆகிய மும்மலங்களின் நீங்கிச் சிவபிரானோடு இரண்டறக்கலத்தலே முத்தியின்பம். இந்த நெறியிலே நிலைத்து வாழக்கடவாய்.

குறிப்பு: உலகாயதர் மிச்சிரசார்வாகர் எனவும், இரணியகர்ப்ப சார்வாகர் எனவும் இருவகைப்படுவர் என்க.

---

# 2. (க) சௌத்திராந்திகன் மதம்

1. வேத வாக்கல்லாத பிடக நூலை நாடோறும் ஓதி, உருவம், வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தங்களின் குணமுடையவராய், உடம்பைத் துவராடையால் போர்த்து, அரசமரத்தைத் தெய்வமாக மதித்து வாழும் பௌத்தர் நால்வகையின ரில் சௌத்திராந்திகன் என்னும் பகுதியினனை முதலில் வைத்து ஆராய்வாம். பௌத்தர் நால்வராவார் — சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்துமிகன், வைபாடிகன் என்பவர்.

2. எல்லாவற்றையும் அறிந்து உலகில் கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐந்து மாபாதங் களையும் வெறுத்துக் குற்றமற்ற கருணையால் எவ்வுயிர்த் துன்பமும் தன்னுயிர்த்துன்பமாகக்கொண்டு தேவரும் தொழுது துதிக்கும்படி குற்றமில்லாத பழைய பிடக நூலைச் சொல்லியருளிய புத்த முனியே கர்த்தா ஆவான்.

3. பிடக நூலிற் பொருந்தக் கொள்ளப்படும் அளவைகள், காட்சி அநுமானம் என இரண்டாம். இக் காட்சியாலும் அநுமானத்தாலும் அறியப்படும் பொருள்கள் அறிவும் அறியப்படுபொருளுமாம். அவை கணந்தோறும் தோன்றி அழிவன. உருவம், அருவம், வீடு, வழக்கு என நான்காய் அவை ஒன்று இரண்டாகி

எட்டாம். கணம் என்பது தாமரை இதழை அடுக்கி ஊசியிட்டடித்தால் எட்டிதழ் அறும் எல்லை என்பர். கணத்திற் கெடுகை நால்வகை – கெட்டுவர்த்தித்தல், கெட்டு கூஷயித்தல், கெட்டு ஒத்து நிற்றல், கெட்டுக் கெட்டே போதல் என்பன.

4. உருவினது இயல்பு பூதரூபம், உபாதாயரூபம் என இரண்டாம். உபாதாயம் என்பது உபாதானமாம்; அது பற்றப்படுவது. உரு இயல்பு சைதன்னியரூபம், அசைதன்னியரூபம் என இருவகைப்படும். சைதன்னிய ரூபம்–பஞ்சேந்திரியங்களும், அவற்றின் விஷயங்களும், ஸ்திரீ பும்ஸகமான பாவரூபம் இரண்டும், இருதயம் ஒன்றும், ஆகாரரூபமும் பூதம் நாலும் ஆம். சித்த அரு, கன்ம அரு என அரு இருவகையாம். குற்றவீடு கந்தவீடு என வீட்டினது இயல்பும் இரண்டு வகைப் படும். அவைகள் உள்வழக்கு இல்வழக்கு என வெவ் வேறு இருவகைப்படும். இதனால் உரு முதலிய நான் கும் இவ்விரண்டான பகுதியை உணர்த்தப்பட்டமை காண்க. இவை எட்டும் அசைதன்னிய ரூபமாம். சைதன்னியரூபம் மேற்கூறிய பதினெட்டும் என்பர்.

5. பிருதிவி, அப்பு, தேயு, வாயு என நான்கும் பூதங்கள். கடினம், கந்தம், இரதம், வன்னம் என்பன உபாதாயரூபம். இவை எட்டும் கூடியே உரு உண்டாம். புலன்கள் பொறிகளின் வழியே ஓடி அறிய அதனைக் கண்டது சித்த அருவாம். அப்படிக் கண்ட ஒன்றை நன்று தீது எனக்காண்டல் கன்ம அரு என்று சொல்லப்படும்.

6. அராகாதி குணங்கள் பொன்றக்கெட்டு முத்தியின்பம் அடையாமல், சேட்டைகெட முத்தியின்பம் அடையும் என்றல் குற்றவீடு ஆம். உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தங்களும் சந்தானத்தில் பொன்றக்கெட்டு அடைவது கந்த வீடாம்.

"உருவக்கந்தமாவது: உருவங்கட்கெல்லாம் காரணம் ஆகிய பொருளைத் தெரிவிக்கின்றது. இந்த உருவக்கந்தத்தில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகிய நான்கு பூதங்களும், ஐந்து ஞானேந்திரியங்களும், ரூப ரச கந்த சத்த பரிசங்களாகிய ஐந்து புலன்களும், ஆண்மை பெண்மை வேறுபாடுகளும் இவைபோல்வன பிறவுமாகிய இருபத்தெட்டுத்தத்துவங்கள் அடங்கியிருக்கின்றன. ஆகாயத்தை ஒரு பூதமாக அவர்கள் கொள்ளார்.

வேதனைக்கந்தமாவது: இந்திரியங்களுக்கும் புலன்களுக்கும் உள்ள சம்பந்தத்தினால் உண்டாகும் உணர்வு. பொறிகள் ஐந்தும் மனம் ஒன்றும் ஆகிய அறுவகை வாயில்களால் இவ்வுணர்வு அறுவகைப்படும்: இந்த ஆறும் தனித்தனியே குசலம், அகுசலம், குசலாகுசலம் என மூன்று வகைப்படுதலால் வேதனை பதினெட்டு வகைப்படும்.

குறிப்புக்கந்தமாவது: மெய் வாய் கண் மூக்குச் செவி மனம் என்னும் ஆறு இந்திரியங்களால் உண்டாகிற அறுவகை உணர்வுக்குச் சம்பந்தமுற்று அவ்வுணர்வினால் உண்டாகும் பொது அறிவையும், சிறப்பு

அறிவையும் கொண்டு பொருள்களைப் பெயரிட்டுக்குறித்துக் காட்டுவதற்கு வேண்டிய ஞானமாகும். இந்தக் கந்தம் ஆறு இந்திரியங்களின் வாயிலாகத் தோன்றுதல் பற்றி அறுவகையினதாகும். 'ஸம்ஜ்ஞாஸ்கந்தம்' எனக் கூறுவர் வடநூலார்.

பாவனைக்கந்தமாவது: மனம் வாக்குக் காயம் என்கிற மூக்கரணங்களால் செய்யப்படும் தொழில் வேறுபாடுகளால் அக்கரணங்களுக்கு உண்டாகும் பரிபாக விசேடம். இந்தக் கந்தம் ஐம்பத்திரண்டு வகைப்படும் என்பர். இதனை ஸம்ஸ்காரஸ்கந்தம் என்று கூறுவர்.

விஞ்ஞானக்கந்தமாவது: தூங்குவோருடைய உணர்வானது கர்த்திருத்துவம், போக்திருத்துவம் இன்றிச் சாட்சிமாத்திரமாய் நிற்றல்போலச் சேதனங்களுடைய சரீரத்துள்ளிருந்து அவர்களுடைய அறிவுக்கெல்லாம் ஆதாரமாய் நிற்கும் சைதன்னிய தத்துவம் ஆகும். இந்த விஞ்ஞானக்கந்தம் தன்னுடைய காரியங்களாகிய பல வகைப்படும் எண்ணங்களால் உண்டாகும் நல்வினை தீவினைகளைக்கொண்டு எண்பத்தொன்பது வகையாக வகுக்கப்பட்டுளது."

" இந்தக்கந்தங்களெல்லாம் நிலையற்றன : ரூபம் நுரையைப்போன்று தோன்றி உடனே மறைவதென்றும், வேதனை நீரின்மீது அசைந்து தோன்றும் குமிழியைப் போன்றது என்றும், ஸம்ஜ்ஞை வெயிலில் தோன்றும் பேய்த்தேர்போல்வது என்றும், ஸம்ஸ்காரம் வாழைபோல வன்மையும் நிலையும் இல்லாதது என்றும், விஞ்ஞானம் இந்திரஜாலத்தோற்றம் போல்வது என்றும் சொல்லப்பட்டுள்ளன."

" ஒருவன் மரணம் அடையும்பொழுது அவனைச் சேர்ந்த ஐந்து ஸ்கந்தங்களும் தங்களுடைய பழைய சேர்க்கையினின்றும் பிரிக்கப்படுகின்றன. மேற்கூறிய ஸ்கந்தங்கள் இவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கும் நிலையிலே அவன் ஜீவித்திருந்த காலத்தில் செய்து வந்த நல்வினை தீவினைகளாகிய செய்கைகள் எல்லாம் விஞ்ஞானஸ்கந்தத்தில் வித்துப்போன்று உள்ளடங்கியிருந்து அந்த விஞ்ஞானஸ்கந்தத்தைத் தமக்குத் தகுதியுள்ள கதி (பிறப்பு) யில் மற்றை நான்கு ஸ்கந்தங்களோடு கலப்பித்து மறுபிறப்பை அடையச் செய்கின்றன. இவ்வகையான கருமப்பிரவாகம் மறுபிறப்பின் மூலம் ஒரு தீபத்தினின்றும் பலதீபங்கள் எவ்வாறு ஏற்றப்படுமோ அவ்வாறே ஒரு பிறப்பினின்றும் பல பிறப்புக்கள் உண்டாக்கப்படும். ஓர் ஆற்றில் நீர் ஓடிக்கொண்டிருக்கும்பொழுது ஓரிடத்தில் ஒரு விநாடியிற்கண்ட நீர் அவ்விடத்தில் அடுத்த விநாடியில் இல்லாவிட்டாலும் அவ்வாற்றொழுக்கம் ஒன்றாகக் கருதப்படுமாறுபோல வரும்பிறப்புக்களின் தொடர்ச்சி ஒன்றாகவேஇருக்கும். இதனை விளக்குதற் பொருட்டே இத்தொடர்ச்சிக்கு வாயுசந்தானம், தீபசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என்னும் இந்த நான்கினை உதாரணமாகக்கூறுவர். "

இனி, உள்வழக்கு இல்வழக்கு என்று கூறப்பட்ட இருவகை வழக்கும் தொகையுண்மை வழக்கு தொகையின்மை வழக்கு, தொடர்ச்சியுண்மை வழக்கு தொடர்ச்சியின்மை வழக்கு, மிகுத்துரையுண்மை வழக்கு மிகுத்துரையின்மை வழக்கு என விரியான் ஆறும் என்க.

7–9. அவற்றுள், ஒருகர்த்தா என்று சொல்லப்பட்டவன் உருவக்கந்தம் முதலிய ஐந்தனோடும் கூடி வருபவன் என்பது தொகையுண்மை வழக்காம்; உருவம் முதலிய ஐந்தனையும் அதனோடும் கூடாமல் நீங்கி நின்று ஒருகர்த்தா உண்டாக்குவன் என்பது தொகையின்மை வழக்காம் காரண காரியத்தொடர்ச்சியாய்ப் பொருள்கள் எப்போதும் அழிந்து தோன்றும் என்பது தொடர்ச்சியுண்மை வழக்காம்; ஒருகர்த்தாவே காரண காரியத்தொடர்ச்சியாய் எக்காலத்தும் உள்ளான் என்பது தொடர்ச்சியின்மை வழக்காம். தோன்றிய பொருள்கள் எல்லாம் அழியும் என முற்கூறுவது மிகுத்துரையுண்மை வழக்கு; தோன்றி நின்ற பொருள்கள் காரிய வடிவம் கெட்டுக் காரணமாய் நின்றது என்றல் மிகுத்துரையின்மை வழக்காம் என்பர்.

10–11. முற்கூறிய உள்வழக்கும் இல்வழக்கும் உள்ளது சார்ந்த உள்வழக்கு, உள்ளது சார்ந்த இல்வழக்கு; இல்லது சார்ந்த உள்வழக்கு, இல்லது சார்ந்த இல்வழக்கு என்னும் நான்கனுடன்கூடி ஆறு வகையாம். உள்ளதை உண்டு என்பது உள்வழக்கு, அது யானைக்கோடு உண்டு என்பது. இல்லதனை இல்லை என்பது இல்வழக்கு, அது முயற்குக் கொம்பில்லை என்பது. அறிவைச்சார்ந்து அறிவுண்டாம் என்பது உள்ளது சார்ந்த உள்வழக்கு; அறிவு கெட்டால் பின்பு அறிவு உண்டாகாது என்பது உள்ளது சார்ந்த இல்வழக்கு. அறிவு முன்பு இல்லாததாய்ப் பின்பு உண்டாம் என்பது இல்லது சார்ந்த உள்வழக்கு. உள்ளங்கையில் மயிர் உண்டு என்பதும், அந்த மயிரால் செய்த கயிறு

உண்டு என்பதும் இல்லது சார்ந்த இல்வழக்கு. இவைகளையன்றிப் பேதைமை, செய்கை, உணர்ச்சி, உருவருவவாயில், நுகர்ச்சி, வேட்கை, பற்று, கருமத்தொகுதி, முற்றோற்றம், பிணி, மூப்பு, சாக்காடு எனச் சார்பு பன்னிரண்டு உள என்பர்.

இதுவரையில் சௌத்திராந்திகன் தன் மதம் கூறினான். மேல் பிறர் மதம் கூறி மறுக்கத் தொடங்குகின்றான்.

12. இதுவரை நாம் கூறின உரு அரு வீடு வழக்கு என்று சொல்லப்படும் நான்கு வகையும் அவற்றின் விரிவும் அல்லாமல் சிலர் ஆகாயம், ஆன்மா, காலம், திக்கு, முதலியவற்றுடன் மனம் வாக்குக்கு எட்டாத ஒரு கர்த்தா உண்டு என்றும் சொல்லுகின்றனர். அவை நிலை பெற்றன ஆகா. அவர்கள் பித்துக்கொண்டமையாலோ! இவ்வாறு பிதற்றுகின்றனர். எவ்வாறு அவர்கள் சொல்லுகின்றனர்? என்பது விளங்கவில்லையே!

13. இவ்விடத்துக் கூறப்படும் ஆகாயம் தொழிற்படாது. ஆகாயம் மற்றைப்பூதங்களை யெல்லாம் தாங்கி நிற்கும் என்னில், அஃது அருவம் ஆதலால் பொருள்களைத் தரிக்கும் தன்மையுடையதன்று. ஆகாயம் ஒலி தோன்றுதற்கு இடமாம் என்னில், அவ்வொலியும் உருக்கூட்டத்தினன்றித் தோன்றாது. ஆகாயம் எங்கும் நிறைந்தது என்னில், அஃது எங்கும் நிறைந்த தொன்றன்று. ஆகலின், ஆகாயம் என்று ஒரு பொருளில்லையாம் என்க.

14. உயிர்களுக்கு அறிவுண்டு என்னில், இந்திரியங்களும், விடயங்களும், சாத்திரங்களும் கொண்டு அறிவானேன். அற்றன்று; இந்திரியங்கள் வாயிலாகப் புலன்களை யுணர்ந்தும் நூல்களைப் பொருந்தியும் உயிர் அறியும் என்னில், இருட்டில் பச்சை சிவப்பு முதலிய வன்னங்கள் கிடக்க அவற்றின் வேறுபாட்டைத் துணிந்து அறிதலின்றி ஐயுற்றுத் துன்புறுதற்குக் காரணம் யாது? ஆகலின், ஆன்மாவுக்கு அறிவில்லை என்பதன்றி ஆன்மா என ஒரு பொருளின்று என்க.

15. இந்திரியங்கள் இல்லையாயின் உயிர் ஒன்றையும் அறியமாட்டாது. இந்திரியங்கள் அறிவில்லாதன ஆகலின், அவைகளைப்பற்றி நின்று உயிரே அறியும் தன்மையுடையது என்னில், உயிர் அறிவுடையதாயின் ஐம்புலன்களாலும் அறியும் அறிவை ஒரு புலனே அறிதல் வேண்டும். அன்றியும், உயிர் அறியுமிடத்துப் பொறிகளின் வாயிலாகவே அவ்வவற்றின் புலன்கள் சார்ந்து வெவ்வேறு குணங்களையறியும் எனக் கூறின், நல்லது ஐம்புலனைச் சார்ந்து நின்றே ஐவகை அறிவுண்டாவன என்றுதானே புத்தனும் கூறுகின்றான். அவ்வாறாயின் உயிர் அறியும் என்று சொன்னது மிகவும் அழகாயிருந்தது!

16. அறிவும், அறியப்படு பொருளும் ஆக இரண்டு மன்றி அறியும் பொருளும்உண்டு எனக்கூறின் அஃது அறிவுடைப்பொருளோ? அறிவிலாப்பொருளோ? அறிவிலதாயின் மண்போன்று அசேதனமேயாம்: ஆகலின், பூதங்களின் வேறாக உயிர் உண்டு என இடமில்லை. அறியும் பொருள்தான் அறிவு என்று

கூறின் அறியும் பொருளின் வேறாக அறிவு என்பது ஒன்று இல்லையாய் முடியும். எனவே, பருப்புச்சோறு உண்ண அதுவே கறி என்றதனோடு இஃது ஒக்கும். பருப்புச்சோறு என உணவுக்குப் பெயராயிருக்கக் கறியும் பருப்புச்சோறு என்னலாமா? ஆகலின், ஆன்மா என ஒன்றில்லை என்க.

17. அறிவின் வேறாகக் கூறப்படும் ஆன்மா அருவப்பொருளா? உருவப்பொருளா? அஃது அருவமாயின் உருவப்பொருளாகிய உடலில் பொருந்தி நில்லாது. ஆன்மா உருவப்பொருளாயின் ஓர் உருவின் ஓர் உரு அடங்காது. ஆகலின், அருவும் அன்று உருவுமன்று, ஆன்மா அணு எனக்கூறின் பல துவாரங்களையுடைய உடம்பில் நில்லாது; ஆகலின், அணுவுமன்று, அது நித்தப்பொருள் எனக்கூறின் அறிவு தோற்றமும் கேடும் இல்லாததாகவேண்டும். அறிவு தோற்றக்கேடு உடைமையின் ஆன்மா நித்தமுமன்று. எனவே, ஆன்மாவானது அரு, உரு, அணு, நித்தம் உடையதன்று; ஆதலால், ஆன்மா என்பது ஒன்று இல்லை என்க.

18. ஆன்மா ஒன்றே எங்கும் நிறைந்து நின்றது என்னில், உடல்தோறும் பல பேதப்படும்: ஆகலின், அது பொருந்தாது. ஆன்மாக்கள் தத்தம் உடல்கள்தோறும் முழுவதும் நிறைந்து நிற்கும் என்னில், உடல் கெடுமிடத்துத் தானும் உடன் கெடவேண்டும். உடம்பில் ஓரிடத்துத் தனக்கு இடமாகக்கொண்டு

நின்று அறியும் என்னில், தான்நின்ற இடத்தையன் றித் தாள்முதல் தலைவரை அறிய இயலாது. ஆகலின், அறியும் பொருளாகிய ஆன்மா என்பது இல்லை, அறிவே உள்ளது.

19. காலம் என்பது யாது? பொருள்கள் தோன்றி நின்று அழிவதை வரையறை செய்வதாயின், அது தோன்றும்பொருள் நிற்கும்பொருள் அழியும் பொருள் இவற்றோடு கலந்து நிற்பதாம். பொருள் கெடிற் காலமும் கெட்டொழியும். பொருள்களின் இயல்பு மூவகைத்து எனக் கூறாமல் காலம் மூவகைத்து என்பது தவறும். அஃது தெளிவாக முயற்குக் கோடுண்டு என்னும் இல்வழக்காம். ஆகலின், காலம் இல்லை எனத்தெளிக.

20. நீ எனக்குக் கிழக்கில் இருந்தாய், என்னை மேற்கில் இருப்பதாகக் கூறுவாய். எனக்கு மேற்கில் ஒருவன் இருந்தான், அவன் நான் இருக்கும் இடத் தைக் கிழக்கு என்பான் ஆகலின், நீ கூறிய கிழக்கை யோ அவன் கூறிய மேற்கையோ இன்னதிசை எனக் கொள்வது எப்படி? அஃது உறுதியாகக் கூற இயலாத படியால் திசை என ஒன்று தனியே அறியப்படுமா றில்லை.

21. உலகத்தைப் படைத்தான் ஒரு கர்த்தா என்றாய். உலகம் முன்பு உள்ளதோ? இல்லதோ? முன்புஉள்ளதாயின் அதனைப்படைக்கவேண்டியதில்லை. முன்பு இல்லதாயின் ஒருவனால் படைக்க முடியாது.

அற்றன்று, காரணத்தில் உள்ள உலகத்தைக் காரியப் படுத்தான் என்னில், காரணம் தோன்றாதநிலை காரியம் தோன்றும் நிலை; அஃது ஒரு பொருள் உளதாயும் இலதாயும் நிற்பது ஆம். உள்ளதும் இல்லதும் ஆகிய ஒரு பொருள் உலகத்தில் உண்டோ? ஆகலின், பிரபஞ்சம் படைக்கப்பட்டதன்று, அதனைப் படைப்பானும் இலன் என்க.

22. மண்ணினின்று குடம் முதலியவைகளைக் குயவன் தோற்றுவிப்பதுபோல இந்த உலகங்களை ஒருவன் மூலகாரணத்தினின்று உண்டாக்கினான் என்று கூறின், அவன் உண்டாக்குமிடத்து எவ்விடத்தினின்று உண்டாக்கினான் என்னில், அவ்வுலகம் முன்னரே உள்ளதாம். எங்கும் நிறைந்து நின்றே உலகத்தைப் படைத்தான் என்னில், எங்கும் என்பது ஒரு முதலாய் முன்னரே இருக்கப் பின்பு கர்த்தாத் தோன்றினான் என்று சொல்லவேண்டும். ஆதலால், எங்கும் என்பது முன்னரே உள்ளது போல உலகமும் முன்னே உள்ளதாம். எனவே, கர்த்தா இல்லை என்றபடி.

23. கர்த்தா இருக்குமிடம் நியமிக்கப்படாமையின், அந்நியமான கர்த்தா காருண்ணியத்தினாலே எல்லாவற்றையும் படைத்தான் என்னில், கொல்லும் தொழிலுடைய சிங்கம் புலி யானை இயமன் முதலியவற்றைப் படைத்தவனுக்குக் காருண்ணியம் என்பது என்? கர்த்தா வல்லவன் ஆகலின் எல்லா உயிரையும் தோன்றப் படைத்தான் என்னில், அஃது பித்தர் குணமாம் என்க.

24. எல்லா உயிர்களையும் படைத்து உன் கர்த்தா அடையும் பேறு யாது? அது விளையாட்டாம் என்னில், உன் கர்த்தா அறிவில்லாத சிறுபிள்ளை போன்றவன் ஆவான். கன்மத்துக்கு ஈடாகப்படைத்தான் என்னில், கன்மஞ்செய்வோர் அநாதியாவார். ஆகலின், இதனை உண்மையாக விசாரிக்குமிடத்து உலகம் அநாதி என அறிவாயாக என்றபடி.

25. கர்த்தா உருவுடையான் என்னில், அவ்வுருவை முன்பு உண்டாக்கினர் யார்? அவன் இச்சையால் உருக்கொண்டான் என்னில், உலகத்தோரும் இச்சையாலேயே உருக்கொண்டனர் ஆம். உலகத்தோருக்கு உரு வருவது அவரவர் கன்மத்தாலே என்னில், உருவுள்ளோர் எல்லார்க்கும் அவ்வுரு கன்மத்தாலேயே ஆகவேண்டும்; ஆகலின் உருவனன்று.

26. இனி, கர்த்தா அருவுடையான் என்னில், ஆகாயம்போல் சேட்டையிலனும். ஆகலின், உயிர்களைப் பிறவித்துன்பத்தினின்றும் எடுக்க மாட்டான். உயிர்கட்கு நிழலை யொப்பான் கர்த்தா என்னில், நிழல் தன்னிடத்து வந்து பொருந்தினோருக்கே நன்மையைத் தரும். ஆகலின், அவன் வியாபியல்லனும். கர்த்தா ஏகதேசி ஆயினும் முற்றறிவன் என்னில், விரும்பிச் சிந்திக்கத்தக்கதோர் உருவம் வேண்டும்; அவ்வுருவின்றேல், அறிவும் இல்லையாய் முடியும்; ஆகலின் அருவனன்று.

27. எங்கள் நூல்கள் வேதாகமங்கள், அவை அநாதியாகிய கர்த்தா ஒருவர் உண்டு எனக் கூறுவன

என்னில், அவ்வேதாகமங்கள் அநாதியா? ஒருவரால் உண்டாக்கப்பட்டனவா? சொல்லுவார் இன்றி நூல்கள் உளவாமா? அவைகளைச் சொன்னவன் கர்த்தா என்னில், கர்த்தாவை அறிந்து அவனால் அவை சொல்லப் பட்டன என்று அறிந்ததா? நூல்களை வைத்துக் கர்த்தாவை அறிந்ததா? இது மயக்கந்தருவதாம். இவ்வாறு கேட்டதுமில்லை, கண்டதுமில்லையாம் என்க.

28. பூமியில் வளரும் மரம் முதல் புல் ஈறுக உள்ளன தாவரங்கள். அவை உயிர்வர்க்கமல்ல. பிருதிவி முதலிய பூதவடிவைப் பொருந்திய பகுதிகளாய்ப் பலவேறு வகைப்பட்டுப் புற்று மயிர் கொம்பு இவை போலத்தோன்றி வளர்ந்து அழிவன ஆம். இவை உண்டாகக் காரணம் யாது? என்னின் அண்டசம், சுவேதசம், சராயுசம் ஆகிய ஆன்மாக்கட்குப் பயன் தருவனவாய் அவை அநாதியே உண்டாயின என்க.

29 உயிரைக் கொல்லல் பாவம். மாண்டன எல்லாம் மண்ணோடொக்கும். ஆகலின், ஒருவரால் கொல்லப்பட்டவற்றைப் புசிக்கலாம்: அது பாவமாகாது. தண்ணீர்ப்பந்தரில் வழிப்போக்கர் நீருண்ணுகின்றனர். அதனால் வரும் புண்ணியம் தண்ணீர்ப்பந்தர் வைத்தவருக்கோ? அன்றி நீருண்டு தாகம் தணிந்தவருக்கோ? அதுபோல, உயிரைக் கொன்றவனுக்கே பாவம் அன்றித் தின்றவனுக்குப் பாவமில்லையாம்.

30. உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் ஐந்துகந்தமும் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கெட்டுத் தோன்றுவன. அவை

பிறப்புக்குக் காரணம் ஆகிய பந்தங்களாம். அவற்ருல் துன்பம் உண்டாம். அவை முற்றும் ஒருங்கே கெட்டொழிதல் முத்தியின்பமாம். இவை முறையே குற்ற வீடு எனவும், கந்தவீடு எனவும் சொல்லப்படும்.

31. நல்லனவற்றை யெல்லாம் கெடுக்கும் காமக் குரோதம் முதலிய தீக்குணங்களை அகற்றி,நல்லறங்களை ஆற்றி, ஐம்புல அடக்க முடையனாய் இன்பதுன்பங்களை விடுத்துப், புண்ணியபாவங்களைக் கெடுத்துக், குற்றமில்லாத நல்வாழ்வுக்குரிய எட்டுப் பண்புகளையும் கைக்கொண்டு, அவற்றிற்கு மாருனவற்றையெல்லாம் ஒழிக்கும் ஞான நிலையே சமாதியென்று பேசப்பட்டுளது.

---

# 2. (ஆ) சௌத்திராந்திகன் மதமறுதலை

---

1. புத்தனே! எம்முடைய சுவாமி முழுவதும் உணர்ந்தான் என்ருய். அவ்வாறு நீ கூறியது அறியாமையாம். உன் கடவுள் உருவெடுத்து ஓரிடத்து வாழ்ந்தவன். அவன் அளவில்லாததாகிய உலகம் முழுவதையும் எவ்வாறு அறிதல் கூடும்? ஒவ்வொன்ருக எல்லாவற்றையும் அறிந்தான் என்னில், ஒவ்வொன்றின் தோற்றத்தையும் கேட்டையும் பிறவற்ரோடுள்ள தொடர்பையும் அறிதல் வேண்டும். அவ்வாறு அறிதல்

முழுவதுமாய உலகத்தை அறிந்ததாகாது. அது சுட்டறிவாம், சுட்டிறந்தது அன்று. எல்லையில்லாத ஞானத்தால் அறிந்தேன் என்னில், கணந்தோறும் அறிவு தோன்றி அழியும் என நீ கூறுவதனுல் அழியும் அறிவு என்றும் நிலை பெறுது, ஒருகால எல்லையில் தோன்றுதலும் அழிதலும் உடையது அது. ஆகலின், அனைத்தினையும் அறிந்தான் எல்லையில்லாத ஞானத்தால் என்றது அடாது.

2. உலகில் உள்ள சில பொருள்களை அறிந்து அவற்றின் பகுதிகளிலே வைத்து ஓட்டிப் பல பொருள்களையும் அறிவன் என்னில், அறிவால் அறியும் பொருள்கள் பலவாய், அறிவும் பலவாய், அவற்றின் பகுதிகளும் பல பேதமாய் முரணும்; ஆகலின், ஒன்றைக்கொண்டு முழுவதையும் அறிதல் எப்படியாம்? அன்றியும், பிரபஞ்சத்தில் ஒருபொருளை அறியுமிடத்து அறிந்து, ஆராய்ந்து, தெளிதல் வேண்டும். ஒன்றை அறியும்போது பல பேதப்படும். அதனுல், உன்னுடைய கணபங்கவாதம் இடர்ப்பாடு விளைக்கும். ஏனெனில், ஒரு பகுதி தோன்றுமுன் அதற்கு முந்திய பகுதி அழிந்துபோமே! ஆகலின், ஒரு பொருளை அறிந்த அறிவுடன் மற்றைப்பொருளை அறிந்த அறிவையும் சேர்த்து அறிதற்கு இடமில்லையாம்.

3. வீட்டியல்பை அறிந்து உன் கடவுள் நூலினைக் கூறினுன் என்னில், ஒரு பொருள் ஒரு சோரக் கெட்டுப்போய்ப் பின் அது வந்து சொன்னது என்பது போலும். எப்படி என்னில், அறிவு கெட்ட பின்

அன்றோ ! முத்திகைகூடும். அது கெட்டு முத்தியடைந்தவன் பின்னும் வந்து தோன்றினன். அறநூல் சொன்னன் என்றது: தேனையும் நெய்யையும் கூட்டிக் குடித்துச் செத்தவன் ஒருவன் மீண்டும் உலகில் வந்து தேனும் நெய்யும் கூடில் நஞ்சாம் என்று சொன்ன தன்மையையுடையதாம். அறம் முதலியவற்றைக் கூறிய பின் முத்தியுற்றான் என்னில், அவன் முத்தியின் இயல்பை அறிந்தானலன் அவன் கூறிய அறமும் முத்தியில் சேர்க்கமாட்டாது. அவன் கூறிய முத்திநெறியானது தவளை வாயிலிருந்து நுரைநீர் உண்டாயிற்று, அது வெள்ளமாகப் பெருகி ஆறாகியது. அதன் அளவு தெரிந்திலது, எனினும் இக்கரையில் நிற்போரையெல்லாம் அக்கரைக்கே சேர்த்துவிடவேண்டும் என்று ஆசைப்படும் ஒருவனையே ஒக்கும்

4. கர்த்தா பிறவியில் அகப்பட்ட உயிர்களைக் காக்கும் பொருட்டுத்தான் பிறவியெடுத்தான் என்பது: பல கலைமான்கள் வலையிற் சிக்குண்டன, அவைகளை ஒரு கலைமான் கண்டது, அவற்றை விடுவிக்க எண்ணிக் குதித்தோடியது, வலையிற்புக்கது என்று கூறுவதனோடு ஒக்கும். அன்றியும், அறத்தை ஆக்குதற்கே புத்தன் பிறந்தான் என்னில், எல்லா உயிர்களும் அறத்தை ஆக்குதற்கே பிறந்தன என்பதாய் முடியும்.

5. அவைகள் பிறத்தற்குக் காரணம் வினை என்னில், அவ்வினை உன் தலைவனுக்கும் உண்டன்றோ ! அன்று, அவன் தன் விருப்பத்தின்படி பிறந்தான் என்னில், பிற உயிர்களும் அவ்வாறு பிறந்தனவேயாம்.

பிற உயிர்களைப்போன்று ஒரு யோனி வாய்ப்பட்டுப் பிறந்திலன், மாதா உதரத்திலிருந்து அவ்வுதரத்தைப் பிளந்துகொண்டு பூமியில் தோன்றி அறத்தை உண்டாக்கினன் என்னில், தாயைக் கொன்றான் கூறிய தர்மத்தை என்பாற் கூறுதொழிவாய்.

6. உன்னுடைய ஆதிபுத்தன் எண்ணில்லாத யோனிகளிற் பிறந்தான், அவன் பிறந்தது கொலை முதலிய பாவங்களை நீக்கித் தர்மத்தைப் பரிபாலிக்க வேண்டி என்றாய் அவ்வாறாயின், அப்புத்தன் சிங்கம் நரி புலி முதலிய யோனிகளில் பிறந்தானன்றோ! அப்பொழுது தர்மத்தைவிட்டுக் கொலையை விரும்பிப் பல உயிர்களையும் கொன்று தின்றானன்றோ! அப்படி இல்லையாயின், அப்பிராணிகளாகப் பிறந்தபோது பசிக்கு எதனை உண்டான்? அவன் பாதுக்கன் என்னில், பல உயிர்களையும் கொன்று உண்டமையால் பொல்லாதவனே: அன்றியும், கணவனை நீங்கிச் சோரம் செய்யும் பெண்டிர் துயருக்கும் கண்ணி முதலிய கொண்டு கொலை செய்வோர் துயருக்கும் இரங்குவன் என்னில், சொல்லினும் கருதினும் இச்செயல்கள் மிக அழகிது ஆம். இதனால், கொலைகடிந்து தன்மம் பாலித்தான் என்பதும் பாதுக்கன் என்பதும் மறுத்த வாறாயிற்று.

ஊனுண்டு உயிர்களிடத்து அருளுடையோம் என்போர் கூற்று எத்துணை இழிந்ததென்க.

7 ஒரு பொருளைக்குறித்து அதற்குரிய சொல்லைத் தேடிச் சொல்வதன் முன் உன் கொள்கைப் படி உன்ஞானம் கெடும். ஆகலின், உனக்கு நூல்

உண்டாம்படி எப்படி? அற்றன்று, அவ்வறிவு பொருந்திவரும் தொடர்ச்சி வழி நூல் தோன்றின வாம் என்னில், முன்சொன்ன சொல்லே பின்னும் சொல்ல நேரும். முன் தோன்றிய அறிவு கெட்டுப் பின்தோன்றிய அறிவு சிறந்தது என்னில், அம் முறையே பின்தோன்றுவதும் கணத்திற் கெடும். ஆக லின் முன்னறிவே ஆம். எனவே, பித்தர் சொன்னதை அறியாது பேதை சொல்லிய ஒன்றைத் தெரிவிக்கும் நூலாம் அது. முதல் நடு இறுதி முரண்படாமல் நூல் அமைதல் வேண்டும். உன் கொள்கைப்படி முதலில் தோன்றிய அறிவு நடுவில் உண்டாம் அறிவுக்குமுன் அழியும், அதுவும் இறுதிப்பகுதி தோன்றுமுன் இறுதி யாம்; ஆகலின், மாறுபாடில்லாத நூல் புத்தன் கூறி னன் என்பது எவ்வாறு பொருந்தும்?

8. உன்னுடைய புத்தன் ஆதியிலே பல தருமங் களைச் செய்து, முழுதுணர்ந்து பின்பு பிடகநூலைச் செய்தான் என்னில், அவன் முன் செய்யப்பட்ட தருமங்களை யாவர்பால் அறிந்து செய்தான்? அவ் வறங்களை அவனுக்குமுன் ஒருவன் கூறினன் என் னில், அவனுக்குக் கூறினன் யாவன்? என்னும் வினா வரம்பின்றி ஓடும்: அஃது அனவத்தை என்னும் தோஷமாம். விடையுங்கூற இயலாமல் முட்டுப்படும். ஆகையால், கர்த்தாவும் இல்லையாம். உன்னுடைய பள்ளியுள் நீ தொழும்படி நின்ற தெய்வம் எது? கூறுவாயாக.

9. இனி, இந்தப்பிடகநூலைச்சொன்னவன் புத்தா சாரியன், அவனே அப்பள்ளியில் இருந்தான் என்னில்,

அவனால் ஆசாரியன் என்று சொன்னப்பட்டவன் யாண்டிருந்தான்? அவனுக்குக் கடவுளாவான் யாவன்? அவனால் சொல்லப்பட்டநூல் யாண்டுளது? என்னும் வினாக்களுக்கெல்லாம் விடையில்லையாம். ஆதலால், குருசந்தான முறைமையும் உனக்கு இல்லையாய் முடியும் எனவே, நூலின் அடைவுகூறின் சங்கார காலத்தில் அழிவில்லாத பரமேசுவரனால் சொல்லப்பட்டனவாம்; அவை வேதாகமங்கள். ஆகமச்சார்புள்ளோர் கூறுவது உணவைச் சுருக்கித் தவத்தைப் பெருக்குவதே. உன்னுடைய பிடகநூல் கண்கழுவாமல் சூரியன் உதிக்கும் முன்னமே புலாலுடன் உண்ணும் போசனப் பிரியன் ஒருவனால் சொல்லப்பட்டதன்றோ!

10. முதல்நூல் வழிநூல் சார்புநூல் என நூல் மூவகைப்படும். அவை பரமேசுவரனால் அருளிச் செய்யப்பட்டு உலகில் வழங்குவன. இம்மூவகை நூல்களில் உன்னுடைய நூல் எவ்வகையைச் சார்ந்தது? ஒன்றுமின்று: ஆகலின், உன் நூலும் ஒரு நூலாமோ? உலண்டாற் செய்யப்பட்ட நூல், சிலம்பி செய்த நூல், பருத்திநூல் ஆகிய இவற்றின் தகுதிகூடச் சிறிதுமில்லாதது உன் பொய்ந்நூல்; அதனால் அறத்தை உண்டாக்கி நடத்தியதும் அம்மம்ம! ஆச்சரியமே!!

11. பொய்த்தவனே! உன்னுடைய ஆசாரியன் பொன்றக் கெட்டான் என்றாய். இங்குப் போற்றுவது யாவரை? இறந்தோரை நோக்கிச் செய்யும் சில கிரியைகள் இருந்தோருக்கும் நன்மையைச் செய்யுமே! என்னில், உயிர்கள் நித்தமாதல் வேண்டும். ஆகையால்,

நீ கொடுக்கும் பலியால் உண்டாம் புண்ணியம் இத்தன்மையுடையது என நினைந்து அப்புண்ணிய பலத்தைத் தருதற்கு ஒருகர்த்தாவும் வேண்டும். இவைகள் உன் நூலில் சொல்லப்படா. பொன்றக் கெட்டவர்க்குச் செய்யும் சிறப்பாகிய உள் வழக்கு தீபம் பொன்றக் கெட்டவிடத்து அழிந்த தீபத்துக்கு உபகாரமாம் எனக்கருதி நெய்யும் திரியும் கூட்டும் அறிவின்மை போன்றதேயாம்.

12 நீ அளவைகளுள் காட்சியும் அனுமானமும் ஆகிய இவற்றையே கொண்டாய். நூலைக் கண்டான் ஒருவன் அந்நூலைச் செய்தான் ஒருவன் உளன் என்று அனுமித்தறிவான். அதுபோல, நூலிற் சொல்லப்பட்ட பொருள்கள் எல்லாம் அநுமித்தறிவனவேயாம் என்று கூறுவாய். ஆனால், பூமிக்குமேல் உள்ள உலகங்களும், கீழ்உள்ள உலகங்களும் அநுமானத்தால் கூறமுடியுமாயின் கூறுவாயாக. நூல் இல்லையாயின் அவ்வுலகங்களைப்பற்றிய செய்திகள் எவ்வாறு அறிவாய்? அவை உன் அநுமானத்தால் அறிவதின்று. காட்சியளவை, அநுமான அளவைகளால் அறியப்படாமல் விட்ட பொருள்களை எல்லாம் ஆகமப்பிரமாணமே அறிவிக்கும். அவ்வாகமப் பிரமாணம் இல்லையாயின், உன்னுடைய பிடகநூற்பிரமாணமும் இல்லையாய் முடியும்.

13. எல்லாப் பொருளும் அநித்தமாம், அவை நித்தப்பொருளன்று என்று உரைத்தாய். நீ கூறிய அநித்தம் உள்ள பொருளுக்கோ? இல்லாத பொருளுக்கோ? அல்லது உளதிலதான பொருளுக்கோ?

உள்ளபொருள் சூனியமாகாது, இல்லாத பொருள் உண்டாகாது, உளதும் இலதுமான பொருள் இல்லாத தாகாது. ஆதலால், நீ கூறும் கருத்தினை நன்றாக விளக்கிக் காட்டுக. அநித்தமில்லாத பொருளைக் காட்டுக என்னில், தோன்றும் பொருள் நின்று கெடுதலை யுடைத்தாம்; ஆகலின், அநித்தமே எனினும் அழிந்து சூனியமாகாது. எனவே, அநித்தப் பொருள் யாதொன்றுமில்லை. தூலம் கெடுமே யன்றிச் சூக்குமம் கெடுமாறில்லை என்க.

14. வித்துக் கெட முளைதோன்றும் அதுபோல எல்லா உருவங்களும் கெட்டுப் பின்பு அவ்வழியே தோன்றும் என்னில், அவ்வாறு ஒரு பொருட்கு ஆக்கக் கேடு கூறுதல் புத்தன் கொள்கையன்று; அது சமணன் கொள்கையாம்; உன் கொள்கை எல்லாம் அநித்தம் என்பது. இனி, முளையானது இலையும் மரமுமாய் வளர்ந்து அவ்வளர்ச்சியுடன் நில்லாது பல அவத்தைகளையும் பொருந்தி வரும். வடிவு மாய்வானேன்? என்னில், அவ்வாறு கெடுவது காரியப்பட்ட பகுதியே; காரணப்பகுதியன்று; எனவே, அக் காரணப்பகுதி என்றும் சூனியமாவதின்று என்க.

15. புத்தனே! நீ உருக்கள் எல்லாம் பூதவடிவம் என்னின், அவை ஒன்றுக்கொன்று பகைமையுடையன; ஆகலின், அவை தம்முட் கூடி உரு ஆகா. ஆண் பெண்களுடைய சுக்கில சுரோணிதக் கலப்பே உரு என்னின், மரத்தினிடமாக உருத் தோன்றுவதும் கல்லினிடமாகத் தேரை தோன்றுவதும் சுக்கில சுரோணிதக் கலப்புத்தானோ? அன்று. புண்ணிய பாவங்கள்

தாமே உருவமாம் என்னில், புண்ணியமும் பாவமும் தம்முட்கூடி உருவுண்டானதாக வேண்டும்; அது கூடாது. உண்மையாக அன்னசாரமே உருவாம் என்னில், கிழப்பருவத்தில் அன்னமுண்ணவும் அவ்வுரு வளராது தேயக்காண்கின்றோம்; ஆகலின், அதுவும் அன்றாம். அறிவுதானே உருவெடுத்துக் கொண்டது என்னில், அறிவு அருவானது, அது அசேதமான உருவாய் வளராது. இல்லாதது ஒன்று உருவமாய் வரும் என்னில், இல்லாதது இல்லாததேயாம். ஆகலின், நீ கூறியது ஆகாயப்பூப்போல்வதாம் என்க.

16. ஐய! என்றும் இல்லாதொன்று உண்டாய் வரும் என்றது பொய்யன்று; வித்தினிடத்து முன்பு இல்லாத மரம் தோன்றியது எப்படி? அப்படியே ஆம்: என்று கூறின், நன்று! அம்மரம் வித்தினிடத்து உண்டாய் நின்றே எழும், இல்லையாய் நின்று எழாது. அப்படி வித்திலே மரம் உண்டாயின் வித்தினிடத்திலே அது காணப்படவேண்டும், வித்தினிடத்திலே மரம் காணப்படவில்லையே! என்னில், நெல் வித்துக் கமுகாய் வளராது; நெல்லாயே வளரும். ஒரு மரத்தில் வேறொரு மரம் உண்டாகாது; ஆகலின், இல்லாதது உண்டாகாது. வித்துக் காரணமாக மரம் காரியப்படுதல் உள்ளது. மதியும் கலையும் போலக் கந்தங்கள் ஐந்தும் பொருந்தி உருவுண்டாம் என்னும் உன்கொள்கையையும் மறந்தனை போலும். அதற்கு மாறாக இப்பொழுது சூனியத்திலிருந்து உருத்தோன்றும் என்றது எவ்வாறு பொருந்தும்?

17. பூத உரு நான்கும், உபதாய உரு நான்கும் ஆக எட்டும் கூடியே உருவமெல்லாம் உண்டாவன என்னின், அவை எட்டும் ஒன்றோடொன்று கூடா. எவ்வாறெனில், காற்றுக்குத் தன் இயல்புக்குணம் சலித்தல்; இதனை ஒழித்து ஒழிந்த தீயும் நீரும் மண்ணும் இவையிற்றின் குணங்களான உருவம் இரதம் கந்தங்கள் ஆகிய இவைகளும் கூடுவதில்லை. தீக்குத் தன்னியல்புக்குணம் உருவம்; இதனை ஒழித்து ஒழிந்த வாயுவும் நீரும் மண்ணும் இவையிற்றின் குணங்களான பரிச ரச கந்தங்கள் ஆகிய இவைகளும் கூடுவதில்லை. அப்புவுக்குத் தன்னியல்புக் குணம் இரதம்; இதனை ஒழித்து ஒழிந்த வாயுவும் அக்கினியும் மண்ணும் இவையிற்றின் குணங்களான பரிச ரூப கந்தங்கள் ஆகிய இவைகளும் கூடுவதில்லை. பிருதிவிக்குத் தன்னியல்புக் குணம் கந்தம்; இதனையொழித்து ஒழிந்த நீரும் அக்கினியும் வாயுவும் இவையிற்றின் குணமான இரதம் உருவம் பரிசங்கள் ஆகிய இவைகளும் கூடுவதில்லை. ஆகலின், இவை எட்டும் கூடி உரு ஆகா. மாபூதமும் குணமும் இந்திரிய விடயங்கள் என்பதும் அறிந்திலாய் புத்தியில்லாதவனே; அவற்றைப் பற்றிப் பேச உனக்கு இடமில்லையே.

18. மருந்தெண்ணெயில் மருந்து தோன்றாமல் கரைந்து நுட்பமாகக் கலந்திருந்து நன்மையைத் தரும். அதுபோல, பூதவுருவும் உபாதாயவுருவும் ஆகிய எட்டும் தூலப்பகுதி கெட்டுச் சூக்கும உருவாய்க் கலந்திருக்கும் எனப் புத்த! நீ கூறுகின்றாய். வியாதியைத் தீர்க்கும் மருத்துவன் ஒருவன் அவ் எண்ணெயையும்

மருந்தையும் கூட்டும் முறைமையிற் கூட்டிடுவான். அதுபோல, பூதவுருவையும் உபாதாயவுருவையும் கூட்டியுண்டாக்கும் ஒரு முதல்வன் வேண்டும். எல்லா உருவங்களையும் இவ் எட்டுமே உண்டாக்குகின்றன என்னில், அப்பொருள்கள் எல்லாம் ஒருதன்மைப்பட்டனவாக வேண்டும் அவ்வாறின்றி, ஒன்றன் குணம் மற்றொன்றில் கூடியிருக்கக் காண்கிலேம். பூதவுருப் பொருளையும், உபாதாய வுருப்பொருளையும் தனித்தனி காட்டமுடியுமா? உபாதாயம் என்பது பூதகுணம். அந்தக்குணத்தை யுடையது பிரபஞ்சமாம். குணமானது குணியோடு பிரிப்பின்றியிருப்பது. அதனைத் தனித்துக்காட்ட இயலாது.

19. மற்றும், புத்த! நீ தோன்றிய அறிவு கெட்டுப் பின் ஓர் அறிவை உண்டாக்கும் என்கின்றாய். அழிந்த அறிவு மற்றோர் அறிவைத் தோற்றுவிக்க மாட்டாது, அஃது இல்பொருள் ஆயிற்று. தோன்றிய அறிவு கெடவே, அவ்வறிவினால் அறிந்த பொருளும் செய்தவினையும் புதிதாய்வரும் அறிவில் எவ்வாறு பொருந்தும்? முன்னை அறிவு பின்னை அறிவை உண்டாக்கிக் கெடும் என்பாய் ஆயின், ஒரு காலத்து இரண்டு அறிவு தோன்றி நில்லா. முன்அறிவு முற்றக் கெடலின்றிச் சிறிது நின்று பின்அறிவைத் தோற்றுவித்துப் பின்புமாயும் என்னில், உணர்வுக்குச் சுபாவம் நித்தம் அநித்தம் அன்றி அநித்தம் என்பது அடாதாம். பயிருக்கு இடும் எருவும் வைக்கோலும் கெட்டுப் பயிருக்கு நன்மையை விளைக்கும்; அதுபோல, முன்னைய

அறிவுகெட்டுப் பின்னை அறிவையும் உண்டாக்கும் என்னில், எருவும் வைக்கோலும் தூலம் கெட்டுச் சூக்குமம் ஆகிய வீரியம் கிடந்து பயிருக்கு நன்மையை விளைக்கும்; அதுபோல, நீ கூறுமாறு உன் அறிவு சேர அழிவன அல்லவாம். ஆகலின், அநித்தமாகா. எருவால் நன்மைபெறும் பயிர் வேறு ஆனாற்போல அறிவாலாம் பொருளும் வேறு ஆம் என்க.

20. புத்த! நீ உணர்வு கெடினும் அதன் தொடர்ச்சி கெடாது; அத்தொடர்ச்சியால் புதிய உணர்வு உதிக்கும் எனக்கூறின், நீ கூறும் அத்தொடர்ச்சியே நித்தமாம். ஆற்றில் ஓடும் நீர் முன்னே சென்றது ஒழியப் பின்னே சென்றதும் அதனைத் தொடர்ந்தே ஓடும். அதுபோல, முன்னை அறிவு கெடப் பின்னை அறிவும் அதனைத் தொடர்ந்துண்டாம் என்னில், ஓடும் நீரில் இட்டதெல்லாம் அதனோடு தொடர்ந்து சென்றொழியும்; பின்வரும் நீரினைப்பற்றா. அதுபோல, முந்தை அறிவால் தேடும் பொருள்கள் ஆகிய சீலம் பாவனை குறி விஞ்ஞானம் முதலிய எல்லாம் முன்னை அறிவோடு கெடும்: பின்னை அறிவினில் பொருந்தாவாம். விடாமல் ஓடும் நீர் முன் ஒழுகிய தன்மை கெடாமல் நிறைந்து பின்னீரும் ஒரொழுக்காகச் செல்லும்; அதுபோல, அறிவு இடையறாமல் தோன்றும் என்னில், அப்படியுண்டாகும் அறிவு அநித்தியமன்று; நித்தியமே.

21. நீ தொடர்ச்சி என்று கூறியது காரணமாய் நிற்பதோ? காரியமாய் நிற்பதோ? அன்றிக் காரண

காரியமாய் நிற்பதோ? காரணம் என்னில், என்றும் காரணப்பட்டு நிற்றலின் நித்தமாம்; அன்று காரியம் என்னில், அதுவும் என்றும் காரியப்பட்டு வருதலின் நித்தமாம்; காரணகாரியத்தொடர்ச்சி மீளவும் வந்து பொருந்தும் என்னில், அப்படிக் காரணகாரியப்படுத லுமாய்த் தோன்றலும் கெடுதலுமாய்த் தொன்று தொட்டு வருதலின் நித்தமே; அதற்கிழுக்கில்லை. முன்னறிவையும் பின்னறிவையும் சேர்ப்பதே தொடர்ச்சி என்னில், தோற்றக்கேடுடைய பொருள் களுக்கு யாம் கூறியது இதற்கும் ஒக்கும்; ஆகலின், அதுவும் நித்தமாய் முடியும். மற்றோர் அறிவு என் னில், அத்தொடர்ச்சியே நீ கூறும் அறிவாதல் வேண்டும்; அல்லது அறியப்படும் ஐந்து கந்தங்களுள் ஒன்றாதல் வேண்டும். அவ்வறிவு இந்திரியங்களோடு ஒரு பொருள் ஆகாமல் வேறொருபொருளாம் ஆகலா னும், இந்திரியங்கள் அவ்வறிவுக்கு மூலமன்று ஆகலானும் அறிவு நித்தியப் பொருளாம். ஆதலால், ஆன்மாவும் ஆன்மாவால் அடையப்படும் பொருளு மன்றி முறையே கெட்டு இந்திரியங்கள் அறிவாகவும் அறிவு இந்திரியங்களாகவும் முறை பிறழ்ந்து வரும். இதனை விசாரித்தறிவாயாக.

22. இனி, காலம் பேதப்படாதது; ஒரு காலத்தி லேயே அறிவு கெடுதலும் உண்டாதலும் ஆம் என்னில், சங்காரமும் சிருட்டியும் ஒரு தொழிலாக வேண்டும். ஒரு பொருளின் திரிவே காலம் என்னில், எதிர்காலம் நிகழ்காலம் கழிகாலம் என வழங்குவானேன்? அப்படி

வழங்குவது பொருள்களின் வருதல் நிற்றல் கழிதல் களே ஆம் என்னில், காலம் என்பதை வைத்துத் தானே தொழில் மூன்ருகக் கூறப்படும். காலபேதம் இல்லையாயின் இருது பேதங்களும் குணபேதங்களும் இல்லையாம்; பொருள்களெல்லாம் ஒரு செயலுக்குரியனவே. மூன்று செயலும் ஒரு கணத்தில் நிகழும் என்னில், ஒரு கணத்திலே காலம் மூன்றுளதாம். அது காட்டுதும்; நூறு தாமரை இதழ்களை ஒன்றன் மேல் ஒன்ருக அடுக்கி ஒரு ஊசியால் குத்த அவ்வூசி இதழ்தோறும் பற்றுதல் உருவுதல் கழிதல் ஆகிய முச்செயற்படுகிறது. அச்செய்கை வெவ்வேறும் ஆகலின், காலம் மூன்றும் கணத்துள் அமைதல் காண்க.

23. அறிவு காரணமாக மற்ருேர் அறிவுண்டாம் என்னில், நீ அநித்தம் எனக்கூறும் அறிவு நின்று மற்ருேர் அறிவை உண்டாக்காது. அறிவு தான் வரும் தொடர்ச்சியிலே கெட்டால் பின்னை அறிவு தோன்ருது. உணர்வு உண்டாதற்கு உடம்பே மூலகாரணம் என்னில், உடம்பில் நின்று உணர்வு எப்போதும் உதிக்க வேண்டும். தூங்கும்போது உணர்வு உண்டாதல் இல்லை. உடல் அறியும் தொழிலைச் செய்வதினின்று அறிவுண்டாம் என்னில், இந்திரியங்கள் எப்போதும் கன்மத்தைச் செய்தலால் அறிவு அழிவதில்லை. அதுவன்றி, அறிவுக்கும் செயலுக்கும் வேறுபாடில்லையாம்; செயலே அறிவாம். அறிவு செயலுக்குக் காரணம் என்பது இல்லையாம். எனவே, உணர்வு உடலினிடத்தும் வினையினும் தோன்ருது; ஆன்மாவினிடத்தே தோன்றும் என்க.

24. புத்தனே! நீ கன்மம் அறிவையுண்டாக்கும். அறிவு கன்மத்தையுண்டாக்கும் என்னில், அறிவுக்கு நினைவு உண்டு செயலுக்கு நினைவில்லை. ஆகலின், ஒன்றையொன்று உண்டாக்கமாட்டாது. மற்றும், அவை அநித்தம் என நீ கூறுதலின் ஒன்றையொன்று உண்டாக்கிக் கெடமாட்டா. விறகிலே தீத்தோன்றி அவ்விறகைச் சாம்பராக்கினாற்போல அறிவு கன்மத்திலே தோன்றி மீளவும் அக்கன்மத்தைக் கெடுக்கும் என்னில், விறகில் உண்டாகும் தீயானது அதனைச் சாம்பராக்கின் மீட்டும் ஒரு காட்டத்தை உண்டாக்க மாட்டாது; அதுபோல, முன்பிறந்த அறிவு பிறந்த போதே கன்மத்தைக் கெடுக்கும், பின்பு அக்கன்மம் அறிவை உதிப்பிக்கமாட்டாது; அறிவும் கன்மத்தை உதிப்பியாது. ஆதலால், கன்மம் அறிவினை உண்டாக்கும் அறிவு கன்மத்தை உண்டாக்கும் என்னும் உன் கொள்கை பொருந்தாதாம்.

25. பேய், நரகர், தேவர், பிரமர் முதலியோர் தாய்தந்தையர் இன்றி இருப்பும் இன்றி உடம்பெடுத்து வருவார் என்று சொல்லுவாய். அக்காயம் தோன்றுதற்குக் காரணம் இருத்தல் வேண்டும். அந்தக் காரண காரியங்கள் உன்னால் அறியப்படாது. அக்காயங்கள் நீ ஆராய்ந்த உணர்வுதானோ? பூதம் நான்கும் உபாதாயம் நான்கும்கூடிய சுத்தாட்டகமோ? அல்லது கன்மந்தான் தோற்றுவித்ததோ? அவ்வடிவை உண்டாக்கினோர் உண்டோ? இவைகளை ஆராய்ந்துகூற இயலுமாயின் கூறுக. உண்மையாக ஆராயுமிடத்து உலகம் தோன்றுவதற்கு முதற்காரணம், துணைக்

காரணம், நிமித்தகாரணம் எனக் காரணங்கள் மூன்றுள; அவற்றை ஆராய்ந்தறிவதே அறிவாம்.

26. உருவக்கந்தம் முதலிய ஐந்து கந்தங்களின் கூட்டமே ஆன்மா என்பதன்றித் தனியே ஆன்மா என்பது ஒன்றில்லை என்று கூறுவாய். அவ்வுருவக் கந்தம் முதலிய ஐந்தனையும் அறிவது விஞ்ஞானமே என்பாய். அவ்விஞ்ஞானத்தை அறிந்தது யாவர் என்னில், விளக்குப் பிறபொருள்களை அறிவித்துத் தன்னையும் அறிவித்து நிற்கும்; அதுபோல, விஞ்ஞானம் பிறவற்றையும் உணர்த்தித் தன்னையும் உணர்த்தி நிற்கும் என்கின்றாய். விளக்குக்கும் பிறபொருள்களுக்கும் வேறாக அவற்றை அறியும் கண் இருத்தல்போல விஞ்ஞானத்துக்கும் பிறவற்றுக்கும் வேறாக அவற்றை அறியும் ஒருவன் உண்டு என அறிவாயாக. அறிவு வேறு, அறிபவன் வேறு; இது முன்னரும் கூறப்பட்டது.

27. உடம்பும் பொறியும் மனமும் ஆகிய இவற்றை ஆன்மா எனக் கதறுவாய். புத்தனே! உறங்கும் காலத்து உடம்பு ஒன்றனை அறியாது. இந்திரியங்களும் ஒன்று அறிந்ததை ஒன்று அறியமாட்டாது. மனமும் கணத்தில் கெடும்; ஆகையால், காலம் மூன்றின் செய்தியையும் அறியமாட்டாது. ஆகலின், இவை ஆன்மா அன்று. உடல் முதலிய மூன்றனையும் ஆராயத்தக்க அறிவுடையதாய், அவற்றின் குணங்களை அறிந்தும் என்உடல் என்பொறி என்மனம் எனச்சொல்லி அவை நான் அல்லேன் என்று அறிந்து மனத்தால்

ஒன்றை நினைந்து பொறிகளால் ஒவ்வொன்றைக்கண்டு உடம்பால் தொழிலைச் செய்வது ஆன்மா என்று அறிவாயாக.

28. முன்பு ஒன்றனை அறிந்த அறிவுதானே பின்பு உண்டாகியவற்றை யான் அறிந்தேன் என்று உணரும்; ஆகலின், அவ்வுணர்வுக்கு வேறாக உயிர் என்று ஒன்று இல்லை என்னில், முன்னே ஒன்றனை மொழிந்தேன் என்ற இடத்து வாய்மொழிந்ததோ? வாய்க்கு வேறாகவுள்ள ஒருவன் மொழிந்ததோ? அது வாயால் ஒருவன் மொழிந்தது எனத் துணிகின்றோம். அதுபோல, மனத்தால் அறிவன எல்லாவற்றையும் அறிந்து அதனை யான் அறிந்தேன் என்றது எது? அதுதான் ஆன்மா. மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் ஒன்றை நினைந்தும் சொல்லியும் செய்தும் அம்மனத்துக்குப் பற்றுக்கோடாய் நிற்பது ஆன்மாவாம் என அறிக.

29. இந்திரிய வியாபாரத்தால் உண்டாகும் அறிவு, மனத்தின் உண்டாம் அறிவு என அறிவு இரண்டாம்; அஃது ஒன்று கெட்டு ஒன்று தோன்றும் எனக் கூறும் புத்தனே! கனவில் கண்ட எல்லாவற்றையும் நனவில் சொல்லார், நனவில் கண்ட எல்லாவற்றையும் கனவில் காணார்; பிறவிக்குருடன் புறத்துள்ள வடிவத்தையும் வன்னத்தையும் அறியமாட்டான் அது போல என்க. இந்திரியக் குறைவாலே அறிவு தோன்ற வில்லை என்னில், அறியத்தக்க கனவும் அழிந்து உணர்வும் அழிந்து உறக்கத்தையும் அடைந்தபோது

இரண்டின் தொடர்பும் அற்றுவிடுகிறது. ஆன்மாவுக்கு உணர்வு உதிப்ப மீண்டும் கனவினையும் நனவினையும் உணரும். எனவே, இந்திரியம் ஆன்மாவுக்கு அறிதற் கருவியாதல் அன்றி இந்திரியம் ஆன்மா வல்ல என்க.

30. புத்தனே! ஒருகாலத்து ஒரு பொறியி னிடத்திலே ஓர் உணர்வாக அறியும் எனக் கூறினாய். செவிப்பொறி என்பது இரு செவியிலும் உள்ளதாகை யால் இரு செவிகளும் சேர்ந்தே ஒரு ஓசையைக் கேட்டல் கூடும். ஒருகாலத்தே இரண்டு கண்களும் இரண்டு காதுகளும் மனமும் கூடிநின்றே ஒருவனைக் கண்டு அவன் சொற்களைக் கேட்டு அறியும். ஐம் பொறிகளும் மனத்தோடு கூடாமல் தனித்துநின்று தத்தம் விடயங்களை அறியா. பொறிகள் ஐந்தனுள் ஒன்று அறிந்ததைை மற்றொன்று அறியாது. மனமும் ஒருகாலத்து ஐம்பொறிகளில் ஒவ்வொன்றோடு கூடி நின்றே அவ்விடயத்தைை அறியும்; மற்றொரு பொறி யுடன் கூடிநின்று பிறிதொரு விடயத்தை அது உணர மாட்டாது. பொறிகளுடன் கூடிநின்று விகற்பித்து அறிவது மனத்தின் குணமாம். இப்பொறிகளையும் மனத்தைையும் கருவியாகக் கொண்டு அறிவது ஆன்மாவே.

31. புத்தனே! மனமானது அருவாய், உணர் வாய், பொறிகள் ஐந்தனோடும்கூடி ஆறுவிதமாய் மாறி மாறித் தோன்றும் என்கின்றாய், மனம் அருவப் பொருள் ஆகலின், உருவினும் நிலையுடையதன்றாம்; காயத்தோடுகூடிப் பால தருண விருத்த அவத்தைை களையும் அடைதல் இன்று. உறங்கின இடத்து

அழைத்தாலும் உடலில் தட்டினாலும் அதனை அறிந்து வரும் அறிவு எவ்விடத்துளது? அது நெஞ்சினிடத் துளது என்னில், திரியைப் பற்றி நின்ற ஒளி அத்திரி யானது மாய்ந்தால் உடன் மாயும்; அல்லாமல் இடிஞ் சிலைப்பற்றித் தோன்றாது; அதுபோல, சத்தாதி விடயங்களில் செல்லும் தொழிலை அறிந்து செலுத்த மனம் அறியாது. மனம் நெஞ்சினிடமாக இருத்தல் வேண்டும். மனம் அழிந்துபோயின் அஃது எப்படி உண்டாம்? உணர்வுக்கு மூர்ச்சை வந்தபொழுது அறிவு நின்றநிலை யாது? எனவே, பொறியும் மனமும் கருவியாகக்கொண்டு நின்று அறிவது ஆன்மா என்க.

32. விருப்பு வெறுப்பு இன்பதுன்பம் தொழில் செய்தல் முதலியன அறிவுக்கு இல்லை, அவற்றை யுடையது ஆன்மா. ஒருகாலத்திலே ஒருவன் ஒரு பழத்தைத் தின்றான். பின்னொருநாள் அதுகைய வேறொரு பழத்தைக் கண்டான். முன்பு அப்பழத்தின் சுவையை உண்டறிந்த அவன் பின்னும் அதனை உண்ண ஆசைகொள்ளுகிறான். வெறுப்பு முதலியனவும் அப்படிப்பட்டனவே. இச்சை ஞானக் கிரியை முதலிய வற்றை முன்னும் பின்னும் உணர்தலால் அவ்வாறு உணரும் பொருள் ஆன்மாவே ஆம் என்பர் பெரியோர். நீ ஆன்மா இல்லை என்று கூறும் கூற்றை அறிவுடை யோர் கொள்ளார்.

33. வானமும், ஆன்மாவும், காலமும், திக்கும் இல்லை என்று முன்னர்ச் சொன்ன புத்தனே! கேள். எல்லாப் பொருள்களும் போக்கு வரவு செய்தற்கு

வழியுமாய் இடங் கொடுத்து நின்று அவற்றை நீங்காமல், இருளும் ஒளியும் ஆகாமல், அவ்விரண்டற்கும் இடமாய் இருப்பது வான். அவ்வானின் குணம் சத்தம். அது வாயு முதலிய பூதங்கள் நான்கும் தோன்றி ஒடுங்குதற்குத் தாரகமுமாய் நிற்கும். ஆன்மா உண்டென்பது முன்னர்க் கூறப்பட்டது. காலம் என்பது காலை நண்பகல் மாலை என்னும் பொழுதாயும், நேற்று இன்று நாளை என்னும் நாளாயும் இத்தன்மையில் மூன்று விதமாய் வேற்றுமைப்பட நன்மை தீமைகளைச் செய்யும். திக்கு என்பது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்னும் பிரிவுகளையுடைத்தாய் முறை பிறழாமல் என்றும் நிலைபேறுடையதாய் அவ்வத்திசைகளை நோக்கிக் கன்மம் செய்வோருக்கு அவ்வக்கன்ம பலத்தைக் கொடுப்பதாய் உள்ளது. ஆகையால், ஆகாயம் ஆன்மா காலம் திக்கு முதலியன உண்டு என்று அறிவாயாக.

34. புத்தனே! நீ கர்த்தா இல்லை, நூல்இல்லை எனக் கூறுகின்றாய் அன்றோ? குடம் முதலிய பாண்டங்களை வனைவதற்குக் குயவன் வேண்டப்படுவது போல, உலகம் காரியப் பொருள் ஆதலின் அதனைக் காரியப்படுத்துதற் பொருட்டு ஒரு வினை முதல் வேண்டும். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கனையும் கூறி ஆன்மாவுக்கு அறிவையும் செயலையும் அளிக்கவல்லது நூலே; அவை வேத சிவாகமங்களாம். அவ்வேதாகமங்கள் கூர்த்த அறிவுடைய பிரமன் முதலியோர் ஓதுவிக்க மகா இருடிகளாலே ஓதப்பட்டு அவர்கள் வழியாகப் பரம்

பரையே தொன்றுதொட்டு ஓதி வரப்படுகின்றன. ஆதலின், குற்றமின்றி அவற்றைக் கூறிய முற்றறிவுடையோன் ஒருவன் இருத்தல் வேண்டும். அவ்வேதாகமங்களில் கட்டளையிட்டருளியபடி நடப்பதை அறிந்து பயன் கொடுக்கும் சான்றுவானும் ஒருவன் வேண்டப்படும். ஆகலின், அவ்வேத சிவாகமங்கள் முற்றறிவும் முற்றுத் தொழிலும் உடைய சிவபெருமானால் சொல்லப்பட்டன எனவும் அவனே முழுமுதற் கடவுள் எனவும் அறிவாயாக.

35. அன்றியும், மரங்கள் முதலியன உயிருள்ளன அல்ல என்றாய். அவை வாடுகின்றன, பருக்கின்றன, மெலிகின்றன, தளிர்க்கின்றன ஆகலின் உயிருள்ளனவே. உயிருள்ளனவெல்லாம் ஊண் பெற்றால் பருத்தலும் ஊணின்றேல் வாடுதலும் இயல்பு. பட்டமரத்துக்கு நீர் விட்டால் பருத்தலும் நீர் இன்றேல் சிறுத்தலும் வாடுதலும் இன்றாம். மரம் முதலியவற்றிற்கு இந்திரியங்கள் இன்று என்னில், உயிரை உள்ளடக்கிய கருப்பை முட்டை முதலியவற்றிற்கு அவை வெளிப்படாமைபோல மரம் முதலியவற்றிற்கும் வெளிப்பட்டில என்க. முதிர்ச்சியடைந்தபின் வெளியாம். மரம் முதலியவற்றிற்குள்ள இந்திரியம் கட்புலன் ஆகாவிடினும் அவை பூத்துக் காய்த்து வளரக் காண்கின்றோம். ஆகலின், மரம் முதலியவற்றிற்கு உயிரும் இந்திரியமும் உண்டு என அறிவாயாக.

36. புத்தனே! மரத்துக்கு ஆன்மா உண்டாயின் ஒரு மரத்தின் கிளையை வெட்டி நட்டால் அதனைப்

போன்ற வேறு ஒரு மரம் வளரக் காண்கின்றோம். ஆகலின், அஃது உயிர் ஆமோ? எனக் கூறுகின்றாய். மரத்தில் உண்டாகிய வித்து, வேர், கொம்பு முதலிய வற்றையும் கருப்பமாகக் கொண்டு உயிர்கள் பிறக்கும். முட்டையிலும் கசிவிலும் தோன்றிய ஆன்மாக்களையும், பையில் தோன்றும் ஆன்மாக்களையும் போல வித்தில் தோன்றும் ஆன்மாக்கள் நடக்கமாட்டா ஆகலின், அவை உயிருடையன அல்ல என்கின்றாய். உலகத்தில் பிறப்பின் பேதம் மிகப்பல எனவும், உறுப்புக்குறை களும் பலஉள எனவும் அறிவாயாக. கால் இல்லாதார் நடக்கின்றனரோ? இல்லையன்றோ! ஆகலின் படைப் புக்களும் பலவாம் என்க.

37. மற்றும், புத்தனே! கேள்: கொல்வது குற்றம், செத்ததைத்தின்பது குற்றமின்று என்பாய். நீ தின்பாய் எனக்கருதிக் கொன்று ஒருவன் உன்னை உண்பித்தான். அவனுக்கு உன்னால் கொல்லும் குற்றம் உண்டாயிற்று. ஊனைத் தின்னுதாருக்குக் கொன்று ஊட்டுவாரும் இன்றன்றோ! என் காரணத்தால் பாவம் உண்டாகாது, அப்பாவம் கொன்றவருக்கே உரியது என்னில், உனக்கு ஒருவன் விருப்புடன் ஊன் ஊட்ட, அதனால்வரும் பாவம் அவனுக்கு உண்டாக, நீ செய்யும் தவம் தவம் ஆகுமா? நீ புலால் உண்ணுங்காலத்து உன் கடவுளுக்கும் அப்புலாலை நிவேதிப்பாய் அன்றோ? மேலும், உன் உடம்பே அசுத்தமானது வெறுக்கத் தக்கது என்று பேசுவாய். அத்தகைய நீ பிறிதொரு உடம்பின் அசுத்தத்தை உணராமல் புலால் உண்பது என்ன காரணம் பற்றியோ? அதனைச் சொல்லுக.

38. இப்போதுள்ள உடம்பு குடையைப் போன்றது, மற்றோருடம்பு அக்குடையின் நிழலை ஒத்தது. அன்றியும், கண்ணாடியில் தோன்றும் சாயையையும் அஃது ஒக்கும். அத்தகைய உடம்பை அறிவு சென்று பற்றுதலே பிறப்பாம் என்னில், குடையும் கண்ணாடியில் உருவமும் ஆகிய காரணம் கெட அவற்றின் நிழலாகிய காரியமும் இல்லையாம். அதுபோல, கந்தங்கள் ஐந்தும் இங்கே உனக்குக் கெடும்; அவை கெடவே இந்திரியம் காரணமாகக் காரியப்படும் அறிவும் உடன் கெடும். ஆகையால், கதியை அடையும் அறிவும் உண்டாகாது. அன்றியும், கனவினிடத்துத் தோன்றும் அறிவு மெய்யறிவாய்ப் பரிணமித்தாற்போல, கன்மங்களுக்கு ஈடாக எழும் அறிவு கதியிற் கூடும் என்னில், இந்திரிய அறிவு கெட்டால் செயலில்லாத உறுப்புக்களுள்ள உடம்பு முட்டை குருட்டுப்பிறப்பு ஆகிய இவற்றை விட்டு உயிர் பிரிந்தால் பெறும் கதி யாதாம்? ஆகலின், கன்மங்களுக்கு ஈடாக எழும் உணர்வு பிறப்புக்கு ஏதுவாய் உடலைப்பற்றியே நிற்கும்; அது முத்திக்கு ஏதுவாதல் இல்லை. எனவே, கன்மமும் உணர்வும் கெட்டுக் கதியடைதல் இல்லையாம் என்க.

39. புத்தனே! இன்னும், கந்தங்கள் ஐந்தும் தொடர்ந்து செல்வன, அவை தொடர்ச்சிகெட்டுத் தொழில் ஒழிதல் பந்தத்துக்கு ஏதுவாகிய துக்கமாம், அவை கருப்பூர தீபம் போல முற்றும் அழிதலே முத்தியின்பமாம் என்று கூறினாய். கந்தம் ஐந்தும் முற்றுங் கெட்டால் முத்தியிற் சேர்வார் யார்? ஒருவரும் இல்லை என்னில், முத்திபெறுவார் இலராயின்

முத்தியின்பம் யாருக்கு? கந்தங்கள் ஐந்தினும் தோன்றும் அறிவினுக்காம் என்னில், அவ்வறிவு கெடாதிருக்குமாயின் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் கந்தங்கள் ஐந்தும் உண்டாம். அவை உண்டாகவே முத்தியிலும் பந்த துக்கம் உண்டாம்; துன்பத்தையும் தரும். ஆகலின், முத்தியின்பம் இன்னதென்பதை நீ அறிந்திலை; கேட்பாயாக.

40. அநாதியிலேயே மலம் இல்லாதவனாய்த் தூயனாய், எப்பொருட்கும் மேலானவனாய், சஞ்சலம் இல்லாதவனாய், முற்றுணர்வும் முற்றுத்தொழிலும் பேரருளுடைமையும் உடையனாய் உள்ளவனே கர்த்தா. அவன் பரமேசுவரன் ஒருவனே. அப்பரமேசுவரனாகிய பசுபதி ஆன்மாக்களிடத்து வைத்த அளவில்லாத பெருங்கருணையினாலே, ஆன்மாக்களின் புண்ணியபாவங்கள் மிகுதிகுறைவுகள் இன்றித் துலையொத்த விடத்துக், குருவடிவாகக் குவலயத்தில் தோன்றிச், சத்திநிபாதம் வருவித்து, மலங்கள் கெடத் திருக்கண் சாத்தியருளி, மனம் முதலிய உட்கருவிகளையும் இந்திரியம் முதலிய புறக்கருவிகளையும் கெடுத்து, தன்னை வழிபடும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை வழிபாட்டையும் தந்தருளி, மிகுந்த கருணையாகிய கைகளினாலே பொல்லாத துன்பத்தைத்தரும் பிறவிக் கடலில் விழுந்து வருந்தாமல் எடுத்து, ஒழியாத இன்பத்தைத்தரும் முத்திக்கரையிலே வைத்தருளுவன். இதுவே எங்கள் முத்தி. நீயும் இந்த சன்மார்க்கத்தினின்று முத்தியின்பத்தை அடைவாயாக.

---

# 3. (அ) யோகாசாரன் மதம்

'அறிவே உள்ள பொருள். அவ்வறிவே இந்திரியங்களுமாய், காணப்படும் வடிவங்களுமாய் வரும். அவ்வறிவு இந்திரிய வாதனையினாலே கூடிவரும். அஃது அருவமானது. அநித்தியமான பிரபஞ்சம் சொப்பனம் போன்றது' என்பது யோகாசாரன் கொள்கையாம்.

# 3. (ஆ) யோகாசாரன் மதமறுதலை

1. யோகசாரனே ! நீ அறிவு ஒன்றும், வாதனை ஒன்றுமாக இரண்டு உண்டு என்று கூறினையல்லை, அறிவு ஒன்றே நிலையுள்ளது என்றாய். வாதனை என்பதும் அறிவே என்னில், அறிவு, விருப்பத்தோடு சத்தம் முதலிய விடயங்களிலே கலக்கவேண்டும் எனக் கருதிக் கலக்க, அக்கலப்பிலே பலகாலும் கருத்தைச் செலுத்துதலே வாதனையாம். ஆகலின், வாதனை என்பது அறிவன்று. மற்றும், கனவாவது நனவிற் கண்ட பொருள்களின்மேல் கருத்தைச் செலுத்துவதே. நனவைக் கனவென்னில், அந்த நனவுக்கும் வேறாய் நனவு ஒன்று உண்டு என்பது பெறப்படும் படவே, அறிவுக்கு வேறாகப் புறவுலகமும் உண்டு எனப்படும்; அதுவே பிரபஞ்சமாம். ஆதலால், பிரபஞ்சம் கனவன்று. நீ கூறியதே பொய் ஆம்.

2. நீ கூறிய அறிவே பிரபஞ்சம் என்னில், நான் என்பது உடம்பு என்று சொல்ல வேண்டும். உடம்பின் வேறாய் அறிவின்று என்னில், உடம்பே உள்ள பொருளாம்; அறிவு என்பது இல்லை என்ன வேண்டும். உருவப் பொருளின் வேறாய் அறிவு உண்டு, அஃது அருவானது என்பது உன் கொள்கை. அறிவு தான் பற்றிய பொருள் உருவமுடையதாயின் தானும் அவ்வுருமயமாய் நிற்பதாம். பளிங்கானது தன்னை அடுத்த வன்னத்தைக்காட்டி அவ்வன்னமே தானாய்த் தோன்றி நிற்பது போல்வது அது என்க. எனவே, உண்மையை ஆராயுமிடத்து அறிவு வேறு, அறியப்படு பொருள் வேறு ஆம் என உணர்க.

---

# 4. (அ) மாத்தியமிகன் மதம்

பொருள் எனத் தோன்றுவன அதன் அவயவங்களே: அவை இந்திரியம் பத்தாம். இந்திரியங்கள் கெட்டால் பொருள் இவை என அறிதற்கில்லை; ஆகலின், பொருளும் இல்லையாம். பொருள்கள் இல்லையாகவே அப்பொருள்களைக் கூடிநின்று அறியும் அறிவும் இல்லையாம். இது மாத்தியமிகன் கொள்கை.

---

# 4. (ஆ) மாத்தியமிகன் மதமறுதலை

1. மாத்தியமிகனே! நீ அவயவமே பொருள், அவயவி இன்று என்றாய். குடம் முதலியவற்றின் அவயவம் ஆடை முதலியவற்றில் செல்லாது; ஆடை முதலியவற்றின் அவயவம் குடம் முதலியவற்றினும் செல்லாது. ஆகலின், அவ்வவ அவயவங்களில் அவ்வவற்றின் அவயவியே உண்டு. அவயவமும் அவயவியும் கூடியே பொருளாவது. அதுபோல, பொருளாகிய உடம்பும் உண்டு; உணர்வும் உண்டு. மண் அவயவி, குடம் முதலியன அவயவம்; நூல் அவயவி, ஆடை அவயவம். உணர்வு அவயவியாகிய ஆன்மா; இந்திரியம் அவயவம்.

2. பொறிகள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், அவைகளால் அறியப்படும் பொருள்களை வேறுபட ஆராயும் அந்தக் கரணங்களும் உளவாகவும், உயிர் வந்து கூடாதவிடத்து ஒரு பொருளையும் துணிந்து அறியும் அறிவு உண்டாகாது. புலன்களோடும் அந்தக் கரணங்களோடும் கூடிநின்று அறியும் ஆன்மா உண்டாகவே அறிவும் உண்டாகும். ஆகையால், பொருள் உளதாம். பொருளாகிய ஆன்மா உண்டாகவே அறிவும் உள்ளதாம் என்று அறிவாயாக.

# 5. (அ) வைபாடிகன் மதம்

மஞ்சளும் சுண்ணும்பும் கூட ஓர் சிவப்புத் தோன்றும். அதுபோல, காணப்படும் பொருள்களும் இந்திரிய விடயமான அறிவும் கூடிய போது பிரபஞ்சம் தோன்றும்; இதுவே ஞானதரிசனம் என்பது. அப்படித் தெளிந்தோருக்குப் புத்தபகவான் வீட்டினைத் தந்தருளுவர். இன்பத்தை அநுபவிக்கலாம். இதனைக் கூறுபவன் வைபாடிகன்.

# 5. (ஆ) வைபாடிகன் மதமறுதலை

அறியப்படும் பொருள் புறத்தே உள்ளது, அறியும் அறிவு அகத்தே உள்ளது, இரண்டும் ஓர் இனம் உடையதன்று. அன்றியும், அறிவு அருவமானது, அது ஞானம் எனப்படும். அறியப்படும் பொருள் உருவமுடையது, அது ஞேயமாம். ஆதலால், இவை தம்முட்கூடா. மஞ்சளும் சுண்ணும்பும் புறத்துப் பொருள்கள் ஆகலின் ஓர் இனத்தன: அவை தம்முள் இயைந்து ஒன்றும். இதனை அறியின் வைபாடிகனுக்குச் சொல்ல வாயில்லை.

இதுவரையில் புத்த சமயத்தைச் சார்ந்த நால் வகையினராகிய சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன் என்பவர் கொள்கைகளைக் கூறி, அவர் கொள்கையில் கொண்ட மாறுபாடுகளையும் உடன் சொல்லி மறுக்கப்பட்டன காண்க.

இனி, ஆருகத மதத்தை எடுத்துக் கூறுகின்றார். ஆருகதத்துக்குச் சைனம், சமணம், பரமாணு காரணவாதம், அநேகாந்த வாதம் எனப் பல பெயர்கள் உண்டு. சைனரில் இல்லறத்தாருக்குச் சாவகர் எனப் பெயர் கூறப்படும்; ஸ்ராவகர் என்பது அது. இந் நூலுள் ஆருகதரை நிகண்டவாதி எனவும், ஆசீவகன் எனவும் இருபிரிவினராகக்கூறி மறுக்கப்படும். அவருள்:

---

# 6. (அ) நிகண்டவாதி மதம்

1. நிகண்டவாதியின் கொள்கையாவன :— அசோக மரத்தைத் தெய்வம் போலப் பேணல், வேத வழக்கொடு மாறுபட்டு நிந்தித்தல், தவத்தில் ஆசை மிகுதல், ஆடையுடுத்தலின்மை, நீரில் குளித்து முழுகாமை, மாசடைந்த உடம்புடனிருத்தல், இல்லற வாழ்க்கையை விடுத்தல், வயிறு புடைக்க உண்ணல், பாய் உடுத்துத்திரிதல், மயிற்பீலியைக் கையிலேயே கொண்டு கொல்லாமையை மேற்கொண்டொழுகுதல் முதலியனவாம். கண்டம்-உடை: நிகண்டம்-உடையின்மை. நிகண்டவாதி சமணரில்ஒருவகையார். ஆசீவகர்க்கு உடையுளதாம் என்க. வேதவழக்கொடு மாறுபட்டொழுகுதலாவது வேதத்திலே விதிக்கப்பட்ட வேள்வி முதலிய கன்மங்களைச் செய்யாமை, கர்த்திருவாதம் சொல்லாமை, திருநீறு அக்கமணி இல்லாமை என்பன.

2. கடையிலா அறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம் கடையிலா இன்பம் நாமம் இன்மை, கோத்திரம் இன்மை, ஆயு இன்மை, அழியா இயல்பு என்னும் நற்குணம் எட்டையும் சந்திரனிடத்துக் குளிர்ச்சியானது தோன்றினாற் போலத் தோற்றுவித்துக்கொண்டு ஞானாவர்ணியம் முதலிய தீக்குணங்கள் எட்டையும் விட்டொழித்து இந்திரன் முதலிய விண்ணோர் வணங்கிப் போற்றும் பெருமையினையுடைய நீண்டவாழ்நாளையுடைய அருகதேவனே எங்கள் கடவுள் ஆவான்.

3. பொறி, புலன்களால் வரும் தொடக்கைக் கைவிட்டு முக்கால நிகழ்ச்சிகளையும் கணப்பொழுதிலே அநந்த ஞானத்தால் அறியத்தக்க பெருந்தவத்தையுடைய தேவன் அவன். தம்மை வழிபட்டவர்க்கும், தம்மை மாறுகொண்டவர்க்கும் ஒருதன்மையாக அருள் செய்யும் பெருமையையுடையோனாகிய அவனே எங்கள் கடவுள்.

4. பசி, தாகம், பயம், மாற்சரியம், உவகை, மயக்கம், கவலை, பழித்தல், நோய், சாக்காடு, வியர்வை, துன்பம், செருக்கு, வியப்பு, ஊண், பிறப்பு, நித்திரை முதலியவற்றைக் கைவிட்டோன் அவன். முற்கூறிய அநந்தகுணம் முதலியவற்றை யுடையோன். எல்லா உலகங்களுக்கும் மேலாகவுள்ள பொன்னெயில் வட்டத்து இருந்த முதல்வன் சித்தபரமேட்டிகள் கேட்ட சொல்லுக்கு விடையாக ஒருமொழிபகர்ந்தருளினன். சித்தபரமேட்டிகள் — சித்தர். இது ஜைனநூல் வழக்கு.

அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள் இவர்களைப் பஞ்சபரமேட்டிகள் என்பர். "தன்மம் பகவ" என்பது வினு: "பஞ்சாஸ்தமயம்" என்பது அதற்கு விடையாக வந்த மொழி.

5. மேலே கூறிய 'பஞ்சாஸ்தமயம்' ஆகிய வாக்கியத்தினுலே அந்த சித்தபரமேட்டி சரணம் ஆகியாகிய முதனூலே நிலவுலகத்துள்ளோர் மயங்காதவகை அருளிச்செய்தான். இந்நூலிற்கூறிய பொருள்: காலம், ஆன்மா, தன்மம், அதன்மம், புண்ணியம், பாவம், ஆகாசம், புற்கலம், பந்தம், வீடு என்பன. இவை பத்தும் ஒருவராற் படைக்கப்படாதன, அநாதியே உள்ளன.

சரணம் நால்வகை: அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணம் என்பனவாம்.

6. அநாதிப்பொருளாகிய பத்தில் காலமானது நிகழ்காலம் இறந்தகாலம் எதிர்காலம் என மூவகைப்படும். அதுவன்றியும், ஒருகணத்திலே முக்காலத்தையும் பொருந்திச் செயலும் நிகழ்தற்கு ஏதுவாயுளது. அக்காலவரையறைப்பட்டு வாழும் உயிர்கள் சரீரத்தையுடையனவாய், எடுத்த உடம்பு முழுவதும் நிறைந்துள்ள தன்மையுடையனவாய், பால தருண விருத்த அவத்தைகளிலும் வேறு வேருகப் பொருந்தும் தன்மையினவாய், அவ்வவ் வவத்தைகளுக்கு ஏற்ற அறிவு பெற்று விளங்குவனவாம்

இதனுல், காலத்தின் பகுதியும் உயிரின் பகுதியும் கூறப்பட்டது.

7. தன்மம் என்றது தன்மாத்திகாயத்தை; அதன்மி என்றது அதன்மாத்திகாயத்தை: இது தன்மி என்றும் கூறப்படும். தன்மாத்திகாயம் — புண்ணியத்தால் எடுக்கும் தேகம். அதன்மாத்திகாயம் — பாவத்தால் எடுக்கும் தேகம்.

புண்ணியத்தால் எடுத்த உடம்பானது மேலும் பூத உடம்பை எடுக்காதபடி அழித்து அதனை அநித்தமாக்கும். பாவத்தாலே எடுத்த உடம்பு மேலும் மேலும் பூத உடம்பை நிலைபெறச் செய்து மிகுவிக்கும். மனம் வாக்குக் காயங்களாற் செய்யப்பட்ட புண்ணியம் புண்ணிய உடம்பைத் தருதற்கு உபகாரமாம். மனம் வாக்குக் காயங்களாற் செய்யப்பட்ட பாவங்கள் மீட்டும் மீட்டும் பாவவுடம்பையே எடுத்தற்குப் பெரிதும் ஏதுவாம். ஆகாயம் எல்லாப் பொருட்கும் இடங்கொடுத்து நிற்கும். இதனிடத்திலே தோன்றும் புற்கலப் பொருள்கள் மேலே சொல்லப்படும்.

இதனால், தன்ம தன்மி, புண்ணிய பாவம், ஆகாயம் என்னும் ஐந்து பகுதிகள் கூறப்பட்டுள்ளமை காண்க.

8. வலிமையுடைய அணுக்கள் பல திரண்டு எவ்விடத்திலும் உருவம் உடையனவாய், இரும்பு கல் மரம் முதலிய பொருள்களாய், இவை ஒழித்து ஒழிந்த உருக்கள் எல்லாமுமாய், திரியக் அணுபூர்வம் என்னும் ஆன்மப் பெயரையுடையனவுமாய் நிற்கும். அவற்றைப் புற்கலப் பொருள் எனவும் சொல்லுவர். திரியக்பாவை பூர்வம் என்பதும் அது. தெய்வகதி,

மனுடகதி, நரககதி, பக்ஷிமிருக கதி, திரியக்காதி கதி என அனுபூர்வம் பலவகைப்படும். கந்தம் ரசம் ரூபம் பரிசம் சத்தம் பரிணமம் என்னும் அறுவகைத்தொழில் களும் பந்தமாவன. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சாரியம் என்னும் ஆறுமே பந்தத் துக்கு ஏதுவாவன. அந்தப் பந்தத்தை விட்ட ஒழுங்கே தவமாம். அத்தவத்தால் உடல் மேலும் மேலும் உண்டாகும் தவமாட்சிமையுடைத்தாய் நிலை பெற்றுத்தோன்றும். உயிர்களுக்கு முன்னமே புசிப் பாக உள்ள புண்ணிய பாவங்கள் புசித்துத் தொலையவே அம்மாட்சி வீட்டைத்தரும்.

இதனால், புற்கலப் பொருளும் பந்தமும் வீடும் ஆகிய மூன்றும் கூறப்பட்டுள்ளமை காண்க.

---

# 6. (ஆ) நிகண்டவாதி மதமறுதலை

---

1. நீ உன் கடவுளாகிய அருக பரமனுக்கு ஞானவரணியம் முதலிய தீக் குணங்கள் நீங்க, அனந்த ஞானம் முதலிய நற்குணங்கள் எட்டும் சந்திரனுக்குக் குளிர்ச்சி வந்தடைந்தது போல உண்டாம் என்றாய். நீ கூறிய அதுவே முறைமையாயின் அஃது உவமை யின் நீங்கப்படும். எங்ஙனம் என்னில், கர்த்திருகுணம் இன்றியே சில குணத்தை விட்டுச் சில குணம் வந்து கூடின என்பதால் அஃது ஆன்ம குணமாம். ஆகை யால், அவனும் ஆன்ம குணத்தை யுடையனே.

ஆகவே, விடப்பட்ட தீக்குணங்கள் எட்டும் முன்பு உண்டாய்ப் பின்பு விட்டனவாம். ஞானுவரணியம் முதலிய குணங்களை நீங்கி அனந்த ஞானம் முதலிய குணங்களைக் கூடுதல் மேலான அறத்தின் கண்ணே கூடுகையால் என்னில்,—

2. அவன் அந்தத் தருமத்திஞலே பொருந்திஞன் ஆயின், அந்தத் தன்மத்திலே நிலைபெறுவித்தவன் ஒருவன் உளஞய் அவஞல் கூறப்பட்ட தன்ம நெறியிலே நிற்கும் தகுதி ஒருவன் கற்பித்த தொழிலை ஒருவன் செய்த செய்தியும் ஆம். கொலையை நீங்கினவர்களால் வணங்கப்படும் உன் கர்த்தாவுக்கு மேஹும் ஒரு கர்த்தா உளன் என ஓர் எல்லை யுண்டாம். ஆகையால், நீ கர்த்தாவாகக்கொண்டது முன்னர்க்கூறினவனையோ? அல்லது அவன் கீழ் நின்று இந்திரியத் தொடக்குப் படாமல் தவம் செய்தவனையோ? யாவரை எனக்கூறுக. எனவே, தலைவஞக உன்ஞல் சொல்லப்பட்டவன் கன்ம க்ஷயம் பிறந்தவஞே ? கன்மக்ஷயம் பிறவாதவஞே ? பிறந்தவஞயின் அவன் தவவலியால் பெற்றவஞம். கன்மக்ஷயம் பிறவாதவஞயின் உலகத்தாருக்கு ஒப்பாவான். அநாதியே முத்தஞகில் சீவவர்க்கத்தன் அல்லன் என்க.

3. உன் கர்த்தாவாகிய அருகபரமன் மனம் முதலிய கருவிகளில் நின்று அறியும் அறிவை நீங்கிச் சர்வமும் கண்டிருக்கும் என்று கூறிஞய். அப்படியாயின், அவனைச் சரீரம் பொருந்தி நின்றது என்று கூறின் மனம் முதலிய கருவிகள் உண்டாம். அவற்றை

ஒழிந்து காண வழியும் இல்லையாம். அவனைச் சரீரம் நீங்கி நின்றது என்று கூறின் அவன் எல்லாவற்றையும் கண்டுவாழும் என்று சொல்லுதலும் மித்தியாவாதமாம்; அன்றி, மற்றொன்றையும் உணர்ந்ததில்லையாவான். ஒரு பொருளை அறிதற்குக் கருவியான மூன்று காலத்தை யும் ஒருகாலத்திலே உணரும் தன்மையன் அல்லனும்.

4. காமம் குரோதம் முதலியவற்றோடும் கூடி அதனைத்தீது என்று அறிந்து நீங்கினோர்க் கெல்லாம் முத்தியடைதல் கூடாது எனெனில், அவனே உடம்பு எடுத்தனன் ஆகலானும், உடம்பு எடுத்தபோது அவன் பந்த முற்றவன் ஆகலானும் என்க. இனி, உன்கடவுள் ஆகிய அருகபரமன் அரசரைப்போல உயிர்களுக்குத் தலையளி செய்தலே முறைமையாம் என்னில், அவ் வரசரைப்போலத் துஷ்ட நிக்கிரகமும் சிஷ்டபரிபாலன மும் செய்ய வேண்டும். அவன் ஒரு நிலத்திலிருந்து அதனைச் செய்யாமல் பொன்னெயில் வட்டத்திற்போய் இருப்பானேன்? அதற்குக் காரணம் யாது? அது வன்றி, தன்பாலன்புள்ளோருக்கும் அன்பில்லாருக்கும் பகைவருக்கும் ஒத்ததன்மையை யுடையவன் என நீ முன்னர்க் கூறினை ஆகலின் அருகபரமன் அரசரை ஒவ்வானாயினான்.

எனவே, அருகபரமன் சரீரி ஆகையால் அவனை நோக்கித் தவஞ்செய்வார் முத்தியடைதல் இல்லை என வும், நட்பு பகை முதலிய அரசருக்குண்மையின் அவன் அரசரை ஒவ்வான் எனவும் படுதல் காண்க.

5. அநாதியாகிய அருகபரமன் ஆகிய சகலாத்தன் கூறிய ஒரு சொல்லைக்கொண்டு ஆதி அருகபரமன் ஆகிய இகலாத்தன் கேட்க மாறுபாடில்லாத பொருளைச் சொன்னான் என்னில், ஆதி அருகபரமனுக்கு அநாதிகள் இல்லை என்று கூறினாய். அநாதியில் அருகபரமனுடன் ஒரு சொல் கேட்டுப் பலவிதமாக நூல் சொன்னவாறு எப்படி? அவனுக்கு மனம் முதலிய கருவியும் இல்லை, ஆகலின் அவன் கேட்டறிந்ததும் எப்படி? ஊமர் சொல்ல ஊமர் கேட்டு நூல் செய்தார் என்பது போல அநாதி அருகன் ஒரு சொல் சொல்ல ஆதிஅருகன் கேட்டறிந்ததுமாம். ஒரு சொல்லாவது 'பஞ்சாஸ்திமயம்'.

6. புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டத்தில் உள்ள அநாதி அருகபரமன் நிலவுலகத்துண்டாகிய துன்பங்களை அறியான், அநாதிகளும் இல்லை, ஆகலின் இப்பூமியில் உண்டானவற்றை இப்படிச் சொல் எனச் சொல்லமாட்டான். அப்புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டத்திருந்து அநாதி அருகன் பூமியில் உள்ள துன்பம் யாவையும் அறிந்து சாத்திரம் செய்யச் சொன்னான் என்னில், அப்பொன்னெயில் வட்டமும் துன்ப பூமியேயாம். ஆகலின், மயங்கிச் சொல்லும் சொல்லுக்கு வேறு என்ன சொல்லவல்லேம். சகலாத்தர் ஆனந்த பூமியர் ஆகலின் அறிந்தது யாங்ஙனம்? என்க.

7. இந்தச் சரீரத்துடன் ஆன்மா நிறைந்து நிற்கும் என்றாய். அங்ஙனம் நிறைந்து நின்றதாயின் அந்தச் சரீரம் குறைந்தபோது ஆன்மாவும் குறையும்,

அறிவும் குறையும். சரீரம் அழிதலுள்ளது ஆகலின், சரீரம் அழியும்போது உயிரும் கூடக் கெடவேண்டும். அஃது எப்படி? என்னில், குடத்தில் நீர் நிறைந்துளது, அக்குடம் உடைந்து கெட அந்த நீரும் கெட்டொழிவது போல என்க. எனவே, ஆன்மா சரீரம் முழுவதும் நிறைந்து நிற்கும் என்பது பொருந்தாது.

8. ஆன்மா தான் செய்த புண்ணியத்தால் தன் மாத்திகாயத்தை எடுத்துக்கொண்டு மேலாகப் பொருந்தி நன்மையை அநுபவித்து அதிலே பரந்து நிற்கும். தான் செய்த பாவத்தாலே அதன்மாத்திகாயத்தை எடுத்துக்கொண்டு கீழாகப் பொருந்தித் தீமையை அநுபவித்து அதிலே பரந்து நிற்கும். இவ்வாறு இரண்டு உடம்பையும் மாறிமாறி ஒரு காலத்திலே ஆன்மாப் பொருந்தும் என அருகபரமன் அருளிய நூல் சொல்லியது என்னில், ஆன்மா ஒருகாலத்திலே நின்று இரண்டு உடல் எடுத்துக்கொள்ளுமாறில்லை. மயிர்க்குட்டிப்புழு வண்டாக மாறுகிறது, மற்றொரு புழு வேட்டுவாளி ஆகின்றது; அதுபோல, வேறுபட உடலை எடுத்துக்கொள்ளும் என்னில், அவைகளும் கணப்பொழுதில் பேதித்தன அல்ல. ஆகலின், ஆன்மா தான் நின்ற தூல உடம்பை விட்டுப்போய்ச் சூக்கும உடம்புடனே நின்று நன்மை தீமைப்பயன்களை அநுபவிக்கும் அல்லாமல், நின்ற தூல உடம்பிலே பேதப்பட்டு வேற்றுமைப்பட உரு எடாது என்க.

9. ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களை அறிந்து அவ்வவற்றின் பயனைப் புசிக்கச்செய்வோன்

ஒரு கர்த்தா இல்லை எனக் கூறினால், பாவப்பயனாகிய நரக நுகர்ச்சியையும் புண்ணியப்பயனாகிய சுவர்க்க அநுபவத்தையும் அநுபவிப்பார் இலராம். விரைந்து செல்லும் அம்பு இலக்கில் தப்பாமல் பட்டதுபோல, ஒருவன் செய்த புண்ணிய பாவங்களும் தப்பாமல் செய்தவனைச் சென்று பற்றும் என்பாய். அவ்வாறு சொல்லின், அப்படிச் செலுத்திய அம்புக்கும் இலக்கைக் குறித்து எய்வோனாகிய ஒரு வில்லி வேண்டப்படும். அது போல, ஆன்மாக்கள் செய்த கன்மங்களை அறிந்து அவற்றின் பயனை அநுபவிக்கும்படி கூட்டுவதற்கு ஒரு கர்த்தா வேண்டும் என்று அறிவாயாக.

10. நீ கூறும் புற்கலப் பொருளாகிய கல், இரும்பு, மரம் முதலியன ஓரறிவையுடைத்து எனக் கூறின், ஓரறிவையுடையன எல்லாம் தாமே கெடக் காணலாம். கல் இரும்பு முதலியன தாமே வடிவு கெடக் கண்டிலம். அன்றியும், அவை ஓரறிவுடைத்தாயின் கல் இரும்பு முதலியனவும் சொர்க்க நரகம் புகவேண்டும். அவை அவ்வாறு செல்லக் கண்டிலம். கல் இரும்பு முதலியவைகளை அணுப்பொருளாக வைத்து ஓரறிவு உடைத்து என உன்னையன்றிச் சொல்வார் வேறிலர். ஆகலின், கல் இரும்பு முதலியன அணுப்பொருளன்று என்க.

11. கந்த, ரச, ரூப, பரிச, சத்த, பரிணாமங்கள் ஆகிய அறுவகை உவர்ப்புக்களையும் விடுதலே தவமாம் என்னில், பொருள்களை வாணிகம் செய்வோர் பண்டமாற்றுச் செய்வார், அதனால் பொருள் வந்தடையும்.

அதுபோல, உவர்ப்பு மாறி ஒரு தவமும் செய்யாதிருந்தால் தவம் வந்து கூடாது. கெடுதல் இல்லாத முன்னை வினைப்பயனாலே தவம் வந்து கைகூடும் என்னில், உவர்ப்பைக் கைவிடுதலும் முன்னை வினைப்பயனே ஆம். ஆதலால், தவம் செய்தலாகிய காரியத்தைக் கைவிட்டால் தவமாகிய பேறு உண்டாகாது. எனவே, தவவொழுக்கங்களினின்று தவம் செய்தாலல்லது மேலே கூறிய ஆறுவகைக் காரியத்தை விடுதலால் மட்டும் தவம் சித்தியாது என்க.

12. சரீரம் வருந்துதலே மோட்சம் என்னில், துக்கமொன்றால் உடல் வருந்தச் சரீர சுகத்துக்கு மாறுபாடாகிய ஒன்றைச் செய்தலே மோட்சம் என்றாம். நோயினால் மனோதுக்கிகளாய் மெலிவோர் பொன்னெயில் வட்டத்தில் சேர்வர் என நீ சொல்லாய். முத்தியின்பத்தை விரும்பி உடலை வருத்துதல் இயல்பாம் என்னில், நீ அம்முத்தியின்பத்தைக் கருதி உன்னுடைய மூக்கை அறுத்துக்கொள்வாயாக.

13. முற்பிறப்புக்களில் உள்ள கன்மம் தொலைய இப்பிறப்பிலே அநுபவித்துத் தொலைத்தால் பொன்னெயில் வட்டத்தைச் சென்று கூடலாம் என்னில், அக்கன்மத்துக்கு அளவு இன்மையால் நியமிக்க அறிவதின்றிப் புசித்துத் தொலையாது. கன்மம் புசித்துத் தொலைந்தால் இந்திரியங்களுடன் சத்தாதி கூடுவது இன்றாம். அவை கூடாதொழியவே மோட்சத்துக்குக் காரணமான தவம் செய்தலும் இன்று. ஆதலால், கன்மத்தைத் தொலையப் புசித்துப் பொன்னெயில்

வட்டத்தை அடைவோம் என்று கருதியிருத்தல் பூனையானது தெளிந்த கடல் நீர் முற்றும் வற்றின வுடன் மீனைப்பிடித்துத் தின்போம் எனக்கருதிக் கடல் நீர் வற்றுமளவும் காத்திருந்ததை ஒக்கும் என்க.

14. ஒரு கர்த்தா இன்றிப் பொன்னெயில் வட்டத்தைச் சென்று சேர்வோம் என்னும் தன்மையானது கிணற்றினுட் கிடக்கும் குடம் கரையை நோக்கித் தானே ஏறும் தன்மையாம். கர்த்தா கன்மத்தைத் தொலைப்பித்து மேலாகிய முத்தியைத் தரவேண்டும். அஃது ஒருவன் அக்குடத்தை மேலே நின்று எடுக்க அக்குடம் மேலே ஏறிய தன்மையை ஒக்கும். அங்ஙனம் முத்தியைக் கொடுப்பவன் சிவனே. ஆகலின், அச்சிவபெருமானையே தெய்வமாகக்கொண்டு அவன் அருளிச்செய்த வேதசிவாகமங்களிற் கூறிய சரியை கிரியா யோக ஞானங்களிலே நீயும் நின்று முத்தியடைவாயாக. கர்த்தா கூட்டினலல்லாமல் முத்தி கைகூடாதென அறிக.

---

# 7. (அ) ஆசீவகன் மதம்

---

1. என்னுயிர்க்கு யான் இரங்குவதுபோல, எவ்வுயிர்க்கும் யான் அருளுடையேன் என்று தன்னுயிர் வருந்தும்படி தன் தலைமயிரைப் பறித்து உலகில் நிலைபெற்ற ஆன்மாக்கள் எல்லாவற்றினுக்கும் வருத்தமுறவே அறங்கள் இயம்புவான் ஆசீவகன். அவன் சமணருள் ஒரு வகையினன்.

2. அநந்த ஞானன் என்னும் அருகபரமன் ஆதியிற் கூறிய நூலில் பூரணமாக ஆன்மாக்கள் ஐந்து எனக் கூறப்படும். அவை: நிலம், நீர், தீ, கால், ஆன்மா என்பன. அவ்வைந்தின் குணங்கள் முறையே பிருதிவி கடினம், அப்பு குளிர்ச்சி, தேயு வெம்மை, வாயு சலனம், ஆன்மா அறிவுடையது ஆம் என்க.

3. பிருதிவியும் அப்புவும் கீழே பரவும் தன்மையுடையன. தேயுவும் வாயுவும் மேலே விரிந்து செல்லும் தன்மையுடையன. ஆன்மா உடம்புடன் கூடியிருக்கும். அதனை நீங்கின் உயிர் மற்றை நான்கு ஆன்மாக்களுடனும் கூடிநிற்கும். அவற்றைச் சார்தலின்றி உடம்பைப் பெற்ற இடத்து அதன் தன்மையைப் பொருந்தும்.

4. உயிரை யொழித்து ஒழிந்த நான்கு ஆன்மாக்களும் ஒன்றையொன்று அறியும் தன்மையுடையன அல்ல: அறிவற்றன. அவை நான்கும் ஒன்று கெட்டு ஒன்றாகா. ஒரு ஆன்மாவிலே புகுந்து ஒரு ஆன்மா கூடி நில்லாது. அப்படிக் கூடாவாயினும் உடம்பாமிடத்துக் கூடியும் நிற்கும். இவை அநாதியிற் கூட்டமின்றி இவ்விடத்துப் புதிதாக வந்து கூடுவன அல்ல. பழமையாகிய உயிர்த்தன்மை கெடுதலும் இன்று. அவ்வான்மாக்கள் கூடுமிடத்து ஒரு சேரக் கூடுவன. அல்லாமல் ஒவ்வொன்றாகக் கூடுவன அல்ல. இவற்றின் செயல் எக்காலத்தும் மாறுபடா.

5. முன்னே கூறிய ஐவகை ஆன்மாக்களையும் படைத்தலும், காத்தலும், அழித்தலும், ஒன்றினுட் செறித்தலும், அவற்றில் உற்று நிற்றலும், உண்டு

தின்று கெடுத்தலும், மீள உண்டாக்குதலும், இவற்றைப் பிளந்திடுதலும் ஆகிய ஒன்றும் செய்ய இயலாது. விரிந்த அண்டகோளகைக்கு அப்புறத்தும் செல்வன. அதனின் வேறு பட்டு உருக்கள் உள்ளும் பொருந்தும். அவை முற்காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைந்து ஒருதன்மையனவாய் உள்ளன. எனவே, இவ்வான்மாக்கள் ஒருவரால் நியமிக்கப் பட்டன அல்ல.

6. இவ்வைவகை அணுக்களில் ஆன்ம அணுவின் இயல்பாவது: கண்ணால் காணுதற்கு அரிதாய் அக்கன்மத்தால் பிறந்து உருக்களாகப் பொருந்தி நிற்கும். அதனைப் பொன்னெயில் வட்டத்துள்ள தேவரே அறிவர். ஆன்ம அணு ஒன்றும் தன்னையொழித்து ஒழிந்த அணுக்கள் நான்கனுள்ளும் இப்படிச் சென்று பொருந்தும்.

7. ஆன்ம அணு ஒழித்து ஒழிந்த நில அணு, நீர் அணு, தீ அணு, வளி அணு என்னும் நான்கு அணுக்களும் ஓர் அணுவை விட்டு மூன்று அணுத் தம்மிற் கூடி நில்லா. இரண்டணுவை விட்டு இரண்டணுக் கூடா. எனவே, இவை கூடுமிடத்து நான்கும் கூடியே நிற்பன. பிருதிவியில் கந்தம் இரதம் ரூபம் பரிசம் என நான்கும், அப்புவில் இரதம் ரூபம் பரிசம் என மூன்றும், தேயுவில் ரூபம் பரிசம் என இரண்டும், வாயுவில் பரிசம் ஒன்றும் ஆகிய குணங்கள் முறையே பொருந்தி நிற்பன.

8. வெண்மை, நல்ல பொன்மை, செம்மை, நீலம், பச்சை, மிக்க வெண்மை ஆகிய நிறங்கள் ஆறு

உள்ளன. இவ்வன்னங்கள் ஆறனுள் மிக்க வெண்மை நிறமே பெரிய பொன்னெயில் வட்டத்துக்குச் சிறப்புடைய வன்னமாம். அதனை ஒழித்து ஒழிந்த வெண்மை, பொன்மை, சிவப்பு, நீலம், பச்சை என்னும் ஐந்து வன்னமும் மற்றை அணுக்கள் நான்கின் ஆன வடிவுகளைக் கூடி நிற்க அந்த ஆன்மாவானது இவ்வுருக்களைப் பற்றுதல் இழிதல் கூடுதல் ஆகிய இவற்றால் அறியும்.

9. செல்வம் முதலியன வந்து பொருந்துதலும், அவை நீங்குதலும், துன்புறுதலும், இன்புறுதலும், உடலோடு நீங்காமையும், வேற்று நாட்டுச் செல்லுதலும், மூப்புத்துன்பமும், மரணமும் என்று சொல்லப்படும் எட்டும் முற்பிறப்பிலே செய்த வினையால் விளைந்ததாய்க் கருவிலேயே அமைந்து கிடப்பன. ஆகலால், முன் வினையினாலே அகப்படுத்தப்பட்டு இம்முறைமையிலே செல்வது உலகமாம். ஊழ்வினைப்பயன் மேலே கூறிய எட்டு வகையாகக் கருவிலே வந்து பொருந்தும். அவ்வூழ்வினைப்பயனில் அகப்பட்டுச் செல்வதே உலக முறைமை என்க.

10. புண்ணியபாவம் என்னும் இரண்டனோடு மேலே கூறிய அணுக்கள் ஐந்தனையும் கூட்டி ஏழாக எண்ணுவர். எங்கள் சமயத்தினோடு பொருந்தின கர்த்தாவான அருகபரமன் அருளிய ஞானம் இத்தன்மையையுடையது. இதனை அறிந்துகூடும் கருத்துடையாரே நற்கதியாகிய பொன்னெயில் வட்டத்தைக் காண்பார்.

---

# 7. (ஆ) ஆசீவகன் மதமறுதலை

1. மோட்சம் என்பது மீண்டும் உடம்பு எடுத்து வாராவழியால் அடையத்தக்கது. வீடு பெற்றவன் மீட்டும் நிலவுலகத்துப் பிறவான். வீட்டுலகத்து இருந்த அருகபரமன் மண்மேல் வந்து நூல் அருளும் முறைமை இல்லை. ஆகலின், நூல் உண்டாம் வழி இல்லை. ஒப்பற்ற பொன்னெயில் வட்டமாகிய இடத்து ஐவகை அணுக்களும் சேரா ஆதலால், சரீரியாம் தன்மை இல்லையாம். அதனால், ஒன்றையும் ஒருகாலத்து விசாரிக்கமாட்டான். அன்றியும், கீழான அணுக்கள் இரண்டின் செய்தியை அறியவும் மாட்டான். அணுக்கள் எல்லாவற்றையும் கூட்டி ஒன்றாக உணரும் உணர்வை யும் உடையனல்லன்.

2. இவ்வருகபரமர் இரு பகுதியினராய் இருப்பர். அவர் மண்டலர், செம்போதகர் எனப்படுவர். இப்படி வரும் பகுதியினையுடையார் மண்டலர். மண்டலராகிய இவரே உலகத்தில் வந்து அணுக்கள் ஐந்தின் செய்தி யும் ஒருங்கே உணர்ந்து நூல் செய்தனர் என்னில், அம்மண்டலர் பூமியில் வாழும் ஆன்மாக்கள் போல ஒரு பகுதியினரே ஆவார். ஆகலின், ஓர் உரு இரு பேதப்பட்டதில் ஒன்று மானுடத்தன்மையும் ஒன்று தெய்வத்தன்மையும் பெறுதல் இல்லை. இதனை நீ ஆராயாமல் சொன்னாய். மண்டலர்-பூமியில் உள்ளார்; செம்போதகர் – மிக்க அறிவுடையார்.

3. ஆன்மா உடலில் ஒட்டியும், தீண்டியும் கலந் தும் செய்யும் தொழிலாலே அறிவைப் பொருந்தும்

என்று கூறுகின்றாய். அது மிகக் குற்றமாம். மிகத் துயின்றவரும் குழந்தைப் பருவத்தினரும் பற்றியும் உற்றும் கலந்தும் அறிவினைப் பொருந்தார். உன் சொல்லே குற்றந்தரும். உன் தொழிலும் அதுவே.

4. ஆன்மாவை ஒழித்து ஒழிந்த அணுக்கள் நான்க னுள்ளே பிருதிவி அப்பு என்னும் இரண்டும் கீழும்; தேயு வாயு என்னும் இரண்டும் மேலுமாய் நிற்குமா யின் அவை காரணமான சரீர அவயவங்களும் கூடா வாய்க் கீழும் மேலுமாய் வேறுபட்டு நிற்கும் எனச் சொல்லலாமே! அன்றியும், அவ்வணுக்கள் நான்கும் சரீர அவயவத்தில் கூடிவருமாயின் அவ்வணுக்களை நித்தியம் எனக் கூறியது மித்தியை அன்றோ? அவை சரீர அவயவங்களில் பொருந்தா என்னில், அவ்வணுக் களின் குணங்களாகிய குருதி தசை முதலியனவும் கலந்து நில்லா; பல பகுதியவாய்ப் பிரிந்து நிற்கும். எனவே, அவற்றின் திரட்சியும் இல்லையாம், சரீர முறைமையும் ஆகாதாம் என்க.

5. மேலே கூறப்பட்ட பிருதிவி முதலிய நான்கு அணுக்களேயன்றி அறியும் தன்மையையுடைய உயி ராகிய அணுவும் உண்மையால் பலவகையான பிறப்புக் களும் உண்டாம் என்னில், அவ்வணு அறியும் தன்மை யையுடையது, அல்லாமல் தம்முள்ளே கூடும் இயல் பல்லாதனவற்றைக் கூட்டுவிக்கும் இயல்புடையதன்று. அந்த அணுக்கள் நான்கும் மேலும் கீழுமாய் நிற்பன, தம்முட்பகையுடையன, ஆகலின் ஆன்மா ஓரிடத்துக் கூடாவகையைச் செய்யும். கோல் ஆயிரம் கூடினும்

தூண் ஒன்றாகாதன்றோ? அதுபோல, அணுக்கள் கூடினது கொண்டே உருக்கள் ஆகா. எனவே, நீ கூறியது பரிகாசம் செய்தற்கு இடமாம்.

6. நீ கூறிய ஐவகை அணுக்களும் அறிவில்லாதன. ஆகலின், அவை வடிவுகள் எடுத்துக்கொள்ளும் வலியுடையன அல்ல. வாயுவாகிய அணு, ஒழிந்த மூன்று அணுக்களையும் ஆன்ம அணுக் கூட்டும்படி கூட்டும் என்னில், வாயுவானது அவ்வணுக்களைக் கூட்டுதற்குக் கன்மம் செய்யும் ஆன்மாக்களை அறிய மாட்டாது. முன் வினையினாலே ஆன்மாக் கூட்டும் என்னில், அக்கன்மமும் அறிவுடையதன்று ஆகலின் அது கூட்டமாட்டாது; வாயுவைக்கொண்டு கூட்டுவித்தலும் கூடாது. எனவே, இவ்வணுக்கள் ஐந்தனையும் கன்மத்தையும் கூட்டிக் காயம் உண்டாக்குவதற்கு ஒரு கர்த்தா உண்டு. இதனை ஆராய்ந்தறிவாயாக.

---

# 8. (அ) பட்டாசாரியன் மதம்

1. இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் ஓதி, வேதத்தையன்றிக் கர்த்தா என்பது ஒன்றில்லை எனக் கூறி, சுவர்க்க பதத்தை அடைதற்குச் சோமயாகம் முதலிய யாக கன்மங்களைச் செய்ய நியமித்து, ஜைமினி பகவானால் செய்யப்பட்ட சூத்திரத்தின் வழியே பட்டாசாரியன் கூறிய கொள்கைகள் இனிமேல் சொல்லப்படும்.

2. அநாதியே ஆன்மாக்களுக்குக் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், அகங்காரம், இடம்பம் ஆகிய குணங்கள் கூடியுள்ளன இக்குணங்களே ஆன்மாவுக்கு அறிவைத் தருமாயின் வேத வசனத்தால் யாதொரு பயனுமில்லை. ஆகலின், ஆன்மாக்களுக்குக் கற்ற நூலின் அளவாகவே அறிவு உண்டாம். ஆதலின் கல்வியில்லாத ஆன்மாக்களைப் பச்சிளங் குழவி எனவும், ஊமை எனவும் கூறலாம். எனவே, கல்வியில்லாதோர் அறிவொன்றில்லை என்க.

3. வேதம் சுயம்பானது. அதனைக் கூறியது ஒரு கர்த்தா எனவும், அக்கர்த்தா ஆன்மாவன்று எனவும் கூறினால் வேதத்தைச் சொன்ன கர்த்தாவானவன் வேதத்தைச் சொல்லுமிடத்துச் சரீரியாய்ச் சொல்ல வேண்டும். சரீரியாயின் ஆன்மத்தன்மையுடையனாதல் வேண்டும். சரீரியான ஆன்மா கற்ற நூலின் அளவாகவே அறிவையுடைத்தாம். உருவமின்றேல் நூலைக் கருதிச்சொல்லும் தன்மையும் இல்லை. ஆதலால் வேதம் சுயம்புவேயாம் என்க.

4. பிரமவிஷ்ணுக்கள், தேவர், அகத்தியர் வசிட்டர் முதலிய முனிவர்கள், சித்தர்கள், வித்தியாதரர், கந்தருவர், கின்னரர், கிம்புருடர், பைசாசர், இயக்கர் முதலியோர்களும் அறிவுடைப் பெருமக்களும் வேதம் யாவரால் சொல்லப்பட்டதெனத் தம்மால் அறியப்படுவதன்று என்றனர். ஆகலான், அது காலந்தோறும் பழையதாக வரும் என்றே சொல்லப்படுகிறது. கிணற்று நீர் ஊறுவது போலத் தானே வந்து

தோன்றியது எனக் கூறும் உவமை பொருந்துவதன்று. கிணறு ஒருவனால் தோண்டப்பட்டது: வேதம் சுயம்பாகவுள்ளது. மறுமையை எய்தத்தக்கதாதலால் இம்மையில் அஃது ஒருவனால் செய்யப்பட்டதன்றாம்.

5. வேதமானது ஆறு அங்கங்களையும், மூன்று உபவேதங்களையும் தன்னுள் அடக்கப்பட்டுள்ளது. வேறு நூல்களின் பொருள் தன்னிடத்து இல்லை என்னுதபடி எல்லாப்பொருள்களும் நிறைந்தது. தோற்றக்கேடு இல்லாதது, நித்தமானது, ஒரு தன்மையாய் நிலைபெற்றது.

6. படைத்தல் காத்தல் அழித்தல் முதலியவைகளும், கன்மங்கள் செய்யும் வழியும், அவ்வழியிலே பொருந்தும் தேவரும், அவர்களால் கொடுக்கப்படும் இகலோக பரலோக சாத்தியமான பொருள்களும், மற்றும் உள்ளனவெல்லாம் பன்மையாகப் பொருந்தியுள்ளன. ஆகையாலும், இவற்றைச் சொல்லவேண்டுகையாலும் வேதமும் ஒரு நெறிப்படச்சொல்லா. அம்மூன்று தொழிலாலே மூன்று விதப்பட்டு இறப்பு நிகழ்வு எதிர்வு எனக் காலம் மூவகைத்தாய் அறியப்பட்டு வேதமானது ஒரு வடிவைப் பொருந்தி, அவ்வடிவின் நெஞ்சகத்தே பொருந்தி உலகத்திலே விளங்கும்.

7. வேதமானது தாது, பிரத்தியயம், பிராதிபதிகம் என்னும் உறுப்புக்களையும் உடையது. வேதவிதிப்படி கன்மங்களைச் செய்யப் பாசபந்தம் விட்டு நீங்கலாம். பந்தம் நீங்கவே முத்தியும் கைகூடும்.

8. பிரபஞ்சமானது அழிவதும் ஆக்கமும் ஒரு காலத்து இல்லாததாய், அதனைக் காக்க ஒரு கர்த்தாவும் இல்லையாய், அநாதியே உள்ளதாய், ஆன்ம சம்பந்தியாய், புண்ணிய பாவங்களுடனே கூடி, பிருதிவி முதலிய தத்துவங்களாக நிலைபெற்று, என்றும் உள்ளதென்று சொல்லலாம். எனவே, கர்த்தா இல்லை பிரபஞ்சம் அநாதி என்றபடி.

9. உலகத்திலே நிலைபெற்ற ஆன்மா அழிவில்லாதது, நிறைவையுடையது, அறிவே தனக்கு வடிவானது, புத்தி முதலிய தத்துவங்களில் கலவாது நிற்பது, தத்துவ நீக்கத்தில் சுத்தமானது, அருவானது, பழமையாய் வரும் புண்ணிய பாவங்களுக்கு ஈடாக உடம்புடன் கூடி இந்திரியங்களின் வழியாய்க் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிவதாய் உள்ளது.

10. முற்பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளால் உளதாகிய புண்ணிய பாவங்கள் அவ்வுடம்புடன் தூலம் கெட்டுச் சூக்குமமாய் ஆன்மாவோடு பொருந்தி இப்பிறப்பில் அநுபவப்பயனும். அஃது என்போல என்னில்; வைக்கோல் தழை முதலாயின எல்லாம் வயலைப்பொருந்தி நின்று வடிவக்கேடு வந்த விடத்து அவ்வயலின் பயிருக்கு நன்மை தருவது போல என்க.

11. அவரவர் சூத்திர விதிப்படி சந்தியா வந்தனம், காயத்திரி செபம் முதலியன அந்தணர் செய்ய ஏனைய வருணத்தாரும் தமக்குக் கற்பித்த வழியிலே விதிவழாமல் செய்ய நன்மையை என்றும் பெறுவர்.

குற்றமில்லாத கன்மங்களாகிய வைசுவதேவபலி காரணாதிகளும்; தட்சிணாக்கினி, காருகபத்தியம், ஆகவனீயம் முதலிய அக்கினிகளும் செய்யத் தாம் விரும்பியவற்றை யெல்லாம் பெறலாம்.

12. சூத்திர விதிகளாலே கருதப்பட்ட கன்மமும், வேதம் சுயம்பு என்னும் ஞானமும் ஆகிய இரண்டையும் இடமாகக் கொண்டு வீட்டின்பத்தைப் பெறலாம். வேதம் சுயம்பு என்று அறியும் ஞானமே மெய் என மதித்துக் கன்மத்தைக் கைவிடில் கன்ம சண்டாளன் ஆவான். அக்கன்ம சண்டாளனை உய்விப்பதாகிய ஒரு நெறி வேதத்தினும் இல்லை.

13. எக்காலத்தும் பசுபந்தனம்செய்து வேள்விகளைச் செய்வது புண்ணியமாம் என்று நான்கு வேதங்களும் சொன்ன விதிப்படி உண்மையாகக்கொண்டு கேடில்லாத மந்திரங்களைச் சொல்லுதலால் போகம் மோக்ஷம் ஆகிய இன்பத்தைத்தரும். அஃது என் போல? என்னில், மிக்க பசியுடையோன் உண்டால் பசி தீர்ந்து இன்பம் அடைதல் போல என்க.

# 8. (ஆ) பட்டாசாரியன் மதமறுதலை

1. பட்டாசாரியா! நீ வேதம் சுயம்பு எனக் கூறுகின்றாய். அவ்வேதம் தான் சுயம்பு எனக் கூறிற்றில்லை. வேதம் அநாதி என்பதற்கு வேறு பிரமாணம் இல்லை: உண்டாயின் இப்போது சொல். பெருமை

மிக்க மாபாரதம் பிரமாணம் என்னில், அதுவும் வியாசராலே சொல்லப்பட்டு வேதத்துக்கு ஒப்பாக ஐந்தாம் வேதம் என வழங்கப்படுவது. வேதமும் மாபாரதம்போல ஒருவனால் சொல்லப்பட்டதாம். மண் பாவையும், கிழிப்பாவையும் அதனைச் செய்வோனை யின்றி உண்டாகாது: ஆகலின், அஃது ஒருவனால் சொல்லப்பட்டது உறுதியாம். வேதம் ஒருவனால் சொல்லப்பட்டதென இரகசியமாய் வரும் சத்திய வசன மும் பரமேசுவரனே வேதம் அருளிச்செய்தான் என்பதே.

2. வேதம் தானே உண்டானது அல்லாமல் ஒருவன் சொல்லான் என்னில், ஆகாயத்தில் பொருந் திய ஓசையைக்கொண்டு அஃது உண்டானதாக வேண் டும். ஆகையால், வேதமும் சொல்லும் பொருளும் விளங்காமல் குற்றமுடையதாம். அற்றன்று, பொருள் களைக் காட்டி நிற்கும் விளக்குத்தானே நின்று பிரகா சித்தாற் போல, வேதம் எல்லாப் பொருள்களையும் விளக்கித் தானே நின்று விளங்கும் என்னில் வேதம் பெருமையில்லாததாய் ஓர் எல்லைக்குள் அகப்பட்டதாம். ஆகவே, நீ கூறும் உவமை அறிவில்லாத நிரீச்சுர சாங்கியன் கூறும் கூற்றே ஆம். அவ்வேதம் அருவாம் வரலாறும், தோன்றும் வரலாறும் விரைவிற் கூறுக. வேதம் முன்னே அருவாய், பின்பு உருவாய்த் தோன்றிச் சொல்லும் பொருளும் விளங்கச்சொல்லும் என நீ சொல்லும் சொல்லை எந்தப் பிரமாணம் கொண்டு நிறுத்துவாய். ஆகலின், நீ சொல்லும் சொல் பயனிலதாம் என்க.

3. வேதம் ஏதாவது ஒரு உருவைப்பற்றி நின்று மனத்தினிடத்துப் பிரகாசிக்கும் என்னில், அஃது ஓர் உருவத்தைப்பற்றிவரும் என்னும் நியமம் இல்லை. ஆதலால், இங்கே தவளையிடத்து உண்டாகிய சத்தத்திலும் உங்கள் வேதம் உண்டாம். வேதத்தை உண்டாக்கினோர் யாவர்? எனக் குறித்து அவ்வேதம் கூறுது, அஃது தானே தன்னை ஓதத்தக்க உருவைத்தேடி அதனிடமாகத் தோன்றும் என்னில், பலதீவுகளினின்றும் வரும் புடவைகள் பலபேதமுடையன, அவைகளைக் கண்டபோதே தத்துவாயன் என்பவனாலே இப்புடவை உண்டாக்கப்பட்டது எனப்பிரித்து அறிவது போல வேதமும் சப்தார்த்தம் ஆகலின், அஃது ஒருவனால் உண்டாக்கப்பட்டதே என அறிவாயாக.

4. நாலாபக்கங்களிலும் உள்ள மொழிகளால் உணர்த்தப்படும் சாதிபேதங்களும், மற்றைநூல்களைப் போலன்றி ஒருதன்மைப்பட ஓதப்பட்டுவரும் நியமமும் உண்மையாலே வேதம் அநாதியாய், நிறைவையுடையதாய் நிலைபெறும் என்னில், குயவனால் உண்டாக்கப்படும் பாண்டங்கள் பலவேறுபாடுகளையுடைத்தாய் அநாதியிலே உளதாவதுபோல, குற்றமின்றி அறியப்படும் சொல்லையும், பொருளையும் கூட்டுதற்கு ஒரு கருத்தா வேண்டும். அற்றன்று, மாலையில் உள்ள பூவும் அதன் மணமும் அம்மாலையில் உள்ளன அல்ல. அவை முன்பே உளவாக அவற்றைப் பின்பு மாலையாகக் கூட்டக் கண்டோம். அதுபோல, சத்தமும் அர்த்தமும் முன்பே உளவாய்ப் பின்பு மூர்த்திகளாலே கூட்டப்பட்டன என்னில், சத்தத்தை அறிந்து அவர்களால் கூட்டப் பட்டதாதல் வேண்டும். அன்றேல், கடலில் உண்டாகின்ற சத்தத்தோடு அஃது ஒக்கும் என்க.

5. உடம்பிலிருந்தே உயிர்கள் ஒன்றனை உணர்கின்றன. உலகமுழுவதும் திருமேனியாகக் கொண்ட முதல்வன் அநாதியிலே வேதம் அருளிச்செய்யப் பின்பு அவ்வேதங்கள் சொன்ன முறையிலே நின்று உலகம் வாழும் எனக்கருதி அநாதி என்றும் சுயம்பு என்றும் சொல்லும் அவ்வளவே. அரசன் தன் ஆணைவழியிலே நடக்கும் குடிமக்களுக்கு அவ்வரசன் ஓலைவிடுக்க அதனைத்திருமுகம் என அவர்வணக்கத்துடன்பெற்றுத் தலைமேற்கொண்டு சிறப்புச் செய்வார்: அச்சிறப்பு அரசனுக்குரியதே; அதுபோல என்க. மாகனால் சொல்லப்பட்டது மாகம் எனவும், தொல்காப்பியனால் சொல்லப்பட்டது தொல்காப்பியம் எனவும் கூறப்படுவதுபோலவே சுயம்புவினாலே கூறப்பட்ட வேதத்தையும் சுயம்பு எனக் கொண்ட முறைமையுமாம் என அறிவாயாக.

6. ஆரியவேதம் அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூவகை மரபினரே ஓதுதற்குரியது என்னில், ஏனைய வருணத்தராய் உள்ளோர் சொல்லும் சோதிட நூலுள் உள்ள விதியை வேதத்துக்கு அங்கமாகிய அந்நூலை ஓதாமல் அறியும்படி எப்படி? அன்றியும், வடநாட்டில் உள்ளார் எல்லாரானும் வேதம் ஓதத்தக்கது எனக்கொண்டு ஓதுவானேன்? ஆகலான் அது நீக்கப்படாதாயிற்று. யாவரானும் ஓதத்தக்கது எனக் கூறும் அவர்தாமும் அது சத்தமாக உள்ளதென்பார்; வேதத்துக்கு மூலகர்த்தா இல்லை என்பார். அச்சொல் 'பிறந்த பிள்ளைக்குப் பெற்றார் இல்லை' என்று கூறும் அறிவில்லாத சொல்லோடு ஒக்கும்.

7. ஆன்மா பேதப்பட்டுச் சரீர அவயவத்தைக் கூடிநின்றதாயின் சரீரம் முதலியனபோல ஆன்மாவும் அழிந்துபோம். ஆன்மா சரீர அவயவத்தைக் கூடாது, சரீர அவயவமே சென்று ஆன்மாவைச் சேரும் என்னில், சரீர அவயவமும் தானே ஆன்மாவைக் கூடும் நிலைமையுடையதன்று; கர்த்தா ஒருவன் கூட்டு கையாலே ஆன்மாவும் சரீரமும் கூடும். முளைகள் விதையினின்று கார்காலத்திலே முளைத்து வருவன, வேனிற் காலத்துத் தன்மை வேறுபட்டு அழியும். அதுபோல, பிரபஞ்சம் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய மூவகைத் தொழில் உற்றகாலத்துத் தோன்றி நின்று கெடும். ஆகையால், காலத்தோடு கூடிவரும் பிரபஞ்சம் என்றும் நிலை பேறுடையதன்று.

8. ஆன்மா பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து நிற்குமாயின், ஆன்மாவானது நித்தியகன்மம் முதலிய நெறிகளில் நின்று, அந்நெறிகளுக்குத்தக்க சுவர்க்காதி போகமாகிய புண்ணியப்பயன்களைப் புசித்து, அப்புண்ணியப்பயன் தொலைந்தால் மீளவும் பிறக்கும் என்னும் வேத உண்மை இல்லையாம் அற்றன்று, குடத்திலே கட்டின பூமணம்போலச் சரீரத்திலே எல்லா ஆன்மாக்களும் நிறைந்து நிற்கும் என்னில், சரீரம் கெட்டபோது எல்லா ஆன்மாக்களும் தாம் கெடாமல் சரீரத்தை விட்டு நிற்கும் வழியைக் குறிக்கொள்ளா, ஆகையால், உடம்போடு கூடிநின்றும் மகாயோகிகள் அவ்வுடம்பை விட்டுப் பரகாயப் பிரவேசம் செய்வதும் வருவதும் அரியாய்போலும். ஆகலின், வேதம் சொன்ன

சத்தியமான அர்த்தத்தில் உனக்கு நிறைவின்று எனவே, நீ சொல்லும் சொல்லும் உலகத்தில் மாறுபாடுடையதாம் என்க.

9. ஒருவன் செய்த கன்மங்கள் இவ்வுடல் கெடக்கெடும். ஆகலின், மேலைக்குவந்து பயன் தருவது எப்படி? வயலுக்கு இட்ட வைக்கோலும் தழையும் அதன் தூலம் கெட்டுச் சூக்குமமாய் நின்ற வீரியம் பயிருக்கு நன்மையைக் கொடுக்கும். அதுபோல, செய்த கன்மமும் உடம்போடு தூலமுறைமை கெட்டு உயிரோடு சூக்குமமாய்ப் பொருந்தும் என்னில், நாடோறும் நாம் உண்ணும் உணவு சீரணமாய்ப் பின் புள்ள மலம் மீட்டும் நமக்கு நன்மையைத்தரும் என்பார் கூற்றை ஒக்கும். செய்த வினை உடம்போடு கெடுதலால் கெட்ட அவ்வினை ஆன்மாவை அறிந்து கூடமாட்டாது. வேலை செய்தோருக்கு அவரவர் செய்த தொழிலை அறிந்து வேலைகொள்வோர் அதற்குத் தக்க கூலியைக் கொடுப்பார். அதுபோல, ஆன்மாக்கள் செய்த புண்ணியபாவங்களை அறிந்து அப்புண்ணிய பாவங்களுக்கு ஈடான புசிப்புக்களைக் கொடுத்தருளிப் புசிப்பிப்பது பரமேசுவரனுடையதாம் என்க. இதனால், கன்மமும் ஆன்மாவும் தாமே கூடும் என்பது மறுக்கப்பட்டது.

10 நித்தியகன்மம் முதலிய கன்மங்களைச் செய்தலால் ஞானம் வந்து கைகூட அழிவில்லாத வீட்டின்பத்தை அடையலாம் என்னில், கன்மங்கள் செய்யுமிடத்துப் பயனை வேண்டி நிற்றலால் ஆசை முதலியன உண்டாம். அவ்வாசை முதலியன உண்டாகவே

ஆன்மா பாசஞானமாய் நிற்கும். அந்தப் பாசஞானத்தால் முத்தியை அடைதல் இல்லை. ஒருவன் பொருளை ஈட்டினன், அதனால் உண்டாகிய பயனை நுகர்ந்தான், அப்பொருள்தொலைந்தது மீளவும்அவன்பொருள்தேட முயற்சிக்கிறான். அதுபோல, வேள்விகள் பலவற்றையும் செய்தலால் புண்ணியம் மிகுதியாக உண்டாகிறது, அப்புண்ணியத்தால் அதன் பயனாகவுள்ள சுவர்க்க போகங்களும் மிகுதியாக உண்டாகின்றன, அப்புண்ணியப்பயன் தொலையுமளவும் அநுபவித்தான், மீளவும் புண்ணியச்செயல் செய்யக் கருதுகின்றான், அவ்வளவே உன் செயலாம். எனவே, கன்மம் செய்தலால் ஞானம் தோன்றி அதனால் முத்தியுண்டாம் என்பதனை இது மறுத்தபடி.

---

# 9. (அ) பிரபாகரன் மதம்

---

1. அரிய தவத்தையுடையவன் ஆகிய ஜைமினி முனிவன் முன்பு வேதநூலை ஆராய்ந்தான். உலகத்துக்குச் சில சொல்ல எண்ணினான். தன்னுடைய வழிக்குப் பொருந்தியவைகளை வேதத்தினின்று எடுத்துக்கொண்டு சூத்திரம் செய்தான். (அது மீமாஞ்சை எனப்படும்) சூத்திர முறைமைபற்றிப் பிரபாகரன் நூல் செய்தான். பாடிய மதம்பற்றிப் பட்டாசாரியன் நூல் செய்தான். பட்டாசாரியனால் சொல்லப்பட்ட பாட்டத்தின் நெறியிலே நின்று பிரபாகரன் சிறிது வேறுபட்ட கொள்கையையுடையான். அவன் மதம் பற்றிய செய்தி கூறப்படுகிறது

2. அருமையாகச் செய்யப்படும் கன்மம் நாசமாங் காலத்து அபூர்வம் என்பது ஒன்று தோன்றும். அது நின்று பயன்தரும். அறிவும் கன்மமும் கூடிவரும் தொழில் சிறிதும் இன்றி மண்போலவும் கல்லுப்போல வும் கிடப்பதே முத்தியாம் அருங்கன்மமாவது சோதிட்டோமம் முதலியன.

---

# 9. (ஆ) பிரபாகரன் மதமறுதலை

1. முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகள் இப்பிறப்பில் பல வேறுபட்டுச் சுக துக்கங்களைக் கொடுப்பன என உன் வேதம் கூறும். முற்பிறப்பிற் செய்த வினைக்கு இப்பிறப்பில் பயனைக்கொடுப்பது அபூர்வம் என்பதொன்று என உன் நூல் கூறும். பிரபாகரா ! நீ உண்மையெனக்கொண்டு கூறப்பட்ட சாத்திரம் வேதத்தோடு மாறுபடும். செய்த கன்மத் தின் பயன் முன்பு இல்லையாய், பின்பு அபூர்வம் என்ற ஒன்றனால் வந்ததாயின் வாடுதல் இல்லாத குளிர்ந்த ஆகாயப்பூவுக்கு முன்பு மணமில்லாமல் தலையிலே சேர்ந்த பின்பு மணம் உண்டானது என்னும் தன்மை போல்வதாம் என்றறிக

2 பரமானந்தமே வீடு என வேதங்கள் கூறும். நீ ஆன்மாவினது அறிவுகெட்டு மண்போலவும் கல்லுப் போலவும் கிடத்தலே வீட்டின்பம் என்பாய்; அது குற்றமாம். அவ்வாறு அறிவுகெட்டபின் ஆன்மா

முத்தி அடைவதாயின் மூர்ச்சித்து அறிவிழந்தவர்களுக்கும் முத்தியின்பம் உண்டாகவேண்டும். அல்லாமலும், நெருப்பு தன் சிவப்பு வண்ணம் (சொரூபம்) கெட்டால் தானும் கூடக்கெடும்; அல்லாமல் அது நிலை பெறாது. ஆன்மாவானது தன் சொரூபமாகிய அறிவு கெட்டால் தானும் கூடக்கெடும்; அன்றி, ஆன்மா நின்று வீட்டின்பத்தை அநுபவிக்கும் என்பது பொருந்நாது. எனவே, ஆன்மா அறிவு கெட்டுக் கல்லுப்போலவும் மண்போலவும் ஆய் முத்தியடையும் என்பது குற்றமாம்.

# 10. (அ) சத்தப்பிரமவாதி மதம்

1. 'சத்தமானது மயக்கத்தினாலே பிரபஞ்சமாம். அறியாதார் சத்தத்துக்குப் பொருளும் உண்டு என்பர். அஃது உண்மையன்று; சத்தமே பிரமம், அர்த்தமில்லை என்று அறிவதே முத்தியின்பமாம்.' எனச் சத்தப் பிரமவாதி பிரபஞ்ச பேதத்தை ஆராய்ந்தறியாமல் சத்தமே உள்ளது என்றான்.

2. சத்தத்தாலே பரிணமித்து மிகவுண்டாதலே மயக்கம். அந்த மயக்கத்தினாலே உலகம் உண்டாக்கப் படும். ஆகலின், உள்ளதாகக் காணப்படுவது சத்தம் ஒன்றுமே. சத்தத்துக்கு அர்த்தம் என்பது அதன் நன்மையே. சத்தத்தின் நன்மை அர்த்தமன்று, அர்த்தத்தின் நன்மையே சத்தம் என்னில், சத்தமானது

கூடாமல் ஒரு பொருள் உண்டாதல் இல்லை; எனவே, சத்தத்தின் நன்மையே அர்த்தமாம் என்க. சத்தத்தின் நன்மையாவது சொன்னலம்: அது பொன்னே பணி என்று சொல்லுதல்.

3. பூ மா என இரண்டு சொற்கள் உள. அவற்றில் பூ என்பது மலர், மா என்பது இலக்குமி எனப் பொருள்படும். அவ்வாறு கூறும் பொருளிலே சத்தம் அடங்காது, நிலம் விலங்கு எனவும் வேறு பொருள் படும். ஆதலால், நாம் விரும்பிச் சொல்லும் பொருளையே முக்கியமாகக்கொண்டு பல பொருள்களும் உண்டாம். நெல்லிலே தோன்றும் பொரிக்கு நெல்லே முக்கியம்; அதுபோல, அர்த்தத்துக்குச் சத்தமே முக்கியமாம். எனவே, ஒருசத்தம் பல அர்த்தத்தைக் கொண்டிருத்தலின் சத்தமே பிரமம் என்பதாயிற்று.

4. யாதொரு சொல் பல் நா இதழ் முதலியவற்றின் உதவியால் தோன்றியது, அந்தச் சொல்லிலே பொருளும் தோன்றும்; ஆதலால், சொல்லே இன்றியமையாதது. சொல்லும் பொருளும் உடன் நிற்றலின் பொருளும் தனியே ஒருமுதல் என்னில், ஒரு சொல்லுக்குப் பொருள் உரைக்குமிடத்துப் பொருளும் சொல்லே. ஆகலின், சொல்லே ஒழிந்து பொருளென்பது ஒன்றில்லையாம். அதனால், சத்தமே பிரமம் என்று கொள்வாயாக என்பது.

# 10. (ஆ) சத்தப்பிரமவாதி மதமறுதலை

---

1. சத்தமானது பரிணாம விவர்த்தனம் ஆகிய மயக்கத்தினாலே பிரபஞ்சம் ஆம் என்றாய். அங்ஙன மாயின், சத்தமே சர்வமும் ஆம் என்பதன்றிச் சத்தத் தினின்று உண்டாகத்தக்கதாகிய ஒரு மயக்கமும் உண்டு என்று சொல்லாய். அஃதன்றியும், பொருளை வரை யறை செய்யாமல் சத்தத்தைப் பிரமம் என்று குறித் துணர்தலே முத்தி என்று கூறினாய். அங்ஙனமாயின், வேதத்திலே சொல்லப்பட்ட கன்மத்தைச் செய்யா மலும், ஞானத்தை உணராமலும் முத்தியடையலாம் என்பதால் நீ வேதத்தோடு மாறுபட்டுக் கூறுகின்றாய். வேதம் சொன்னபடி கன்மம் செய்தானாயினும் ஞானத்தை உணரானாயின் முத்தியில்லை என வேதாகம சாத்திர புராணங்கள் கூறும். சத்தமே பிரமம் என அறியும் அறிவால் முத்தியடையலாம் என்பது மாறு பாடாம். எனவே, சத்தமே பிரபஞ்சம் என்பதனையும், சத்தமே பிரமம் என்பதனையும் அறிதலே முத்தி என்பது அடாது.

2. சத்தம் அருவமானது, அது பிரபஞ்ச ரூப மாய்ப் பரிணமித்துப் பொருந்துவதை நினைக்கமாட் டாது. அற்றன்று, குடிக்கும் தன்மையையுடைய பால் உண்ணும் தன்மையையுடைய தயிராகப் பரிணமித் தலைப்போல, அருவமாகிய சத்தம் உருவமுடைய

பிரபஞ்சமாய் வரும் என்னில்; அத்தயிர் மீளவும் பாலாதல் இல்லை, தயிராய் நின்றே அழியும். அது போல, சத்தமும் பிரபஞ்சமாய் உருப்பெற்றால் மீளவும் சத்தமாதல் இல்லை, பிரபஞ்சமேயாய் நின்று அழியும் என்க.

3. சத்தமானது பிரபஞ்சமாய் வருதலும், பல வடிவங்களாகத்திரிந்து வருதலும் உண்மையால் சத்தத்துக்கு அழிவுண்டு என்று சொல்லாய். அன்றியும், சத்தத்துக்கு நன்மை என்ற பொருள் எங்குமாய் நின்றமையின்: அப்பொருளை ஆராயுமிடத்து அப் பொருளைத்தரும் சொல்லாய் நின்று பொருளை விளக்குவதே நன்மையாம். சொல்லின் நன்மையாவது— பொன்னேபணி என்பது போலாம். எனவே, சத்தத்திலும் அர்த்தமே சிறப்பையும் நிலைபேற்றையும் உடையது என்க. பரிணாமம்ஆயின் நெருப்பு என்ற போது நெருப்பாய் எழவேண்டும், விவர்த்தனமாயின் நெருப்பு என்றபோது வாய்வேக வேண்டும். ஆகலின் இடுகுறியாம்.

4. சத்தமும் அருவம், அதன்பொருளும் அருவமே. ஆகலின், சத்தமே அர்த்தம் என்றாய். அரி என்னும் சத்தம் விஷ்ணுமூர்த்திக்கும் குரங்குக்கும் மற்றும் பலவற்றிற்கும் பெயராம். அதனைப் பொருளுக்குச் சத்தம் கொள்ளாமல் சத்தத்துக்குப் பொருள் கொள்ளின் விஷ்ணுவைக் குரங்கு என்ன நேரும். எனவே, சொல் வேறுபாடு, பொருள் வேறுபாடுகள் உள்ளனவாம். இதனால், சத்தமும் பொருளும் ஒன்று பட்டிருப்பினும் அவ்விரண்டும் வேறு என உணர்க.

5. பொரிக்கு நெல்லே இன்றியமையாதது; அது போல, பொருட்கெல்லாம் சொல்லே இன்றியமையாதது ஆம் என்று கூறினாய். அங்ஙனமாயின், நெல் மிக்க நெருப்பைச் சேர்ந்தால் பொரியாம் ஆகலின், நீ கூறிய உவமை பொருந்தாது. பூ மா முதலிய ஒரு சொல்லிலே பல பொருள் கூடி நிற்கும். அதனை அறிந்து கொள்ளுமாறு கற்பதே சத்தமாம். பொருளைப் பிரித்து அறிந்தால் சிறந்தபொருள்தானே நின்று நன்மையைத்தரும். ஆதலால், நீ கூறும் சத்தத்தினும் அர்த்தமே சிறப்புடையது.

6. முன்பு அறிவினால் கண்ட பொருளே சத்தமான பெயராய் நிற்றலாலும், பின்பு காணப்பட்ட உருக்களைச் சத்தமான பெயரைக்கொண்டு அறிதலாலும் நன்றாகக் காணப்பட்ட பொருளுக்குக் கேடில்லை. எனவே, சத்தத்துக்குக் கேடு உண்டாம். காரியமாகிய சத்தம் அழியுமே அன்றி, காரணமாகிய அர்த்தம் அழிதலில்லை. எனவே, அர்த்தம் அழியும் என்பதை அறிந்தது எங்கே?

7. ஆன்மா ஒரு விடயத்தை அறியும் போது அறியப்படு பொருளும், அதனைக் காட்டும் இந்திரியமும், அதனோடு கூடி உணரும் அந்தக்கரணங்களும், அவற்றிற்கு மூலமாகிய பிரகிருதியும், அவற்றை வெளியாகத் தோற்றுவிக்கும் திரோதான சத்தியும் ஆக இத்தனையும் கூடுமளவில் ஆன்மாவுக்கு அறிவுண்டாம். அப்போது பெயர் நீங்கும், பொருள் தோன்றும். ஆகையால், அர்த்தமே பிரதானமாம் என்க.

8 இருளின்கண் கிடக்கும் பொருள்களைத் தெரிந்து கொள்ளுவதற்குக் கைவிளக்கு உபகாரமாம். அதுபோல, பல பேதப்பட்ட பொருள்களையும் அறிவதற்குச் சத்தம் உபகாரமாம். அந்தச் சத்தம் நிலை பேறுடையதன்று. பொருளாகிய காரணம் இல்லையாயின் தானும் காரியப்படாது அழியும். ஆகையால், அந்தச் சத்தம் சித்தனாகிய பரமேசுவரனால் உண்டாக்கப்பட்டது. ஆதலால், அதனைப்பிரமம் என்று சொல்வது குற்றமாம். எனவே, பிரமம் பரமேசுவரனேயல்லாமல் சத்தம் பிரமமன்று என்க.

---

# 11. (அ) மாயாவாதி மதம்

---

1. ஆன்மாவும் சிவமும் ஒன்றுமல், அகம் பிரமம் என்று சொல்லிப், பிரபஞ்சம் எல்லாம் கானற்சலம் போலப் பொய் எனக் கருதிக், கருப்பாசயத்தை விட்டு நீங்காமல் நின்று, தான் மற்றுள்ள ஆன்மாக்களுக்கு உபதேசம் சொல்லித்திரிகின்ற நாணம் இல்லாத அறிவீனன் ஆகிய மாயாவதி பித்தேறி, வேதாகமங்களுக்குப் பொருந்தாமல் தனக்குப் பொருந்தத்தானே சொல்லிக்கொள்ளும் நூலின் தன்மையைச் சொல்லுவோம் என்க.

2. ஞானமே சொரூபமாய், பிரபஞ்சத்துக்குக் காரணமாய், அளவில்லாத ஆனந்தமாய், உருவம் இன்றி அருவமாய், எங்கும் நிறைந்து நிற்பதாய், கேடில்லாதாய் விளங்கும் சத்தாய், அசத்தத்துடன் கூடாது

சுத்தமேயாய், குறியும் குணமும் இல்லாததாய், வேதங்களுக்கு வரம்பாய், நீக்கமில்லாத அநுபூதி தனக்கே உடையதாய் நிற்பது பிரமப் பொருளாம்.

3. ஒருசூரியன் ஆகாயத்திலே நிற்கப் பலபாத்திரங்களிலும் உள்ள நீர்களிலே அது தனித்தனியே தோன்றுவது போல, ஏகமாகிய பிரமப்பொருள் உடல்கள் தோறும் தனித்தனியே தோன்றப்பட்டு நிற்கும். சூரியன் பாத்திர நீர்களில் அகப்படாமல் மேற்பட இயங்குகின்றான். அதுபோல, அந்தப் பிரமப்பொருளும் உடலில் அகப்படாது மேற்பட்டு இந்திரியங்களுக்கும் காரணங்களுக்கும் அறிவதற்கு அரிதாய் இருக்கும். ஆகலின் காட்சி முதலிய ஆறு அளவைகட்கும் அறிதற்கு அரிதாம் என்க. எனவே, ஆன்மா என்பது ஒன்றில்லை, சர்வமும் பிரமமே என அறியத் தக்கது.

4. இருட்காலம், புற்றின் அருகே பழுதை கிடந்தது, அதனைக் கண்டோர் பாம்பெனவே அஞ்சி நின்றனர், சூரியன் உதித்தான், பழுதை மெய்யாய்ப் பாம்பு பொய்யாயிற்று. அதுபோல, பொய்யான பிரபஞ்சத்தின் செயலும் மயக்கத்தால் மெய்யாய்த் தோன்றும். மயக்கமில்லாத பிரமஞானத்தினால் விளங்கும் காலத்து பிரமமே உண்மையாம், பிரபஞ்சம் பொய்யாம்.

5. உலகம் நிர்வசனமாகிய பிரமத்தினின்றும் தோன்றும். அந்தப் பிரமத்தினின்றும் பிரபஞ்சம் தோன்றுதாயின், வேறு உபாதானத்தால் பிரபஞ்சம்

தோன்றுது. உலகம் ஒருவர் தோற்றுவிக்காமல் தானே விளங்கித் தோன்றுமாயின் அஃது ஒரு முதலாய் அழியாமல் நிற்கும். உலகம் அழியக் காண்கிறோம். பிரபஞ்சம் மெய்போலத் தோன்றினும் பொய்யாதல் நிச்சயம் வெள்ளிபோலப் பிரகாசிக்கும் இப்பியையும் வெள்ளியையும் தீயிலிட்டால் இப்பி கெடும், வெள்ளி நிற்கும் அதுபோல, மெய்போலத் தோன்றும் பிரபஞ்சமும் அவிகாரமாகிய பிரமமுமாம்; பரமார்த்தத்தில் பிரமமே மெய்யாம், பிரபஞ்சம் பொய்யாம்.

6. ஆதாரமாகிய பிரபஞ்சத்துக்கு உபாதானம் சத்தாகிய பிரமமே ஆம். சிலம்பியானது நூலைத் தன்னிடத்தினின்று தோற்றுவித்து, அந்த நூலை ஓரிடத்திலே வைத்துப் பாதுகாத்து, பின்பு அந்த நூல் அழியுமாறு தான் நீங்கும். அதுபோல, பிரபஞ்ச பேதம் எல்லாவற்றையும் பிரமம் தன்னிடத்தினின்றும் விளங்கத் தோற்றுவிக்கும், அவற்றை உளதாகக் காக்கும், பின்பு இல்லையாம்படி சங்கரிக்கும் அப்படிப் பிரமத்தினின்று தோன்றி நின்று அழிதலால் பிரமத்தின் நியமமே பிரபஞ்சத்தின் செயலெல்லாம். எனவே, பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றி நின்று கெடும் எனவும், பிரபஞ்சம் அநித்தியம் எனவும் அறிக.

7. பிரமத்தினின்று பிரபஞ்சம் தோன்றும் முறைமையாவது: கேடில்லாத பிரமத்திலே ஆகாயம் தோன்றும், ஆகாயத்திலே வாயுத்தோன்றும், வாயுவிலே தேயுத்தோன்றும், தேயுவிலே அப்புத்தோன்றும், அப்புவிலே பிருதிவி தோன்றும், பிருதிவியிலே

ஓஷதி தோன்றும், ஓஷதியிலே உணவாய், அவ்வுண விலே உடம்பின் பகுதியான தோல், எலும்பு, நரம்பு, மச்சை, சோரி, சுக்கிலம் முதலிய தாதுக்கள் ஆறும் உண்டாம்.

8. மேலே குறித்த ஆறு தாதுக்களும் கூடி உண்டாகியது அன்னமயகோசம், அந்த அன்னமய கோசத்திலே மாறில்லாமல் வாயுப்பரந்து துடிப்பு உண்டானது பிராணமய கோசம், பிராணமயகோசத் திலே மயக்கம் நீங்கி மனம் கூடுவது மனோமயகோசம், மனோமய கோசத்திலே வேறாகவரும் சோத்திரம் முத லியன கூடி அறிவாய் இருப்பது விஞ்ஞானமயகோசம், விஞ்ஞானமயகோசத்திலே வாக்கு முதலியன கூடி ஆனந்தமாயிருப்பது ஆனந்தமயகோசம் என அறிக. கோசம் — உறுப்பு என்பர்.

9. பஞ்சகோசமாகிய உருவினிடத்துப் பிரமம் கூடிப் பிரகாசிக்கும். எட்டுதற்கரிய ஆகாயத்திலே விளங்கும் சூரியனுடைய கிரணம் பூமியில் உள்ள கடந்தோறும் தனித்தனியே தோன்றும். அதுபோல, பிரமமும் சூரியனைப்போல எட்டாதாயினும் உருக்கள் தோறும் தானாய் நிற்கும். பிரமம் அப்படிப் பாசத் தோடு கூடி நின்றதாயினும் பிரமத்தைப் பாசம் சென்று பற்றுவதில்லை. பிரமத்தைப் பாசம் பற்றா தாகவே அந்தப் பிரமத்துக்கும் பாசத்தோடு பற்றில்லை.

10. அளவில்லாத பல வன்னங்களோடு கூடிய மணிகளைக் கோவையாகக் கோக்குமிடத்து ஒரு நிறப் பட்ட நூல் அம்மணிகளால் பல நிறமாக நிற்கும். அது

போல, உலகத்திலே தோன்றப்பட்ட யோனி பேதங்கள் பலவாகப் பேதிக்கப்படுதலால் அவற்றோடு கூடிய பிரமமும் பல பேதப்பட்டாற்போல அங்கங்கே தோன்றும். ஆகலின், மணிகளில் தோன்றிய நூல் தன் தன்மை கெடாது நின்றாற்போலப் பிரமமும் பேதிக்கப்பட்டாற்போலத் தோன்றினும் பேதிக்கப்படாமல் நிற்கும் என்க.

11. பிரபஞ்சத்தோடு பொருந்துதலால் பரமான்மா, ஜீவான்மா, அந்தரான்மா, நரகான்மா, திரியக் ஆன்மா எனப் பல பெயர்களையும் பொருந்தும். போக போக்கியங்களிற் கூடி அநுபவிப்பாரைப் போலத் தோன்றும். சாக்கிரம் முதலிய அவத்தைகளிலும் சாட்சிபூதமாய் நிற்கும். அவத்தைகட்குரிய கருவிகள் உரையிற் காண்க.

12. பதினன்கு கருவிகளோடும் கூடி அவற்றை நான் எனக் கருதியிருப்பது பந்தமாம். அக்கருவிகள் பதினலோடும் கூடாமல் நீங்கித் துரியத்திலே நிற்கத் தற்சொரூபம் ஆகிய சிவோகம்பாவம் பிறந்து முத்தியுண்டாம். பந்தத்துக்கு வித்தாக உள்ளது மூலப்பிரகிருதியே; அந்த மூலப்பிருகிருதியின் செயலாலே மாயா காரியங்களாகிய சுகதுக்கங்கள் பொருந்தும். அவித்தையாகிய மூலப்பிரகிருதியின் செயல் கெடவே மாயை நீங்கும். அம்மாயை நீங்கவே ஞானம் உண்டாம்; ஞானம் உண்டாகிய இடத்துப் பந்தம் தோன்றாமல் சிவோகம் பாவம் பிறக்கும் என்க. இதனுல் உபாதிகளை விட்டு நீங்கும் முறைமை காண்க.

13. கன்மானுட்டானங்களாகிய புறச்சுத்தியால் அந்தக்கரண சுத்தியுண்டாம். குற்றமில்லாத அந்தக்கரண சுத்தி ஞானத்தையுண்டாக்கும். அந்த ஞானமே அகம்பிரமம் என்பதனை அறிவிக்கும். அங்ஙனம் தானான தன்மையிலே கருத்து முற்றினால் ஆகாயத்தில் உள்ள சந்திரன் நீரிலே நின்று விளங்கித்தோன்றும் உருவம்போலத் தற்சொரூபமும் தெரியும். துளக்கப்படுதல் நீருக்கொழியச் சந்திரப் பிரதிபிம்பத்துக்கு இல்லை; அதுபோல, அலைவு கருவிகளுக்கு ஒழியப் பிரமத்துக்கு இல்லை என்க இதனால் பிரமநிட்டை கூடும் முறைமை அறிக.

14. அகம்பிரமமாய் அநுபூதியும் தன்னிலே தன்னை அநுபவித்துக், காயம் எனவும் கரணம் எனவும் வாயு எனவும் ஒரு பேதமுமின்றி, இன்னபடியென்று சொல்லுதற்கு ஓர் சொல்லும் இன்றி, ஆகாயம் முதலிய பூதங்கள் கெடவும் தான் ஒருக்காலும் கெடாமல் நிலைபெற்று, அகம்பிரமம் எனத் தெளிவதே பிரம ஞானமாம்.

15. வேதத்தின் முடிவாகிய **தத்துவமசி** முதலிய மகாவாக்கியங்கள் சொல்லும் பகுதியை உணருங் காலத்து **அது நீ ஆனாய்** என்பதல்லாது மற்றொரு பொருள் சொல்லுதற்கு இல்லையாம். ஆதலால், இப்படித் துணிபச்சொல்லும் மகாவாக்கியத்தின் உண்மையைக்கொண்டு சோகம்பாவகமாக அறியாதார் அந்த முறையைத் தெளியவேண்டிப் பஞ்ச ஆதனம் முதலாகப் பூசிக்கும் கிரியையையும், மேலாகிய அஷ்டாங்க

யோகத்தையும் செய்து திரிவார். எனவே, சரியை கிரியை யோகம் முதலியன பிரமஞானம் கூடவேண்டிச் செய்யும் தவமாம் என்க.

---

# 11. (ஆ) மாயாவாதி மதமறுதலை

---

1. மாயாவாதியே! நீ ஏகமாகிய பிரமம் நான் எனக் கூறினாய், பின்பு கருவிகளை நீங்கி இப்படித் தரிசித்து முத்தியடையுங்கள் என்கிறாய். இது மயங்கிச் சொல்லும் சொல்லன்றோ! நீ எடுத்துக்காட்டிய சோகம் பாவனையேல், அவ்வாறு கூறும் மகாவாக்கியத்தோடு கூடி முடியாது. எவ்வாறெனில், அவ்வாக்கியம் அது நான் ஆனேன் என்கிறது: இரண்டுபட்டுப் பெறுவானும் பேறுமாய் ஒன்றுகிறது. அல்லாமலும் பிரமத்தை விகாரம் அற்றதாகக் கூறினாய், மீள மயங்கி அந்தப்பிரமம் சீவான்மாவாகப் பேதித்ததாகவும் கூறினாய். அதற்குக் கன்மம் என்னும் ஒரு முதல் இன்றி, இல்லாததனையும் உண்டாக்கி, அதனைக்கூடியது என்றும் கூறியது மயக்கமாம். எப்படி? என்னில், ஒரு மலட்டுக்காகம் தன்னுடைய கரிய குஞ்சுக்கு உண்டாகிய பெரும் பசியை நீக்கும் பொருட்டுக் கருங்கல்லில் தோன்றிய மாமிசத்தை வாங்கித் தன் குஞ்சின் வாயில் கொண்டுவந்து கொடுத்தது என்னும் தன்மையையே ஒத்திருக்கின்றது. எனவே, நிர்விகற்பமாகிய பிரமத்துக்கு மலட்டுக்காகம் உவமை; அப்பிரமம் சீவான்மாவாகப் பேதித்தமைக்கு அதன் குஞ்சு உவமை;

சீவான்மாவுக்குக் கன்மம் முதலிய உண்டாக்கித் தருவ தற்குக் கல்லின் மாமிசம் உவமையாம்.

2. அநாதியே உண்டாகிய வேதம் வரையறை யாகப் பிரமம் ஒன்றே என்று சொல்லுவதாகச் சொன் ஞய். அப்படியாயின், அவ் வேதத்தில் ஞாதிரு ஞானம் ஞேயம் ஆகிய மூன்று முதலும் உண்டு எனச் சொல்லப்பட்டுளது. ஆதலால், நீ ஒன்று என்னும் சொல் அவ் வேதவாக்கியங்கொண்டே பின்னிடும். இன்னும் நீ பிரமம் ஒன்றே எனவும், அகம்பிரமம் எனவும் சொல்லும் சொற்கள் குற்றப்பட்டுத் தத்துவ மசி என்னும் வாக்கியத்துடன் மாறுபடும். உன் கொள்கையில் ஆன்மா இல்லை, ஆகையால் அநுபூதியும் உண்டாகமாட்டாது. ஞாதிரு ஞான ஞேயம் என்பது காண்பான் காட்சி காட்சிப்பொருளாம்.

3. கிரணங்களையுடைய சூரியனது சாயை பாத் திரநீர்கள்தோறும் விளங்குதல்போல, எப்பொருட்கும் முதலாயிருக்கிற பிரமம் குற்றமில்லாத அருவம்; ஆகையால், உபாதிகளோடுங்கூடி உருவமாகிய உடம் பிலே பொருந்தி உண்டாவதில்லையாம் அல்லாமலும், பாத்திரநீர் நிழலில் இருப்பின் சூரியகிரணம் ஆண்டுச் செல்லாது. அதுபோல, பிரமம் கூடாத உடம்பும் உண்டாதல் வேண்டும். பாத்திர நீரிலே சூரியனைக் காண்பான் ஒருவனைப்போல உடம்பினிடத்துப் பிரமத் தைக் காண்பான் ஒரு ஆன்மா உண்டு ஆகலின், உன் னுடைய அகம்பிரமம் என்பது இல்லையாம்.

4. ஒன்றோடொன்று கூடாமல் உணரும் பொறி களும் புலன்களும் மனமும் கூடாமல் உடம்பில் ஓர்

அறிவு தனியே நின்று அறியாதிருக்கவும், அறியும் எனச் சாத்திரப் பிரமாணம் இல்லாதிருக்கவும் நீ பிரமம் உடம்போடு கூடித் தானேதானாய் நின்று அறியும் என்று சொல்லுகின்றாய். அப்படிச்சொல்லுவது கொம்பில்லாத முயலுக்குக் கொம்புண்டு என்று கூறுவதை ஒக்கும். அல்லாமலும், கேடில்லாத பிரமப்பொருள் சீவான்மாவுமாய் நிற்கும் என்று சொல்லும் உன்னுடைய ஞானத்தால் உனக்குப் பயனுண்டாதலும் இல்லை. எப்படி? என்னில், நீ இப்படிச் சொல்லும் முறைமை இன்றி, பரமான்மாவும் அதனை அறியும் சீவான்மாவும் என இரண்டு முதல் உண்டு என்பதே யாவராலும் போற்ற உள்ளது. எனவே, ஆன்மாவுக் கொழிய பிரமத்துக்குப் பந்தம் உண்டாகாது. ஆகையால், ஆன்மா ஒன்று உண்டு என நிச்சயிக்கப்படும்.

5. ஒளியும் மணியும்போல ஒன்றாய் இருக்கும் எனச் சொல்லின், இந்த உவமையிலே ஒன்று என்பதனை மறுத்துக்கூறினாய். எப்படி? என்னில், மணியும் அதன் ஒளியும் குணியும் குணமுமாம் ஆகையால்; ஒன்றாகிய பிரமப்பொருள் இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்களை நீங்கி நிற்கும் என்னில், அப்பிரமத்துக்கு இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்கள் இல்லையாயின் ஒப்பற்ற பிரபஞ்சத்தை உண்டாக்கும் தொழில் இல்லையாய், அதனைக் காக்க வேண்டும் அறிவும் இல்லையாய் முடியும். இச்சா ஞானக் கிரியைகளை நீங்கிய நிர்விகற்பம் என்னில், இச்சா ஞானக் கிரியைகளோடு கூடிய பிரபஞ்சத்தின் சிருட்டி திதி சங்காரம் நடத்தவேண்டும். அவை நீங்கி நிற்கும்

என்னில், அறிவும் இல்லையாய்க் கர்த்தாவும் அன்றாம் என்க.

6. புற்றினிடத்துப் பழுதை கிடந்தது, இருளிலே அப்பழுதையைக் கண்டவர்க்கு அச்சத்தால் மயிர் சிலிர்த்துப் பாம்பெனவே நினைப்புண்டாயது. அதுபோல, பிரபஞ்சம் ஒப்பற்ற பிரமத்திலே தோன்றுதலும் அதன் அபிக்கத்தாலே அப்பிரபஞ்சமும் மெய்போலத் தோன்றும் முறைமைபெற்றது என்னில், அங்ஙனம் மயங்கின அறிவையுடைய ஆன்மாக்களும் இச்சா ஞானக் கிரியை உண்டாய்ப் பிரபஞ்ச கிருத்தியம் செய்வதில்லை என நீ கூறும் பிரமத்தின் பேதமாய் நிற்பர். இப்படிச் சொல்லின் உனக்கு மயக்க அறிவே உண்டாய்ப் பிரமமாம் இன்பம் உண்டாகாது. எனவே, பழுதையைப் பாம்பு என்று பிரமித்தது பிரமமாக வேண்டும். அதுதான் விகாரம் என்னில், கரணங்களுக்கு அறிவில்லையாம். பிரமத்தின் சந்நிதிமாத்திரத்திலே சலிக்கும் என்னில், தெளிந்த காலத்தில் சந்நிதியில் சேட்டித்தல் இல்லையாக வேண்டும். அதுபின் சலித்துத் தத்துவமும் கூடாது.

7. மாயாவாதியே! நீ வேதத்தை ஓதியுள்ளாய். அப்படி ஓதியிருந்தும் பிரபஞ்சத்தை முன்பு இல்லை என்றும், பின்பு நிர்வசனமாகிய பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றியது என்றும் சொல்லுதல் என்? பேதையே! ஒரு பொருள் இல்லதும் அன்று, உள்ளதும் அன்று என்று சொல்லுவாரும் உளரோ? அற்றன்று, ஆதிதோறும் தோன்றி வருதலால் இல்லை என்பது இல்லையாய் உள்ளது அழிந்துபோம். இல்லையாம்படி அழிந்து

போம் முறைமையாலே இல்லாமை உண்டானது. ஆகையால், உள்ளதும் இல்லாததும் பிரபஞ்சத்துக்குப் பொருந்தியது என்னில், அப்படி அழிந்துபோம் பிரபஞ்சம் மீளவும் பிரமத்திலே உண்டாமிடத்து முன்பு போலவே தோன்றும். ஆகலின், அதற்கு மூலகாரணம் கிடந்து அழியாமல் நிற்கும். உலகம் விவகாரம் ஒழியப் பரமார்த்தத்து இல்லை என்னில், உள்ளது முன்னே உண்டாய் வருதலால், இல்லாதது இல்லையாயேபோம் ஆதலால், உள்ளதல்லாதது உண்டாம் என்னில், அது சுருங்கி நின்றதாம் என அறிக.

8. மித்தையாகிய பிரபஞ்சம் பிரமம்போல மெய்யாகத் தோன்றினமையால் இப்பியானது வெள்ளியைப் போலப் பிரகாசிக்கும் என்னில், இப்பியை வெள்ளியென ஐயப்பட்டாற்போலப் பிரபஞ்சத்தையும் பிரமமோ? மித்தையோ? என்று ஐயமாகவே சொல்லலாம். முன்பு பிரபஞ்சம் பிரமப் பொருளோடு ஒத்த பொருளாகக் கொள்ளப்பட்டு இப்போது மித்தியையாக மாறிக் கண்டோம் என்னில், நிலர் நீர் ஆகியும் தீ வளி ஆகியும் மாறி நில்லாது. நீர் நிலமாகவும் வாயு தீயாகவும் மாறாது. ஆதலால், பிரபஞ்சமும் விவகாரத்திலே மெய்யாதலன்றிப் பரமார்த்தத்திலும் மெய்யாகப் பொருந்தியது என்க.

9. பொய் நூலானது சிலம்பிபினிடத்தில் தோன்றி நின்று கெட்ட இடத்து மீளவும் அதனிடத்திலே அந்த நூலாகவே தோன்றினாற்போல, உலகம் பிரமத்தினின்று தோன்றி நின்று கெட்ட பின்பு மீளவும் பிரமத்திலே முன்பு போலவே தோன்றி வரும்

என்னில், அருவமாய் அவிகாரமாய் உள்ள பிரமம் பிரபஞ்சத்திலே அகப்பட்டு மயங்கவும் ஆகும். ஆதலால், நீ கூறியது உவமை அன்று. அந்த நாலாகிய சேடத்தினுள் அச்சிலம்பி அகப்படாது நின்றாற்போல, பிரபஞ்சமாகிய சேடத்தினுள்ளும் பிரமம் கூடி நில்லாது; காரணமாய் நிற்கும் என்னில், அறியாதவனே! கடத்துக்கு மண் காரணமாக இருக்கவும் காரணமாகிய மண்ணில் கடம்தானே தோன்றாது. தோன்றுமிடத்து முதற்காரணமாகிய மண்ணும், நிமித்த காரணமாகிய குலாலனும், துணைக்காரணமாகிய திரிகையும் கூடித் தொழிற்படக் கடம் தோன்றும். அதுபோல, பிரபஞ்சமும் முதற்காரணத்திலிருந்தே தோன்றவேண்டும்.

முதற்காரணம் வேறு ஒன்று இன்றிப் பிரமமே முதற்காரணமாகப் பிரபஞ்சம் தோன்றும் என்னில், பிரமம் சித்து, பிரபஞ்சம் அசித்து ஆதலால் சித்திலே அசித்துத்தானே தோன்றாது என்க. எனவே, பிரபஞ்சத்துக்குக்காரணம் பிரமம் அல்ல என்றவாறாயிற்று.

10. வன்னபேதமாகிய வேற்றுமைப்பட்ட உருவத்திலே பிரமம் வெளிப்பட்டு நிற்கும் என்னில், குற்றமில்லாத ஜடத்திலே பிரமம் உண்டாயிருக்க அந்த ஜடம் அவத்தைப்பட்ட இடத்து அறிவின்றிக் கிடக்கக் காரணம் என்ன? வாயுவும் அந்தக்கரணங்களும் நீங்கி வந்து கூடாமையினாலே அறிவில்லை என்னில், பிரமத்தின் அறிவு கெட்டதோ? அல்லாமலும், பிரமம் நிற்க வாயுவும் அந்தக்கரணங்களும் நீங்கினவோ? என வினா எழும். ஆதலால், பிரமம் அறிவும் அறியாமையுமாகி உருக்களிலே நில்லாது என அறிக.

11. பிரமப்பொருள் உடம்பில் நின்றதாயினும் உடம்போடு பற்றின்றி நிற்கும் எனக் கூறினாய். அங்ஙனமாயின், பிரமம் விருப்புடன் கூடி நின்ற உடல் நரை திரை நோய் சிறை முதலியவற்றால் உறுப்பழிவு உண்டான பின்பும் இவ்வுடம்பைப் பொல்லாதது என்று நீங்கி நில்லாது; இவ்வுடல் நீங்கும் என்ற போதும் மிக வருந்தி நடுநடுங்கும். ஆகையால், இப்படி உடம்போடு கூடி நிற்கும் முறைமைய எவ்விடத்தும் கண்டிருந்தும் உடம்போடு பிரமத்துக்குப் பற்றில்லை என்று உன் ஆசையால் சொல்வதன்றிப் பற்று விட்டதில்லையாம்.

12. ஒளிமிக்க பல நிறமான மணிகளுள்ளே ஊடுருவி ஒன்றாய் நின்ற நூல் கோக்கப்பட்ட மணிகளின் வண்ணமாகப் பேதித்து நின்றமையைப், பிரமத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் உவமை கூறினாய். அங்ஙனம் கூறிய உவமையால் கர்த்தா ஒருவனைப் பல பேதப்பட்டு எண்ணிறந்த யோனிகள் தோறும் நின்ற அவன் பேதியாத நிலையே கூறினாய். ஆகையால், மணிகளின் பேதம்போலப் பிரபஞ்சம் பேதமாக உள்ளது: பிரமத்துக்குப் பேதம் இல்லை என்பது பெறப்பட்டது. எனவே, பிரமம் சீவான்மாவாகவும் பரமான்மாவாகவும் பேதிக்கும் எனக் கூறி இவ்விடத்துப் பிரமப்பொருள் பேதியாது என மீட்டும் கூறியது வழுவாம். உலகம் பேதமோ? அபேதமோ? சொல். இதனால், நீ அபேதம் எனக் கூறியது மாறுபாடாம்; பேதமே உள்ளது என்க.

13. அஞ்ஞானமாகிய காயத்தோடுகூடிப் பிரமமும் அஞ்ஞானமாய்ச் சுகதுக்கங்களை அநுபவித்து நிற்கவும் பிரமத்துக்குக் காயத்தோடு அநுபவமில்லை என்னும் பேயனே! அஃது உன் சாத்திரத்திலும் கூறியதேயாம்; சாத்திரத்திலும் அநுபவத்திலும் பொருந்தாமல் உண்டானதன்று. அல்லாமலும், அநுபவத்திலும் இல்லாமல் உண்டானதாயின் பிரத்தியட்சத்திலே நீ அநுபவத்தைக் கூறுவதற்குக் காரணமென்ன? பரமான்மா அநுபவிப்பதில்லை, ஜீவான்மாவினுடைய பாவனையே என்னில், இப்படி அநுபவிக்கும் ஜீவான்மாவை ஒன்றினும் தோய்வில்லாத பரமான்மாவாகக்கொண்டு அது நித்தியமாய் மனவாக்கிறந்தது என்றும், அகம் பிரமம் என்றும் சொல்ல உனக்கு இன்னமும் லச்சையில்லையோ? உன்னுடைய வசனத்தால் பெற்றது யாதெனில்? அதிலே பற்றற்று நிற்றலாகிய இல்லாமை பெற்றதில்லையாம் பற்றில்லாமை பெற்றதாயின் புசிப்பற்று இருத்தல்வேண்டும் என்க.

14. பிரமப்பொருள் ஜீவான்மாவாய் உடல்தோறும் நிறைந்து நிற்கும் என்னில், நீ கூறிய அவத்தைகளில் அகப்பட்டு அடங்குவதில்லையாம். அப்படி அவத்தைப்படுவது ஜீவான்மா அன்று, அந்தக்கரணங்களினது சம்பந்தமே என்னில், கரணங்கள் அவத்தையைப் பொருந்திய இடத்து அவ்விடத்து நின்ற ஜீவான்மா எங்கே? மறைந்து நின்றது. அந்தக்கரணநாயகன் ஆகிய ஜீவான்மா அவ்விடத்து நின்றதாயின் அவன் வழிப்பட்ட கரணங்களும் அடங்கமாட்டா.

அற்றன்று, ஒரு காந்தக்கல்லின் சந்நிதியிலே இரும்பு அசைந்து அடங்கும் தன்மைபோல, ஜீவான்மாவின் சந்நிதியிலே அந்தக்கரணங்களும் சேட்டைப்பட்டு அடங்கின என்னில், நீ கூறிய இரும்பு காந்தத்தோடு கூடினால் காந்தத்தை இரும்புவிட்டு நீங்காத தன்மை போல, அந்தக்கரணங்களும் ஜீவான்மாவோடு கூடினால் நீங்கப்படாது. ஆகையால், நீ கூறிய உவமை பிறழக் கூறியபடியாம்.

15. இருளால் மூடப்பட்டுள்ள சூரியன் உலகத்துத் தோன்றியதை ஒப்பதாம் உடம்புகள்தோறும் நான் என்னும் மயக்கத்தாலே மூடப்பட்டுள்ள பிரமமும் இவ்விடத்து உண்டாய்நின்றது. மயக்கம்பொருந்திய காயத்தின் நீங்கி அறிவு சூழப்பட்டுப் பிரமம் நானே என்னும் தெளிவு உண்டானபோது முத்தியாய் நிற்கும் பொருளும் தானே ஆம்; என்னின், நின்மலமாகிய பிரமத்துக்கு மலம் கூடுதலும் நீங்குதலும் உளதாம் எனக் கூறும் உன் கூற்று அறிவற்றதாம் என்க. எனவே, பிரமம்தானே மருட்சியால் ஜீவான்மா என்றும், தெருட்சியால் பரப்பிரமம் என்று நின்றது என்பது கூடாதாம்.

16. பரப்பிரமத்துக்குப் புதிதாகச் சுத்தம் உண்டாயதன்று. அநாதியே அது சுத்தமாகவுள்ளது. நீ ஜீவான்மா என்று பிரமத்திலே பேதித்துச் சொல்லப்பட்ட சித்தானது மயக்கமுற்று அசுத்தத்தைப் பொருந்த அதன் பேதமாகிய பரப்பிரமத்துக்கு மலம் உண்டென்று தோற்றுவித்தாய். பேயனே! உடம்போடு கூடிய உயிர் மலமும், கன்மமும், மாயையும்

கூடி அநுபவிக்கும் காரியத்துக்குக் காரணமாகிய முதற்பொருளை அறியாய். அற்றன்று. விறகிலே தீ மறைப்புண்டு நின்று தோன்றிப் பிரகாசித்தாற்போல, காயத்திலே மறைப்புண்டு நிற்கும்பொழுது ஜீவான்மா என்றும், நின்று பிரகாசிக்கும்பொழுது பரப்பிரமமாக நின்று பிரகாசிக்கும் என்றும் கூறினுல் ஓர் நெருப்பு இரண்டாகப்பிரிந்து விறகிலே நிற்பதன்றி வேருெரு பொருளாய்த் தோன்றுமாறுபோல ஜீவான்மாவும் வேருெருமுதல் என்று அறிவாயாக. இதனுனும் மருட்சியால் ஜீவான்மாவுமாய் தெருட்சியால் பரப்பிரமும் ஆம் என்பது அடாது என அறிக.

17. நானே நானுய் அநுபவிப்பன் என்னும் இடத்துப் பெறுவானும் அநுபவிப்பதும் உண்டாய் இரண்டாம். பெறுவானுக என்னிடத்தில் கண்டதில்லை என்னில், பேருகிய நீயும் இல்லையாம். அஞ்ஞானம் கெட்ட இடமே உண்மை என்னில், அந்த மயக்க அறிவு கெட்டுக் கூடு மிடத்து ஆன்ம அறிவு சிறிது உண்டாயிருக்கும். அற்றன்று, அப்படி அறியும் அறி வெல்லாம் மாயை அறிவாம் என்னில், மாயை நீங்கின இடத்தில் தோன்றும் அறிவும் மாயை அறிவு என்னில் அந்தப்பிரமம் மாயை ஆக வேண்டும். ஆகையால், பிரமமும் மாயையாய் அம்மாயையாலே அறிவும் கெடும் என்பதே ஆம் என்றறிக. எனவே, பெறுவான் இன் றியே அநுபவம் உண்டாகாது என்க.

18. வேத முடிவிலே சொல்லப்பட்ட தத்துவ மசி என்னும் மகாவாக்கியத்தையும் அதனுல் தரிசிக்கப் பட்ட பத பதார்த்தங்களையும் நீ அறியாய். காரண

மாகிய கர்த்தாவும் காரியமாகிய ஆன்மாவும் இரண்டு படட்டு நின்றமையும், கண்டு கூடி நிற்கும் அதுவும் அறியாய். ஆகையால், பிரம விஷ்ணுக்களாலும் நாடுதற்கு அரிய கர்த்தாவினுடைய திருவடிகளைப் பொருந்துவதற்குப் பொலிவினையுடைய சிவசாதனங்களையும் பொருந்திக்கொண்டு யோக ஞானங்களை அறிந்து செய்க. எனவே, யோகத்தாலே மனத்தைப் பிரித்து ஞானத்தாலே திருவடியைச் சேர்க என்பதாம்.

---

# 12. (அ) பாற்கரியன் மதம்

1. சுயம்புவாக நிலைபெற்ற வேதம் இத்தன்மையை உடையது என மாயாவாதியோடு மாறுபட்டு நீங்கி, அவன் கூறிய பிரமத்தைப் பேதமாகவும் அபேதமாகவும் நிலை நிறுத்தி, வேதநூலை ஓதியும் அவ்வுண்மையை அறியாமல் உலகத்தில் பாற்கரியன் என்பவன் சொன்ன மதக் கொள்கை இனிச் சொல்லப்படும். பாற்கரியன் ஒரு முனிவன். அவனால் கூறப்பட்டது பரிணும மாயா வாதம்.

2. அறிவாகிய பிரமமே பிரபஞ்ச பேதமாய்த் தோன்றி வளர்ந்து ஆன்மாக்களுமாய் விளங்கும். அத்தன்மையால் சர்வமும் அப்பிரமமேயாம். முத்தியின் பத்தை அடைதற்குரிய ஞானத்தை அவ்வேத வாக்கியங்கள் கூறும். அந்த வாக்கியங்களைச் சொன்னபடியே வைத்துத் தத்துவமசி பதபதார்த்தத்தை விசாரித்தால் அப்பிரமத்துடன் ஆன்மாக்கூடி, ஆன்மத்தன்மை கெட்டு ஒன்றிப் பிரமமாயே போம். எனவே, சத்தே சர்வமும் ஆம் என அறிக.

---

# 12. (ஆ) பாற்கரியன் மதமறுதலை

1. பாற்கரியனே! நீ சொல்லுகின்ற பிரமம் பிரபஞ்சபேதம் ஆகமாட்டாது. ஆகையால், பிரமம் சடப்பொருளை நீங்கி நின்றது. சடப்பொருளும் தானாகவே கூடி நில்லாது. அற்றன்று, உப்பானது நீருடனே கூடி ஒரு தன்மைப் பட்டாற்போல அந்த வஸ்துவும் ஒன்றாய் நின்றது என்னில், நீருடன் கூடிய உப்புப் பேதியாமல் ஏகத்துவமாய் நின்றாற்போல, பிரமமும் ஒன்றாய் நிற்றலன்றி அறியப்படும் பொருளாகிய சடமும் அறிவாகிய ஞானமுமாகப் பேதித்து நிற்குமோ? இப்படிமயங்குவானேன்? மாபூதங்கள் முதலானவையும் நானே ஆவேன் என்று வரும் அறிவுடையவனே! மண்ணினுடைய சாரத்தை நீர் ஏற்றுக்கொண்டு உப்பானது அல்லாமல், சிற்சொரூபம் திரண்டு பரிணமியாது. எனவே, பிரமமே பிரபஞ்சம் என்பது கூடாது.

2. யாவரானும் கருதப்படும் பிரமப் பொருள் சேரப் பிரபஞ்சம் ஆகாது; சிறிது பேதித்துப் பிரபஞ்சமானது என்னில், பிரபஞ்சம் சில காலம் நிலைபெற்று நின்று அழியும். அப்படி அழிந்து மீளவும் மாயையிலே தோன்றி வருதலால் மாயையிலே ஒடுங்கி மாயையிலே தோன்றும். அற்றன்று, ஒடுங்கும் காலத்திலும் பிரமத்திலே ஒடுங்கித் தோன்றும் காலத்திலும் பிரமத்திலே தோன்றும் என்னில், இப்படித் தோன்றி ஒடுங்குவதாகிய பிரபஞ்சம் பிரமத்திலே

பேதமாயின் பிரமமும் அசேதனமாக வேண்டும். ஆகை யால், அகம்பிரமம் என்னும் உன்னுடைய பிரபஞ்சமும் தோன்றுதலும் ஒடுங்குதலும் செய்கையால் மெய் அன்று ஜடப்பொருள் என்று சொல்லுதலே மெய்யாம் என்க.

3. மரம் கெட்ட விடத்து வித்தினின்று மரம் தோன்றினாற் போல, பிரபஞ்சம் அழிந்த விடத்துப் பிரமத்தினின்று பிரபஞ்சம் உண்டாம் என உவமை கூறினாய். அங்ஙனமாயின், அந்தவித்து முன்பு மரத் திலே உள்ளதாய்ப், பின்பு தானே பரிணமிக்கும் காலத்து மரம் தோன்றத் தான் கெட்டுத், தோன்றின தற்குப் பரிணமம் உண்டாய், அந்த மரம் மீளவும் வித்தை உண்டாக்கும். அதுபோல, பிரமமும் பிரபஞ் சத்துக்கு வேறாய் நித்தமாய் நிற்கும் என்ற உரையும் பொய்யாம். பிரமமும் பிரபஞ்சத்தை உண்டாக்கியும், பிரபஞ்சமும் பிரமத்தை உண்டாக்கியும் ஜடத்தின் பகுதியாய்த் தோன்றிக்கெடும் உன்னுடைய பிரமம் அன்றியும், அந்த வித்து மரமாய்த் தோன்றும் பொழுது பூமி தாங்கிநிற்கும்; அதுபோல, உன்னு டையபிரமம் பிரபஞ்சம் ஆகும்பொழுது தாங்கி நிற்பது யாது? பிரமம் ஆனவனே! இப்படி மயங்கிக் கூறின் உன்னைப் பேயன் என்றே அறிஞர் கூறுவர் எனவே, பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றும் என்பது அடாது என்க

4. பொன்னானது ஒரு முதலாக இருந்து சூட கம், கடகம், மோதிரம், சவடு, சங்கிலி, ஆரம், முடி, தோடு, நாண் முதலிய அணிகலங்களாம். அதுபோல,

பிரமமும் பிரபஞ்சபேதம் எல்லாமாகப் பேதித்தும் முதல் கெடாமல் நிற்கும் என்னில், அப்பணிகளைப் போலப் பேதித்து எல்லாம் பிரமமாக நிற்குமாயின் அப்பணிபேதம் செய்தோரையும் அப்பணியணிவோரையும் அப்பணிதானே உண்டாக்கி நிற்கும். அதுபோல, ஒரு முதலைக்கொண்டு உலகத்தை உண்டாக்குவோரையும், அதனை நடத்துவோரையும், சங்கரிப்போரையும் அறியும் தன்மையை உடையதாம். இதனால், பொன்னும்பணியும்போலப் பிரமமும் பிரபஞ்சமாகப் பேதிக்கும் என்பது கூடாதாம் என்க.

5. ஞானக் கிரியைகள் இன்றேல் வீட்டின்பம் பெறலரிது, ஞானம் கிரியை என்னும் இரண்டினும் சென்று அவற்றிற்கு ஆதாரம் ஆகிய பிரமத்தோடு கூடலாம் என்றாய். ஞானக்கிரியைகள் இன்றிப் பிரமத்தைச் சென்று கூடுதலும் இல்லை; ஞானக்கிரியைகள் கெட்டால் பிரமத்தோடு கூடுதற்கு ஒரு முதலும் இல்லையாம். அன்றி, அந்த ஞானக் கிரியைகள் கெடாமல் ஒன்றுவது உள்ளதாயின் எப்பொழுதும் அந்த இன்பத்தை நுகர்வதின்றி உடம்போடு உயிர் அறிவு நீங்கும்படி அவத்தையின் செய்தியைப் பெறக்காரணமென்னை? ஆதலால், ஆன்மா என்று ஒரு பொருள் உண்டு எனவும், அது அறிவும் செயலும் கெட்டுக் கூடவேண்டும் எனவும் அறிவாயாக.

---

# 13. (அ) நிரீச்சுரசாங்கியன்மதம்

---

பிரகிருதி புமான் என்னும் இரண்டில் பிரகிருதியானது மூலம் எனவும், புரியட்டகம் எனவும், விகிர்தி எனவும் மூன்று பெயரையுடையது. பிரகிருதி தூலமாயும், சூக்குமமாயும், பரமாயும் நிற்கும்.. புமான் ஆகிய சுத்தபுருடன் சந்நிதியில் குழந்தை போல அறியாமையைப் பொருத்திப் பிரபஞ்சமும் யோனிபேதங்களும் நான் என விரிந்து நின்ற இடத்துத் தனக்கு விவேகஞானம் வந்து சர்வமும் பிரகிருதிக்குள்ளது தனக்குள்ளது அன்று எனக் காணவே பிரபஞ்ச வியாபாரம் நன்றாக நீங்கும் என்பது நிரீச்சுரசாங்கியன் கொள்கையாம். எனவே, மூலம் என்பது சித்தம். புரியட்டகம் என்பது சத்தாதி ஐந்து மனம் புத்தி அகங்காரம் மூன்று ஆக எட்டாம். விகிர்தி என்பது தூல தேகமும் பிரபஞ்சமும்: ஆங்கார பேதத்தில் தோன்றிய ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும், சத்தாதிகளில் தோன்றிய பூதங்களும்; இருபத்துநான்கு தத்துவங்களும் அதிற்பேதமும் என்க. பிரகிருதி மூன்றுவகையாகப் பேதிக்க அதனைப் புமான் தனதெனக்கொண்டுநிற்பன். இந்தப்பதினாறு கருவிகளோடும் கூடிப் பிரபஞ்சத்தைப் பிரகிருதிக்கு உள்ளது என்று நீங்கப் புமான் எனவும் புருடன் எனவும் வேறற்று நிற்பன்; அதுவே முத்தியாம்.

---

# 13. (ஆ) நிரீச்சுரசாங்கியன் மதமறுதலை

1. ஆன்மபுருடன் சுத்தமாகிய அறிவையுடையனாகில் அவனை அசுத்தமாகிய பிரகிருதி வளையாது. அன்றியும், பெத்தனாய் நின்றவிடத்தினும் இவனைப் பந்தியாது அஞ்ஞானம்; பிரகிருதிக்கு உள்ளதாய் நிற்கும் என்னில், பெத்தம் நீங்கின இடத்திலும் அறியாமல் நின்றான். ஆகையால், பெத்தத்தையுடையவன் ஆவன். பேரறிவாகிய பரையோடு கூடி நின்றும் பொல்லாத பிரகிருதியின் செயலைத் தெரிசித்து நீங்க மாட்டானாயின், அஞ்ஞானம் பிரகிருதிக்கு உள்ளது எனக் காணும் தகுதியுடையன் ஆகான். ஆகலின், பரையுடனே கூடிநின்று பிரகிருதியை நீங்கானாயின் முத்தியடையும் ஆன்மா ஆகான். சுத்தமாய் இருக்கிற பிரமத்துக்கு மூலப்பிரகிருதிகள் உண்டாகா; மூலப் பிரகிருதி கூடுவதும் நீங்குவதும் ஆன்மாவுக்கே என அறிக. எனவே, பரமபுருடன் பிரகிருதிக்குள் அகப்படான் என்க.

2. சுத்த புருடன் என்னும் ஆன்மபுருடன் பிரகிருதியைக் கூடின இடத்துப் பிரகிருதியாலே சிறிது அஞ்ஞான அறிவு உண்டாய்க், குருடன் முதுகிலே முடவன் இருந்து அக்குருடனை நடத்தினாற் போலக் கன்மத்துக்கு ஈடான பிரகிருதியாலே சிறிது அஞ்ஞானம் பெற்ற புருடனைப் பிரகிருதி கூடி அவன்

இடத்தேயிருந்து கன்மத்துக்கு ஈடான தொழிலை நடாத்தும். ஆகையால், பிரகிருதியுடன் கூடி நிற்பவன் ஆன்மாவே, கர்த்தா அன்று. அந்த ஆன்ம புருடனை யும் அவனைக் கூடிநிற்கிற பிரகிருதியையும் கூட்டி, அஞ்ஞானமே தனக்கு உருவமாகக்கொண்டு நடக்கும் படியாக நடாத்துவித்து, ஆன்மாக்கள் செய்த கன்மத் தையும் அறிந்து அதற்குத் தக்க பயனையும் கொடுப்ப வன் மலரகிதனாகிய அரனே என்க. பிரகிருதி அஞ்ஞானமே வடிவம்.

3. ஆன்மபுருடன் தானாய் ஒன்றையும் அறிய மாட்டான். பிரகிருதியும் சடமாம். ஆதலால், இவை காரியப்படுதற்குக் காரணமாகிய கர்த்தா ஒருவன் உளன் எனக் குறிக்கொள்வாயாக. நீ முத்தி என்று சொல்லியது பந்தம் நமக்குள்ளதல்ல என்று அறியும் விவேக ஞானமே என்னில், எல்லாவற்றையும் அறியுமிடத்துப் பாசஞானமும், பசுஞானமும் கூடியே அறியவேண்டும். ஆகையால், பாசபந்தம் நீங்காது. அந்தப்பாசம் நீங்கு மிடத்து அதனை முன்பு கூட்டினேனே நீக்கவேண்டும். அது கர்த்தாவின் கருணையினாலேயே நீங்கும். அது நீங்கும்படி நின்மலனாகிய கர்த்தா அருளிச்செய்த சிவாகமநெறிப்படி சரியை கிரியா யோக ஞானங்களாகிய வழிகளிலே நின்று தொண்டுசெய்து நீ கர்த்தாவினாலே உன் பாசபந்தத்தை நீக்கிக்கொள்வாயாக. எனவே, புருடனையும் பிரகிருதியையும் நடத்துவோன் ஒருவன் உளன் எனவும், அப்படி நடத்துவோனை வழிபடுவதே முத்தி எனவும் அறிக என்க.

---

# 14. (அ) பாஞ்சராத்திரி மதம்

1. விஷ்ணுமூர்த்தியானவர் ஆதிபூதனாய், அரூபியாய், எவ்விடத்தும் நிறைந்து நிற்பவராய், ஞான சொரூபியாய் நிற்பவர். அவர் ஆன்மாக்களைக் காத்தருளவேண்டித் தமது இச்சையால் மீன், ஆமை, பன்றி, சிங்கம், வாமனர், பரசுராமர், தசரதராமர், பலராமர், கிருஷ்ணர் என்னும் திருமேனிகளைக்கொண்டும், கருணையால் திருப்பாற்கடலிலே யோகநித்திரை செய்தருளியும், அநாதியாகிய வேதத்தையும் அருளிச் செய்தார். ஆகலின், விஷ்ணுமூர்த்தியே கர்த்தா என்க.

2. ஸ்ரீவைகுண்டத்திலே இருக்கும் பரமபுருஷன் தன் திருவுந்தித்தாமரையினின்று பிரமதேவரை உண்டாக்கி, அவரால் பிரபஞ்சத்தைப் படைக்கச்செய்தார். அழகுறப்படைத்த அந்தப் பிரபஞ்சத்தைச் சங்கரித்தற் பொருட்டுப் பிரமாவினிடத்திலிருந்து உருத்திரனை உண்டாக்கி, அவரைக்கொண்டு சங்கரிக்கச்செய்தார். தன்னால் உண்டாக்கப்பட்ட பிரபஞ்சத்துக்குக் காத்தற் கடவுளும் தானே ஆயினர். இப்படிப் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்பவர் பரமபுருஷோத்தமனாகிய விஷ்ணுமூர்த்தியே ஆவார். உருத்திரரைத் தோற்றுவித்தது பிரமன் முகத்தில் என்க.

3. பிரபஞ்சத்தைக் காத்தற்பொருட்டு மீனாகியும் ஆமையாகியும், பன்றியாகியும், நாரசிங்கமாகியும்,

வாமனன் ஆகியும், வெற்றியுடைய பரசுராமன், தசரத ராமன், பலராமன் ஆகியும், கிருஷ்ணனுகியும் வடிவங் கொண்டு பாதுகாத்தனன். மேலே கற்கியாகியும் வந்து காப்பான். இப்படிப் பத்து அவதாரங்களை யெடுத்தும் முத்திதேவன் தேவர்கட்குக் கர்த்தாவாக வும் விளங்குவான்.

4. முற்கூறிய பத்தவதாரங்களிலும் முறையே மாயன் மச்ச வடிவாய் ஏழ் கடல்களையும் ஓர் செலுவில் அடக்கினன். பாற்கடல் கடைந்தபோது கூர்ம வடிவாய் மகாமேருகிரியை முதுகிலே தாங்கினன். பிரளய காலத்தில் தாழ்ந்துபோன பூமியை வராக வடிவாய்ப் புகுந்தெடுத்தான். நாரசிங்கரூபமாய் இரணியனை வதைத்தான். வாமன வடிவாய் மூவடி மண்ணிரந்து திருவிக்கிரமனுய் மூவுலகும் அளந்தான். பரசுராமனுய் அரசகுலத்தை இருபத்தொரு தலைமுறை வேரறுத் தான். இராமனுய் இராவணனைக் கொன்றான். பலபத் திரனுய் வாசுதேவனுய் அசுரர் மாயை பாழ்படச் சிதறிப் பிரபஞ்சத்தைக் காத்தான். இனிவரும் பிரள யத்தில் பெட்டைக்குதிரை வடிவாய் உலகத்தைப் பாது காக்கும் என்க.

5. பொய்கையினிடத்து முதலை வாயிலகப்பட்ட யானை விடுவித்துக்கொண்டு கரையேறமாட்டாமல் சுவாமியே! கர்த்தாவே!! ஆதிமூலமே!!! என நொந்து அலறி அழைப்ப அப்பரமபுருடன் கருணையுடன் ஓடி வந்து முதலை வாயினின்றும் யானையை விடுவித்து அவ் விரண்டனுக்கும் வைகுந்தபதமளித்தருளினன். எனவே, ஆதிமூலமே பரமபுருஷன் என்க.

6. தேவர்கள் அழியாதிருக்கவேண்டி மாமேரு மத்தாகவும், வாசுகிநாணாகவும் கொண்டு அமுதமதனம் செய்து கடலினின்று அமுதமெடுத்துத் தந்தருளியும், உலகத்திலே கொடிய அசுரர்களைக் கெடுத்து தேவர் முதலிய நல்லோரை வாழ்வித்தருளியும், எல்லாக் கலைகளையும் கருணையால் அடியார்கட்கு அருளியும், இப்படிக் கர்த்திருத்துவம் குன்றாமல் நிற்பன் பரமபுருடனாகிய விஷ்ணுமூர்த்தி என்க.

7. பரமபுருஷனாகிய திருமால் பிரபஞ்சசிருஷ்டி காலத்தில் மாயாசொரூபியுமாய், தன்வழி மயக்கும் ஆன்மாக்களுமாய், அவ்வான்மாக்களைப் பந்திக்கும் தத்துவக்கூட்டங்களும் தானேயாய் நிலைபெற்று, அம்மாயையாலே ஆன்மாக்களைப் பந்தித்து மீளவும் நீக்குவன். ஆகையால், அம்மாயனையன்றி மாயை நீங்காது என ஆராய்ந்தறிந்து கற்புடைய மடந்தையர் கணவனையன்றிக் கைதொழாமை போல, மற்றொரு தெய்வத்தை நினையாமல் பரமபுருடனையே வணங்கி வழிபாடுசெய்ய அந்தப் பந்தமாகிய மாயை நீங்கும். அம்மாயை நீங்கவே பரமபுருடன் விரசையாற்று நன்னீரால் ஆன்மாவைச் சுத்தமாக்கி வைகுந்தபதத்திலே சாரூபத்தைத் தந்தருளுவன் என்க.

---

# 14. (ஆ) பாஞ்சராத்திரிமதமறுதலை

1. பாஞ்சராத்திரியே ! நீ உன் கர்த்தாவை ஆதி என்று கூறினாய். ஆதியாயின் ஆதிக்கு அந்தமும் உண்டாம், கர்த்தாவும் அல்லன். அஃது யாங்ஙனம் ? என்னில், ஆதியும் அந்தமும் இல்லாதவனே கர்த்தா என்று வேதம் கூறும். ஞானப்பிழம்பாயும், அருவமாயும், பரிபூரணமாயும் உளனாயின் அவன் மாயையின் கட்பட்டு மாயாரூபம் ஆகான். அற்றன்று, அப்படிக் கொண்ட வடிவங்களும் குற்றமில்லாத ஞானசொரூபமே என்னில், அவன் ஞானவடிவினன் ஆயின் ஞான வடிவுக்குத் தாதுகள் உளவாகா. உன் கர்த்தா எடுத்துக்கொண்ட வடிவங்களெல்லாம் தாதுக்கள் உண்டாய் சங்காரப்படுதல் கேட்கப்படுதலின் அவன் கர்த்தா ஆகான் என்க

2. அவனுக்குத் தாதுக்கள் உண்டானவாறு எவ்வாறு ? என்னில், ஒருகாலத்து விஷ்ணுமூர்த்தியின் அகந்தையை மாற்ற எண்ணிப் பிச்சைப்பாத்திரம் கொண்டு பிச்சையேற்றருளினர் பரமேசுவரன். பல இடங்களில் பலியேற்றும் பாத்திரம் நிறையவில்லை. அப்போது புருஷோத்தமன் அகந்தையால் இதனை நிறைப்பேன் எனத் துணிந்தான், நெற்றியின் நரம்பைத் திறந்துவிட்டான், இரத்தம் பெருகியது, விஷ்ணு மூர்ச்சித்து வீழ்ந்தான். பிரமன் முதலியோர் துதித்து வேண்டினர். பரமேசுவரன் அருள்செய்து எழுப்பத் திருமால் எழுந்து பின்னே நடந்து சென்றான். இது வரலாறு : (409–பக்கம் காண்க.)

3. புருஷோத்தமன் தன் இச்சையால் உருவங் கொண்டான் என்னில், பார்வதிதேவியாரை இகழ்ந்து தக்கன் வேள்வி செய்ய அங்கே எக்ஞமூர்த்தியாய்த் திருமால் அவிகொள்ள இருந்தான். அப்போது வீரபத்திரக்கடவுள் அச்சமுண்டாம்படி அவன் தலையை அறுத்தான். தலையை இழந்தபொழுது அதனை மீட்டும் உண்டாக்கிக்கொள்ள மாட்டாதவனாயினான். பின்பு பத்தியால் தேவர்கள் துதிக்க மீளவும் பரமேசுவரனே நாரணனுக்குத் தலையை அருளினான். எனவே, அவன் சுவேச்சையால் உருக்கொள்வானல்லன்.

4. புருஷோத்தமன் வேதத்தை அருளிச் செய்தான், அவ்வேதநூலால் ஆராயப்படும் பொருள்களையும் அருளிச்செய்தான் என்றாய். வேதவொழுங்கும், உலக இயலும் தெரியாமல் தலைமயங்கிக் கிடந்த பொழுது பிரபஞ்சத்துள்ளோர் அவற்றை அறிந்து உய்ய ஆலின் கீழ்க் குருவடிவாய்த் தென்திசை நோக்கியிருந்து வேதநூலை அருளிச் செய்தான், அதன் பொருள் தெளியுமாறு ஆகமங்களையும் அருளினான். ஆதலால், வேதாகமங்கள் பரமேசுவரனால் அருளிச் செய்யப்பட்டன என அறிக.

5. புருஷோத்தமன் பிரமனைப் படைத்தான் என்றாய். அங்ஙனமாயின், அஞ்சுமுகமுடையேம் பரமேசுவரனோடு யாமும் ஒப்பேம் எனப் பிரமன் கருவம் கொண்டான். பிரமன் நடுத்தலையைப் பரமேசுவரன் அறுத்தான். அதனைக் கண்டு நின்றான் பிதாவாகிய திருமால். அத்தலையை மீட்டும் உண்டாக்கமாட்டான்

ஆயினன் அவன். பிரமன் தலையைக் கிள்ளிப்போட்ட பரமேசுவரன் கர்த்தனல்லனாய், தலை இழந்து நின்ற சதுர்முகக்கடவுள் பரமேசுவரனைப் படைத்தான் எனல் தவறேயன்றோ? ஆதலால், எல்லாம் பரமேசுவரன் செயலே என விசாரித்து மயங்காமல் உண்மை அறிவாயாக.

6. ஆன்மாக்கள் பிறப்பது போலப் பிறக்குந் தொழிலையுடைய புருஷோத்தமனைப் பிரபஞ்சத்தைக் காத்தற்பொருட்டுச் சுவேச்சையால் உருக்கொண்டான் எனவும், அவனிடத்துப் பிரமன் தோன்றிப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தான் எனவும் கூறுவீர். சர்வ சங்காரம் செய்த பின்பு பரமேசுவரன் பிரமன் முதலிய காரணேசுவரரைத் தோற்றுவித்தான். பிரபஞ்சத்தைப் படைக்கப் பிரமனுக்குக் கட்டளையிட்டான். பிரமன் பிரபஞ்சத்தைப் படைக்க மாட்டாமல் மயங்கினன். பரமேசுவரனைத் துதித்து வணங்கித் தியானித்தான். பரமேசுவரன் பஞ்சகிருத்தியத்தை நடப்பிக்கக் கருதித் தியானத்தானமாகிய இலாடத்தானத்தே தோன்றிச் சிருட்டி செய்யப் பிரமனைப் பணித்தான். இதனை எல்லாப்புராணங்களும் கூறும். ஆதலால், பரமேசுவரன் பிரமனாலே தோற்றுவிக்கப்பட்டவன் அல்லன்.

7. நாரணன் பிரமனை உண்டாக்கியும், பிரமன் நாரணனை உண்டாக்கியும், ஒருவருக்கொருவர் காரணமாய்க் காரியப்படுவர். அப்படி ஒருவருக்கொருவர் காரியப்பட்டு வருதற்கு முதற்காரணம் யானையை உரித்துப் போர்த்த பரமேசுவரனே ஆவான் என வேதம்

தெளியச் சொல்லும். பரமேசுவரனே காரணன் ஆக லின் விஷ்ணு வலப்பக்கமும் பிரமன் இடப்பக்கமும் ஆக அநாதியே அடங்குவார் என்க. எனவே, பரமேசு வரன் காரணமாகப் பிரமவிஷ்ணுக்கள் காரியப்படுவர் என அறிக.

8. சங்கரிக்கும் தொழில் புருஷோத்தமன் ஆணையே என்றாய். அப்படியாயின், சர்வசங்கார காலத்துப் பிரமவிஷ்ணுக்கள் முதலியோர் சங்காரப்பட அந்தச் சங்காரம் தன்னிடத்து வாராமல் நீக்கிக்கொள்ள மாட்டான். அஃதன்றியும், பிரமவிஷ்ணுக்களைச் சங் கரித்த அவதாரங்களில் மீன், சேல், பன்றிக்கோடு, சிங்கப்பல், ஆமையோடு, கொக்கிறகு, அன்னத்தூவி முதலியவற்றை அறிகுறியாக அணிந்துகொண்டமையின் தானே கர்த்தாவாய்ச் சங்கரித்ததேயன்றிப் பரமேசு வரன் புருஷோத்தமன் ஆணையால் சங்கரித்தானல்லன். ஆதலால், சங்காரமும் விஷ்ணுவின் ஆணையே என்ற சொல்லும் அழிந்தது. சங்கரித்தலும் பரமேசுவரனே ஆகலின் சிருட்டி திதிகளும் அவன் ஆணையேயாம் என அறிக.

9. ஆகாயம் முதல் பிருதிவி ஈறாகக் கிடந்த பிரபஞ்சமெல்லாம் புருஷோத்தமனே காப்பான் என் றாய். சலந்தரன்என்னும் அசுரனுக்கு விஷ்ணு பயந்து பரமேசுவரனை நோக்கித் தவஞ்செய்யத் தவஞ்செய்யும் விஷ்ணுவின் தவத்தையும் கெடுக்குமாறு வந்த சலந்த ரனைச் சக்கரத்தால் பரமேசுவரன் பிளந்தான். அந்தச் சக்கரத்தைப் பெறவேண்டிப் பரமேசுவரனை நெடுமால்

நெடுங்காலம் அருச்சித்தான். அநுக்கிரகம் செய்யாமையால் விஷ்ணு தன் கண் மலரை இடந்து மலராக அரனை அருச்சித்தான். பரமேசுவரன்மாட்டுச் சக்கரத்தைப்பெற்றான் மால். அச்சக்கரப்படையால் மாலி, சுமாலி, மாலியவான் முதலிய அரக்கர்களை வென்று பிரபஞ்சத்தைக் காத்தான் திருமால் என்னும் புராணம் பிரமனால் சொல்லப்பட்டு உலகெங்கும் பரந்தது. ஆகையால், பிரபஞ்சத்தைத் திருமால் காப்பது பரமேசுவரன் ஆணையேயாம் என்க.

10. பிரளய காலத்திலே பிரபஞ்சத்தைக் காத்தருள வேண்டித் திருமால் மச்சவடிவுகொண்டு ஏழ் கடலையும் ஒருசெலுவிலே அடக்கினான். அகங்காரம் கொண்ட மால் சங்காரகர்த்தாவும் நானே என்றான். பரமேசுவரன் விஷ்ணுவின் அகங்காரத்தை அடக்க வேண்டி அம்மச்சத்தைப் பிடித்துச் செலுவினையும் கண்ணினையும் பறித்துத் தமது சூலாயுதத்தின் மேலே அணியாக அணிந்தருளினான்.

11. ஒருகாலத்துப் பிரளயம் வந்தபோது பிரபஞ்சத்துக்கு ஆதாரமாகிய மாமேருமலை சலித்தது. புருஷோத்தமன் கூர்மரூபமாய் மாமேருவைத்தாங்கி ஆதார நிலைபோற் கிடந்தான். அதனால், பிரபஞ்சத்துக்கு ஆதாரமும் கர்த்தாவும் நாமே என்று அகங்காரம் கொண்டு உலகத்தை அலைத்தான். விஷ்ணுவின் கர்வத்தைக்கண்டு பரமேசுவரன் ஆமையைத்தகர்த்து அதன் ஓட்டை எலும்பு மாலையோடு அணிந்தருளினார்.

12. ஒரு பிரளயத்திலே விஷ்ணுமூர்த்தி வராக அவதாரம் கொண்டு ஏழுலகங்களையும் கீண்டு பெரிய கொம்பினுல் ஏற்று நின்று பாதுகாத்தான். அதனுல் உலகத்துள்ளோர் அவனை வணங்கி வழிபட்டனர். அகங்காரத்தால், மிகவும் துன்புறுத்தினுன். பரமேசுவரன் அப்பன்றிக் கோட்டைப்பறித்து அணியாக அணிந்து கொண்டு அவ்வகங்காரத்தைப் போக்கி யருளினுன்.

13. ஒருகாலத்திலே இரணியன் என்னும் அசுரன் ஒரு தூணைத் தட்டிக் காட்டி இங்கே உங்கள் புருஷோத்தமன் உளனே? என்றுன். தாமோதரனுகிய புருஷோத்தமன் அத்தூணிலே நாரசிங்க வடிவாய்த் தோன்றி அவன் உரத்தை நகத்தாற்கிழித்து அகங்கரித்தான். அவ்விடத்துப்பரமேசுவரன் சரபவடிவாய் நாரசிங்கத்தை எளிதாய்த்தூக்கிச் சங்கரித்துத் தோலைத் தரித்தருளினுன்.

14. ஒரு காலத்திலே புருஷோத்தமன் வாமன வடிவங்கொண்டு சென்று மாவலிபால் மூவடிமண் இரந்தான்: பூமி அந்தரசுவர்க்கங்களை ஈரடியால் அளந்து மற்றை அடிக்கு இடமில்லை என மாவலியைச் சிறையிட்டான். ஒருவர் ஒன்றனைத்தானம்செய்தால் அதனை ஏற்றுக்கொண்டவர் அவருக்கு நன்மை செய்தலே மரபு, தீமை செய்தல் தக்கதன்று. ஆகலின், அவன் கர்த்தா ஆகமாட்டான் என்க.

15. இராமாவதார காலத்திலே பிராட்டியுடன் வனத்தில் சஞ்சரிக்கும்போது இராவணன் பிராட்டியை

அபகரிக்கக் கருதினன். மாயமானை ஏவினன். அதனை மாயமான் என அறியாமல் மனைவி சொல்லால் பிடித்துத் தர அம்மானின் பின்னே சென்றான். இராமன் பிரிந்த சமயம் பார்த்து இராவணன் பிராட்டியைத் தூக்கிக் கொண்டு இலங்கை சென்றான். மாயமானென அறியாமல் மனைவியைப்பிடி கொடுத்த உங்கள் இராமபிரானை மாயைக்குக் கர்த்தா எனக் கூறுவாய். பிராட்டி நீங்குகையால் மயக்கம் கொண்ட இராமன் பின்பு இலங்கைக்குச் சென்று இராவணனை அவன் சேனையுடன் கொன்று பிராட்டியை மீட்டான். பின்பு கொலைப்பாவம் நீங்கச் சேதுவிலே பரமேசுவரனைப் பதிட்டை செய்து பூசித்துப் பாவம் நீங்கப் பெற்றான். ஆகலின், அவனைக் கர்த்தா என்றல் அடாது.

16. ஒரு காலத்திலே விஷ்ணு மழு என்னும் ஆயுதத்துடன் பிறந்து பரசுராமன் என்னும் பெயரையுடையனாய்ச் சிவபத்தனானன். மழுவைக் கொண்டு அரச குலத்தை வேரறுத்தான். அந்தக் குருதியிலே மூழ்கினன். அந்த அரந்தை கெடப் பரமேசுவரனைக் குறித்து அருந்தவஞ் செய்தான். அப்பரசுராமனும், உலகம் போற்றும் பலராமனும், மற்றும் உள்ள தேவரும் ஞானிகள் யாவரும் வணங்கிப் போற்றத்தக்க உமைகேள்வனாகிய பரமேசுவரனை நினைந்து யோகு செய்தே அரசு புரிந்தான்.

17. புருஷோத்தமன் வாசுதேவராய்த் துவாரகாபுரியில் இருந்தனர். வியாக்கிரபாத முனிவருடைய குமாரராகிய உபமன்னியு முனிவர் கயிலாயத்துக்கு

எழுந்தருளினர். அவரை வாசுதேவர் கண்டார், எங்கே எழுந்தருளுவது என்றார், அவர் நாம் கயிலாயத்துக்குப் போகிறோம் என்றருளினர். வாசுதேவர் அவரைப் பார்த்துக் கயிலாயத்துக்குச் செல்லாமல் இங்கே கண்டிருக்க அருள் செய்யவேண்டும் என்று வணங்கினர். உபமன்னியு முனிவரும் வாசுதேவரை ஞான நோக்கால் அநுக்கிரகித்து தீட்சை செய்து, சிவஹஸ்தம் சிரத்திலே சேர்த்தித் தெரிசிப்பித்து, அவரைச் சிவபத்தராக்கினர். வாசுதேவரும் ஞான பூரணராய்த் தன் உடல் பொருள் ஆவி முதலியவற்றைத் தத்தம் செய்துகொடுத்தார்: சிவபத்தராய்ச் சிறந்திருந்தார். ஆதலால் வாசுதேவர் கர்த்தா அல்லர் என்க.

18. அந்தவிஷ்ணுமூர்த்தி வருகிற யுகத்தில் குதிரையாக வந்தருளுவன் என்றாய், அப்படிவந்தால் பரமேசுவரனால் அக்குதிரைக்கு யாதுவரும் என அறிகிலோம். முன்புள்ள அவதாரங்களில் எல்லாம் உண்டானமையைக்கேட்டறிந்தாய். யாம் மேலே கூறிய செயல்களால் கொன்றை மலர்மாலையை அணிந்த பரமேசுவரன் கீர்த்தியே எங்கும் விளங்கின்மை காண் என்க.

19. ஒருயானை மடுவிலே முதலைவாயில் அகப்பட்டு மூலமே! என அழைத்தது. மால் அந்தயானையின் முன் ஓடிச்சென்று இடரைக் கெடுத்தான். ஆதலால், வரையை எடுத்து ஆனிரையைக் காத்தருளிய விஷ்ணுமூர்த்தி கர்த்தா ஆதல் கூடுமோ? அவன் கர்த்தா அல்லன். எங்ஙனம்? என்னில், அரசனை நோக்கி ஒருவன் முறையோ! என அழைத்தான். அம்முறை

கேட்பான் அரசனே? சொல்லாய். பரமேசுவரன் ஆணையால் பிரபஞ்சத்தைக் காத்தல் செய்யும் விஷ்ணு ஓர் ஆன்மாவுக்கு இடர் வந்தால் அவ்விடரை ஒழிக்குமாறு எப்படி? அரசன் ஆணையினால் நின்று ஊரைக் காக்கும் காவற்காரன் ஒருவர்க்குத் தீமை வந்தால் அதனைத்தானே சென்று தீர்ப்பது போலாம். ஆகலின், ஆதிமூலமே! என்று யானை அழைத்தது பரமேசுவரனை நோக்கியே என அறிக.

20 அன்றியும், அந்த யானை விஷ்ணுவுக்கு அடிமைபூண்டது. ஆதலின், தன் கர்த்தாவை அது மூலமே! எனக் கூப்பிட்டது. அதனாலேயே விஷ்ணுவை மூலமாகிய கர்த்தா என்று கொள்ளலாமோ? உன் அடிமை உன்னை எம்பெருமான்! என்றான். ஆகையால், நீ இப்போது வணங்கும் உன்னுடைய புருஷோத்தமன் ஆயிடுவையோ? அவன் நீ அன்றே! ஆதலால், யாவருக்கும் மூலம் என்பது பரமேசுவரனே என அறிவாயாக.

21. மண்ணுண்ட மாலினாலே தேவர்கள் அமுதத்தை உண்டனர் என்றாய். பாற்கடலைக் கடைய ஆலகாலம் தோன்றியது. அதன் கொடுமையை ஆற்றாமல் விஷ்ணு முதலிய தேவரெல்லாரும் ஓடிவந்து எங்களுக்கு அகாலமரணம் உண்டாயிருக்கிறது. எங்களை இவ்வாபத்தினின்று காத்தருளவேண்டும் கர்த்தாவே! என வேண்டினர். கருணைகொண்ட பரமேசுவரன் அந்த நஞ்சை அமுது செய்திலனாயின் விஷ்ணு முதலிய தேவர்கள் பிழைத்துப் பின்பு அமுதையுண்டாக்கி உண்பது எவ்வாறு? ஆகலின், பரமேசுவரனே கர்த்தா என்க.

22. சூரபன்மனுக்கு அஞ்சி விஷ்ணுமூர்த்தி பரமேசுவரன்பால் முறையிட்டனர். அவர் சுப்பிர மணியக்கடவுளை உண்டாக்கிச் சூரபன்மாவைச் சங்கரிப் பித்தனர். விஷ்ணு முதலியோர் தாரகனுக்கு அஞ்சிப் போய்ப் பரமேசுவரனிடத்து முறையிட்டனர். அப் போது காளி என்னும் சத்தியைக்கொண்டு தாரகன் உடலைச் சங்கரிப்பித்தருளினர். திரிபுர அசுரருக்குப் பயந்து விஷ்ணு முதலிய தேவர்கள் பரமேசுவரன்பால் முறையிட்டனர். அவர் திரிபுரம் சாம்பராகச் சுட் டெரித்தார்.

23. அருச்சுனன் போர் செய்யத் தேரில் ஏறி ஞன். பகைவரைப் பார்த்தன் பார்த்தான். இங்கே காணப்படும் பகைவர்யாவரும் என் உறவினரும் நட்பின ரும் ஆயினரே! இவரையெல்லாம் கொன்று நான் அரசு புரியேன் என்றான். பார்த்தசாரதியாகிய கண்ண பிரான் அவன் மனந்தெளிந்து பகைவரைக் கொல்லு மாறு 'சர்வமும் நாமே கொல்லுவோம், நீ அன்று' என்று மயங்கச்சொன்ன சொல்லையே ஒரு நூலாக்கிக் கொண்டாய். ஆகலின், விஷ்ணுமூர்த்தி புத்த முனிவ ஞக இருந்து 'தெய்வம் ஒன்றில்லை' என மயக்கிப் போதித்துச் சிவலிங்கத்தைக் கைவிடுமாறு மயக்கிப் பேதித்த சொல்லையும் நீ ஒரு நூலாக்கிக்கொள்வாயாக. எனவே, திரிபுரத்து அசுரரைச் சிவபத்தி குலைத்தும், தேரிலிருந்த அருச்சுனனை மயக்குரையால் பேதித்தும் வென்றது கர்த்தாவுக்கு இயல்பன்று என்க. இதனால், கண்ணபிரான் ஞானநூல் செய்தான் எனவும், கிருஷ்ணனே கர்த்தா எனவும் கூறுவது பொருந்துவ தன்று என்க.

24. மாயை சடம் ஆகையால் ஆன்மாக்கள் ஆகாது. ஆன்மாக்கள் இச்சா ஞானக்கிரியைகளையுடையன ஆகையால் சடமாகிய மாயை ஆகா. புருஷோத்தமன் ஞானவடிவினன் என நீ கூறுகையால் சடமாகிய மாயையும், சுத்தனாகிய ஆன்மாவும் ஆகி நில்லான். மாயையும் ஆன்மாவும் கூடிப் புருஷோத்தமன் ஆகா. ஆகலின், மாயையாகிய பாசமும் ஆன்மாவாகிய பசுவும் இவற்றை நடத்துவோனாகிய பதியும் அநாதியே உள்ளன. எனவே, நின்மலனாகிய கர்த்தா சம்பூரணன் ஆகலின் எல்லாமும் தானாகித் தோன்றுவன். அல்லாமல் சடமும் ஆன்மாவுமாகப் பிரிந்து நில்லான் என்க. சித்து அசித்தாகாது, அசித்துச் சித்தாகாது. சித்தில் சேட்டிதனே கர்த்தா, மாயோன் ஆன்ம வர்க்கமே என்க. இதனால், புருஷோத்தமன் மாயையாயும், மாயைக்குக் கர்த்தாவாயும் நிற்பன் என்பது கூடாதாம்.

25. பாசமாகிய அஞ்ஞானத்தைப் பசுவாகிய ஆன்மாக்கள் கைவிட்டுப் பதியாகிய கர்த்தாவைக் கூடுதலே முத்தி என ஆகமங்கள் கூறுகின்றன. இங்கே மாலாகிய புருஷோத்தமன் அஞ்ஞானமுமாய், அஞ்ஞானத்தோடு கூடிய ஆன்மாவுமாய் நிற்பன்என ஆராய்ச்சியறிவின்றிக் கூறுகின்றாய். வேதாகமங்களுக்குப் பொருந்தாத மயக்கநூல் உனக்கே ஆகட்டும். இதனை அறிவுடையோர் நூல் எனக்கொண்டு பின்பு பொருளாராயப் பெரிதும் நாணுவர். எனவே, பதி பசு பாசமும் தானேயாகி நிற்பன் புருஷோத்தமன் என்பது கூடாதாம்.

26. ஒருகாலத்துப் பிரமனும் மாலும் தங்களுள் மாறுபட்டனர். படைத்தல் தொழில் செய்யும் நானே கர்த்தா என்றான் பிரமதேவன். காத்தல் தொழில் செய்யும் நானே கர்த்தா என்றான் விஷ்ணுமூர்த்தி. அவ்விருவரும் மாறுபடாமல் அவர் அகந்தையை மாற்றத் திருவுளம்பற்றினார் பரமேசுவரன். உங்களில் நமது அடிமுடிகளை அறிந்தோனே கர்த்தா என அருளி ஒரு தழற்பிழம்பாய் அவ்விருவர்முன் நின்றார். பிரமா அன்ன வடிவாய் முடிதேடிச் சென்றான், திருமால் பன்றி வடிவாய் அடிதேடிச்சென்றான். இருவரும் அடிமுடி காணாமல் அலமந்தனர். அந்த ஞானப் பிழம்பின் திருவுரு இன்னபடி என்று அறியாராயினர். ஆகலின், சக்கரப்படையைஏந்தினவிஷ்ணுமூர்த்தியைக் கர்த்தா எனச் சொல்லுவது நீ எந்த ஏதுவினாலே? என்று கூறுக. எனவே, புருஷோத்தமன் பன்றியாய் இடந்தும், பிரமன் அன்னமாய்ப் பறந்தும் காண்டற் கரிய பரமேசுவரனே கர்த்தா என அறிவாயாக.

27. புருஷோத்தமனுக்கும் சிவபத்தனாகிய ததீசி முனிவனுக்கும் ஒரு காரணத்தால் போர் மூண்டது. அப்போது ததீசி முனிவன் புருஷோத்தமனைப்பிடித்து, மார்பில் உதைத்து, சக்கரத்தைப் பறித்து முறித்து அவன் வயிற்றிலேயே வைத்தான். பின்பு ஒரு தருப் பையை எடுத்துப் படையாக்கிப் புருஷோத்தமன் மயங்கி வீழ அம்முனிவன் எறிந்தான். ஆதலால், புருஷோத்தமன் கர்த்தா அல்லன் என்க.

28. சூலபாணியே கர்த்தா, விஷ்ணு கர்த்தா அல்லன். சூலபாணியை வழிபடும் துருவாச முனிவர்

ஒரு காரணமாக விஷ்ணுவைக் கோபித்து அவர் மார்பில் உதைத்தார். அவர் பாதம்பட்ட தழும்பினாலே விஷ்ணுமூர்த்தி திருமறுமார்பன் என்னும் பெயரைப் பெற்றார். அச்சிவமுனிவன் பாதம் பட்ட இடம் பரிசுத்தமானதெனக்கொண்டே விருப்பத்துடன் திருமகளை மார்பில் வைத்தருளினான் புருஷோத்தமன். ஆகையால், விஷ்ணு மலசம்பந்தி; கர்த்தா அல்லன் என அறிவாயாக.

29. சிவபத்தரான பிருகு முனிவருடைய பத்தினி திவ்வியை என்பவளிடம் விஷ்ணு ஆசைப்பட்டார், இருடி இல்லாத காலத்தில் அவளைக் கிரீடிக்கச் சென்றார், அவள் உடன்பட்டிலள். விஷ்ணு கோபங்கொண்டு தமது சக்கரப்படையால் அவள் உடம்பெங்கும் குறிகளை இட்டுப்போனார். பின்பு பிருகு முனிவர் வந்து அறிந்தார். 'சிவனையல்லது வேறு கடவுள் இல்லை என்னும் சிவபத்தன் மெய்யேயாகில் இது செய்தவன் பத்துப்பிறப்புப் பிறக்கக்கடவன்' எனச் சபித்தார். புருஷோத்தமனும் பயப்பட்டுத் துக்கித்து வீழ்ந்தார்.

30. பின்பு தெளிந்து பரமேசுவரனை நோக்கித் தவசுபண்ணினார். பரமேசுவரன் காட்சிதந்து அஞ்சாதே! உனக்கு வேண்டியது யாது? என்றார். புருஷோத்தமன் பிருகுசாபத்தைத் தீர்த்தருளவேண்டும் என விண்ணப்பித்தார். பிருகு முனிவன் என்னுடைய பத்தன் என்றார் பரமேசுவரன். ஆனால், அம்முனிவன் சாபத்தால் எடுக்கும் பிறப்புத்தோறும் என்னைக்காத்தருளவேண்டும் எனமீண்டும்வேண்டினார்.

பரமேசுவரனும் அப்படியே பாதுகாப்போம் என்றருள் செய்தார்.

31. இப்படிப் பிருகு முனிவர் சாபத்தால் ஒன்பது பிறப்புக்கள் பிறந்து சரீர வருத்தமுற்றார் விஷ்ணுமூர்த்தி. மேலும் குதிரையாகப் பிறந்தருளு வார். இங்ஙனம் இறப்புப் பிறப்புக்களில் பட்டுழல் வோன் மலரகிதனாகிய கர்த்தா அல்லன். வேதாகம புராணப் பிரமாணத்தாலும் விஷ்ணு மோக்ஷகர்த்தா அல்லன் எனச் சொன்னேன். மோக்ஷகர்த்தா யாவன்? என்னில், நீலகண்டனாகிய மேலானவனே கர்த்தா, அவனுடைய தாமரை மலர்போன்ற சீபாதத்தைச் சரியை கிரியா யோக ஞானத்தாலே வணங்கிப் போற்றி நின்பிறப்பைப் போக்கிக்கொள்வாயாக.

---

சிவஞானசித்தியார் பரபக்கம் உரைநடை

முற்றிற்று.

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருத்துறையூர் — ஸ்ரீ அருணந்திதேவநாயனர்
அருளிச்செய்த

# சிவஞான சித்தியார் பரபக்கம்

மூலமும்

— ஸ்ரீ தத்துவப்பிரகாசர் உரையும்



*விநாயகர் காப்பு*

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்தன்
நால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
தருமொருவா ரணத்தின் றாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
இரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யுந் தேவே.

என்பது: *கங்கையாறும், கோணுதலைத்தரும் அழகிய பிறையும், கொன்றைமாலையும் உடைத்தாய்த் தாழ்ந்த சடையினையுடைய பரமேசுவரன் பிள்ளையாகத் தந்ததேவன்; ஒருகொம்பையும், இரண்டு செவியையும், மூன்று மதத்தையும், நான்ற வாயையும், ஐந்து கரத்தை*

யும் உடையோனாகிய ஒப்பற்ற யானையினது தாள்கள்; உள்ளம் உருகுதலைச் செலுத்துவதாகிய அன்போடு கூடி வந்தித்து ஒழியாது இரவும் பகலும் நினைப்போரது புத்தியில் திருக்கை ஈண்டு அணுகாதபடி துரக்கும். பிரம விஷ்ணுக்கள் பதமும் ஒன்றல்ல என்னும்படி மிக்க வீட்டின்பத்தையும் உண்டாக்கும் என்றவாறு.

கோடும், செவியும், மதமும், வாயும், காமும் அஃறிணைப் பொருளாகிய யானையினது சினைப்பெயர்கள் ஆயினும், அவ் யானைப்படிவத்தையுடையான் தேவன் ஆதல்பற்றிச் சினை தோறும் 'அன்' இறுதி அடுக்கிக் கூறினர்.

இச்செய்யுள் விநாயகர் வணக்கம் கூறிற்று.

விநாயகன் — தனக்குமேல் நாயகமில்லாதவர்.

---



# மங்கலவாழ்த்து

செய்யுள் — 1.

**சிவபெருமான்**

*எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

ஆதிநடு வந்தமிலா வளவில் சோதி
அருண்ஞான மூர்த்தியா யகில மீன்ற
மாதினையு மொருபாகத் தடக்கி வானோர்
மகுடகூ ளாமணியாய் வையம் போற்றப்
பாதிமதி யணிபவளச் சடைகடாழப்
படரொளியம் பலத்தாடும் பரனார் பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளரா நிற்பாம்.

என்பது: *முதல் நடு இறுதியின்றி ஒருவராலும் அறியப்படாத பரசொரூபப் பிரகாசத்தையுடைய அருளாகிய ஞானமே திருமேனியாகக்கொண்டு தமது காருண்ணியத்தினாலே சகளீகரித்துப் பிரபஞ்சத்தையும் உண்டாக்கிய அந்தப் பரமேசுவரியையும் தம் இடப் பாகம் முழுதினும் அடக்கிப் பிரம விஷ்ணுக்கள் முத லாகிய தேவர்களுக்கு அவரது மகுடரத்தினம்போலும் மிக்க சத்தி சிவமாகிய சகள நிஷ்கள சொரூபமாய் உலகத்துள்ளார் துதிப்ப அர்த்த சந்திரனை அலங்கார மாக அணிந்த பவளம்போன்ற சடைகளைத் தாழவிட்டு விரிந்த ஒளியையுடைய திருவம்பலத்தின் கண்ணே நிருத்தம் செய்தருளுகின்ற மேலான பரமசிவனது*

*ஸ்ரீபாதங்களாகிய தாதுக்கள் மிக்க தாமரைகளைத் தலையின் மீது வைத்துத் தளர்ச்சியில்லாத மிக்க அன்பு மிகவும் உண்டாம்படி நில்லாநின்றேம் என்றவாறு.*

*பூமிக்குச் சுழுமுனை திருவம்பலம் ஆகையால், மற்றொரு தலம் அனவரததாண்டவத்துக்குப் பொருந்து என்பது கருத்து.*

*திருமூலர் திருமந்திரம் :—*

**"தத்துவம் ஆடச் சதாசிவந் தானுடச்**
**சித்தமும் ஆடச் சிவசத்தி தானுட**
**வைத்த சராசரம் ஆட மறையாட**
**அத்தனும் ஆடினுன் ஆனந்தக் கூத்தே"**

— 2789

*தானுடத் தன் தசையாடும் என்பது கருத்து அட்ட மூர்த்தமாகையால்.*

இச்செய்யுள் சிவ வணக்கம் *கூறுமுகத்தால் அச்சிவம் உருவமும் அருவமும் உருபாருபமும் என்னும் மூன்று திருமேனியும் அல்ல என்பது கூறிற்று.* (1)

*செய்யுள்* — 2.

***சிவசத்தி***

ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்பம்
இலயமொடு போகமதி கார மாகித்
தேசருவ மருவுருவ முருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப்
*பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்*
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

என்பது: ஈசன் அருள் இச்சை அறிவு இயற்றல் இன்பம் இலயமொடு போகம் அதிகாரம் ஆகி – கருத்தாவை விட்டு நீங்காத சத்தியானது அவனது திருவுள்ளத்தாலே பராசத்தியும், இச்சாசத்தியும், ஞானசத்தியும், கிரியாசத்தியும், திரோதானசத்தியும் இவையும் அன்றிச் சங்காரத்தோடு திதி சிருட்டிகளுமாய்,—தேசு அருவம் அருவுருவம் உருவம் ஆகி தேவியும்ஆய் தேசமொடு செல்வம் ஆகி – அந்தப் பிரகாசமாகிய கர்த்தாவுக்கு அரூபம் ரூபாரூபம் ரூபம் எனப்பட்ட மூன்று முறைமைக்கும் அம்முறைமைகளாகிய வடிவும் தாமாய்க் கர்த்தா அப்படிக்கொண்டருளும் திருமேனிக்கு அந்தந்தச் சத்திகளும் தாமாய்ப் பிரபஞ்சங்களும் பதார்த்தங்களும் தாமாய்,—பேச அரிய உயிரை எலாம் பெற்று நோக்கி – கர்த்தா எடுத்துக்கொண்ட திருமேனிக்கு ஏற்ற சத்தியாய் நின்று எண்ணுதற்கு அரிதாகிய சர்வான்மாக்களையும் படைத்து அளித்து,—பெரும்போகம் அவை அளித்து பிறப்பினையும் ஒழித்திட்டு – ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஈடாகச் சொர்க்காதி பதங்களையும் கொடுத்துச் சனனங்களையும் கெடுத்துத் கர்த்தாவோடும் கூடி நின்று முத்தியையும் கொடுத்து,—ஆசு அகலும் அடியர் உளத்து அப்பனுடன் இருக்கும் அன்னை—அஞ்ஞானம் நீங்கின அடியார் இதயத்தினும் கர்த்தாவோடும் கூடியிருக்கும் உலகமாதாவினுடைய,—அருள் பாத மலர் சென்னி வைப்பாம் – கிருபையாகிய திருவடித்தாமரைகளை எம் தலைமேல் வைத்துக் கொள்ளா நின்றேம் என்றவாறு.

அதிகாரமும், செல்வமும், தேசமும், பெற்றும், நோக்கியும், பெரும்போகம் அளித்தும் என உம்மைகள் தொக்கு நின்றன.

இச்செய்யுள் சிவசத்தி வணக்கம் கூறுவான் கர்த்தாவுடைய லீலைக்கெல்லாம் சத்தியே கருவியாய் நிற்கும் என்பது கூறிற்று. பிரபஞ்சத்தோற்றத்துக்குச் சத்தி உபாதானம் என்றதன்று. (2)

செய்யுள் — 3.

**விநாயகக்கடவுள்**

இயம்புநூ லிருந்தமிழின் செய்யு ளாற்றல்
இடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித்
தயங்குபே ரொளியாகி யெங்கும் நின்ற
தலைவனார் மலைமாது தன்னோ டாடிப்
பயந்தவைங் கரநாற்றோள் முக்கணிரு பாதப்
பரியதொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தனடிக் கமலங்கள் நயந்து போற்றிக்
கருத்திலுற விருத்திமிகக் காதல் செய்வாம்.

என்பது: இயம்பும் நூல் – இப்பொழுது சொல்லும் நூல்,—இரு தமிழின் செய்யுள் ஆற்றல் இடையூறு தீர்ந்து இனிது முடிய வேண்டி—பெரிய தமிழினாற் செய்யும் இச்செய்யுள் பஞ்சாதிகாரங்கள் சொல்லும் வழியால் வரும் குற்றம் தீர்ந்து இனிது முடிதலை விரும்பி,—தயங்கு பேர் ஒளி ஆகி – விளங்கும் பெரிய ஒளியாகி,—எங்கும் நின்ற தலைவனார் – எவ்விடத்தும் பூரணமாய் நின்ற கர்த்தா,—மலை மாது தன்னோடு ஆடி பயந்த – அசுரர் வதை நிமித்தமாக இமயமாதோடும் கூடி உண்டாக்கப்பட்ட,—ஐங்கரம் நால்தோள் முக்கண்

இருபாதம் பரியது ஒரு நீள் கோட்டு பெரிய பண்டி கயத்தன் — ஐந்து கையினையும், நான்கு தோளினையும், மூன்று கண்ணினையும், இரண்டு பாதத்தினையும், பெரிதாகி நீண்டதொரு கொம்பினையும், பெரிய வயிற்றினையும் உடைய யானை முகவனது,—அடி கமலங்கள் நயந்து போற்றி கருத்தில் உற இருத்தி மிக காதல் செய்வாம்-ஸ்ரீபாதகமலங்களை விரும்பித் துதித்துச் சித்தத்திலும் உறும்படிவைத்து மிக்க விருப்பத்தைச் செய்யா நின்றேம் என்றவாறு.

இச்செய்யுள் சிவஞானசித்தி யென்று சொல்லப்பட்ட இந்நூல் விக்கினமின்றி விரைய முடிப்பது காரணமாக விநாயகர் வணக்கம் கூறிற்று. (3)

செய்யுள் — 4.

**சுப்பிரமணியக்கடவுள்**

அருமறையா கமமங்கம் அருங்கலைநூல் தெரிந்த
 அகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருளை
திருமறைமா முனிவர்முனி தேவர்கள்தம் தேவன்
 சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன் கையிற்
 பூநீர்கொண் டோவாது போற்றுமடி யார்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்கும் கந்தன்
 கழலிணைகள் எம்சிரத்திற் கருத்தில் வைப்பாம்.

என்பது: அரு மறை ஆகமம் அங்கம் அரு கலை நூல் தெரிந்த அகத்தியனுக்கு ஓத்து உரைக்கும் அருள் குரு ஆம் குருளை — தெரிதற்கரிய வேதங்களையும் ஆகமங்களையும் ஆறங்கங்களையும் அரிதாகிய கலை ஞானங்

களையும் ஆராய்ந்த அகத்தியமா இருடிக்கு வேத வியாக்கியானத்தை அருளிச்செய்த ஞானாசாரியனாகிய இளைய பிள்ளையார், திரு மறை மா முனிவர் முனி—அழகிய வேதத்தைக் கற்றுவல்ல மிக்க இருடிகட்குத்தலைவனாகிய இருடி,—தேவர்கள் தம் தேவன்—தேவர்கட்குச் சுவாமி,—சிவன் அருள் சேர் திரு மதலை—சிவனுக்குக் கிருபையாலுண்டாகிய புத்திரன்,—தவ நிலையோர் தெய்வம்—தவத்தின் மிக்கோர்க்கு வழிபடும் தெய்வம்,—பொரும் அறை ஆர் கழல் வீரர் வீரன்—யுத்தத்தைப் பொருந்தின வீரக்கழலையுடைய வீரர்க்கு வீரன்,—கையில் பூ நீர் கொண்டு ஓவாது போற்றும் அடியார்கள் கரு மறையாவகை அருளி கதி வழங்கும் கந்தன்—ஒழியாது கையில் மலரும் மஞ்சனமும் கொண்டு துதிக்கும் அடியார்கள் கருப்பத்தில் அழுந்தாத வகை அருள் செய்து மோட்சத்தைக் கொடுக்கும் கந்தசுவாமி,—கழல் இணைகள் என்சிரத்தில் கருத்தில் வைப்பாம்—அவனது ஸ்ரீபாதங்கள் இரண்டையும் என் தலை மீதும் இதயத்திலும் வைத்துக்கொள்ளா நின்றேம் என்றவாறு.

கழல் வீரர் என்றது அசுரரை.

இச்செய்யுள் கந்தர் வணக்கம் கூறிற்று.

'ஆதிநடு அந்தமிலா அளவில் சோதி' என்ற செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் தெய்வ வணக்கம் கூறிற்று. (4)

*செய்யுள் — 5*

***மெய்கண்டதேவ நாயனார்***

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாம்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

என்பது: *பழையதாகிய வேத வண்டுகள் ஒலிப்பப் பரஞானமாகிய செவ்விய தேன் சிநேகத்தோடும் புறப்படச் சிவமாகிய மணம் விரிந்து மணக்கச் சகலரில் சத்திநிபாதம் பதிந்து தரிசித்தோராது இதயகமலங்கள் விட்டு விரியப் பூமியினிடத்து எழுந்தருளிய விரிந்த மலர்களையுடைய பொழில்கள் பக்கங்களிலே சூழப்படாநின்ற திருவெண்ணெய்நல்லூரைத் திருப்பதியாகப் பொருந்தின சுத்தசைவத்துக்கு ஆதியாகிய மெய்கண்ட தேவன் என்னும் திருநாமத்தையுடைய ஞான சூரியனது அழகிய ஸ்ரீபாதங்கள் தாமரை மலரும் ஒப்பு அழியும்படி எமது தலைமீதே எப்பொழுதும் வாழும் ஆதலால் அவற்றையே துதியாநின்றேம் என்றவாறு.*

***கண்ட இதய கமல முகைகள் கண் திறந்த விடத்து வண்டு அரற்ற, பசுந்தேன் ஒழுக, பரந்து மணக்க எனக் கூட்டினும் அமையும்.***

இச்செய்யுள் குரு வணக்கம் கூறிற்று. (5)

குறிப்பு:—*சுத்த சைவம் என்ற விடத்துச் சித்தாந்த சைவம் என்றிருக்க வேண்டும். சுத்த சைவத்துக்கும் சித்தாந்த சைவத்துக்கும் உள்ள வேறுபாடு சிறிதாயினும் அதனை உணர்தல் அவசியம். அது வருமாறு — சித்தாந்த சைவத்தை யொப்பப் பதி பசு பாசங்களின் இயல்புகளை உடம்பட்டு முத்தியில் உயிரானது சிவ பரம்பொருளினிடத்து ஐக்கியமுற்று ஒரு பயனும் ஓர் ஆனந்தமும் இன்றி நிற்கும் என்பது சுத்த சைவம். இதற்கு அதீதமானது சித்தாந்த சைவம் ஆம்*

---

## அவையடக்கம்

*செய்யுள் — 6.*

மாலயன்மா மறையறியா ஆதி மார்க்கம்
வையகத்தா கமம்வேதம் மற்று முள்ள
நூலையெலா முணர்ந்திறைவன் கழலே நோக்கு
நோன்மையருந் தவர்முன்யா னுவலு மாறு
வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி
வேறேழு மொன்றாகி நின்ற போது
சாலவுமான் குளப்படியிற் றங்கி நின்ற
சலமதுதா னேரென்னுந் தன்மைத் தாலோ.

என்பது: *மால் அயன் மா மறை அறியா ஆதி மார்க்கம்—பிரம விஷ்ணுக்களாலும் நான்கு வேதங்களாலும் அறிதற்கு அரிதாகிய பரமேசுரனது வழியை,— வையகத்து ஆகமம் வேதம் மற்றும் உள்ள நூலை எலாம் உணர்ந்து இறைவன் கழலே நோக்கும் நோன்மை*

*அருந்தவர் முன் யான் நுவலும் ஆறு — பிரபஞ்சத்தின் கண்ணே ஆகமத்தையும் வேதத்தையும் அவற்றின் வழியுண்டாகிய சாத்திரங்களையும் கற்றறிந்து பரமேசுரனது ஸ்ரீபாதங்களையே பற்றுக்கோடாக வுடைய நோய் முதலியவற்றைப் பொறுக்கும் தபோதனர் முன்னே யாதும் அறியாத யான் சொல்லும் நெறி,—வேலை உலாவும் திரைகள் வீசி ஏறி வேறு ஏழும் ஒன்று ஆகி நின்ற போது சாலவும் மான் குளப்படியில் தங்கி நின்ற சலம் அது தான் நேர் என்னும் தன்மைத்து ஆல் ஓ — சமுத்திரத்தின் உலாவும் திரைகள் மிகுதலும் வேற்றுமைப்பட்ட சமுத்திரம் ஒன்றுபட நின்ற விடத்து மிகவும் மான் குளப்படியில் தங்கி நிற்கும் ஜலத்தைப் பிரளய ஜலத்துக்கு ஒப்பு என்னும் முறைமையுடைத்து என்றவாறு.*

இச்செய்யுள் அவையடக்கம் கூறிற்று. (6)

*செய்யுள்* — 7.

நீடுபுக ழுலகுதனின் மைந்தர் மாதர்
நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயிற்
கூடுமொழி மழலையொடு குழறி யொன்றுங்
குறிப்பரிதா யிடினுமிகக் குலவிப் போற்றி
மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வர்
அதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோரென்
பாடுகவிக் குற்றங்கள் பாரா ரிந்நூல்
பாராட்டா நிற்பரருட் பரிசி னாலே.

என்பது: *நீடு புகழ் உலகுதனில் மைந்தர் மாதர் நேயமொடு தாம் பயந்த புதல்வர் வாயில் கூடும் மொழி மழலையொடு குழறி ஒன்றும் குறிப்பு அரிதாயிடினும்*

*மிக குலவி போற்றி மாடு நமக்கு இது என்று கொண்டு வாழ்வர் — நிலைபெற்ற புகழினையுடைய உலகின்கண் ஸ்திரீபுமான்கள் சிநேகத்தோடும் பெற்ற பிள்ளைகளிடத்து உண்டாகிய வார்த்தை இளமையோடு தடுமாறி ஒன்றும் தெரிதற்கு அரிதா யிருந்ததாயினும் அதனை மிகவும் கொண்டாடிப் போற்றி யாம் பெறும் ஐசுவரியம் என்று மகிழ்ந்து வாழா நிற்பார்கள்,— அதுபோல மன்னு தமிழ் புலமையோர் என் பாடு கவி குற்றங்கள் பாரார் இ நூல் பாராட்டா நிற்பர் அருள் பரிசினால் ஏ — அத்தன்மை போல நிலைபெற்ற தமிழ்ப் புலவர் என்னிடத்து உண்டாகிய கவியினது குற்றம் பாரார் யான் சொன்ன நூலைப் பாராட்டா நிற்பர் ஞானத்தின் முறைமைப் பாட்டினால் என்றவாறு.* (7)

இதுவுமது.

---

## நூற்சிறப்பு

*செய்யுள்* — 8

சுத்தவடி வியல்பாக வுடைய சோதி
 சொல்லியவா கமங்களெலாம் சூழப் போயும்
ஒத்துமுடி யுங்கூட வோரி டத்தே
 ஒருபதிக்குப் பலநெறிக ளுளவா றற்போற்
பித்தர்குண மதுபோல வொருகா லுண்டாய்ப்
 பின்னொருகா லறிவின்றிப் பேதை யோராய்க்
கத்திடுமான் மாக்களுரைக் கட்டிற் பட்டோர்
 கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார்.

என்பது: சுத்த வடிவு இயல்பு ஆக உடைய சோதி —ஞானமே தனக்குச் சுதந்திர வடிவாகவுடைய கர்த்தா, —சொல்லிய ஆகமங்கள் எலாம் சூழ போயும் ஒத்து முடியும் கூட ஓர் இடத்தே – சமய பேதங்கள் தோறும் அவன் அருளிச் செய்த ஆகமங்கள் எல்லாம் பலபேதம் ஆயினும் ஞானபாதம் எல்லா ஆகமமும் தம்மில் ஒத்துச் சென்று ஒரு பொருளையே நோக்கி முடியும்,— அஃது என்போல? என்னில், ஒரு பதிக்கு பல நெறிகள் உள ஆனல்போல்—ஓர் ஊருக்கு உண்டாகிய வழிகள் எல்லாம் பலபேதப்பட்டதாயினும் சேர அவ்வூரையே நோக்கிக் கிடந்தாற்போல,—பித்தர் குணம் அதுபோல ஒரு கால் உண்டாய் பின் ஒரு கால் அறிவு இன்றி பேதையோராய் கத்திடும் ஆன்மாக்கள் உரை கட்டில் பட்டோர் – எல்லாச் சமயத்திலும் ஞானபாதம் ஒக்கும் என்று கண்டு முத்தி யடைந்திருக்கும் ஆன்மாக்கள்போல் ஆகாமல் பித்தேறினர் குணம் போல மருளும் தெருளுமாய் முத்தியடையத் தக்க நெறியைக் காணுமல் அந்நெறியைக் கண்டார்போலக் கூப்பிட்டுத் திரியும் அறிவிலோராகிய பரசமயிகளாகிய ஆன்மாக்களது பசுநூற்கட்டுக்கு உட்பட்டோர்,—கனக வரை குறித்து போய் கடற்கே வீழ்வார் – மகா மேருவைக் குறித்துப் போக ஒருப்பட்டவன் அவ்வழி போகாமல் மற்றொரு திசையே போய்க் கடற்கே வீழ்ந்து ஆழும் தன்மை போலும் என்றவாறு.

**இச்செய்யுள் பரசமயிகள் கொள்ளும் நூல் பசு நூல் ஆகையால் அவர்கள் முத்தியடையார்கள் என்பது கூறிற்று.**

(8)

## நூற்கதிகாரியும் நூல்வழியும் நூற்பெயரும்

*செய்யுள்.— 9.*

போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
    பொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறி யெனுமவர்கட் கறிய முன்னாள்
    இறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக்
    குவலயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டு
தீதகல வெமக்களித்த ஞான நூலைத்
    தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே

என்பது: *போதம் மிகுத்தோர் - சாத்திர ஞானத்தான் மிக்கவர்கள்,—தொகுத்த பேதைமைக்கே பொருந்தினோர் – இந்த வகையாகச் சொல்லப்பட்ட அறியாமையைக் கூடினோர்,—இவர்க்கு அன்றி – இந்த இருவருக்குமன்றி,—கதி பால் செல்ல ஏது நெறி எனும் அவர்கட்கு அறிய முன் நாள் இறைவன் அருள் நந்தி தனக்கு இயம்ப – முத்தியின் வழிச் செல்லுதலுக்கு யாது வழி என்று ஆராயும் சத்திநிபாதத்தோர்க்கு அறியவேண்டி ஆதியிலே பரமேசுரன் தன்னளவில் பத்தி செய்யும் நந்திகேசுர நாயனாருக்கு அருளிச் செய்ய,—நந்தி கோது இல் அருள் சனற்குமாரற்கு கூற – ஸ்ரீ நந்திகேசுர நாயனாரும் தம்மளவில் குற்றமற்ற பத்தி செய்யும் சனற்குமார பகவானுக்கு அருளிச் செய்ய,—குவலயத்தின் அ வழி எம் குருநாதன் கொண்டு தீது அகல எமக்கு அளித்த*

*ஞான நூலை தேர்ந்து உரைப்பன் சிவஞான சித்தி என்று ஏ — அம்முறையாலே கேட்டருளிச் செய்து பிரபஞ்சத்தில் எழுந்தருளி எம்முடைய சுவாமியாகிய மெய்கண்ட தேவ நாயனுர் குற்றமற்ற தமிழ் ாகச் செய்து சிவஞானபோதச் சிறப்பு நாமம் தரித்து எமது அஞ்ஞானம் நீங்க அருளிச் செய்த இந்த நூலை ஓதியுணர்ந்து சொல்லா நின்றேன் சிவஞான சித்தி யென்னும் பெயரினுல் என்றவாறு.*

இச்செய்யுள் குருபரம்பரையும், பாரம்பரியமாக நூல் வந்த முறைமையும் கூறிற்று. (9)

## நூற்கருத்து

*செய்யுள்*—10.

இறைவனையு மிறைவனு லியம்பு நூலும்
ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டும் செய்தி
முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்
மூதுலகி லெமக்கியன்ற முயற்சி யாலே
சிறையுலவும் புனனிலவித் தோன்றும் பேய்த்தேர்ச்
செய்கைபோ லுண்டாய பொய்கொள் மார்க்கத்
துறைபலவும் கடாவிடையாற் சொல்லிப் போக்கித்
துகடீர விந்நூலிற் சொல்ல கிற்பாம்.

என்பது: *இறைவனையும் இறைவனுல் இயம்பும் நூலும்—பரமேசுரனையும் பரமேசுரனுல் அருளிச் செய்யப்பட்ட வேதாகம புராணப் பொருள்களையும்,— ஈண்டு அளவும்—இவ்விடத்து உண்டாகிய அளவைப் பிரமாணமும்,—பொருள் இயல்பும்—அவ் வளவைகளால் அறியும்*

பொருள்களின் இயல்பும்,—வேண்டும் செய்தி முறைமை களும் – அப்பொருளியல்பின்வழி நின்றோர் செய்ய வேண்டும் ஆசாரங்களையும்,—பெத்தமொடு முத்தி எல்லாம்—பெத்தலக்ஷணத்துடனே முத்திலக்ஷணங்கள் எல்லாம்,—மூது உலகில் எமக்கு இயன்ற முயற்சியாலே — பழையதாய் வரும் பிரபஞ்சத்தில் எமக்குக் கூடின செயலாலே,— சிறை உலவும் புனல் நிலவி தோன்றும் பேய்த்தேர் செய்கைபோல் உண்டாய பொய் கொள் மார்க்கம் துறை பலவும் கடா விடையால் சொல்லி போக்கி – கரையில் அகப்பட்டு நிற்கும் நீரை யொப்பத் தோன்றுகின்ற பேய்த்தேரை மெய்யென்று நிருமிக்கு மிடத்துப் பொய்யான தன்மைபோல நூல்களாகவும் வழிகளாகவும் கேட்டார்க்குப் பொருந்தத் தக்கதாக வுண்டாய்ப் பொய்யைக் கைக் கொண்ட வழிகளாகிய உலோகாயதன் முதல் பாஞ்சராத்திரி ஈறாய சமயி களுடைய பல துறைகளையும் கடாவாலும் விடையாலும் சொல்லி நீக்கி,—துகள் தீர இ நூலில் சொல்ல கிற்பாம் — குற்றந்தீர ஞான பாதத்தை அறிய இந்நூலிலே சொல்லக்கடவேம் என்றவாறு.

அளவு என்றது அளவையை. அளவையாவன:— காண் டல் முதலிய. ஒடு எண். துகள் தீர என்றது அவரவர் அளவை மார்க்கத்தில் நின்ற குற்றம் தீர என்க.

இச்செய்யுள் நூற்கருத்துக் கூறிற்று. (10)

இவை பத்தும் பாயிரம்.

**மங்கலவாழ்த்து முடிந்தது.**

ஆகத்திருவிருத்தம்—11.

# சிவஞான சித்தியார் பரபக்கம்

## முதலாவது–
## (அ) உலகாயதன் மதம்

திருவிருத்தம் — 21.

# 1. (அ) உலகாயதன் மதம்

இனி, உலகாயதன் முதல் பரசமயிகள் பிரமாணமும், பிரமேயங்களும், அவர்களை நிராகரிக்குமாறும் அருளிச் செய்கிறார்.

செய்யுள் — 11.

கலிவிருத்தம்

இந்திர புரோகித னியம்புமொரு நூலின்
தந்திர மெனுதறிவி னேடருளி லாமல்
சந்தணை புயத்துமண மாலைக டயங்க
உந்தியுல கத்திலுல காயத னுரைப்பான்.

என்பது: சாந்தம் பொருந்திய தோளிடத்து நறு நாற்றம் பொருந்திய மாலைகள் பிரகாசிக்கும் கர்ப்பாசயம் நீங்காத உலகாயதன், இந்திரபுரோகிதனாகிய பிருகஸ்பதி பகவான் ஆன்மாக்கள் போகம் காரணமாய் அருளிய நூலை இப்பொழுது இடையூறென்று கொள்ளுதற்கு ஞானமும் கிருபையும் இல்லாமல் அந்த நூலையே மெய் என்று சொல்லா நிற்பன் என்றவாறு.

இயம்பு நூல் உலகாயத சித்தாந்தம். சந்து அணை புயத்து மண மாலைகள் தயங்க என்றது போககாமி யாகையாலே பலன் சுகந்தாதிகளை யுடையன் என்பது நோக்கி என்க. உந்தி யுலகத்தில் உலகாயதன் — ஸ்திரீ போகமே மெய் என்று அநுபவிக்குமவன் சனனம் கைவிடான் என்பது கருத்து. உந்தும் உலகம் என்பது பாடமாயின் கிளம்பின தென்க.

*இதனாற் சொல்லியது இந்திரன் தவத்தைப் புரியப் பிருகஸ்பதி அவனை மயக்கி விடயத்திலே வீழ்வித்த சாத்திரம் என்க. அஃது என்போல? என்னில், அருச்சுனன் தவத்தைப் புரிய வாசுதேவன் தேரிலேயிருந்து கீதை என்னும் சாத்திரத்தினாலே மயக்கிக் கொல்லுவித்ததற்கு ஒக்கும் எனக் கொள்க. உலகாயதன் சாருவாகன் என்னும் பெயர் பெறுவன்.*

*இச் செய்யுள் உலகாயதன் பிருகஸ்பதி நூலையே பிரமாணமாகக் கொண்டு உரைப்பன் என்பது கூறிற்று.* (1)

*செய்யுள்* — 12.

ஈண்டளவை காட்சிமன மாதியிரு மூன்றாய்
வேண்டுமனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகழ்கடின சீதம்
தீண்டரிய வெம்மைசல னத்தினொடு சேர்வே.

என்பது: *ஈண்டு அளவை காட்சி — இவ்விடத்து அளவை என்று கொள்ளப்படும் உமது காட்சியை,— மனம் ஆதி இரு மூன்று ஆய் வேண்டும் — அக்காட்சியினை விகற்பித்து ஐயக்காட்சி முதல் ஆறுவகைக் காட்சியாய்க் கோடல் வேண்டும்,— அநுமானம் முதலான பல வேண்டா — இக்காட்சியில் விகற்பம் ஒழிந்து அநுமானம் உரை முதலிய வேண்டுவதில்லை,— பூண்டபொருள் பூதம் — அக்காட்சியானும் அதன் விகற்பத்தானும் கண்டு கைக்கொண்ட பொருள் பூதங்கள் நான்கும்,— அவை — அப்பூதங்கள் நான்கும்,— புகழ் கடின சீதம் தீண்ட அரிய வெம்மை சலனத்தினொடு சேர்வே — சொல்லப்பட்ட கடினம் சீதம் தொடுதற்கரிய வெப்பம் சலனம் என்னும் சொரூபங்களோடும் கூடும் என்றவாறு.*

மனம் என்றது ஐயக் காட்சி: பழுதையைப் பாம்பு என்று ஐயப்படுவது மனம் ஆகலின் மனக்காட்சி என்றார். இனி, காட்சி இரு மூன்றுவன - ஐயக்காட்சி, வாயிற்காட்சி, விகற்பக்காட்சி, அந்வயக்காட்சி, வெதிரேகக்காட்சி, திரிவுகாட்சி என இவை. இனி, நிர்விகற்பக்காட்சியாவது இவ்வாறினோடும் கூடாத குற்றமறக்காண்பது. ஐயக்காட்சியாவது இருளில் பாம்போ பழுதையோ என்று ஐயுதல், அதுவே மனக்காட்சி. வாயிற்காட்சியாவது கண்ணெழுந்த இந்திரியங்களாற் காண்பது. விகற்பக்காட்சியாவது பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என்னும் ஐந்தினாலும் காண்பது. அந்வயக்காட்சியாவது புகையினால் அனல் அறிதல். வெதிரேகக்காட்சியாவது நாற்றத்தால் பூ அறிதல். திரிவு காட்சியாவது பழுதையைப் பாம்பு என்று கொள்வது.

இச்செய்யுள் உலகாயதன் சித்தாந்தத்திற்கொள்ளும் காட்சி அளவையும், அதன் விகற்பமும், அதனால் அறியும் பொருளாகிய பூதங்கள் நான்கும், அவற்றின் குணங்களும் கூறிற்று. (2)

செய்யுள் — 13.

சாற்றுபெய ரானவை தலம்புனல் கனற்பின்
காற்றுமென லாமிவை கலந்தகுண மோதின்
நாற்றமிர தம்முருவ நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தவியல் பாமிவை புணர்ப்பே.

என்பது: சாற்று பெயர் ஆனவை – அப் பூதங்கள் நான்கும் அப்படிக் கூடின பின்பு அவையிற்றுக்குச் சொல்லும் பெயர்களானவை,—தலம் புனல் கனல் பின் காற்றும் எனல் ஆம் – பிருதிவியும் அப்புவும் தேயுவும் பின் வாயுவும் என்று சொல்லலாம்,—இவை

கலந்த குணம் ஓதின் – இப்பூதங்கள் கூடிய குணங்களின் பெயரை முறையானே சொல்லின்,—நாற்றம் இரதம் உருவம் நல் பரிசம் ஆகும்—கந்தம் இரதம் உருவம் பரிசம் இவை ஆகும்,—போற்றும் இவை – தெய்வமாகத் தொழும் இப்பூதங்கள் நான்கும்,—நித்த இயல்பு ஆம் – அழியாத இயல்புகளை உடையவாம்,— இவை புணர்ப்பே – இவை கூடுமிடத்து மேலான வாயுப் பூதத்திலே நின்று மூன்று பூதங்களில் ஒன்றில் ஒன்றாக அடைவே கூடப்படும் என்றவாறு.

வாயு கண்ணுக்குத் தெரியாதாயினும் பரிசம் கொண்டு காண்கையால் பின் காற்றும் எனலாம் என்றார் எனினும் அமையும்.

இச் செய்யுள் பூதங்கள் நான்கின் பெயரும், அவற்றோடு கூடிய குணங்களின் பெயரும், பூதங்கள் கூடும் முறைமையும் கூறிற்று. (3)

செய்யுள் — 14.

ஒத்துறு புணர்ச்சியி னுருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோல்
புத்திகுண நற்பொறி புலன்களிவை யெல்லாம்
இத்தில்வரு நீரினி லெழுங்குமிழி யொத்தே.

என்பது: ஒத்து உறு புணர்ச்சியின் உருக்கள் பல ஆகும் – அப்பூதங்களின் சொரூபங்களும் குணங்களும் தம்மில் ஒத்துக் கூடுகிற கூட்டத்திலே வடிவுகள் பலவுண்டாம்,—அஃது என்போல? எனில், வைத்து உறு கடாதி பல மண்ணின் வரும் ஆ போல் – திரிகையிலே வைத்த மண்ணின் கண்ணே பல கடாதிகள்

தோன்றுமா போல,—புத்தி குணம் நல் பொறி புலன்கள் இவை எல்லாம் இத்தில் வரும் நீரினில் எழும் குமிழி ஒத்தே – [இதனைப் பொருளுக் கேற்ப மாறுக] நீரினில் கிளம்பிய குமிழியை ஒத்துப் புத்தியும் குணமும் ஞானேந்திரியம் ஆகிய பொறி புலன்களும் இவையெல்லாம் இவ்வுருவின் கண்ணே உண்டாம் என்றவாறு.

ஒத்துறு புணர்ச்சியின் உருக்கள் பல உண்டாம் எனவே, ஒவ்வாமலுறும் புணர்ச்சியின் உருக்களும் குணமும் ஏறிக் குறைந்து வரும் என்பது கருத்தாயிற்று. உருக்கள் பலவாவன – எறும்புகடை யானை முதலாக உள்ளன. புத்தி முதலாயினவும் இவ்வுருக்களின் வரும் என்பது புத்தி முதலாயினவை முன்பு இல்லாதவை இவ்வுருவிலே தோன்றி இவ்வுருவோடே மடியும் என்பது கருத்து.

இச்செய்யுள் பூதங்களிலே உருத்தோன்றும் முறைமையும், அவ்வுருவிலே புத்தி முதலானவை தோன்றும்என்பதும் கூறிற்று (4)

குறிப்பு:— முளை முதலான கூட்டத்து மதசத்தியுண்டானாற்போலவும், ஸ்திரீ புருஷர்கூட்டத்தில் வரும் சுகம் போலவும், சாதுர்ப்பூத சமவாயத்திலே ஞான சுகாதிகள் தோன்றி அவை வளர வளர்ந்தும் குறையக் குறைந்தும் பிரகாசியா நிற்கும் எனக்கொள்க.

செய்யுள் — 15.

பூதமகி ழென்றுபிரி யப்புல னிறக்கும்
நீதியினி னிற்பன நடப்பனவு முற்போல்
ஓதும்வகை யாகியுறு காரிய மூலந்தால்
ஆதியவை யாமிதனை யறிவதறி வாமே.

என்பது: பூதம் அதின் ஒன்று பிரிய புலன் இறக்கும்—அப்பூதங்களில் வாயுப்பிரிய இந்திரியங்கள் கெடும், புலன் இறக்கும் எனவே, புலன் காரணம் ஆகிய பொறி குணம் புத்தி முதலியவையும் இறக்கும்,—நீதியில் நிற்பன நடப்பனவும் முன்போல் – இம் முறைமையாலே தாவரசங்கமங்களும் இறக்கப்படும்,-ஒத்தும் அவை ஆகி உறு காரியம் உலந்தால் ஆதியவை ஆம்—சொன்ன முறைமையிற் கூடிப்போந்த காரியமாகிய சொரூப குணங்கள் இறந்தால் காரணமாகிய பூதங்களே ஆம்,— இதனை அறிவது அறிவு ஆம் ஏ – இவையிற்றை இம் முறைமைப் பாட்டாலே அறிவதே ஞானமாவது என்றவாறு.

இச்செய்யுள் பூதம் பிரியுமாறும், பூதத்துடனே இந்திரியாதிகள் நீங்க உருக்கள் கெடுமாறும் கூறிற்று.

'இந்திர புரோகிதன்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் தம்மதம் கூறி மேல் பிறர் மதம் கூறுகின்றது. (5)

செய்யுள் — 16.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இப்படி யன்றிக் கன்மம்
உயிரிறை வேறுண் டென்று
செப்பிடு மவர்க்கு மண்ணோர்
செய்திடும் குற்ற மென்னே
ஒப்பிலா மலடி பெற்ற
மகனொரு முயற்கொம் பேறித்
தப்பிலா காயப் பூவைப்
பறித்தமை சாற்றி னூரே.

என்பது: இப்படி அன்றி – இப்படிப் பூதக் கூட்டத்தினுல் உருக்கள் தோன்றி வாயுக்கெடக் கெடுதல் அன்றி,—கன்மம் உயிர் இறை வேறு உண்டு என்று செப்பிடும் அவர்க்கு மண்ணோர் செய்திடும் குற்றம் என்னே – முன் செய்த கன்மம் பின் தொடரும் என்றும் இதனைப் புசிக்கத் தக்கது ஓர் ஆன்மா உண்டு என்றும் இவையிற்றைக் கூட்டுவான் ஒரு கர்த்தா உண்டு என்றும் சமயிகள் உலகத்தாரை மயக்க உலகத்தார் சமயிகளுக்குச் செய்த குற்றம் யாது?— ஒப்பு இலா மலடி பெற்ற மகன் ஒரு முயல் கொம்பு ஏறி தப்பு இல் ஆகாய பூவை பறித்தமை சாற்றினுர் ஏ – உலகத்தாரை மயக்கச் சமயிகள் கூறுமது, 'மலடி பெற்ற ஒப்பில்லாத மகன் ஒரு முயலின் கொம்பிலே ஏறி ஆகாயத்திற் பூத்த பூவைத் தவறின்றிப் பறித்தான்' என்னும் தன்மைக்கு ஒக்கும் என்றவாறு.

பூதமே தெய்வமாவது. பூதக் கூட்டத்தின் மிகுதி குறைவே கன்மமாவது. பூதக் கூட்டத்தின் நிகழும் உணர்வே ஆன்மாவாவது. இதுவன்றி, வேறே தெய்வமும் கன்மமும் ஆன்மாவும் இல்லை என்பது கருத்து.

மலடி பெற்ற ஒப்பிலா மகன் என மாறுக. ஆகாயப் பூவைத் தப்பில்லாமற் பறித்தமை என மாறுக. பொய்யைப் பெருக்கிப் புராணம் செய்து உலகத்துள்ளாரை மயக்கித் தீர்த்த யாத்திரை, தபசுகள், அக்கினிஹோத்திரம், தானம், தன்மம், ஜபம், தியானம், சமாதி என்றும்; உபவாசம் விரதம் என்றும் பேரிட்டுப் பகற்பொழுது போக்கி உலகத்தார் கைப் பொருள் கவர்ந்து பொய்ப் பொருள் பேசிப் பொழுதுபோக்கி அவமே கழிவது. அந்தோ! என்று நொந்தான் எனக்கொள்க.

*இச் செய்யுள் கர்த்தாவும், கன்மமும், ஆன்மாவும் இல்லை என்று இல்பொருள்உவமை கூறி மறுத்துக் கூறிற்று.* (6)

*செய்யுள்* — 17.

செய்திடும் கன்ம மெல்லாம்
செய்தவர் தம்மைப் பற்றி
எய்திடு மென்னி னிங்கே
மாய்ந்திடு மேய்வ தெங்ஙன்
மெய்தரு தூலம் கெட்டுச்
சூக்கமாய் மேவு மென்னில்
ஐயனே தீபம் போனால்
அதனொளி யாவ துண்டோ.

என்பது: *செய்திடும் கன்மம் எல்லாம் செய்தவர் தம்மை பற்றி எய்திடும் என்னின் — முற் பிறப்பில் ஆன்மாக்கள் செய்த கன்மம் எல்லாம் கெடாமல் ஆன் மாக்களைப் பொருந்தி நின்று இப் பிறப்பிலே ஊட்டும் என்று கூறின்,—இங்கே மாய்ந்திடும் ஏய்வது எங்ஙன் — இப் பிறப்பிற் செய்த புண்ணிய பாவங்கள் இக்காயத் தோடு கெடும் ஆதலால் பிற் பிறப்பில்புக்குக் கூடுமாறு எங்ஙனே?—மெய்தரு தூலம் கெட்டு சூக்கமாய் மேவும் என்னில் — காயத்தோடு தூல முறைமை கெட்டுச் சூக்க முறைமையாகப் பொருந்தும் என்று கூறின்,—ஐயனே தீபம் போனால் அதன் ஒளி யாவது உண்டோ — திரி யோடே கூடிநின்ற விளக்கொளி அத்திரியை நீங்கி வேறே நின்று ஒளிரும் என்னும் தன்மைத்து காயம் நீங்கிச் சூக்குமமாய்ப் பொருந்தும் முறைமை என்றவாறு.*

*ஐயனே! என்றது இழிவின்கண் வந்தது.* (7)

செய்யுள் — 18

மாய்ந்துபின் வயலி லிட்ட
வைதழை பலிக்கு மாபோல
ஏய்ந்திடும் கன்ம மென்னில்
இட்டிடத் திசையு மேனி
ஓய்ந்துவந் தவரை யுண்ணப்
பண்ணுஞ்சோ றுதரத் தற்றால்
வாய்ந்திடும் பலம்வ யிற்றிற்
கொண்டிடும் வழக்கு வைத்தாய்.

என்பது: *மாய்ந்து பின் வயலில் இட்ட வை தழை பலிக்கும் ஆபோல் ஏய்ந்திடும் கன்மம் என்னில் — வயலுக்கு இட்ட வைக்கோலும் தழையும் தான் கெட்டுப் பின்பு பயிர்க்கு நன்மையைக் கொடுக்குமாறு போலக் கன்மம் தோன்றாமல் தன்மை கெட்டுப் பொருந்தும் என்று கூறின்,—இட்ட இடத்து இசையும்— நீ உவமை கூறிய வைக்கோலும் தழையும் இட்ட இடத்தில் பயிர்க்கு நன்மையைக் கொடுக்கும் அதுபோலப் பிறர் காயத்திற்கு நன்மையைக் கொடுக்கவேண்டும்,—அஃது எங்ஙனே? என்னின், மேனி ஓய்ந்து வந்தவரை உண்ண பண்ணும் சோறு உதரத்து அற்றால் வாய்ந்திடும் பலம் வயிற்றில் கொண்டிடும் வழக்கு வைத்தாய் — காயம் தளர்ந்து பசித்து வந்தவரை உண்ணப் பண்ணுவித்த சோறு அவர் உதரத்து மாண்டால் உண்டாம் பிரயோசனம் அவர் வயிற்றின் பலம் கொள்வார் வழக்குக் கூறினாய் என்றவாறு.*

*இட்டது கெட்டுப் பலித்தல் மலம் எனக்கொள்க.* (8)

செய்யுள் — 19.

உருவமு முணர்வும் செய்தி
யொத்திரா கன்ம மென்னின்
மருவுகை விரல்க டம்மின்
வளர்வுடன் குறைவுண் டாகி
வருவதிங் கென்ன கன்மம்
செய்துமுன் மதியி லாதாய்
பெருகுபூ தங்க டம்மின்
மிகுகுறைப் பெற்றி யாமே.

என்பது: உருவமும் உணர்வும் செய்தி ஒத்து இரா கன்மம் என்னில் – ஒருகாயத்தின் செய்தியும் ஓர் உணர்வின் செய்தியும் ஒத்திராமல் பேதிக்கப்படுவது கன்மச்செய்தி யென்று கூறின்,—மருவு கைவிரல்கள் தம்மில் வளர்வுடன் குறைவு உண்டாகி வருவது இங்கு என்ன கன்மம் செய்து முன் மதி இலாதாய்–[இதனைப் பொருளுக்கேற்ப மாறுக] அறிவிலாதாய் முன்பு எந்தக் கன்மம் செய்து பின்பு தொழிலை மருவின கைவிரல்கள் ஒன்றுக்கொன்று ஏறியும் குறைந்தும் இருப்பது,— பெருகு பூதங்கள் தம்மில் மிகு குறை பெற்றி ஆம் ஏ– வளரும் பூதங்கள் தாம் மிக்குக் குறைதலால் காயமும் உணர்வும் பேதிக்கப்பட்டது அல்லது கன்மத்தினால் அன்று என்றவாறு.

கன்மபலம் இல்லை என்பது கருத்து. (9)

செய்யுள் — 20.

இன்பொடு துன்ப மெல்லாம்
எய்துவ கன்ம மென்னின்
நல்புனல் சந்த ணுதி
நணுகவு நணுக வொண்ணு
மின்பொலி யழலி ஞேடு
மேவுவ நன்மை தீமை
என்செய்த தியம்பி டாய்நீ
இவையெலா மியல்ப தாமே.

என்பது: இன்பொடு துன்பம் எல்லாம் எய்துவ கன்மம் என்னில் — ஒருபொருட்கு இன்பத்துன்பங்கள் எல்லாம் கன்மத்தால் பொருந்தும் என்று கூறின்,— நன்புனல் சந்தணுதி நணுகவும் அணுக ஒண்ணு மின் பொலி அழலிஞேடும் மேவுவ நன்மை தீமை என் செய்தது இயம்பிடாய் நீ இவை எலாம் இயல்பது ஆம் ஏ — தெளிந்த புனலானது சந்தனம் முதலாகிய நறு நாற்றத்தோடு கூடவும் கூடுதற்கு அரிதாகிய ஒளி மிகுதியையுடைய அனலோடு கூடவும் எந்த நன்மை தீமை செய்தது என்று நீ கூருய் இவையெல்லாம் ஒரு பொருட்கு இயல்பாம் ஆதலால் பூதகுணம் அன்றிக் கன்மமில்லை என்றவாறு.

தோல் முதலானவை நெருப்பைக் கண்டால் சுருண்டும், நீர் கூடிஞல் நெகிழ்ந்தும் வருவது பதார்த்த இயல்பொழிந்து வேறு கன்மத்தால் அன்று. சர்வமும் பதார்த்த இயல்பு என்று அறிவாயாக.

'செய்திடும் கன்மம்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் முறையானே கன்மமில்லை என்று மறுத்துக் கூறிற்று. (10)

*செய்யுள்* — **21.**

காயத்தின் குணம தன்றிக்
கண்டதான் மாவுண் டாயின்
மாயத்திற் சொல்லி டாதே
மனமுத லாறி னுக்கும்
நேயத்த தாக வேண்டு
மன்றியே நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம் பெல்லை
செப்புவோர் செய்தி யாமே.

என்பது: *காயத்தின் குணமது அன்றி — நூறு காய் அடை கூடவே ஒரு சிவப்பு உண்டாமாறுபோலப் பூதக்கூட்டத்தில் ஓர் உணர்வு உண்டாம் (அஃதன்றி), —கண்டது ஆன்மா உண்டாயின் — மற்றோர் ஆன்மா என்று தனியே காணப்பட்டது உண்டாயின், —மாயத்தில் சொல்லிடாதே—உன் மயக்க நூலில் சொல்லாதே, —மனம் முதல் ஆறினுக்கும் நேயத்தது ஆக வேண்டும்- மனக்காட்சி முதலாய ஆறு காட்சிக்கும் பொருந்தச் சொல்லவேண்டும், —அன்றியே நிகழ்த்தும் உண்மை — காட்சிவிகற்பத்தால் ஒழிந்து கருதலானும் உரையானும் கூறுமது, —தேயத்தின் முயல் கொம்பு எல்லை செப்புவோர் செய்தி ஆம் ஏ — உலகத்தில் கோடில்லாத முயலுக்குக் கோடும் அதற்கு அளவும் பெருமையும் கூறுவோரது கூற்றும் என்றவாது.*

*மனம் என்பது ஐயக்காட்சியை. நேயம் என்பது பொருத்தத்தை.*

*இச்செய்யுள் முறையானே காயத்தின் குணமன்றி, ஆன்மா இல்லை என்று மறுத்துக் கூறிற்று.* (11)

*செய்யுள் — 22.*

அருவமே யிறைவ னாகில்
அறிவின்று காய மாகும்
உருவமே யென்னிற் பூதக்
கூட்டத்தி லொருவ னாகும்
மருவிய விரண்டுங் கூடி
நிற்பவ னென்னின் மண்மேல்
இருவிசும் பொருகல் லேந்தி
நிற்குமோ வியம்பி டாயே.

என்பது: *அருவமே இறைவன் ஆகில் அறிவு இன்று ஆகாயம் ஆகும்—கர்த்தா அரூபி என்று கூறில் அறிவும் இல்லையாம் ஆகாயம் போலவாம்,—உருவமே என்னில் பூதக்கூட்டத்தில் ஒருவன் ஆகும் – அந்தக் கர்த்தா உருவம் உடையவன் என்று கூறில் பூதக்கூட்டத்தில் தோன்றும் சரீரிஆதல் வேண்டும்,—மருவிய இரண்டும் கூடி நிற்பவன் என்னில் – பொருந்திய ரூபாரூபத்தோடும் கூடிநிற்பன் என்று கூறில்,—மண் மேல் இரு விசும்பு ஒரு கல் ஏந்தி நிற்குமோ இயம்பிடாய் ஏ – மிக்க ஆகாயமாகிய அரூபத்திலே ரூபமாகிய கல்லை விட்டால் தம்மில் கூடி நிற்குமோ? பிரபஞ்சத்தில் நில்லாது ஆகையால் ரூபாரூபம் கூடி நில்லாது என்றவாறு.*

*இச்செய்யுள் முறையானே 'பூதமே தெய்வ மன்றி மற்றொரு தெய்வமில்லை' என்று மறுத்துக் கூறிற்று.* (12)

5

செய்யுள் — 23.

பூதத்தே அன்ன மாகி
அன்னத்தா லுடம்பு புத்தி
பேதித்தே மனமு மாகிப்
பிரிந்தமை திருந்த வின்று
வேதத்தே யுரைக்க வென்னோ
மேதினி யோர்க ளெல்லாம்
கேதத்தே வீழ்ந்து வேறு
நெறியல கேட்கு மாறே.

என்பது: பூதத்தே அன்னம் ஆகி அன்னத்தால் உடம்பு புத்தி பேதித்தே மனமும் ஆகி பிரிந்தமை திருந்த இன்று வேதத்தே உரைக்க – பிருதிவி பூதத்தே உணவு தோன்றி அவ்வுணவால் உடலும் அவ்வுடலிலே புத்தியும் புத்தியிலே பேதிக்கப்பட்ட மனமும் உண்டாய் வேறுபட்டவற்றை இப்பொழுது தெரியத் தங்கள் வேதம் சொல்லும் வழியும்,—என்னோ மேதினியோர்கள் எல்லாம் கேதத்தே வீழ்ந்து வேறு நெறி அல கேட்கும் ஆறு ஏ – தங்கள் வேதம் அப்படிச் சொல்லவும் பிரபஞ்சத்தில் உள்ளோர்கள் எல்லாம் வருத்தத்திலே வீழ்ந்து வேறு வழியல்லா வகையைக்கேட்டு அதனை மேற்கொள்ளுமாறு என்னோ? என்றவாறு.

புத்தியும் என உம்மை தொக்கது. பிரிதல் - வேறு பட்டிறத்தல்.

இச் செய்யுள் 'பூதத்திலே யாவையும் தோன்றி அதனிலே ஒடுங்கும் முறைமையே யன்றி வேறு ஒருபொருளில்லை' என்பது கூறிற்று. (13)

*செய்யுள் — 24.*

போகத்தை மண்ணிற் கண்டு
  விட்டுப்போய் விண்ணிற் கொள்ள
மோகத்த ராகி யல்லல்
  முயன்றுழல் மூட ரெல்லாம்
தாகத்திற் றண்ணீர் கண்டு
  விட்டுப்போய்த் தண்ணீர் கேட்டுச்
சோகித்தே யுண்ண வெண்ணித்
  துயருறு வார்க ளந்தோ.

என்பது: *போகத்தை மண்ணில் கண்டு விட்டு போய் – பூமியிலே மெய்யாக ஸ்திரீ போகத்தைக் கண்டிருந்தும் அதனை அநுபவியாது கைவிட்டுப்போய், —விண்ணில் கொள்ள மோகத்தர் ஆகி அல்லல் முயன்று உழல் மூடர் எல்லாம் – சுவர்க்கத்திலே போகம் உண்டென்று கேட்டு அதனைக் கைக்கொள்ளுதற்கு ஆசையுடையராய்த் தவம் என்னும் சிறையிலே முயற்சிப்பட்டுத் தடுமாறும் அறிவில்லாதவர் எல்லாம், —தாகத்தில் தண்ணீர் கண்டு விட்டு போய் தண்ணீர் கேட்டு சோகித்தே உண்ண எண்ணி துயர் உறுவார்கள் அந்தோ – தாகித்த விடத்தே தண்ணீரை மெய்யாகக் கண்டிருந்தும் அதனை உண்ணுமல் கைவிட்டுப் போய் மற்றொரு தண்ணீரை ஒருவன் தூரத்திலே உண்டென்ன அதனைக் கேட்டு அத்தண்ணீரை உண்டு தாகந் தீரவேண்டும் என்று சென்று வழியிலே துயரம் உறுவோர் தன்மை போலும், ஐயோ! என்றவாறு.*

*அந்தோ என்பது இரக்கக் குறிப்பு.*

*இச்செய்யுள் 'காணப்படும் ஸ்திரீ போகத்தைக் கை விட்டுக் காணப்படாத சுவர்க்காதி போகத்தைக் கேட்டு அதற்கு வருந்துதல் அறிவன்று' என்று கூறிற்று.* (14)

செய்யுள் — 25.

வாழவே வல்லே வாமி
வலக்கைதா வென்னு யிர்க்குத்
தோழனீ யுன்னை யொப்பார்
சொல்லிடி னில்லை கண்டாம்
கோழைமா னுடர்தீ தென்னும்
கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச்
சுடரெனத் தோன்றி னயே.

என்பது: *வாழவே வல்லை வாமி வலக்கை தா — இவ்வுலகத்துள் எம்மைப்போல நீயும் வாழவல்லை வாமதந்திரியே! உன் வலக்கையைத் தருவாயாக,—என் உயிர்க்கு தோழன் நீ உன்னை ஒப்பார் சொல்லிடின் இல்லை கண்டாய்—என் உயிர்க்குத் தோழன் நீயே அன்றிச் சொல்லுங்காலத்து வேறு இல்லை கண்டாய்,— கோழை மானுடர் தீது என்னும் கொலை களவு ஆதி கொண்டே — மானமில்லாத மானுடர் பொல்லாங்கு என்று சொல்லப்பட்ட கொலை களவு முதலியவற்றை யாம் கைக்கொள்ளும் முறைமைபோலக் கைக்கொண்டு, சூழும்வார் குழலார் மொய்ப்ப சுடர் என தோன்றினய் ஏ— சுற்றும் ஒழுங்கு நீண்ட குழலினையுடைய மடவார் சேவித்துப் போத விளக்குப் போலத் தோன்றினய் ஆதலால் தோழன் நீயே என்றவாறு.*

வலக்கைதா என்றது பிரியவசனம் சொல்லியது. கொலை களவு ஆதியாவது – கொலை, களவு, கள், காமம், பொய் இவையும்; காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் மாற்சரியம் முதலிய பிறவுமாம்.

மது மச்சம் மாமிசம் மைதுனம் நித்திரை என்ற பஞ்சமாபாதகத்துடனே அருந்திச் சுகிக்கிறவன் சமர்த்தன் என்பது கருத்து.

இது 'வாமதந்திரியும் கொலைகளவாதியோடு கூடுகையால் அவனும் தன்னோடுகூடிய சமயத்தான்' என்று கூறிற்று. (15)

செய்யுள் — 26

ஈசனு ரயனுர் மாலோ
டிந்திரன் தெரிவை மார்பால்
பேசொணு வகைக ளெல்லாம்
செய்தன்றோ பெரியோ ரானுர்
ஆசையா லவர்போ னுமும்
ஆகவே வேண்டு மாயின்
வாசமார் குழலா ரோடும்
வல்லவா கூடி வாழ்மின்.

என்பது: ஈசனுர் அயனுர் மாலோடு இந்திரன் தெரிவைமார் பால் பேசஒணு வகைகள் எல்லாம் செய்து அன்றோ பெரியோர் ஆனுர் – உருத்திரன் பிரமா விஷ்ணு இவருடன் இந்திரனும் ஸ்திரீகளிடத்துச் சொல்ல வொண்ணுதபடி தலையில் தரித்தும் நாவில் தரித்தும் மார்பில் தரித்தும் கௌதமர் சாபம் தரித்தும் மற்றும் செய்துமன்றோ பெரியோர் என்று எல்லோராலும் சொல்லப்பட்டார்கள் (ஆகையால்),—ஆசையால் அவர் போல் நாமும் ஆகவே வேண்டும் ஆயின்

வாசம் ஆர் குழலாரோடும் வல்லவா கூடி வாழ்மின் — அப்படி அவர்களைப் போல எல்லாராலும் பெரியோர் என்று கொண்டாடப்படுதற்கு நமக்கும் ஆசையுண்டாயின் மணம் பொருந்தின குழலினையுடைய மடவாரோடு வல்லவண்ணம் வருந்தியும் பொருந்தி வாழ்மின் என்றவாறு.

ஈசுவரன் பாகத்திலே ஒருத்தியைக் காந்தும் சடையிலே ஒருத்தியைக் காந்து வைத்தும், பிரமா நாவிலே ஒருத்தியை வைத்தும் திலோத்தமை காரணமாகப் பிரமித்துத் தேடி நான்முகனுயும், விஷ்ணு மார்பிலே ஒருத்தியை வைத்தும் பதினறுயிரம் கோபிகை மகளிரைப் போகித்தும் மற்றும் பரதாரகமனம் பண்ணியும், இந்திரன் அகலிகை காரணமாக ஆயிரங்கண்ணன் ஆகியும் [உள்ள] இவ்வா[லா]றெல்லாம் காண்க. சமணனும் இயக்கியைக் கூடிக்கொண்டான் தான் தலைவன் ஆகவேண்டும் என்பது கருதி என்க. மற்றுமுள்ள தேவர் ருஷிகள் கதைகளும் அறிந்து கொள்க என்பது கருத்து.

இச்செய்யுள் 'ஸ்திரீ போகமே திவ்வியமான பதம்' என்பது கூறிற்று. (16)

செய்யுள் — 27.

தையலா ருட லாடத்
    தாமவ ரோடுங் கூடிச்
செய்யதா மரையை வென்ற
    சீறடி செம்பஞ் சூட்டி
மெய்யெலாம் பாதஞ் சூடும்
    வேடத்தார் மெய்யிற் கூடா
மையன்மா னுடர்மெய் மார்க்க
    வேடத்தே மாய்கின் றரே.

என்பது: *தையலார் ஊடல் ஆட தாம் அவரோடும் கூடி — மகளிர் ஊடின காலத்து அவ்வூடலை நீக்கி அவரோடும் கூடி,—செய்ய தாமரையை வென்ற சிறு அடி செம்பஞ்சு ஊட்டி — தாமரையினது சிவப்பை ஒப்பழித்த பாதத்தைச் செம்பஞ்சு ஊட்டி,—மெய் எலாம் பாதம் சூடும் வேடத்தார் மெய்யில் கூடா மையல் மானுடர் — அவரது அடிகளால் தமது காயமெங்கும் புனைந்து கொள்ளும் வேடத்தில் நிற்பவராகிய உலகாயதர் உண்மையில் கூடாத மயக்கத்தையுடைய மானுடர் —பொய் மார்க்க வேடத்தே மாய்கின்றார் ஏ — பொய் வழியாகிய தவவேடத்திற் புகுந்து மாயா நின்றார்கள் என்றவாறு.*

*இச் 'செய்யுள் தவ வேடத்தை இழித்துப் பொய் என்றும். உலகாயதமே மெய் என்றும்' கூறிற்று.* (17)

*செய்யுள்* — 28.

வாசமார் குழலி னார்கண்
மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வாய்
அமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றோண்மேற்
சேர்ந்துவீற் றிருந்தி டாதே
மாசுலா மனத்தோ ரெல்லாம்
மறுமைகொண் டழிவர் மன்னோ

என்பது: *வாசம் ஆர் குழலினார்கள் மணி அல்குல் தடத்தே மூழ்கி—மணம் பொருந்திய குழலினையுடைய மடவார்களது இரத்தினத்தினால் அமைக்கப்பட்ட*

மேகலை பொருந்தின அல்குல் என்னும் துறையில் மூழ்கி,—நேசம் ஆர் குமுதம் செவ்வாய் அமுதினை நிறையஉண்டு—சிநேகம் மிகுதியை உடையவாது ஆம்பல் போலும் சிவந்த வாயினில் ஊறும் அமுதத்தைப் பருகி, — தேசு உலாம் மணி மெல் தோள் மேல் சேர்ந்து வீற்றிருந்திடாதே — ஒளி வீசிய மணியினை யுடைய மெல்லிய தோள்கள்மீது அணைந்து வாழ்ந்திடாதே,—மாசு உலாம் மனத்தோர் எல்லாம் மறுமை கொண்டு அழிவர் மன் ஓ — குற்றம் சேர்ந்த மனத்தை யுடைய பரசமயிகள் எல்லாம் மறுமைப் பயன் உண்டு என்று அழிவார்கள் என்றவாறு.

நேசமாதல்— சிநேக மிகுத்தல். தேசு—விளக்கம், மாசு உலாம்—மாசு சேர்தல், மன்னும் ஓவும் அசை. நீராடிப் போசனம் பண்ணிச் சுகத்துடன் இராது பிறப்பு உண்டென்று வியாகூலப்படுவது என் என்பது கருத்து.

இச்செய்யுள் 'இம்மைப் பயனாய பெண் போகம் மெய் என்றும், மறுமைப் பயனாய சுவர்க்கம் பொய்' என்றும் கூறிற்று. (18)

செய்யுள் — 29.

மதிநிலா நுதலா ரோடு
மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வாய்
இளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக்
கண்கள்மார் பகல மூழ்கும்
புதுநிலா வியநன் போகம்
விடுவர்புன் சமயத் தோரே.

என்பது: *மதிநிலா நுதலாரோடும் மணிநிலா முன்றில் ஏறி—மதி பொருந்திய நுதலினையுடைய மாதரோடும் கூடி ஒளியையுடைய முன்றிலிற் சென்றேறி,—முதிர் நிலா எறிப்ப செவ்வாய் இள நிலா முகிழ்ப்ப மொய்த்த கதிர் நிலா வடம் கொள் கொங்கைக்கண்கள் மார்பு அகலம் மூழ்கும் புது நிலாவிய நன் போகம் விடுவர் புன் சமயத்தோர் ஏ—பூரண சந்திரன் [ஒளி] விட்டு விளங்க அவரது சிவந்த வாயில் நகையொளி தோன்றச் செறிந்த ஒளிமிக்க முத்துவடத்தைத் தாங்கிய முலைக்கண்கள் தமது மார்பகத்தே மூழ்கும்படி அழுந்தி அநுபவித்து நாடோறும் புதுமை தங்கிய நல்ல அநுபோகத்தைக்கைவிடுவார்கள் இவ்வழிநில்லாத அவமாய சமயத்தார் என்றவாறு.*

*இச்செய்யுள் ஸ்திரீபோகமாகிய அநுபவ சுகத்தைக் கூறிற்று* (19)

செய்யுள் — 30.

ஊடுவ துணர்வ துற்ற
    கலவிமங் கையரை யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து
    வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக்
    குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி
    இத்தினின் றூர்கள் முத்தர்.

என்பது: *ஊடுவது உணர்வது உற்ற கலவி மங்கையரை உள்கி வாடுவது அடியில் வீழ்ந்து வருந்துவது அருதவம் – கலவி பொருந்தின மாதர் தம்முடன்*

புதிதாகக்கூடிய மாதரை நினைத்துத் தம்முடன் ஊடுவத னால் அவரை ஊடல் தீர்ப்பது பொருட்டாகத் தளர் தலும் அவர்கள் அடிகளிலே வீழ்ந்து வருந்துவதுமே அரிதாகச் செய்யும் தவமாவது,—பின் கூடுவது உணர்வு கெட்டு—அப்படித் தவத்தில் நின்றபின்பு அந்த மகளி ரோடும் தன் அறிவுகெட்டுக் கூடுவது (முத்திஆம்),— குணம் எலாம் வேட்கையே ஆய் நீடுவது இன்பம் முத்தி இத்தில் நின்றோர் முத்தர்—இந்திரியங்களெல்லாம் ஒருமைப்பட விருப்பம் நிலைபெறுவது முத்தியின்பம் ஆவது இவ்வழியில் நின்றவர்களே முத்தராவர் என்ற வாறு.

இன்ப முத்தி என்பதனை முத்தியின்பம் எனமாறுக.

இச்செய்யுள் ஸ்திரீபோகத்தில் தவமும், முத்தியும், முத்தியின்பம் என்னும் முறைமையும், இதில் நின்றவர்களே முத்தராவர் என்பதும் கூறிற்று.

இதனாற் சொல்லியது அறிவும் தவமும் மோட்சமும் இது என்பது. (20)

செய்யுள்—31.

வீட்டினை யுளதென் றோடி
மெலிவதிங் கென்னை வீடு
காட்டினோர் கண்டோர் கேட்டோர்
கரியவை யுண்டேல் காட்டீர்
நாட்டினில் அரச னாணைக்
கிசையவே நடந்து நாளும்
ஈட்டிய பொருள்கொண் டிங்கே
இன்பத்து ளிசைந்தி டீரே.

என்பது: *வீட்டினை உளது என்று ஓடி மெலிவது இங்கு என்னை—காணப்பட்ட ஸ்திரீபோகத்தை அநுபவியாது வேறே வீட்டின்பம் உளது என்று தடுமாறி மெலியும் தவத்தைச் செய்வது யாது காரணம்,—வீடு காட்டினோர் கண்டோர் கேட்டோர் கரி அவை உண்டேல் காட்டீர்—அந்த வீட்டினைக் காட்டினவர்களையும் கண்டவர்களையும் அதனைக் கேட்டவர்களையும் உண்டாகில் சான்று காட்டீர்,—அது காட்டமாட்டீர் ஆகையால்,-நாட்டினில் அரசன் ஆணைக்கு இசையவே நடந்து நாளும் ஈட்டிய பொருள்கொண்டு இங்கே இன்பத்துள் இசைந்திடீர் ஏ—உலகத்தின்கண் அரசன் ஆக்கினை வழியில் நடந்து நாடோறும் தேடிய பொருள் கொண்டு இப்பிரத்தியட்சமான இன்பத்தை இவ்விடத்திலே பொருந்துவீராமின் என்றவாறு.*

'இந்திர புரோகிதன்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் இருபத்தொன்றினாலும் உலகாயதன்மதம் கூறிற்று.

*தத்துவமும், குணமும், அவத்தைகளும், கரணங்கள் முதலானவையும் மதன நூலில் கண்டுகொள்க* (21)

**முதலாவது—உலகாயதன் மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத் திருவிருத்தம்—31.

---

## சிவஞான சித்தியார் பரபக்கம்

# முதலாவது-

# (ஆ)உலகாயதன்மதமறுதலை

திருவிருத்தம் —31.

# 1. (ஆ) உலகாயதன் மதமறுதலை

*செய்யுள் — 32.*

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

உள்ள தாவது கண்ட தென்றுரை
கொண்ட தென்னுல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப்
பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி கால ஞருயி
ருண்ண வின்றொரு காளையாய்
மெள்ள வேயுள ரென்று கொண்டு
விரும்பு மாறு விளம்பிடே.

என்பது: *உள்ளதாவது கண்டது என்று உரை கொண்டது என் உலகத்து—உலகாயதா! நீ உலகத்துக் காட்சியே மெய் என்றும் அநுமானம் முதலிய பொய் என்றும் கொள்ளப்பட்டது என்னை?—நீ பிள்ளையாய் வளர்கின்ற நாள் உனை பெற்ற தாயொடு தந்தையை கள்ளமே புரி காலனுர் உயிர் உண்ண இன்று ஒரு காளை ஆய் மெள்ளவே உளர் என்று கொண்டு விரும்பும் ஆறு விளம்பிடு ஏ—நீ பிறந்து வளர்கின்ற நாளில் உன் மாதாவின் உயிரையும் பிறப்பதன் முன் உன் பிதாவின் உயிரையும் கட்புலனுல் காணுத தொழிலைப் புரியும் இயமன் கொண்டுபோக நீ இளமை நீங்கி அறிந்த பின்பு மாதா பிதா நமக்கு உண்டு என்று மெல்லக் கருதிய நெறி நீ கூறிய காட்சி அன்று, அநுமானமே! காண் என்றவாறு.*

***கள்ளமேபுரி காலனுர்** என்பது இயமன் தொழில் கட்புலன் ஆகாமையின். **உண்ணல்**—கோடல். **விரும்பல்**—கருதல்.*

*இச்செய்யுள் உலகாயதன் கூறிய மதத்தை முறையே மறப்பான் எடுத்துக்கொண்டு, அவன் 'காட்சி அளவையே உள்ளது' என்பதனை மறுத்து 'அநுமானம் உண்டு' என்பது கூறிற்று.* (1)

*செய்யுள்* — 33

இடித்து மின்னி இருண்டு மேகம்
எழுந்த போதிது பெய்யுமென்
றடுத்த தும்மகில் சந்த முந்தி
அலைத்து வார்புன லாறுகொண்
டெடுத்து வந்திட மால்வ ரைக்க
ணிருந்து கொண்டல் சொரிந்த தென்று
முடித்த தும்மிவை காட்சி யன்றனு
மான மென்று மொழிந்திடே.

என்பது: *இடித்து மின்னி இருண்டு மேகம் எழுந்தபோது இது பெய்யும் என்று அடுத்ததும்— மேகமானது முழங்கியும் மின்னியும் இருண்டும் பரந்து எழுந்தவிடத்து இதனால் மழை பெய்யும் என்று நினைப்பு உண்டானதும்,—அகில் சந்தம் உந்தி அலைத்து வார் புனல் ஆறு கொண்டு எடுத்து வந்திட—ஆறானது அகில் சந்தனம் முதலியவற்றைத் தள்ளி அலைத்து ஒழுகும் நீரைக்கொண்டு வந்திட,—மால் வரை கண் இருந்து கொண்டல் சொரிந்தது என்று முடித்ததும்— அதனைக்கண்டு பெரிய மலையினிடத்தே மேகமிருந்து வருஷித்தது என்று நினைந்து நிச்சயித்ததும்,—இவை காட்சி அன்று அநுமானம் என்று மொழிந்திடு ஏ— இவை இரண்டும் நீ கூறிய காட்சி அன்று அநுமானம் என்று கூறுவாயாக என்றவாறு.*

இச்செய்யுள் மேகத்தின் தோற்றமும், அதனுடைய விகற்பமும் காரணாநுமானம் என்றும், வெள்ளம் கண்டு மலைத்தலையில் வருடம் உண்டு என்று காண்கை காரியானுமானம் என்றும் கூறிற்று. (2)

செய்யுள் — 34.

காண்ட லோவநு மான மாவதும்
  காட்சி முன்னதும் காட்சியேல்
பூண்ட பூத வுடம்பி னுள்ளெழு
  போத மென்கொடு கண்டனை
மாண்ட வாயில் மனங்கொள் ஞானம்
  உணர்ந்த தும்மநு மானமென்
றீண்டு பூத மியைந்த திவ்வுடல்
  என்ப தென்பிர மாணமே.

என்பது: காண்டலோ அநுமானம் ஆவதும் காட்சி முன்னதும் காட்சியேல்—நீர் அநுமானம் என்று கூறப்பட்டதும் காட்சியே, அது பூர்வக்காட்சி ஆகையால் பூர்வக் காட்சியும் காட்சி என்று நீ கூறில்,— பூண்ட பூத உடம்பினுள் எழு போதம் என் கொடு கண்டனை — பூதக்கூட்டத்தினுள் ஓர் அறிவு எழும் என்று கூறியது அநுமானம் அன்றி யாது கொண்டு கண்டனை, அன்றியும்,—மாண்ட வாயில் மனம் கொள் ஞானம் உணர்ந்ததும் அநுமானம் என்று—சத்தாதிகளைப் பொறி இடமாக நின்று அறியும் என்னும் அறிவும் காட்சியல்ல, அநுமானம் என்று கொள்வாயாக,— ஈண்டு பூதம் இயைந்தது இ உடல் என்பது என் பிரமாணம் ஏ — இதென்றிப் பிரமாணமும் இல்லை என்று

கூறுவை; அங்ஙனம் கூறில், பூதக் கூட்டத்தின் உருத் தோன்றும் என்று கூறியது யாது? உன் காட்சியும் அநுமானப் பிரமாணமே என்று அறிவாயாக என்றவாறு.

இச்செய்யுள் அநுமானம் இல்லை என்று கூற, மீளவும் மறுத்து, அதனை அநுமானம் உண்டு என்று கூறிப் பிரமாணம் உண்டு என்பதற்கு ஓர் எல்லை கூறிற்று.

இவ்விடத்துப் பூதங்களின் கூட்டத்து உடம்பாம் என்று சொல்லியது எந்தப் பிரமாணத்தால்? அநுமானத்தால் எனக் கொள்க. ஆதலால், இலிங்கத்தைக்கொண்டு இலிங்கியை ஊகிக்கிற ஞானம் அநுமானம் எனப்படும்.

இம்மூன்று பாட்டானும் 'அநுமானம் உண்டு' என்று சாதித்தது எனக்கொள்க. (3)

செய்யுள் — 35.

பழுதி லாமறை கண்ட நூல்பழு
தின்றி யுண்டது பாரின்மேல்
மொழிவர் சோதிட முன்னி யின்னது
முடியு மென்பது முன்னமே
அழிவி லாதது கண்ட னம்மவை
அன்றி யுஞ்சிலவா கமங்களின்
எழுதி யோர்படி யேன்று கொண்டிரு
நிதியெ டுப்பது மெண்ணிடே.

என்பது: பழுது இலா மறைகண்டநூல் பழுது இன்றி உண்டு அது பாரின்மேல் மொழிவர் சோதிடம் முன்னி இன்னது முடியும் என்பது முன்னமே அழிவிலாது அதுகண்டனம் – குற்றமில்லாத வேதம் முதலாகிய நூல்கள் குற்றமின்றிச் சொல்வன உள, அவை

எங்ஙனம்? என்னில், பூமியின்கண் சோதிட நூலோர் கருதி நிகழ்காலத்தில் நின்றும் எதிர்காலத்து வினையை முன்பு கூறா நிற்பார்கள், பின்பு அதுவும் அழிவில்லாத தாகக் கண்டனம்,—அவையன்றியும் சில ஆகமங்களில் எழுதிய ஓர் படி என்று கொண்டு இரு நிதி எடுப்பதும் எண்ணிடு ஏ—அவை ஒழிந்தும் சில நூற்பிரமாணத் தின் உள்ளபடியை எடுத்துக்கொண்டு இறந்த காலத் தில் வைக்கப்பட்டுப் பூமியின்கண் மறைந்து கிடக்கும் பொருள்களையும் எடுக்கப்படும்: அவை நூற்பிர மாணமே என்று அறிவாயாக என்றவாறு.

இச்செய்யுள் 'ஆகமப்பிரமாணம் உண்டு' என்று கூறிற்று.

'உள்ளதாவது' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் ஒரு தொடர். (4)

செய்யுள் — 36.

பூத மானவை நித்த மென்று
 புகன்ற தென்னை யுருக்களாய்
ஆத லோடழி வாகு மாதலின்
 ஆக்கு வோரவர் வேண்டிடும்
காத லோடு கடாதி மண்கொ
 டியற்று வோருளர் கண்டனம்
சீத நீரி லெழுந்த கொப்புள்
 நிகழ்ந்த மாருதச் செய்கையே.

என்பது: பூதம் ஆனவை நித்தம் என்று புகன்றது என்னை — பூதம் நான்கும் நித்தம் என்றும் அழியாத இயல்பை யுடைத்து என்றும் கூறியது என்னை? —உருக் கள் ஆய் ஆதலோடு அழிவு ஆகும் ஆதலின் ஆக்கு

வோர் அவர் வேண்டிடும் – பூதக்கூட்டத்தில் உருத் தோன்றுதலும் கெடுதலும் உண்டு ஆதலால் இவை நித்தம் அன்றி இவை கூட்டுவான் ஒரு கர்த்தா வேண்டும்; அஃது என்போல? என்னில்,– காதலோடு கடாதி மண் கொடு இயற்றுவோர் உளர் கண்டனம் – நீ உவமை கூறிய கடாதிகளையும் மண்ணைக்கொண்டு உண்டாக்குவானைக் காண்டலால்,—சீதம் நீரில் எழுந்த கொப்புள் நிகழ்ந்த மாருத செய்கையே – நீரினிடமாகக் குமிழி தோன்றுமாபோல மனம் முதலாயின தோன் றும் என்று கூறினாய்; குமிழியும் வாயுவால் உண்டாம் ஆகையால், உருவிடத்திலும் மனம் முதலானவற்றைக் கூட்டுதற்கு ஒரு கர்த்தா வேண்டும் என்று அறிவாயாக என்றவாறு.

இச் செய்யுள் முறையானே 'பூதங்கள் நித்தம்' என்பதனையும், 'அவற்றின் கூட்டத்தால் உருக்கள் தோன்றி அவ்வுருக்களில் புத்தி முதலாயின தோன்றும்' என்பதனையும் மறுத்து, இதனை ஆக்குவான் ' ஒரு கர்த்தா உண்டு' என்றும் கூறிற்று. (5)

செய்யுள் — 37.

நீரின் வங்தெழு கொப்புள் நீரது
வாயெ ழும்நிகழ் பூதமும்
ஓரின் வேறுணர் வாயெ ழா அவை
பூத மாகி யுதித்திடும்
தேரி னூறடை காய்செ றிந்தவை
சேர வேறு சிவப்பெழும்
பாரி னிற்பிரி யாது புந்தி
பழிப்பு டம்பு கிடக்கவே.

என்பது: *நீரின் வந்து எழு கொப்புள் நீர் அது ஆய் எழும் நிகழ் பூதமும் ஓரின் வேறு உணர்வு ஆய் எழா அவை பூதம் ஆகி உதித்திடும் — நீரின்கண்ணே தோன்றும் குமிழியும் நீர் ஆமாறு போல விளங்கிய பூதமும் விசாரிக்கு மிடத்து வேறாக அறியும் அறிவு ஆகாது அவை காய பூதமே ஆம்,—தேரின் நூறு அடைகாய் செறிந்து அவை சேர வேறு சிவப்பு எழும் — அன்றியும், ஆராயும் வழி நூறும் காயும் அடையும் கூடி அவை கலந்த விடத்து ஒரு சிவப்பு உண்டாமாறு போலப் பூதக்கூட்டத்தின் ஓர் அறிவு எழும் எனக் கூறியது,—பாரினில் பிரியாது — பூமியிடத்துச் சிவப்புச் சேர்வையை நீங்காது,—புந்தி பழிப்பு உடம்பு கிடக்கவே — அச் சேர்வைபோலப் புத்தியும் அவ்வுடலைவிட்டு நீங்காதாகவேண்டும்; அங்ஙனம் அன்றி, உடல் கிடக்கப் புத்தி நீங்குகையால் நீ கூறியது பழிப்பாம் என்றவாறு.*

*பழிப்பு என்றதனைப் பின்னே கூட்டுக. கொப்புள் விகாரம். பிரியாது என்னும் சொல்லைப் புத்தியுடனும் கூட்டுக.*

*இச்செய்யுள் 'பூதத்தின் கூட்டத்தில் அறியும் அறிவு தோன்றும்' என்பதனை மறுத்துப் 'பூதத்தில் தோன்றியது காய பூதமேயாம்' எனக் கூறிற்று.* (6)

*செய்யுள் — 38.*

கூறு சேர்வையின் வந்த போது
சிவப்பெ னுங்குண மொன்றுமே
வேறு வேறு புலன்கு ணங்கள்
உடற்கண் வந்து விளைந்ததென்

நூறு காயடை கூடும் வேறொரு
வன்ற னாலென நோக்கிநீ
தேறு பூத செயற்கும் வேண்டும்
ஒருத்த னென்று தெளிந்திடே.

என்பது: கூறு சேர்வையின் வந்தபோது சிவப்பு எனும் குணம் ஒன்றுமே வேறு வேறு புலன் குணங்கள் உடற்கண் வந்து விளைந்தது என்—நூறும் காயும் அடையும் என்று கூறப்பட்ட சேர்வையின்கண் வந்தவிடத்துச் சிவப்பு எனும் ஒரு தன்மையே காணப்படும்; அப்படி ஒரு தன்மையே ஆகாது புலன் என்றும் பொறி என்றும் குணங்கள் என்றும் தனித்தனி உடற்கண் வந்து உண்டாகியது என்னை? அஃதன்றியும், நூறு காய் அடை கூடும் வேறு ஒருவன் தனால் என நோக்கி நீ தேறு பூத செயற்கும் வேண்டும் ஒருத்தன் என்று தெளிந்திடு ஏ—நூறும் காயும் அடையும் சிவப்பு ஏறக் கூட்டுதற்கு ஒருவன் வேண்டும் என்பதனை நீ கருதியது போலப் பூதச் செயற்கும் ஒருத்தன் வேண்டும் என்று நிச்சயமாகத் தெளிந்திடுவாயாக என்றவாறு.

தேறித் தெளிந்திடு எனக் கூட்டுக.

இச்செய்யுளும் 'பூதக்கூட்டத்து அறிவு முதலிய தோன்றாது' என மறுத்துத் 'தோற்றுவிப்பான் ஒரு கர்த்தாவுண்டு' எனக் கூறிற்று. (7)

செய்யுள் — 39.

ஆன லைம்பொறி யுண்டி நித்திரை
அச்ச மைதுன மாதியாய்
ஊனில் வந்திடு முன்பி லாதவை
என்று ரைக்கின் உலூதைபோல்
வானின் வந்திடு மாதர் ஆணலி
ஆகி மானுட ராதியாய்
யோனி பன்மையு மின்று பூதம்
உறும்பு ணர்ச்சியோர் தன்மையே.

என்பது: *ஆன ஐம்பொறி உண்டி நித்திரை அச்சம் மைதுனம் ஆதி ஆய் ஊனில் வந்திடும் முன்பு இலாதவை என்று உரைக்கின் உலூதைபோல்*—சிலம்பி பிடித்து நூல் தோன்றுமா போல முன்பு இலாதவையான ஐம்பொறி உணவு துயில் பயம் மைதுனம் முதலியவை காயத்தின் குணமாக இப்போது உண்டாம் என்று நீ சொல்லில்,—*வானின் வந்திடும் மாதர் ஆண் அலி ஆகி மானுடர் ஆதி ஆய்*—மாதர் ஆண் அலியாகியும் மானுடாதியாகியும் ஆகாயத்தினின்றும் தோன்றல் வேண்டும்,—*யோனி பன்மையும் இன்று பூதம் உறும் புணர்ச்சி ஓர் தன்மையே*—பூதக்கூட்டம் ஒரு தன்மையாகலான் மிருக பசு பட்சி தாவராதிகள் ஆகிய யோனி பேதமும் இல்லையாம்; ஆகையால் நீ கூறியது பொருளன்று என்றவாறு.

**ஆன ஐம்பொறி** என்றது முன்பு இல்லவையாய் இப்பொழுது உண்டானவை என்க. உலூதை — சிலம்பி.

இச்செய்யுள் 'ஐம்பொறி முதலிய முன்பு இல்லவையாய் இப்போது உண்டாம் என்னின், மாதர் ஆண் அலி ஆகிய பேதங்களும் இப்பொழுது உண்டாம் எனப்படும். ஆகையால் அவை இப்போது உண்டானவை அன்று' என மறுத்துக் கூறிற்று

'நீரின் வந்தெழும்' என்னும் செய்யுள்முதல் இச் செய்யுள்காறும் முறையானே புத்தி முதலியன இப்போதுண்டாம் என்பதனைக் கூறிற்று. (8)

செய்யுள் — 40.

ஐந்து நான்கொரு மூன்றி ரண்டுட
னொன்ற தாயுட லங்களின்
வந்தி டாவுணர் விந்தி யங்களும்
வன்ன பன்மையு மின்மையாம்
புந்தி யோடிய வன்ன போக
குணங்கள் பூத புணர்ச்சிதான்
தந்தி டாதிவை பேத மாயிட
வந்த வாவினை தந்தவா.

என்பது: ஐந்து நான்கு ஒரு மூன்று இரண்டுடன் ஒன்றது ஆய் உடலங்களின் வந்திடா உணர்வு இந்தியங்களும் வன்ன பன்மையும் இன்மையாம்—நீ முன்பு இல்லையென்று கூறிய கன்மம் இல்லையாயின் யோனி பேதமும் இல்லையாய் அவ் யோனி பேதங்களின் உண்டாம் உடலங்களின் இந்திரியங்களும் ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்று என்னும் அறிவுகளும் இல்லையாம்; அஃதன்றியும்,—புந்தி ஓடிய வன்ன போக குணங்கள் பூத புணர்ச்சிதான் தந்திடாது—புந்தியால் அறியும் அக்ஷரங்களும் புசிப்புகளும் குண

*பேதங்களும் பூதக்கூட்டம் தரமாட்டாது,—இவை பேதம் ஆயிட வந்த ஆ வினை தந்த ஆ—இந்திரியம் மிகக் குறைவாகவும் சாதிபேதமாகவும் குணபேதமாக வும் இப்படிப் பேதித்திட வந்த அதனைக் கன்மம் தந் தது என்று அறிவாயாக என்றவாறு.*

*முன்னர் வன்னம் சாதி; பின்னர் வன்னம் அக்ஷரம்.*

*இச்செய்யுள் 'கன்மமில்லை' என்பதனை மறுத்துக் கூறிற்று.* (9)

*செய்யுள்* — 41.

அறிவு பூதம தென்னில் வேறு
புறத்த றிந்தமை கண்டிலம்
செறிவு தானுட லத்தெ னிற்சவ
மான போதுடல் தேருமோ
குறிகொ ளாதுடல் வாயு வானது
கூடி டாமையி னென்னினீ
பிறித ராதுயிர் நிற்க ஞான
முறக்க மென்பிற வாததே

என்பது: *அறிவு பூதம் அது என்னில் வேறு புறத்து அறிந்தமை கண்டிலம் – பூதங்களே அறிவும் என்று நீ கூறில் புலப்படக் காணப்பட்ட மண்ணிலும் நீரிலும் நெருப்பிலும் காற்றிலும் அறிவு கண்டில மன்றே!—செறிவுதான் உடலத்து எனில் சவம் ஆன போது உடல் தேருமோ—உடலிலே செறிந்தபோது காணும் தோன்றுவது என்னில், சவமாய்க்கிடந்த காலத்து அறிவு கண்டதில்லையே,—குறிகொளாது உடல் வாயு ஆனது கூடிடாமையின் என்னில் நீ—*

குறிக்க மாட்டாது காணும் வாயுப் பிரிந்தவாறே என்று நீ கூறில்,—பிறிதாராது உயிர் நிற்க ஞானம் உறக்கம் என் பிறவாதது ஏ—அந்த வாயுவானதும் உறக்கத்திலே பிரியாது நிற்க அறியாமல் நிற்பானேன்? ஆகையால், பூதக்கூட்டத்தே அறிவு தோன்றுது; வேறோர் அறிவுண்டு என்று அறிவாயாக என்றவாறு.

இச்செய்யுள் 'ஆன்மா இல்லை' என்பதனை மறுத்துக் கூறிற்று. (10)

செய்யுள் — 42

அறிவு டற்குண மென்னி லானைய
தாதி யந்த மெறும்பதா
உறுமு டற்பெரி தான வற்றின்
உதித்தி டும்பெரி தாகவே
சிறுவு டற்செறி ஞான மும்சிறி
தாயி டும்பரி ணமமும்
பெறுமு டற்சிறி தாவ தென்பெரி
தாவ தென்சில பேசிடே.

என்பது: அறிவு உடல் குணம் என்னில்—அறிவென்று வேறொரு முதல் இல்லை, உடற்குணமே காணும் அறிவு என்று நீ கூறின்,—ஆனை அது ஆதி அந்தம் எறும்பு அதா உறும் உடல் பெரிது ஆனவற்றின் உதித்திடும் பெரிது ஆகவே சிறு உடல் செறி ஞானமும் சிறிது ஆயிடும்—ஆனைமுதல் எறும்பு ஈறாக எடுத்த உடலில் பெரிதானவற்றின் உதிக்கும் அறிவு பெரிதாயும், சிறிதானவற்றின் உதிக்கும் அறிவு சிறிதாயும் இருக்கவேண்டும்; அங்ஙனமன்றி,—பரிணமமும்

*பெறும் உடல் சிறிது ஆவது என் பெரிது ஆவது என் சில பேசிடு ஏ—பரிணாமத்தையுடைய யானையுடற்கு அறிவு சிறிதாயும் சிறிய உடலையுடைய மானுடற்கு அறிவு பெரிதாயும் இருப்பது என்? ஆகையால், அறிவு உடற்குணம் அன்று; வேறு நீ சொல்லத்தக்கது உண் டாயிற் சொல் என்றவாறு.*

*இச் செய்யுள் 'அறிவு உடற்குணம்' என்பதனை மறுத்து 'ஆன்மாவின் குணம்' என்று கூறிற்று.*

இது கன்மத்தால் என்பது கருத்து.

*அன்றியும், சரீரம் வளருந்தோறும் அறிவு வளரவும் அது கெடுந்தோறும் கெடவும் காண்டலானும், சரீரத்தைப் பிரிந்து சேதனன் நிற்கக் காணப்படாதமையானும், சரீர காரியம் என்னில் பிருதிவி சேடணமாகிய இந்தனம் பெருகுந்தோறும் பெருகிச் சுருங்குந்தோறும் சுருங்கி அதனில் வேறுபடப்படாதாகி இந்தனம் இல்லாதவழி இல்லையாகின்ற அக்கினி இந்தன காரியமாகி இந்தனத்துடன் ஒன்றாகா வாறுபோல அறிவு சரீர காரியம் ஆகிச் சரீரத்துடன் ஒன் றாகாது. அன்றியும் அறிவு மகா சரீர வானில் அற்ப சரீரி யாயினன் சகல சாத்திர ஞானமுடையனாகக் காண்டலின் சரீர விருத்தியால் சேதனத்துக்கு விருத்தியில்லை எனக் கொள்க என்க.* (11)

செய்யுள் — 43

போத மும்மெலி வாகி யும்மலி
பூத மானவை கூடலிற்
பேத மோடு பெருத்து டற்கள்
சிறுத்த பெற்றிமை யென்றிடின்

ஓது டற்பெரி தான வும்சிறி
தாயி டாசிறி தானவும்
நீதி யிற்பெரி தாயி டாமுன
முள்ள தன்மையி னீடுமே.

என்பது: *போதமும் மெலிவு ஆகியும் மலிபூதம் ஆனவை கூடலில் பேதமோடு பெருத்து உடல்கள் சிறுத்த பெற்றிமை என்றிடின்—அற்றன்று, உடற் குணமே காணும் அறிவு என்றது; பூதமானவை கூடுங் காலத்துப் போதம் மெலிவாகியும் பூதம் மலிவாகியும் கூடலில் அறிவு சிறுத்துக் காயம் பெருத்தது என்றும் போதம் மலிவு ஆகியும் பூதம் மெலிவு ஆகியும் கூட லில் அறிவு பெருத்துக் காயம் சிறுத்தது என்றும் அங் ஙனம் முறைமை என்றும் நீ கூறின்,—ஓது உடல் பெரிது ஆனவும் சிறிது ஆயிடா சிறிது ஆனவும் நீதி யில் பெரிது ஆயிடா முனம் உள்ள தன்மையின் நீடும் ஏ—பூதக்கூட்டத்தால் தோன்றும் என்று நீ கூறிய வுடல் சிறிதாயிடாது, சிறிதானவுடல் பெரிதாயிடாது முன்னம் உள்ள முறைமைப்பாட்டில் நிற்கவேண்டும்; அங்ஙனம் நில்லாது பெரியவுடல் காலம் சென்றால் சிறி தாயும் சிறியவுடல் காலம் சென்றால் பெரிதாயும் இருத்த லால் பூதக் கூட்டத்தில் தோன்றும் அறிவன்று; கன் மத்துக்கு ஈடாக வடிவெடுத்துக் கோடலாமென்று கரு துவாயாக என்றவாறு.*

*நீடுதல்—நிலைபெறுதல்.*

***இச்செய்யுளும் 'அறிவு உடற்குணமே, பூதங்களினு டைய புணர்ச்சி விசேடங்களினாலே காயமும் அறிவும் ஏறிக் குறைந்திருந்ததென்று' கூறுவதனை 'அல்ல'என்று மறுத்துக் கூறிற்று.*** (12)

செய்யுள் — 44

இயல்பு காணிவை யென்னின் வேறிசை
　　பெண்ணொ டாணிரு தன்மையாம்
செயல்கொ ளாவிவர் செய்தி காரண
　　மாக வந்து செனிப்பதென்
இயல்ப தாமுடல் பூத காரிய
　　மாவ தும்மிலை யாகுமான்
மயல தாம்வினை யாலொ ருத்தன்
　　வகுத்த தன்மையின் வந்ததே.

என்பது: *இயல்பு காண் இவை என்னின்*-கன்மம் உடலாக எடுத்துக் கோடற்கு அறிவில்லை, இவை எல்லாம் பூத இயல்பு என்று நீ கூறின்,—*வேறு இசை பெண்ணொடு ஆண் இருதன்மை ஆம் செயல் கொளா*—இயல்பு ஒருதன்மைப்பட்டிருத்தலின்றி வேற்றுமைப் படப் பொருந்தி இரண்டு தன்மையாகிய பெண் ஆண் என்னும் முறைமையைக் கொள்ளாது,—*இவர் செய்தி காரணம் ஆக வந்து செனிப்பது என்*—இஃதன்றியும், பூதகாரணம் ஆகில் இரண்டு தன்மைப்படப் பெண் ஆண் என்னும் முறைமை காரணமாகப் பிறப்பது என்னை?—*இயல்பது ஆம் உடல் பூத காரியம் ஆவதும் இலை ஆகும் ஆல்*—ஆகையால், இயல்பாம் என்ற உடல் பூத இயல்பும் அல்லவாய்ப் பூதகாரியம் ஆவதும் இல்லையாம்,—(அதனால்) *மயல் அது ஆம்*—நீ கூறியது மயக்கத்தை உடைத்தாம்,—*வினையால் ஒருத்தன் வகுத்த தன்மையின் வந்தது ஏ*—கன்மத்துக்கு ஈடாக ஒருத்தன் உண்டாக்கப்பட்ட தன்மையிலே வரும் உருக்கள் என்று அறிவாயாக என்றவாறு.

இச்செய்யுள் காயம் பேதப்படுவது இயல்பு என்பதனை மறுத்துக் கூறிற்று. (13)

செய்யுள் — 45

காரண மம்மவை யென்ற தென்னை
கடாதி போனிகழ் காரியம்
நேர ணைந்து சமைந்து நின்றிடு
மென்ப தும்மது நேர்கிலோம்
போர ணைந்திடு மொன்றொ டொன்று
பொருந்து மாகில் வருந்தியும்
நீர ணைந்தொரு தீயி னின்றது
கண்ட தாயி னிகழ்த்திடே.

என்பது: *காரணம் அவை என்றது என்னை கடாதி போல் நிகழ்காரியம் நேர் அணைந்து சமைந்து நின்றிடும் என்பதும் அது நேர்கிலோம்-உருக்கட்குப் பெண் ஆண் செய்தி காரணம் என்று நீ கூறியது என்னை? மண்ணின்கண் கடாதிகள் தோன்றுமாறு போலப் பூத காரணத்தில் பெண் ஆண் காரியப்பட்டுத் தம்மில் கூடிய கூட்டத்தே உருச்சமைந்திடும் என்று நீ சொல்லுகிற இது யாம் பொருந்துகிறோமில்லை; அஃது எங்ஙனம்? என்னில், போர் அணைந்திடும் ஒன்றொடு ஒன்று—நீ கூறிய பூதங்கள் நான்கும் தம்மில் மாறுபடும்,—பொருந்தும் ஆகில் வருந்தியும் நீர் அணைந்து ஒரு தீயின் நின்றது கண்டது ஆயின் நிகழ்த்திடு ஏ—அவை மறுதலையாகாமல் கூடுமாயின் நீரும் தீயும் ஓரிடத்திற் கூடிநின்ற தன்மையை உன் காட்சியளவையிற்கண்டது உண்டாயின் வருந்தியும் சொல்வாயாக என்றவாறு.*

இச்செய்யுள் பூத காரணத்தால் பெண் ஆண் என்னும் காரியம் உண்டாகாது என்று மறுத்துக் கூறிற்று.

அப்படியாகில் நீரிலே சித்தர்கள் விளக்கு எரிக்கக் கண்டோம், சமுத்திரத்திலே வடவாமுகாக்கினி நிற்கும் எனக்கேட்டோம் என்பையாகில், சித்தர்களும் ஔடதத்திலே நிறுத்தினதல்லது நீரில் விளக்கு நில்லாது. நிற்கில் எவ்விடத்திலும் நிற்கவேண்டும். வடவாமுகாக்கினியும் சமுத்திரத்திலே நிற்கும். அது நாலு மலைக்கு நடுவே நிற்கும். அது சாத்திரங்களிற் காண்க. விரிக்கிற் பெருகும் (14)

செய்யுள் — 46.

பூத மேவு புணர்ச்சி யேபுரி
காய காரண மாகுமேல்
காத லாெணாடு பெண்ணு மேவு
புணர்ச்சி காரண மாவதென்
ஆதி யேயுல கத்தி லாெணாடு
பெண்ணு மாயணை காரியம்
நாத னாயகி யோடு கூடி
நயந்த காரண மென்பரே.

என்பது: பூதம் மேவு புணர்ச்சியே புரி காய காரணம் ஆகுமேல் — பூதக்கூட்டமே பொருந்தப்பட்ட காயத்துக்குக் காரணமாயின்,—காதல் ஆணொடு பெண்ணும் மேவு புணர்ச்சி காரணம் ஆவது என் — பெண் ஆண்கள் காதலோடு புணரும் புணர்ச்சி காரணமாக உருக்கள் காரியப்படுவானேன்? — ஆதியே உலகத்தில் ஆணொடு பெண்ணும் ஆய் அணை காரியம் நாதன் நாயகியோடு கூடி நயந்த காரணம் என்பர் ஏ — அநாதியே

கர்த்தா நாயகியோடு கூடிப் போகத்தை விரும்ப அது காரணமாக ஆதியே உலகின்கண் ஆண் பெண் காரியப் பட்டது காரணமாக உருக்கள் காரியப்பட்டு வருத லன்றிப் பூதக்கூட்டம் காரணம் எனப்படாது என்றவாறு.

இச்செய்யுள் உருக்கட்குப் பூதம் காரணம் அன்று, கர்த்தாவே நிமித்த காரணன் என்பது கூறிற்று.

சீவனும் உருக்களை வகுத்துக் கொள்ள அறியாது. ஸ்திரீபுமான்களும் அப்படியே. கர்த்தாவும் சத்தி சிவமாக வடிவுகொள்ளச் சந்நிதிமாத்திரத்திலே கன்மத்துக்கு ஈடாக உருக்கள் தோன்றும் என்றறிக.

'இயல்புகாண் இவை' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் 'உருக்கட்குப் பூதம் காரணமன்று' என்று மறுத்துக் கூறியதாம். (15)

செய்யுள் — 47.

கந்தம் வெம்மை கலந்தி டும்புனல்
கன்ம மென்செய்த தென்றனே
சந்த னந்தழல் சார நீரிரு
தன்மை யுற்றிடு மாறதோர்
தந்த கன்ம மிரண்ட ணைந்து
தருஞ்சு கத்தொடு துக்கமும்
சிந்தி யாவெழு சீவ னுற்றிடும்
வேறு டற்கிலை தேறிடே,

என்பது: கந்தம் வெம்மை கலந்திடும் புனல் கன்மம் என் செய்தது என்றனை — புனலானது சந்தனாதி களைக் கூடிக் குளிர்ந்தும் நெருப்பைக்கூடி வெப்பம்

கலந்தும் இருத்தலால் இஃது என்ன கன்மம் செய்தது? ஆதலால், கன்மம் இல்லை என்று கூறினாய்,—சந்தனம் தழல் சார நீர் இருதன்மை உற்றிடும் ஆறு அது ஓர் — நீ உவமம் கூறிய நீர் சந்தனத்தையும் தழலையும் சார ஒரு பொருட்கு இரண்டு தன்மை உண்டானவாறு போல விசாரிப்பாயாக,—தந்த கன்மம் இரண்டு அணைந்து தரும் சுகத்தொடு துக்கமும் — கன்மம் இரண்டுவகைப்படப் பொருந்திச் சுகதுக்கங்களைக் கொடுக்கும்,—சிந்தியா எழு சீவன் உற்றிடும் வேறு உடற்கு இலை தேறிடு ஏ — அந்தச் சுகதுக்கங்களை உற்று அறிந்திடுவது சேதனமான உயிருக்கு அல்லது அசேதனமான உருக்கட்கு இல்லை என்று அறிவாயாக என்றவாறு.

தந்த கன்மமாவது — முன் செனனத்தில் அறிவு உண்டாக்கிக் கொண்டதாய்ப் பின் செனனத்தில் வந்து கூடிய கன்மம். சிந்தியா எழு சீவன் என்றது சுகதுக்கங்களுக்குப் பிரியாப்பிரியப்படுதலை.

இச்செய்யுள் கன்மமில்லை என்பதனை மறுத்துக் கூறிற்று. உன்னில் இரண்டு பேதமாகச் சொல்லப்பட்ட இந்திரிய சைதன்னிய வாதி போலன்று, சரீரமும் செவியும் நாவும் மூக்கும் கண்ணும் கிடக்கச் சைதன்னியம் இல்லாமையால் சீவனே சைதன்னியம் என்று கொள்வாயாக என்பது. (16)

செய்யுள் — 48.

இன்ப மெய்தி யிருந்து நீவினை
இல்லை யிங்கியல் பென்றிடில்
துன்ப மெய்திடு வானென் மற்றிது
சொல்லி டாய்சொல வல்லையேல்

முன்பு செய்திடு கன்ம மென்றறி
கன்ம மும்முதல் வன்னறிந்
தன்பி னுலுறு விக்கு மப்பய
ஞங்க மைப்பொ டநாதியே.

என்பது: இன்பம் எய்தி இருந்தும் நீ வினை இல்லை இங்கு இயல்பு என்றிடில் – நீ ஸ்திரீகளுடன் கூடிப் போக இன்பத்தை அனுபவித்திருந்தும் இயல்பு ஒழியக் கன்மமில்லை என்று கூறில்,—துன்பம் எய்திடுவான் என் – அந்த ஸ்திரீகள் நீங்கினவிடத்துத் துக்கப்படுவானேன்,—மற்று இது சொல்லிடாய் சொல வல்லையேல் – இஃது எத்தால் வந்தது என்று சொல்லவல்லையாகில் சொல்லுவாயாக,—முன்பு செய்திடு கன்மம் என்று அறி – ஸ்திரீகளுடன் கூடிப் போகத்தை அநுபவிப்பதும் அவரை நீங்கித் துன்பத்தை அநுபவிப்பதும் நீ முன் செய்த புண்ணிய பாவங்கள் என்று அறிவாயாக,—கன்மமும் முதல்வன் அறிந்து அன்பினால் உறுவிக்கும் – அந்தப் புண்ணிய பாவங்களும் தாமாக அணைவனவல்ல, கர்த்தாவானவன் அறிவுகள் செய்த கன்மத்துக்கு ஈடாக அறிந்து அநுக்கிரகத்தாலே ஊட்டுவன்,—அ பயன் ஆங்கு அமைப்பொடு அநாதியே – அறிவும் கன்மமும் அதனைக் கூட்டுதலும் அநாதியே உள்ளது என்றவாறு.

மற்று-அசை. அறிவு அதிகார முறைமையால் வந்தது. பயன்-கன்மம்.

இச் செய்யுள் 'புண்ணியபாவம் உண்டு' என அறிவித்தலைக் கூறிற்று.

துன்பம் மடலேறுகை முதலானவை. வேம்பு கைப்பதும், கரும்பு தித்திப்பதும் இயல்பு என்னில் தித்தித்தது

*என்றும் கைத்தது என்றும் சொல்லுகிற சைதன்னியம் என்று உண்டு காண், அவன் கன்மத்துக்கு ஈடாகச் சுக துக்கப்படுவன் எனக்கொள்க.* (17)

*செய்யுள்* — **49.**

அநாதி யேலமை வின்றெ னின்மலம்
மாயை கன்ம மணுச்சிவன்
அநாதி கன்ம மணுக்கள் செய்ய
அறிந்து கன்ம முடற்செயா
அநாதி காரிய மாமு டற்கள்
அசேத னம்மணை யாவறிந்
தநாதி யாதி யமைக்க வேண்டு
மமைப்பி னேடு மநாதியே.

என்பது: *அநாதியேல் அமைவு இன்று எனின்— நீர் கூறியவை அநாதியே யாமாகில் ஒருவனால் கூட்டுதல் இல்லை என்று கூறின்,—மலம் மாயை கன்மம் அணு சிவன் அநாதி—மலமும் மாயையும் கன்மமும் ஆன்மாவும் கர்த்தாவும் அநாதி,—கன்மம் அணுக்கள் செய்ய அறிந்து கன்மம் உடல் செயா—கன்மத்தை ஆன்மாக்கள் செய்ய அந்தக்கன்மம் தானுய் அறிந்து ஆன்மாக்களுக்கு உருவை எடுத்துக் கூட்டமாட்டாது,—அநாதி காரியம் ஆம் உடற்கள் அசேதனம் அணையா அறிந்து— அநாதியே காரியப்பட்டுவரும் உடற்கள் அசேதனம் ஆகையால் ஆன்மாவை அறிந்து கூடமாட்டா,—அநாதி ஆதி அமைக்கவேண்டும்—ஆகையால் அநாதியாகிய கர்த்தா ஆன்மாவையும் கன்மத்தையும் அதற்குப் பொருந்தின உருவையும் ஆதியாகக் கூட்டல்*

*வேண்டும்,—அமைப்பினோடும் அநாதியே—அப்படி அவன் கூட்டின கூட்டரவும் அநாதியாகையால் இவையும் அநாதிதான் என்றவாறு.*

இச் செய்யுள் '*கன்மமும், உயிரும், உடலும் ஒருவன் கூட்டப்படுதலால் அநாதியன்று*' என்றவிடத்து இவையெல்லாம் அநாதியாகும், இவை அசேதனம் ஆகையாலே ஒருவன் கூட்டவேண்டும், அதுகொண்டு ஆதியென்று கூறப்படும், அக்கூட்டரவும் அநாதிப்பட்டு வருகையால் எவையும் அநாதி என்பது கூறியது.

'*கந்தம்வெம்மை*' என்னும் செய்யுள்முதல் இச்செய்யுள் காறும் '*கன்மம் உண்டு*' என்னும் அதற்குப் பிரமாணம் கூறியது. (18)

செய்யுள் — 50.

காணொ ணாகர ணங்க ளுக்குயிர்
கண்டி டாமையி னின்றெனிற்
காணு மோகடங் கண்ட கண்ணினைக்
கண்டு நிற்பதுங் கண்ணதே
காணொ ணாதுயிர் தானு மிப்படி
கண்டி டுங்கர ணங்களைக்
காணொ ணாகர ணங்க ளுக்குயி
ருண்மை யாவதுங் கண்டிடே.

என்பது: *காண ஒணா கரணங்களுக்கு உயிர் கண்டிடாமையின் இன்று எனின்—புறக்கரணங்களுக்கு உயிர்காண ஒண்ணாது ஆகையால் காட்சிக்குப் புலப்படாமையின் ஆன்மா என்று ஒன்றில்லை என்று கூறின்,—*

காணுமோ கடம் கண்ட கண்ணினை கண்டு நிற்பதும் கண் அதே—சரீரமானது தன்னைக்கண்ட கண்ணைத் தான் காண வற்றோ? அச் சரீரத்தைக்கண்டு நிற்பதும் கண்ணுக்குள்ள தொழிலே காண்,—காண ஒணாது உயிர் தானும் இப்படி—காட்சியளவையாகிய கண்ணுக்குக் காண ஒண்ணாது என்ற உயிரும் இத்தன்மைத்து,— கண்டிடும் காணங்களை – உயிர்சேதனம் ஆகையால் காணங்களைக் கண்டு நிற்கும்,—காண ஒணு காணங்களுக்கு – கண்களைச் சரீரம் அறியாதவாறுபோலக் காணங்களும் அவ்வான்மாவைக் காணவொண்ணு, உயிர் உண்மை ஆவதும் கண்டிடு ஏ – ஆகையால் ஆன்மாவை உண்மையாக உண்டு என அறிவாயாக என்றவாறு.

இச் செய்யுள் 'காட்சியளவைக்குக் காணப்படாது ஆகையால் ஆன்மா இல்லை' என்றவனை 'உண்டு' என மறுத்துக் கூறிற்று. (19)

செய்யுள்—51.

அங்கி யானது தானு மொன்றை
அணைந்து நின்று நிகழ்ந்திடும்
பங்கி யாதுயிர் தானு மிப்படி
பற்றி யல்லது நின்றிடா
தெங்கு மார்தயி லத்தை யுண்டெழு
தீப மான தெரிந்திடும்
அங்க தாமுட னின்று கன்மம்
அருந்தி யாருயி ராவதே.

என்பது: அங்கி ஆனது தானும் ஒன்றை அணைந்து நின்று நிகழ்ந்திடும் பங்கியாது உயிர் தானும் இப்படி பற்றி அல்லது நின்றிடாது – நெருப்பானது

ஓர் இந்தனத்தைப்பற்றி நின்று தன் வடிவைக் காட்டும் தன்மையன்றித் தனித்துநின்று தன் வடிவைக் காட்டும் தன்மையை உடைத்தன்று; அதுபோல, ஆன்மாவும் ஓர் உருவைக் கூடியன்றி நிற்கமாட்டாது,—எங்கும் ஆர் தயிலத்தை உண்டு எழு தீபம் ஆனது எரிந்திடும்—தகளி எங்கும் நிறைந்த எண்ணெயைப்பருகி ஓங்கிய தீபமானது எரியாநிற்கும்,—அங்கு அது ஆம் உடல் நின்று கன்மம் அருந்தி ஆர் உயிர் ஆவது ஏ—அப்படிக் கன்மத்தால் எடுத்துக்கொண்ட காயத்தினின்றும் கன்மத்தைப் புசிப்பது ஆன்மாவாம் என்றவாறு.

திரி காயத்திற்கும், எண்ணெய் கன்மத்திற்கும், தீபம் ஆன்மாவிற்கும் உவமை. பங்கியாது — அழியாது.

இச் செய்யுள் ஆன்மா ஒன்றோடு கூடியல்லது தனித்து நில்லாது என்பது கூறிற்று. (20)

செய்யுள் — 52.

அறிவு தானுட லத்தின் வேறது
வாயி றந்து பிறந்திடின்
அறிவு முன்புள திங்கு வந்து
மறிந்தி டாமைய தின்றெனின்
அறிவை யோகன வத்து நீநன
வத்தை யன்றுத ரத்திருந்
தறியு மவ்வறி வோம யக்கறி
வாத லாலறி யாதுகாண்.

என்பது: அறிவு தான் உடலத்தின் வேறு அது வாய் இறந்து பிறந்திடின் அறிவு முன்பு உளது இங்கு வந்தும் அறிந்திடாமையது இன்று எனின் — அறிவானது இவ்வுடலத்தின் வேறுபட்டு இறந்தும் பிறந்தும்

திரியுமாயின் அவ்வறிவு முன்பு உள்ளதாயின் இப்பிறப்பிலும் அறியாமையின்றி அறிவேயாய் இருக்கவேண்டும்; அஃது இல்லையே என்று நீ கூறின்,—அறிவையோ கனவத்து நீ நனவத்தை – நீ கனவு காணுமிடத்து அக்கனவை நனவு என்பதன்றிக் கனவு என்பது அறிதியோ ? அஃதன்றியும்; அன்று உதரத்து இருந்து அறியும் அவ்வறிவோ மயக்க அறிவு – நீ மாதா உதரத்தில் முந்து அறிந்த அறிவோ பூததேகமானபின்பு மயங்கின அறிவு,—ஆதலால் அறியாது காண் – ஆகையால் இறந்தும் பிறந்தும் திரிகையால் ஆன்மாவுக்கு அறியாமையே குணம் காண் என்றவாறு.

**இச்செய்யுள் 'ஆன்மா அறிவாகில் எப்பொழுதும் அறியவேண்டும்' என்பதனை மறுத்து 'ஆன்மாவுக்கு அறிவும் அறியாமையும் குணம்' எனக் கூறிற்று.** (21)

செய்யுள் — 53

இறந்தி டும்மறி வேபி றந்திடும்
என்ப திங்கிசை யாதெனின்
உறங்கி டும்பொழு தின்றி நின்றுணர்
விங்கு தித்திடு மாறதோர்
பிறந்த விவ்வுடல் போக வேறுடல்
பின்பு வந்தமை பேசிடின்
மறந்தி டுங்கன வத்தின் வேறுடல்
வந்த வாறு மதித்திடே.

என்பது: இறந்திடும் அறிவே பிறந்திடும் என்பது இங்கு இசையாது எனின்–இறந்த அறிவே பிறக்கும் என்று இவ்விடத்துக்கூறியது பொருத்தமுடைத்தன்று என்று நீ கூறின்,—உறங்கிடும்பொழுது இன்றி நின்று உணர்வு இங்கு உதித்திடுமாறு அது ஓர்–நீ

துயில் செய்யுமிடத்து முகத்திற்பாம்பு ஏறவும் அறிவின்றிக் கிடந்து விழித்தவிடத்து உணர்வில் நின்று பாம்பைக் காணவும் பயப்படுமாறு விசாரிப்பாயாக,—பிறந்த இ உடல்போக வேறு உடல் பின்பு வந்தமை பேசிடின்-இப்போது எடுத்துக்கொண்ட காயம் கெட்டால் பின்பு மற்றொரு காயம் உண்டாமபடி எப்படி? என்று சொல்லின்,—மறந்திடும் கனவத்தின் வேறு உடல் வந்த ஆறு மதித்திடே—நனவை மறந்திடும் கனவில் உன்னை எடுத்துக்கொண்டு திரியும் உடல் உன்னைக் கூடியவாறு எத்தன்மை அத்தன்மையாக என்று அறிவாயாக என்றவாறு.

இச்செய்யுள் 'இறந்த அறிவு பிறவாது' என்னும் அதனையும், 'முன்பு உள்ள சூக்கும தேகம் வந்து பின்பு உடல் ஆகாது' என்பதனையும் மறுத்துக் கூறிற்று.

அன்றியும், ஒரு சென்மத்துவைத்த பொருளைப் பிறிதொரு சென்மததுச் சாத்திரப் பிரமாணத்தால் அறிந்து காட்டுதலும், பிசாசாதி சனனமரண காலத்து விருத்தாந்தத்தை அடுத்தவர்க்கு அறிவித்தல் உளவாகவும் காணுகின்றாய் இதனை அறிவாயாக என்க. (32)

செய்யுள் — 54

கரணம் வாயு விடத்த டங்க
அடங்கி வந்தெழு காரியம்
மரண மான விடத்து மற்றிவை
மாய்ந்து பின்பு வருஞ்செயல்
கிரண மார்கலை கெட்டு திப்ப
இறப்பி னோடு பிறப்பையும்
தரணி யோர்கண் மதிக்கு ரைப்பர்
உயிர்க்கு மிப்படி சாற்றிடே.

என்பது: *கரணம் வாயு இடத்து அடங்க அடங்கி வந்து எழு காரியம் மரணம் ஆன இடத்து மற்று இவை மாய்ந்து பின்பு வரும் செயல்—ஒருவன் மரண மான இடத்து இந்திரியங்கள் கெட்டுப் பின்பு அவை வரும் முறைமைப்பாடு எத்தன்மைத்து? என்னில், ஒரு வன் மூர்ச்சித்தவிடத்து அக்கரணங்கள் சேட்டைப் பட்டாற்போலும்; இஃதன்றியும்,—கிரணம் ஆர் கலை கெட்டு உதிப்ப இறப்பினேடு பிறப்பையும் தாணியோர் கள் மதிக்கு உரைப்பர்—மதியினது கிரணம் பொருந் தின கலைகள் தன்னிடத்துக் கெட்டும் தோன்றியும் உலகத்துள்ளோர் அதனை மதிக்கும் இறப்பும் பிறப்பு மாகக் கூறி நிற்பார்கள்; அதுபோல,—உயிர்க்கும் இப் படி சாற்றிடு ஏ—ஆன்மாவுக்கும் இப்படிக் கூறுவாயாக என்றவாறு.*

*இச்செய்யுள், 'ஆன்மாவினுடைய தூல காயத்தினுள்ள கரணங்கள் சூக்கும காயத்திலும் பொருந்தும்' என்பதும், 'ஆன்மா நித்தியம்' என்பதும் கூறிற்று.*

*'காணெ கரணங்களுக்'கென்னும் செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் மீளவும் 'ஆன்மா இல்லை என்றும், ஆன் மாவுக்கு அறிவில்லை' என்றும், 'இறந்த அறிவு பிறவாது' என்றும், கூறுவதனை மறுத்துக் கூறியதாம். இதனல், 'வாயு இயங்காத காலத்துக் கரணம் இயங்காது' எனக்கொள்க.* (23)

செய்யுள் — 55

பூத மானவை காரி யங்கள்
பொலிந்து மன்னி யழிந்திடும்
ஆத லாலொரு நாத னிங்குளன்
என்ற றிந்துகொ ளையனே

பேத மான கடாதி மண்ணினில்
வந்த வா று பிடித்திடிற்
கோதி லாத குலால ஞல்வரு
செய்கை யென் று குறிப்பரே.

என்பது: *பூதம் ஆனவை காரியங்கள் பொலிந்து மன்னி அழிந்திடும் ஆதலால் ஒரு நாதன் இங்கு உளன் என்று அறிந்துகொள் ஐயனே—நீ கூறிய பூதங்கள் காரியப்பட்டுப் பொலிவினையுடைத்தாய்ப் புசிப்பளவும் நிலைபெற்று மீளவும் அழியாநிற்கும்; ஆதலால், இதனை ஆக்கியும் அழித்தும் செய்வான் ஒரு கர்த்தா உண்டு என்று அறிவாயாக,—பேதம் ஆன கடாதி மண்ணினில் வந்த ஆறு பிடித்திடில்—மண்ணினிடத்துக் கடாதி பேதம் வந்தாற்போலப் பூதகாரியமே காயம் என்னில்,—கோது இலாத குலாலனல் வரு செய்கை என்று குறிப்பர் ஏ—அம்மண்ணும் குற்றமில்லாத குலாலனது செய்கையால் காரியப்பட்டாற்போலக் கர்த்தாவினுடைய செய்கையால் பூதமும் காரியப்பட்டது என்று அறிவாயாக என்றவாறு.*

**ஐயனே என்றது இழிவின்கண் வந்தது.**

***அசேதனமாகிய மிருத்துச் சேதனனாகிய குலாலனலே காரியப்படுமாறு போல, பிரபஞ்சம் ஈசுரனலே காரியப்படும் என்று அறிவாயாக என்க.*** (24)

*செய்யுள் — 56*

வேத ஞரண ஞர ணம்மறி
யாவி ழுப்பொருள் பேதைபால்
தூத ஞயிரு கான டந்திடு
தோழன் வன்மைசெய் தொண்டனுக்

காத லாலடி யார்க ளுக்கெளி
யான டிக்கம லங்கணீ
காத லாலணை யீண்டன் வேண்டின
இம்மை யேதருங் கண்டிடே.

என்பது: *வேதன் நாரணன் ஆரணம் அறியா விழுபொருள்—பிரமாவும் விஷ்ணுவும் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதமும் அறிதற்கு அரிதாகிய விழுமிய பொருள்,—பேதைபால் தூதன் ஆய் இருகால் நடந்திடு தோழன் வன்மைசெய் தொண்டனுக்கு—வலிந்து ஆட்கொண்ட சுந்தரமூர்த்தி நாயனார்க்குத் தூதனாய்ப் பரவை நாய்ச்சியாரிடத்து இரவின்கண் இருகால் நடந்த துணைவன்,—ஆதலால் அடியார்களுக்கு எளியான் – அப்படிப் பிரம விஷ்ணுக்களுக்கு அரியன் ஆயினும் அடியார்களுக்கு எளியனாய் எண்ணியவை இம்மையிலே கொடுக்கத்தக்கவன் ஆகையால்,—அடி கமலங்கள் நீ காதலால் அணை—அவன் சீபாத கமலங்களை நீ விருப்பத்தோடும் வழிபடுவாயாக, ஈண்டன் வேண்டின இம்மையே தரும் கண்டிடு ஏ—விரும்பிய போகத்தையும் இம்மையிலே தருவன் ஆதலால் அவனை மெய்யாகக் காண்பாயாக என்றவாறு.*

வன்மை செய் தொண்டன் என்பதனைக் கர்த்தாவை ஏவல் கொள்ளும் தொண்டன் எனினும் அமையும்.

'பூதமானவை' என்னும் செய்யுளும், இச்செய்யுளும் பூதங்களைக் கூட்டிப் போக மோட்சங்களைக் கொடுப்பன் கர்த்தா என்பது கூறின.

இதனால், வேண்டும் விடயமும், பத்திபண்ணுவையாகில் இம்மையினும் அநுபவிப்பை. கடுகெனச் சிவனை வழிபடுக என்பதும் உணர்த்தப்பட்டது. (25)

செய்யுள் — 57.

பொன்கு லாவு மணிக்க லன்கள்
மலம்பு கிற்கை பொருந்திடா
மின்கு லாமிடை யார்க டாமுல
கத்தின் வேட்கை விடும்பொருள்
புன்பு லான்மல மூத்தி ராதி
பொசிந்து நாறு புலைக்கலம்
என்கொ லாமிவர் மேல்வி ழுந்த
திவற்றி னென்பெற வெண்ணியே.

என்பது: *பொன் குலாவு மணி கலன்கள் மலம் புகில் கை பொருந்திடா* — பொன்னால் விளங்கப்படா நின்ற மணிகள் அழுத்திய அணிகள் மலத்திடை விழுந்தால் அம்மலத்தின் அசுத்தத்தால் கையால் எடுத்தல் பொருந்ாது,—*மின் குலாம் இடையார்கள் தாம் உலகத்தின் வேட்கை விடும் பொருள்* — (அதுபோல) உலகத்து மின்போல நடங்கின இடையையுடைய மகளிர் பால் மிக்க விருப்பமும் செயற்கை மணம் நீங்கினால் உண்டாகிய அசுத்த மிகுதி கண்டு ஆசையை விடத் தக்க பொருளாம்; அஃது என்போல? என்னில்,— *புன் புலால் மலம் மூத்திராதி பொசிந்து நாறு புலை கலம்* — புல்லிதாய இரத்தம் மலம் மூத்திராதிகள் முதலானவை கசிந்து மிகவும் துர்க்கந்தத்தை யுடைத்தாகிய பொல்லாக் காயம் ஆகையால்,—*என்கொலாம் இவர் மேல் விழுந்தது இவற்றின் என்பெற எண்ணி ஏ* — இம்மல மூத்திராதிகளில் என்ன பெறுதற்கு விசாரித்து இவர்களிடத்து விருப்பம் உண்டாயது; அஃது அல்லவாயின் யாது உண்டாம் என்றவாறு. (26)

செய்யுள் — 58.

தோலி ரத்த மிறைச்சி மேதை
எலும்பு மச்சை சுவேதநீ
ராலெ டுத்த முடைக்கு ரம்பை
யழுக்கி ஞேடு புழுக்குழாம்
நூலொ ழுக்கிடு கோழை யீரல்
நுரைக்கு மூத்திர பாத்திரம்
சேல டர்த்தகண் ணர்க ளென்பது
தேர்ம லத்திர டிண்ணமே

என்பது: *தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேத நீரால் எடுத்த முடை குரம்பை — துவக்கு உதிரம் மாம்சம் மேதை அத்தி மச்சை சுக்கில சலம் இவையிற்றினுலே எடுத்துக் கொண்ட துர்க்கந்தமாகிய காயம்,—அழுக்கிஞேடு புழு குழாம் நூல் ஒழுக்கிடு கோழை ஈரல் நுரைக்கும் மூத்திரபாத்திரம் — அன்றியும், ஊத்தையுடன் கிருமித் திரள் நூலொழுகும் கோழை ஈரல் இவைகளால் பொங்கிய மூத்திர பாண்டம் ஆதலால் அப்படிப்பட்ட காயத்தையுடைய மகளிர்,—சேல் அடர்த்த கண்ணர் கள் என்பது தேர் மலத்திரள் திண்ணம் ஏ — சேல் இரண்டு அடுத்தாற் போலும் கண்ணையுடையார் என்று சொல்லுவது எத்தால் என்று விசாரிப்பாராக, விசாரிக்குமிடத்துச் சர்வமும் நிச்சயமாக மலத்தொகுதியாம் என்றவாறு.*

'பொன்குலாவும்' என்னும் செய்யுளும் இச் செய்யுளும் பெண் போகத்தை மெய் என்பதனை மறுத்துக் கூறின. (27)

செய்யுள் — 59.

ஆசை யுற்றுழல் சூக ரங்கள்
அசுத்த மேவி யளைந்துதின்
றேசு கித்தன வாயி டுஞ்சுகம்
ஏழை யோடுறு மின்பநீ
மாச தற்றொளிர் நித்த சுத்த
வளந்த ருஞ்சுக வாரிகாண்
ஈச னுக்கடி மைத்தி றத்தின்
இசைந்து நாம்பெறு மின்பமே.

என்பது: ஆசை உற்று உழல் சூகரங்கள் அசுத்தம்மேவி அளைந்து தின்றே சுகித்தன ஆயிடும் சுகம் ஏழையோடு உறும் இன்பம் நீ — அறிவில் மகளிரோடு நீ இன்பசுகம் உறுவது ஆசை மிகுத்துத்தடுமாறும் பன்றிகள் மலத்திற் புக்கு, அதனைப் புசித்து, அதனிற் புரண்டு, மிகவும் சுகத்தை அடைந்தனவாய் நிற்பன போலும்; அங்ஙனமன்றியும், மாசு அது அற்று ஒளிர் நித்த சுத்த வளம்தரும் சுக வாரி காண் ஈசனுக்கு அடிமை திறத்தின் இசைந்து நாம் பெறும் இன்பம் ஏ— கர்த்தாவுக்கு அடிமைத்திறம் செய்து யாங்கள் பெறும் இன்பமாவது குற்றமற்று விளங்கும்படியாய் அழியாத தாய் நின்மலமாய் இருக்கும் சிறப்பினை யுடைத்தாகிய இன்பசமுத்திரம் காண் என்றவாறு. (28)

செய்யுள் — 60.

குரோத மேகுண மாயி ருந்தவர்
சாந்தி நன்மை குறிக்கொளார்
அராக மேயணை வார்க ளாசை
அறுத்த வின்ப மறிந்திடார்

பராவு தேவர் பராவு தூய
பராப ரன்னடி பற்றிநீ
விராவு மெய்யில் விடாத வின்பம்
விளைந்தி டும்மிது மெய்ம்மையே.

என்பது: குரோதமே குணமாய் இருந்தவர் சாந்தி நன்மை குறி கொளார் – கோபமிகுதியை இயல்பாகவுடையார் பொறையினால் உண்டாகிய நன்மையை அறியமாட்டார்,—அராகமே அணைவார்கள் ஆசை அறுத்த இன்பம் அறிந்திடார் – ஆசையே தமக்குக் குணமாக உடையவர்கள் அவ்வாசையை அறுத்தவர்களுக்கு உண்டாகிய சுகத்தை அறியமாட்டார்கள்; அவர்களைப்போல, நீயும் சிற்றின்பமாகிய அரிவையர் போகத்தைக் கைக்கொண்டு பேரின்பமாகிய பிரமானந்தத்தை அறியாய்: அஃது அறிய விரும்பின்,—பராவு தேவர் பராவு தூய பராபரன் அடிபற்றி நீ விராவுமெய்யில் விடாத இன்பம் விளைந்திடும் இது மெய்ம்மையே— இந்திராதி தேவர்களாற் பரவப்பட்ட பிரம விஷ்ணுக்களால் போற்றி செய்யப்படும் சுத்தமான பரைக்கு மேலானவனது ஸ்ரீ பாதங்களைப் பற்றுக் கோடாகக் கொள்வாயாக, அதனால் அப்பொழுதே உன்னுடைய சரீரந்தன்னிலே ஒருக்காலும் நீங்காத சுகானந்தம் பிரகாசிக்கும்; இது சத்தியம் என்றவாறு.

பராவு விராவு என்ற சொல் நீட்டும்வழி நீட்டல் என்க. (29)

செய்யுள் — 61.

காம மாதி குணங்க ளைச்சுகம்
என்று கொண்டனை காதலால்
தூம மாரழ லங்கி சீத
மலிந்த போது சுகந்தரும்
நாம மார்தரு சீதம் வெம்மை
நலிந்த போது தருஞ்சுகம்
சேம மாகிய வின்ப மாமிகு
தெய்வ நன்னெறி சேரவே.

என்பது: *காமம் ஆதி குணங்களை சுகம் என்று கொண்டனை* – காமக் குரோத லோப மோக மத மாற்சரியம் இடம்பம் அகங்காரம் என்கின்ற இவையிற்றைச் சுகமென்று கொண்டாய்; அஃது எத்தன்மை? என்னில்,—*காதலால் தூமம் ஆர் அழல் அங்கி சீதம் மலிந்த போது சுகம் தரும்* – குளிர்மிக்க காலத்து வெப்ப விருப்பத்தால் புகைபொருந்தின அழல்கின்ற அக்கினி சுகத்தைத் தருவது போலவும்,—*நாமம் ஆர் தரு சீதம் வெம்மை நலிந்தபோது தரும் சுகம்*—வெப்பம் மிகுந்த விடத்துப் புனல் என்று பெயரையுடைய நீரின் குளிர்ச்சியை அடைந்தபோது சுகத்தைத்தருவது போலவும் ஆம், காமமாதிகளால் உண்டாகிய சுகம்; இஃதன்றி,—*சேமம் ஆகிய இன்பம் ஆம் மிகு தெய்வ நல்நெறி சேரவே*—கர்த்தாவினுடைய ஞான மார்க்கத்திலே கூடினல் ஒருக்காலும் விடாத இன்பம் உண்டாம்; ஆதலால், அதனேடு கூடுவாயாக என்றவாறு.

*காமமாதி என்றதனுல், காமச்சுகம் இருவகைத்து; அவை சாங்கம், உபாங்கம் என்பன, சாங்கமாவது—ஆலிங்கன மும், முத்தமும், மிடற்றினுல் உண்டாம் ஒலிபேதங்களும். நகக்குறிகளும், பல்லிடு குறியும், அங்கதாடனமும், சும்பனம் முதலிய இவை போல்வன. உபாங்கமாவது—அன்னம், வஸ் திரம், பூஷணம், சந்தனம், தாம்பூலம் முதலியன.* (30)

*செய்யுள் — 62*

படிக்கு நூல்கள் சிவாக மம்பசு
பாச மோடு பதித்திறம்
எடுத்தி யம்புவ தீசன் வார்கழல்
ஏத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள்
வேண்டி டும்பொரு ளீண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல
ஞேடு நின்றிடல் முத்தியே.

என்பது: *படிக்கும் நூல்கள் சிவாகமம்—சிவநெறி யாகிய பேரின்பம் எய்துவோர் படிக்கும் நூல்களா வன வேதாகமங்கள்,—பசு பாசமோடு பதி திறம் எடுத்து இயம்புவது — அவர்கள் எடுத்துச்சொல்லும் சொல்லாவன பதி பசு பாசத்திறங்கள்,—ஈசன் வார் கழல் ஏத்திடும் தொழில்—அவர்கள் கிரியையாவன பர மேசுவரனுடைய ஸ்ரீ பாதங்களே வணங்குகை,—என் றுமே விடுத்திடும் பொருள் காமம் ஆதிகள்—எப்போ தும் அவர்கள் கைவிடும் பொருளாவன காமக் குரோ தம் முதலானவை,—வேண்டிடும் பொருள் ஈண்டு அருள்—அவர்கள் வேண்டும் பொருளாவது மிக்க அருள்,—முடித்து—ஆகையால் இப்படி மூன்று*

பதார்த்தத்தையும் முற்றுப்பெற நிறுத்தி,—மும்மலம் விட்டு நின்மலனோடு நின்றிடல் முத்தி ஏ—மலத்திரயங்களையும் விட்டுக் கர்த்தாவோடு கூடுதல் முத்தியின்பம்; ஆதலால், நீயும் இச்செயலிலே நிற்பாயாக என்றவாறு.

இதனுள் நாலு பாதமும் அடங்கியவாறு கண்டுகொள்க.

'ஆசையுற்றுழல்' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் உலகாயதனை நிராகரித்துப் 'பேரின்பத்தை அநுபவி' என்று கூறிற்று.

'உள்ளதாவது' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் செய்யுள் முப்பத்தொன்றினலும் உலகாயதன் மதத்தை மறுத்துக் கூறியது.

பிருகஸ்பதி இந்திரனை மயக்கிய வழியை நீக்கிப் பரமேசுவரனை வழிபடுவாய் என்பது கருத்து.

உலகாயதர் மிச்சிர சார்வாகர், இரணிய கர்ப்ப சார்வாகர் என்று இருதிறத்தர் என்க. (31)

## உலகாயதன் மத மறுதலை முற்றிற்று.

பாயிரம் உள்பட ஆகத்திருவிருத்தம்—63.

---

# 2. சௌத்திராந்திகன் மதம்

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்*

*செய்யுள் — 63*

நீதியார் வேத நூலின்
　　நெறியலா வறங்கள் நாளும்
ஓதியோ ரைந்து சீலம்
　　உடையராய் உடல மூடிப்
போதிநீள் மரத்தின் மேவும்
　　புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதா னிலாத கொள்கைச்
　　சௌத்திராந் திகன்முன் சாற்றும்.

என்பது: *நீதி ஆர் வேத நூலின் நெறி அலா அறங்கள் நாளும் ஓதி — நீதிசாத்திரத்தைத் தனக்கு அங்கமாகப் பொருந்திய வேதநூல் நெறியல்லாத வாக்கிய நெறியாகிய பிடகநூலை நாடோறும் ஓதி,—ஓர் ஐந்து சீலம் உடையர் ஆய் — உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தங்களின் குணங்களையுடையராய்,—உடலம் மூடி—உடலைத் துவராடையால் போர்த்து,—போதி நீள் மரத்தில் மேவும் புத்தர் நால்வரினும் வைத்து — அரசினைத் தெய்வம் போலப் பேணி அதன் கீழ்ப் பொருந்தியிருக்கும் பௌத்தர் நால்வகை யுள்ளவர்களையும் வைத்து அவர்களில்,—சாதி தான் இலாத கொள்கை சௌத்திராந்திகன் முன் சாற்றும்—வருணபேதம் அறக் காணும் சாதியில்லாத சௌத்திராந்திகன் முன்னே சொல்லா நின்றான் என்றவாறு.*

புத்தர் நால்வரினும் வைத்து என்பது பௌத்தர் நால்வரினும் உட்கோளாகக் கொண்டு என்க. நால்வராவார்—சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்திமிகன், வைபாடிகன் என்போர்.

மேல் பௌத்தமதம் கூறுவான் எடுத்துக்கொண்டார். அதனுள் இச் செய்யுள் அவர்கள் நால்வகையர் என்பதூஉம், அவரின் முன்னர்ச் சொல்லப்படுவான் சௌத்திராந்திகன் என்பதூஉம் கூறிற்று.

நீதி ஆர் வேதமாவது — லௌகீகதன்மம் ஆகிய சோதிடம், வியாகரணம், சிற்பம், பாதம், சிக்ஷை, சந்தசு எனக் கொள்க. நெறியலா அறங்களாவன — ஐராத்மவாதமும், அகர்த்திருவாதமும், ஆகாசம் காலம் திக்கு காரணத்பாவமும் இல்லை என்றும் குணியும் அவயவியும் இல்லை என்றும் கொள்ளும் கொள்கையும் பிறவும் எனக் கொள்க. ஐந்து சீலமாவன—அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், சங்கிரகம் எனக்கொள்க. இவ்வைந்து சீலமும் சாரதற்கும், சாரணற்கு தெசசீலம், உபசம்பன்னற்கு நூறுசீலம், சுவவீரருக்குக் கோடிசீலமும்ஆகம் இப்படி நிலைதோறும் சீலம் பலவாம். (1)

செய்யுள் — 64

முழுதுணர்ந் துலகிற் கோறல்
முதற்செயல் முனிந்து மற்றும்
பழுதிலா அருளி னாலே
பரதுக்க துக்க னாகித்
தொழுதுவா னவரும் போற்றத்
தொல்பிட கங்க ளான
வழுவிலா கமங்கள் சொன்ன
மாதவன் நாத னாவான்.

என்பது: *முழுது உணர்ந்து உலகில் கோறல் முதல் செயல் முனிந்து—சர்வத்தையும் அறிந்து பிரபஞ்சத்தில் பொய் கொலை களவு கள் காமங்களை வெறுத்து,—மற்றும் பழுது இலா அருளினாலே பரதுக்க துக்கன் ஆகி—குற்றமில்லாத கிருபையாலே எவ்வுயிர்த் துன்பமும் தன்னுயிர்த் துன்பம் போல் கொண்டு,—தொழுது வானவரும் போற்ற தொல் பிடகங்கள் ஆன வழு இல் ஆகமங்கள் சொன்ன மாதவன் நாதன் ஆவான்—தேவர்களும் தொழுது துதிக்கப்பட்டு வரும் பழைய பிடகநூலாகிய இகழ்ச்சியில்லாத ஆகமங்களை அருளிய புத்தமுனியே கர்த்தா ஆவான் என்றவாறு.*

*பழுதிலா அருள் என்பது—இராச்சியத்தைக் கொடுத்தும், பிள்ளைகளைக்கொடுத்தும், தன் கண்ணைக்கொடுத்தும், உதிரம் மாம்சம் முதலாயின புறவுக்கு அரிந்து கொடுத்தும் வையங்காத்தல் முதலியவை.*

*இச்செய்யுள் பரதுக்க துக்கனாய்ப் பிடகநூலை அருளிய சர்வஞ்ஞன் ஆகிய புத்தமுனியே கர்த்தாஎன்பது கூறிற்று.*(2)

*செய்யுள்* — 65

மருவிய அளவை காட்சி
மானமென் றிரண்டி வற்றால்
கருதிய பொருள்கள் ஞான
ஞேயமாய்க் கணத்திற் பங்கம்
வருமுரு வருவம் வீடு
வழக்கென நான்க தாகித்
தருமமவை ஒன் றி ரண்டாய்த்
தான்விரிந் தெட்டி னாமே.

என்பது: மருவிய அளவை காட்சி மானம் என்று இரண்டு—பிடகநூலிற் பொருந்திக் கொள்ளப்படும் அளவையாவன காட்சியும் அநுமானமும் என இரண்டாம்,—இவற்றால் கருதிய பொருள்கள் ஞானம் ஞேயம் ஆய் கணத்தில் பங்கம் வரும்—இக்காட்சியாலும் அநுமானத்தாலும் அறியப்படும் பொருள்கள் அறிவும் அறியப்படும் பொருளுமாய் ஒரு மாத்திரையிற்கெட்டு வரும்,—உரு அருவம் வீடு வழக்கு என நான்கது ஆகி தரும் அவை ஒன்று இரண்டு ஆய் தான் விரிந்து எட்டின் ஆம்—ஞான ஞேயங்களினால் உருவும் அருவும் வீடும் வழக்கும் என நான்காகி அந்நான்கும் ஒன்று இரண்டாக விரிந்து எட்டாகத்தரும் என்றவாறு.

கணத்திற் கெடுகை நால்வகை அவையாவன—கெட்டு வர்த்தித்தலும், கெட்டு க்ஷயித்தலும், கெட்டு ஒத்து நிற்றலும் கெட்டுக் கெட்டேபோதலும் ஆம். கணம் — தாமரையிதழை அடுக்கி ஊசியிட்டடித்தால் எட்டிதழ் அறும் எல்லை.

இச் செய்யுள் பௌத்த சமயத்திற் கொள்ளும் அளவை இன்னது என்று நால்வகைப் பாரிப்பும் கூறிற்று. (3)

செய்யுள் — 66

உருவியல் பூத மோடங்
குபாதாய ரூப மாகும்
அருவியல் சித்தங் கன்ம
மென்றிரண் டாகும் வீட்டின்
மருவியல் குற்றம் கந்தம்
எனவழங் கிடும்வ ழக்கின்
இருவிய லுள்ள தோடங்
கில்லதா மியம்புங் காலே.

என்பது: உரு இயல் பூதமோடு அங்கு உபாதாய ரூபம் ஆகும் – உருவினது இயல்பு பூத உருவத்துடனே உபாதாய ரூபம் என இரண்டு ஆம்,—அரு இயல் சித்தம் கன்மம் என்று இரண்டு ஆகும் – அரு இயல்பு சித்தஅரு என்றும் கன்மஅரு என்றும் இரண்டாகும்,—வீட்டின் மருவு இயல் குற்றம் கந்தம் என வழங்கிடும் – வீட்டினது பொருந்தின இயல்பு குற்றவீடென்றும் கந்தவீடென்றும் இரண்டு எனப்படும்,— வழக்கின் இரு இயல் உள்ளதோடு அங்கு இல்லதாம் இயம்பும் கால் ஏ–வழக்கு இரண்டு இயல்புள்ளது; அவை உள்வழக்கு என்றும் இல்வழக்கு என்றும் வழங்கப்படும் சொல்லுமிடத்து என்றவாறு.

இச் செய்யுள் உருவம், அருவம், வீடு, வழக்கு என்னும் நான்கும் ஒன்று இரண்டான பகுதியை உணர்த்திற்று.

இயல் – இயல்பு, உபாதானம் – உபாதாயம் என்றும் பேராம், உபாதாயம் – பற்றப்படுவது, உரு இயல்பாவது சைதன்னிய ரூபம் என்றும், அசைதன்னியரூபம் என்றும் இரண்டாம். சைதன்னியரூபம் பதினெட்டுக் கூடியது. அவை பஞ்சேந்திரியங்களும், அவற்றின் விஷயங்களும், ஸ்திரீபும்ஸகமான பாவ ரூபம் இரண்டும், இருதயம் ஒன்றும், பூதம்நாலுமாம் அசைதன்னியரூபம் முன் சொன்ன எட்டாம். (4)

செய்யுள் — 67

மண்புனல் அனல்கால் பூதம்
வலிகந்தம் இரதம் வன்னம்
எண்டரு முபாதா யந்தான்
இவையிரு நான்கும் கூடி

உண்டொரு பொருளு ருபம்
உறுபுல னுபாங்க மோடக்
கண்டது சித்தம் கன்மம்
நன்றுதீ தென்றல் காணே.

என்பது: *மண் புனல் அனல் கால் பூதம் — பூத வுருவாவது பிருதிவி அப்பு தேயு வாயு என நான்காம்,—வலி கந்தம் இரதம் வன்னம் எண் தரும் உபாதாயம் தான் — உபதாயரூபமாவது கடினம் கந்தம் இரதம் வன்னம் என நான்காக எண்ணத்தகும்,—இவை இரு நான்கும் கூடி உண்டு ஒரு பொருள் உரூபம் — இவை எட்டும் கூடியவிடத்தில் யாதொருபொருள் உண்டாயது அஃது உருவாம்,—உறு புலன் உபாங்கம் ஓட கண்டது சித்தம் அருவாம்,—கன்மம் நன்று தீது என்றல் காண் ஏ — அப்படிக் கண்டபொருளை நன்றென்றும் தீதென்றும் காண்டல் கன்ம அருவாம் என்றவாறு.*

***கன்மம்—கன்மபலம்.***

*இச்செய்யுள் முன்னுரைத்த எண்வகை உருக்களும் அருக்களும் இரண்டும் கூறிற்று.* (5)

*செய்யுள்* — 68.

குற்றவீ டராக மாதி
குணங்களைக் குறைத்த லாகும்
மற்றவீ டுருவ மாதி
யைந்தையும் மாய்த்த லாகும்
சொற்றருந் தொகைதொ டர்ச்சி
மிகுத்துரை யென்று மூன்றாய்
உற்றிடும் வழக்கி ரண்டும்
ஒன்றுமூன் றாகி யாரும்.

என்பது: குற்ற வீடு அராகம் ஆதி குணங்களை குறைத்தல் ஆகும்—அராகாதி குணங்கள் பொன்றக் கெட்டு முத்தியின்பம் அடையாது சேட்டைகெட முத்தியின்பம் அடையும் என்றது குற்ற வீடாம்,—மற்ற வீடு உருவம் ஆதி ஐந்தையும் மாய்த்தல் ஆகும் – உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தங்களும் சந்தானத்துப் பொன்றக் கெட்டடைவது கந்த வீடாம், — சொல்தரும் தொகை தொடர்ச்சி மிகுத்துரை என்று மூன்று ஆய் உற்றிடும் வழக்கு இரண்டும் ஒன்று மூன்று ஆகி ஆறு ஆம்— உள்வழக்கு இல்வழக்கென்று கூறப்பட்ட வழக்கு இரண்டும் தொகையுண்மை வழக்கும் தொகையின்மை வழக்கும், தொடர்ச்சி யுண்மைவழக்கும் தொடர்ச்சி யின்மை வழக்கும், மிகுத்துரை யுண்மைவழக்கும் மிகுத்துரை யின்மைவழக்கும் என ஆறாகி விரியும் என்றவாறு.

அராகாதி குணங்களைக்குறைத்தல் குற்றவீடென மாறுக. உருவமாதி ஐந்தையும் மாய்த்தல் மற்றவீடென மாறுக.

இச்செய்யுள் இருவகைக் குற்றமும் வீடு வழக்கு இனைத்து என்பதும் கூறிற்று.

உருவமாதி ஐந்தாவன—உருவக்கந்தம் வேதனைக்கந்தம் சஞ்ஞானக்கந்தம், விஞ்ஞானக்கந்தம், வாசனைக்கந்தம் எனவாம். தொகை—கூட்டம். தொடர்ச்சி—சந்தானத்தொடர்ச்சி. மிகுத்துரை—தோற்றநாசம். (6)

செய்யுள் — 69.

ஒருவனென் றேதப் பட்டான்
உருவாதி ஐந்தும் கூடி
வருபவன் என்று ரைத்தல்
தொகையுண்மை வழக்க தாகும்

உருவமங் காதி யாய
ஐந்தையும் ஒருவன் நின்று
தருவது தொகையின் இன்மை
வழக்கதாம் சாற்றுங் காலே.

என்பது: ஒருவன் என்று ஓத பட்டான் உரு ஆதி ஐந்தும் கூடி வருபவன் என்று உரைத்தல் தொகைஉண்மை வழக்கு அது ஆகும் – ஒரு கர்த்தா என்று உரைக்கப்பட்டவன் உருவம் முதலிய ஐந்தோடும் கூடி வருபவன் என்று கூறுதல் தொகையுண்மை வழக்காம்,—உருவம் அங்கு ஆதி ஆய ஐந்தையும் ஒருவன் இன்று தருவது தொகையின் இன்மை வழக்குஅது ஆம் சாற்றுங்கால் ஏ – உருவம் முதலிய ஐந்தையும் ஒரு கர்த்தா அதனோடும் கூடாமல் நீங்கி நின்று உண்டாக்குவன் என்பது தொகையின்மை வழக்காம் சொல்லுங்காலத்து என்றவாறு.

இச்செய்யுள் முற்கூறிய அறுவகை வழக்கினுள் தொகையுண்மை வழக்கும் தொகையின்மை வழக்கும் கூறிற்று. (7)

செய்யுள் — 70.

காரண காரி யத்தின்
தொடர்ச்சியாய்க் காலம் மூன்றின்
சோர்வறத் தோன்றும் கெட்டு
வழியென்கை தொடர்ச்சி யுண்மை
ஓர்தரி னொருவ னேயெக்
காலத்து முள்ளா னென்று
தேர்வது தொடர்ச்சி யின்மை
வழக்கதாம் செப்புங் காலே.

என்பது: காரண காரியத்தின் தொடர்ச்சி ஆய் காலம் மூன்றின் சோர்வு அற தோன்றும் கெட்டு வழி என்கை தொடர்ச்சியுண்மை—காரண காரியம் என்னும் தொடர்ச்சியுடையவாய்க் காலம் மூன்று என்னும் மயக்கம் அறக் கெட்டுத் தோன்றும் என்னும் வழித் தொடர்ச்சியுண்மை வழக்காம்,—ஓர்தரின் ஒருவனே எ காலத்தும் உள்ளான் என்று தேர்வது தொடர்ச்சியின்மை வழக்குஅது ஆம் செப்புங்கால் ஏ – ஒருகர்த்தாவே காரண காரியத்தின் தொடர்ச்சியாய் எக்காலத்தும் உள்ளான் என்று சொல்லுவது தொடர்ச்சியின்மை வழக்காம் உணர்விஞல் சொல்லுமிடத்து என்றவாறு.

ஓர்தரின் செப்புங்காலே எனக் கூட்டுக.

இச்செய்யுள் தொடர்ச்சியுண்மை வழக்கும், தொடர்ச்சியின்மை வழக்கும் கூறிற்று.

காலம் மூன்ருவன – செல்காலம் வருகாலம், நிகழ காலம் பொருளின்திரிபு ஒழியக் காலம் என்பது கற்பனுகாமம் என்க. (8)

செய்யுள் — 71.

தோற்றிய பொருள்க ளெல்லாம்
நாசமா மென்று சொல்லும்
மாற்றமுன் உரைத்தல் மற்றை
மிகுத்துரை வழக்கி னுண்மை
போற்றிய பொருள்கண் கட்குப்
போனது போன்மு திர்ந்து
வேற்றுமைப் பட்ட தென்கை
மிகுத்துரை யில்வ ழக்கே.

என்பது: *தோற்றிய பொருள்கள் எல்லாம் நாசம் ஆம் என்று சொல்லும் மாற்றம் முன் உரைத்தல் மற்றை மிகுத்துரை வழக்கின் உண்மை — தோன்றப் பட்ட பொருள்கள் எல்லாம் கெடும் என்னும் உத்தரத்தை முன்னர்ச் சொல்லுமது மிகுத்துரையுண்மை வழக்காகும்,—போற்றிய பொருள் கண்கட்கு போனது போல் முதிர்ந்து வேற்றுமைப்பட்டது என்கை மிகுத்துரை இல்வழக்கே — தோற்றி இரட்சைப்பட்ட பொருள்கள் காரியம் கெட்டுக் காரணமாய் நின்றது என்று கூறல் மிகுத்துரையின்மை வழக்காம் என்றவாறு.*

*கண்கட்குப் போனதுபோன் முதிர்ந்து வேற்றுமைப் படுகை — காரியம் அழிந்து காரணம் கிடக்கை, மிகுத்துரை மூன்றும் உள்வழக்கு இல்வழக்கு இரண்டினும் வழங்கும்வழி எனக் கொள்க.*

*இச்செய்யுள் மிகுத்துரை யுண்மை வழக்கும், மிகுத்துரை இன்மை வழக்கும் கூறிற்று.*

*தோற்றிய பொருள்கள் எல்லாம் நாசம் என்பது 'சர்வம் க்ஷணிகம் அசத்வாதம் இதி வசனு' எனக்கொள்க. இவை தொகை தொடர்ச்சி மிகுத்துரை மூன்றும் உள் வழக்கில் வழக்கு இரண்டினும் வழங்கும் வழி எனக்கொள்க.* (9)

*செய்யுள்* — 72

உள்வழக் கில்வ ழக்குள்
ள துசார்ந்த உள்வ ழக்கோ
டுள்ள து சார்ந்த வின்மை
வழக்குட னின்மை சார்ந்த

உள்வழக் கின்மை சார்ந்த
இல்வழக் கென்றோ ராறும்
உள்வழக் குளதுண் டென்கை
முயற்கோடின் றில்வ ழக்கே.

என்பது: உள்வழக்கு இல்வழக்கு உள்ளது சார்ந்த உள்வழக்கோடு உள்ளது சார்ந்த இன்மை வழக்குடன் இன்மை சார்ந்த உள்வழக்கு இன்மை சார்ந்த இல்வழக்கு என்று ஓர் ஆறு ஆம் — முற்கூறிய உள்வழக்கும் இல்வழக்கும் உள்ளது சார்ந்த உள்வழக்கும் உள்ளது சார்ந்த இல்வழக்கும் இல்லது சார்ந்த உள்வழக்கும் இல்லது சார்ந்த இல்வழக்கும் என்னும் நான்கோடும் கூடி ஆறு வகையாம்,—உள் வழக்கு உளது உண்டு என்கை – அவற்றுள் உள்ளதை உண்டு என்பது உள் வழக்காம் அது யானைக்கோடு உண்டு என்கை,—முயற்கோடு இன்று இல்வழக்கே—இல்லதனை இல்லை என்கை இல்வழக்கு ஆம்; அது முயற்குக் கொம்பு இல்லை என்கை என்றவாறு.

*இச்செய்யுள் முன்னர்க்கூறிய உள்வழக்கில் வழக்கினது இயல்பும் இவ்விரண்டிறைலும் முன் விரிந்த பகுதி நீக்கி மேல் விரியும் பகுதியும் கூறிற்று.* (10)

*செய்யுள் — 73.*

உணர்வுசார்ந் துணர்வு திக்கை
உள்ளது சார்ந்த வுண்மை
உணர்வுபின் இன்றா மென்கை
உள்ளது சார்ந்த இன்மை

உணர்வுமுன் பின்றித் தோன்றல்
இல்லது சார்ந்த வுண்மை
உணரினில் லதுசா ரின்மை
உள்ளங்கை யுரோம நாணே.

என்பது: உணர்வு சார்ந்து உணர்வு உதிக்கை உள்ளது சார்ந்த உண்மை — அறிவைச் சார்ந்து அறிவுண்டாம் என்கை உள்ளது சார்ந்த உள்வழக்கு,— உணர்வு பின் இன்றும் என்கை உள்ளது சார்ந்த இன்மை — அறிவு கெட்டால் பின்பு அறிவு உண்டாகாது என்பது உள்ளது சார்ந்த இன்மை வழக்கு,— உணர்வு முன்பு இன்றி தோன்றல் இல்லது சார்ந்த உண்மை — அறிவு முன்பு உள்ளதல்ல வாய்ப் பின்பு உண்டாம் என்பது இல்லது சார்ந்த உள்வழக்கு,— உணரின் இல்லது சார் இன்மை உள்ளங்கை உரோமம் நாணே — உள்ளங்கையில் மயிர் உண்டு என்பதும் அம் மயிரால் செய்த கயிறு உண்டு என்பதும் இல்லது சார்ந்த இல்வழக்கு என்றவாறு.

இவையன்றிச் சார்பு பன்னிரண்டுஉள. அவையாவன:- பேதைமை, செய்கை, உணர்ச்சி, உருவருவவாயில், நுகர்ச்சி, வேட்கை, பற்று, கருமத்தொகுதி முற்றோற்றம் பிணி, மூப்பு, சாக்காடு என இவை.

இச்செய்யுள் உள்ளது சார்ந்த உள்வழக்கும், உள்ளது சார்ந்த இன்மை வழக்கும் இல்லது சார்ந்த உள்வழக்கும், இல்லது சார்ந்த இல்வழக்கும் என்னும் நான்கையும் கூறிற்று

இத்தனையும் தன்மதம் கூறி, மேல் பிறர் மதம் கூறி மறுக்கின்றது. (11)

செய்யுள் — 74.

சொன்னநால் வகையு மின்றிச்
 சொல்லிடும் பொருள்கள் எல்லாம்
என்னையோ அறிகி லோம்பித்
 தேறியோ வானம் ஆன்மா
மன்னுகா லங்கள் திக்கு
 மனமுடன் வாக்கி றந்திட்
டுன்னுமோ ரிறையு முண்டென்
 றுரைப்பது நித்த மன்றே

என்பது: *முன் சொன்ன உரு அரு வீடு வழக்கு என்னும் நான்கும் அவற்றின் விரிவும் அன்றி, வானம் என்றும், ஆன்மா என்றும், நிலைபெற்ற காலங்கள் என்றும், திக்குகள் என்றும், மனவாக்கிறந்து அறியுமது ஒரு கர்த்தா உண்டென்றும் சொல்லுமது நிலையுடைத்தன்று; ஆகையால், இப்படிச் சொல்லும் பொருள்கள் பித்தேறியோ சொல்லா நின்றூர்கள்! எப்படிச் சொல்லுகின்றூர்கள்? என்று அறிகிலேம்; அவை நிலைப்பட்டன அல்ல என்றவாறு.*

*இச்செய்யுள் முன் சொன்ன நால்வகை யொழிந்து பிறர் சொல்லும் வான் முதலிய பொருள்கள் அல்ல என்று கூறுவான் அவையிற்றின் தொகை கூறிற்று. பஞ்ச கந்தங்களும், மற்றுமுள்ள விவகாரங்களும் இந்நால்வகையினுள்ளும் அடங்கும் என்க.* (12)

செய்யுள் — 75

ஈங்குவான் செயற்கு வாரா
 இயம்பிய பொருள்க ளெல்லாம்
தாங்குவா னுளதே யென்னில்
 தரித்திடா தருவ மாதல்

ஓங்குவா னோசைக் காதி
யெனிலதங் குருவின் கூட்டம்
நீங்குவா னின்றி யெங்கும்
நின்றதே லெங்கு மின்றே,

என்பது: *ஈங்கு வான் செயற்கு வாரா — இவ்விடத்துக் கூறப்பட்ட வான் என்னும் பொருள் தொழிலிற்கூடாது,—இயம்பிய பொருள்கள் எல்லாம் தாங்குவான் உளதே என்னில் தரித்திடாது அருவம் ஆதல்— பூதம் நான்கு முதலாகச் சொல்லப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும் தாங்குதற்கு ஆகாசம் உளது என்று கூறின் அஃது அருவம் ஆதலால் பொருள்களைத் தரிக்கற் பாற்றன்று,—ஓங்கு வான் ஓசைக்கு ஆதி எனில் அது அங்கு உருவின் கூட்டம் — பெரியவானது சத்தத்துக்கு முதல் என்று கூறின் அவ்வோசையும் உருக் கூட்டத்து அன்றித்தோன்றாது,—நீங்குவான் இன்றி எங்கும் நின்றதேல் எங்கும் இன்று ஏ — அந்த ஆகாயம் நீங்குதலின்றி எங்கும் நின்றதென்று கூறின் அஃது எங்கும் இல்லையாம்: ஆகையால், ஆகாயம் என்று ஒரு பொருள் இல்லை என்றவாறு.*

***இச்செய்யுள் முன்கூறிய ஐவகையுள் ஆகாயம் இல்லை என்று மறுத்துக் கூறிற்று.*** (13)

செய்யுள் — 76.

போதமுண் டுயிர்கட் கென்னில்
வாயிலைம் புலனும் நூலும்
ஆய்தலின் றொட்டுத் தீட்டுக்
கலப்பினி லறியு மென்னில்

ஏதமுண் டிரவிற் பச்சை
சிவப்புட னேய்ந்த போது
கேதநின் றென்னோ வென்னும்
ஐயமுன் கிடத்த லாலே.

என்பது: *போதம் உண்டு உயிர்கட்கு என்னில்— உயிர்கட்கு அறிவுண்டு என்று சொல்லின்,—வாயில் ஐம்புலனும் நூலும் ஆய்தல் இன்று — இந்திரியங்களும் விடயங்களும் சாத்திரங்களும் கொண்டு அறிவானேன், —ஒட்டு தீட்டு கலப்பினில் அறியும் என்னில் — அப்படியல்ல இந்திரியங்களைக் கலந்தும் புலன்களைப் பரிசித்தும் சாத்திரங்களைப் பொருந்தி நின்றும் அறிவன் என்பையாகில்,—ஏதம் உண்டு இரவில் பச்சை சிவப்புடன் ஏய்ந்தபோது கேதம் நின்று என்னோ என்னும் ஐயம் முன் கிடத்தலாலே — இருளினிடத்துப் பச்சை சிவப்பு என்னும் வன்னம் கிடக்க அவற்றைத் தொட்டும் தீண்டியும் கலந்தும் அறியாமல் கிலேசமுற்று என்னோ என்னும் ஐயம் கிடத்தலால் கூறியது குற்றம் உண்டு என்றவாறு.*

*இந்திரியம் புலன் நூலினுக்கு ஒட்டுத்தீட்டுக் கலப்பு மொழிமாற்று நிரனிறை எனக்கொள்க.*

*இச்செய்யுள் ஆன்மாவுக்கு அறிவில்லை ஆதலால் ஆன்மா இல்லை என மறுத்துக் கூறிற்று.* (14)

செய்யுள் — 77.

அறிந்திடா வாயி லின்றேல்
அறிவின்று மைந்தும் பற்றி
அறிந்திடு மறிவுண் டென்னில்
ஐந்தினு மறிவொன் றாக

அறிந்திட வேண்டும் சார்பின்
அறிந்திடு மென்னி லுன்னை
அறிந்திலோம் புத்தன் என்றிங்
கழகிது சொன்ன வாறே.

என்பது: *அறிந்திடா வாயில் இன்றேல் — இந்திரியங்கள் இல்லையாயின் உயிர் ஒன்றையும் அறியமாட்டாது,—அறிவு இன்றும் ஐந்தும் பற்றி அறிந்திடும் அறிவு உண்டு என்னில் — இந்திரியங்கட்கு அறிவில்லையாதலால் அவ்விந்திரியங்கள் ஐந்தையும் பற்றி நின்று அறிந்திடும் அறிவு உயிருக்கு உண்டு என்று கூறில்,— ஐந்தினும் அறிவு ஒன்றாக அறிந்திடவேண்டும் — உயிர் அறியுமாயின் புலன்கள் ஐந்தாலும் அறியும் அறிவை ஒரு புலனால் அறியவேண்டும்,—சார்பின் அறிந்திடும் என்னில் — அற்றன்று உயிர் அறியுமிடத்துப் பொறிகளின் வழிகளிலே நின்றும் அவ்வவற்றின் புலன்களாகிய குணங்களை அறியும் எனக் கூறின்,—உன்னை அறிந்திலோம் புத்தன் என்று இங்கு அழகிது சொன்ன ஆறு ஏ — உன்னை ஆன்மவாதி என்று அறிந்தோம்; நீ சார்பில் தோன்றும் என்கையால் புத்தன் ஆனாய்; இஃது அறிந்திலோம்! நீ உயிர் அறியும் என்று சொன்னது அழகிது என்றவாறு.*

*அழகிது என்றது இகழ்ச்சிக்குறிப்பு.*

*இச்செய்யுள் இந்திரியங்கள் இல்லையாயின் ஆன்மா அறிது ஆகையால் 'ஆன்மா இல்லை' என்று கூறிற்று.* (15)

*செய்யுள் — 78.*

ஞானஞே யங்க ளன்றி
ஞாதிரு வென்று சொல்ல
ஆனதிங் கறிவோ வன்றே
அன்றெனில் அவனி போலும்
தானதிங் கறிவே யென்னில்
சமைந்திடு நன்ப ருப்புப்
போனக மதற்குத் தானே
கறியெனப் புகன்ற தாமே.

என்பது: *ஞான ஞேயங்கள் அன்றி ஞாதுரு என்று சொல்ல ஆனது இங்கு அறிவோ அன்றே — அறிவும் அறியப்படும் பொருளும் அன்றி அறியும் பொருள் உண்டு என்று இவ்விடத்தில் கூறில் அதற்கு உண்டாயது அறிவோ அறியாததோ,— அன்று எனில் அவனிபோலும் — அறிவில்லாதது என்று சொல்லின் மண்போலும் அசேதனமாம்,— தான் அது இங்கு அறிவே என்னில் — அறியும் பொருள்தான் அறிவு என்று கூறின்,— சமைந்திடும் நன் பருப்பு போனகம் அதற்குதான் ஏ கறி என புகன்றது ஆம் ஏ — பருப்பாற் கூட்டிச் சமைத்த சோற்றுக்கு அப்பருப்புச் சோறுதானே கறியென்று கூறியதன்மைத்து ஆகும் என்றவாறு.*

*இதனுள் பருப்புச்சோறு என்று அதற்குப் பெயராயிருக்கக் கறியும் பருப்புச்சோறு என்பது புனருத்தியாய தோடமாம். அதுபோல, ஞானம் அறிவாயிருக்க ஞாதுருவும் அறிவாகவிற்றனித்து வேண்டா என்பது கருத்து.*

*இச்செய்யுள் ஞான ஞேயங்களொழிந்து ஞாதுரு என்பதில்லை; ஆதலால், ஆன்மா இல்லை என்று மறுத்துக் கூறிற்று.*

*செய்யுள் — 79.*

உயிரினை அருவ தென்னில்
 உருவுட னுற்று நில்லா
துயிரினை உருவ தென்னில்
 உடலினி லுடல டங்கா
துயிரினை அணுவ தென்னில்
 உடல்பல துவார மோடும்
உயிரினை நித்த மென்னில்
 உணர்வுத யாந்த மின்றே.

என்பது: *உயிரினை அருவது என்னில் உருவுடன் உற்றுநில்லாது — நீ உண்டென்று கூறிய ஆன்மாவை அருவம் என்று சொல்லின் உருவம் ஆகிய உடலோடு அருவமாகிய ஆன்மாப் பொருந்திநில்லாது; ஆதலால், அருவமன்று,—உயிரினை உருவது என்னில் உடலினுள் உடல் அடங்காது — ஆகையால் அந்த ஆன்மா உருவம் என்று கூறின் ஓர் உருவின் ஓர் உரு அடங்காது; ஆதலால், ஆன்மா உருவமன்று,—உயிரினை அணுவது என்னில் உடல் பல துவாரம் ஓடும் — அந்த ஆன்மாவை அணு என்று கூறின் உடலில் நில்லாது; பல துவாரத் தாற் போகவேண்டும்; ஆதலால், ஆன்மா அணு அன்று,—உயிரினை நித்தம் என்னில் உணர்வு உதயம் அந்தம் இன்று ஏ — அந்த ஆன்மாவை நித்தம் என்று கூறில் அறிவு தோற்றமும் கேடும் இல்லையாகவேண்டும்; இவையிற்றை யுடைத்தாகையால் ஆன்மா நித்தமும் அன்று என்றவாறு.*

*இச்செய்யுள் ஆன்மாவானது அரு, உரு, அணு, நித்தம் என்பவை அல்ல; ஆகையால், ஆன்மா இல்லை என மறுத்துக் கூறியது.* (17)

*செய்யுள் — 80,*

எங்குமாய் நின்ற தான்மா
　　என்றிடின் எங்கு மின்றும்
தங்கிடும் நிறைவு தத்தம்
　　சரீரங்கள் தோறும் என்னின்
மங்கிடும் உடலத் தோடே
　　வடிவினில் ஓரி டத்தே
அங்கது நின்ற தென்னில்
　　அடிமுடி யறிவின் றுமே,

என்பது: *எங்குமாய் நின்றது ஆன்மா என்றிடின் எங்கும் இன்றும் — ஓர் ஆன்மா எங்கும் நிறைந்து நின்றது என்று கூறின் உடல் தோறும் பலபேதப்படும் ஆகையால் ஓர் ஆன்மா எவ்விடத்தும் உண்டாகாது,— தங்கிடும் நிறைவு தம்தம் சரீரங்கள் தோறும் என்னின் மங்கிடும் உடலத்தோடே — அந்த ஆன்மா தத்தம் உடல்கள்தோறும் நிறைந்து நிற்கும் என்று கூறின் உடல் கெடுமிடத்துத் தானும் கூடக் கெடவேண்டும்,— வடிவினில் ஓர் இடத்தே அங்கு அது நின்றது என்னில் அடி முடி அறிவு இன்றும் ஏ — அந்த ஆன்மா உறுப்பில் ஓர் இடத்தைத் தனக்கு இடமாகக்கொண்டு நின்று அறியும் என்று கூறின் தான் நின்ற இடம் அன்றி பாதாதிகேசமட்டாக அறியமாட்டாது; ஆகையால், அறியும் பொருளாகிய ஆன்மா இல்லை என்றவாறு.*

*இச்செய்யுள் ஆன்மா சம்பூரணன் அல்ல ஆகையாலும், உடலில் வியாபியல்ல ஆகையாலும், ஏகதேசியல்ல ஆகையாலும் ஆன்மா இல்லை என மறுத்துக் கூறிற்று*

*'போதமுண்'டென்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் ஆன்மா இல்லை என மறுத்தது.* (18)

செய்யுள் — 81.

சாற்றிய கால மிங்குத்
தங்கிய வாறி தென்னை
தோற்றுவித் தளித்துப் போக்கும்
தொழிலிவை கால மென்னில்
போற்றிய பொருளிற் புக்குப்
பிணங்கிடும் பொருட்பி னின்றும்
தேற்றிய இல்வ ழக்குத்
திரவியத் தியல்பி னுமே.

என்பது: *சாற்றிய காலம் இங்கு தங்கிய ஆறு இது என்னை — முன் சொல்லப்பட்ட காலம் இங்கு நின்றபடி எப்படி?—தோற்றுவித்து அளித்து போக்கும் தொழில் இவை காலம் என்னில் — பதார்த்தங்களைப் படைத்து அளித்து அழிக்குந் தொழிலை யுடைத்துக் காலம் என்று கூறின்,—போற்றிய பொருளில் புக்குபிணங்கிடும் — அப்படி மூன்றுவிதப்பட்ட பொருளிலே காலம் கூடி மயங்கும்,—பொருட்பின் இன்றும்— அப்பொருட்குக் கேடு வந்தால் காலமும் இன்றும்,— தேற்றிய இல் வழக்கு திரவியத்து இயல்பின் ஆம் ஏ — பொருள் மூன்று விதப்பட்டதன்றிக் காலம் மூன்றுண்டு என்று கூறப்பட்டது தெளிவையுடைய இல் வழக்காம் என்றவாறு.*

பொருளியல்பாய வழக்குப் பெயரே காலம் எனக் கொள்க. "கற்பனை யாய் வழங்குகின் றது காலமென்றுரைத்தார்" இஃது அவர் வசனம். இல்வழக்கு—முயற்குக் கோடுண்டு என்கை.

இச்செய்யுள் முன்கூறிய முறையே காலமில்லை என மறுத்துக் கூறிற்று. (19)

செய்யுள் — 82.

எனக்குநீ கிழக்கி ருந்தா
யாகின்மேற் கென்று யென்பால்
எனக்குமேற் கிருந்தா னென்பால்
கிழக்கென வியம்பும் திக்குத்
தனக்குநாம் கொள்வ தெப்பால்
சாற்றிடாய் இல்வ ழக்குத்
தனக்குள தாகு முண்மை
தானில தாகு மன்றே.

என்பது: *எனக்கு நீ கிழக்கு இருந்தாய் ஆகில் மேற்கு என்றாய் என்பால் எனக்கு மேற்கு இருந்தான் என்பால் கிழக்கு என இயம்பும் — நீ எனக்குக் கிழக்கிருந்தாயாகின் என்னை மேற்கிருந்தான் என்று சொல்லுவை, எனக்கு மேற்கிருந்தான் ஒருவன் யான் இருந்த இடத்தைக் கிழக்கிருந்தான் என்று கூறுவன்,—திக்கு தனக்கு நாம் கொள்வது எ பால் சாற்றிடாய் – ஆதலால் திக்கு நாம் கொள்வது எப்பகுதி? நீ கூறிய கிழக்கையோ? அவன்கூறிய மேற்கையோ? சொல்லாய்,—இல் வழக்கு தனக்கு உள தாகும் உண்மை தான் இலதாகும் அன்று ஏ – நீ கூறிய இல் வழக்குக்கு உளதாம் உள் வழக்கு இல்லையாம் என்றவாறு.*

*பிரதிபேதம் – நீ கூறியதில் வழக்குன்ன தாமுண்மை வழக்கில்லையா மென்றவாறு.*

*இச்செய்யுள் முன் கூறிய முறையே 'திக்குமில்லை' என மறுத்துக் கூறிற்று.* (20)

செய்யுள் — 83.

உலகினைப் படைத்தா னென்றாய்
  ஒருவனிங் குள்ள தாயின்
உலகினைப் படைக்க வேண்டா
  இல்லையேற் படைக்க வொண்ணா
துலகினுக் குபாதா னந்தான்
  உள்ளதாய்க் காரி யத்தாம்
உலகினைப் படைக்கி லங்கு
  முளதில தாவ துண்டே.

என்பது: உலகினை படைத்தான் என்றாய் ஒருவன் — உலகத்தைப் படைத்தான் ஒரு கர்த்தா என்று கூறினாய், இங்கு உள்ளது ஆயின் உலகினை படைக்க வேண்டா — இவ்வுலகம் முன்பு உள்ளதாய்ப் பின்பு படைத்தானாயின் முன்பு உள்ளதை ஒருவன் படைக்க வேண்டுவதில்லை,—இல்லையேல் படைக்க ஒண்ணாது — இவ்வுலகம் முன்பு இல்லையாயின் ஒருவன் படைக்க உள்ளதாகாது,—உலகினுக்கு உபாதானம்தான் உள்ளதாய் காரியத்து ஆம் உலகினை படைக்கில் — அவ்வுலகினுக்குக் காரணம் உள்ளதாய்க் காரியம் கெடுமாதலால் காரியப்படும் உலகினைப் படைத்தான் என்று கூறின்,—அங்கும் உளது இலது ஆவது உண்டே — யாதொரு பொருள் உள்ளதும் இல்லதுமாக உண்டாமோ என்றவாறு.

பிரதிபேதம் — அவ்வுலகினுக்குக் காரணம் முன்பு உள்ளதாய்க் காரியங்கெடுதலால்.

அங்கு என்றது சுட்டு. ஏகாரம் வினா.

இச்செய்யுள் ‘பிரபஞ்சம் படைக்கப்படாது’ என்றும் அதனால்‘படைப்பானும் இலன்’என்றும் மறுத்ததாயிற்று (21)

செய்யுள் — 84.

உள்ளது கடாதி போல
உதிப்பித்தான் என்று ரைக்கின்
மெள்ளவே எங்கும் நின்று
விதித்தனன் உலகின் மீது
வள்ளல்தான் நின்ற னென்னில்
வந்ததா முலகம் முன்னே
தள்ளிடா தெங்கும் நிற்கின்
எங்குமுன் தந்த தாமே.

என்பது: *உள்ளது கடாதி போல உதிப்பித்தான் என்று உரைக்கின்* — மண்போல உலகிற்கு மூலம் உள்ளதாய்க் கடாதிகளைக் குலாலன் தோற்றுவிக்குமாபோல இவ்வுலகங்களை ஒருவன் உண்டாக்கினன் என்று நீ கூறின்,—*மெள்ளவே எங்கு நின்று விதித்தனன்* — இவ்வுலகத்தை உண்டாக்குமிடத்து எவ்விடத்து நின்று உண்டாக்கினன்,—*உலகின் மீது வள்ளல் தான் என்னில் வந்தது ஆம் உலகம் முன்னே* — பிரபஞ்சத்திலே நின்று கர்த்தா உண்டாக்கினன் என்று கூறின் பிரபஞ்சம் முன்னே உண்டானதாம்,—*தள்ளிடாது எங்கும் நிற்கின் எங்கும் முன் தந்தது ஆம் ஏ* — நீங்கப்படாமல் எங்கும் நிறைந்து நின்று உண்டாக்கினன் என்று நீ கூறின் எங்கும் என்பது ஒருமுதலாய்க் கர்த்தாவைப் பின்பு தந்ததாம் என்றவாறு.

இச்செய்யுள் பிரபஞ்சம் படைப்பானொருவன் பிரபஞ்சத்தை நீங்கி வேறே நிற்குமிடம் இன்மையான் கர்த்தா இல்லை என்று மறுத்துக் கூறிற்று,

*மண் முதற்காரணம், சக்கரம் சீவராதி துணைக்காரணம், குலாலன் நிமித்த காரணம் என்னில்? துணைக்காரணமின்றிக் குலாலனால் செயல் முடியாது. ஆதலால் ஒருவன் பிரபஞ்சத்தைப் படைக்கமாட்டான் என்க.* (22)

செய்யுள் — 85.

இல்லது கருணை யாலே
இயற்றினன் இறைவன் என்னில்
கொல்லரி உழுவை நாகம்
கூற்றமும் கொண்டு தோற்ற
வல்லவன் கருணை என்னோ
வலியினால் வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னாயிற்
பித்தரைப் பணிந்தி டாயே.

என்பது: *இல்லது கருணையாலே இயற்றினன் இறைவன் என்னில் — எல்லாவற்றிற்குங் கர்த்தாவானவன் இருக்குமிடம் நியமிக்கப்படாமையின் அப்படி அந்நியமான கர்த்தா காருண்ணியத்தினாலே இல்லாதது ஒன்றைப் படைத்தான் என்று கூறின்,—கொல் அரி உழுவை நாகம் கூற்றமும் கொண்டு தோற்ற வல்லவன் கருணை என்னோ — கொலைத்தொழிலைப்பொருந்தின சிங்கத்தையும் புலியையும் யானையையும் கூற்றத்தையும் உண்டாக்கிக்கொண்டு தோற்றவல்லவனுக்குக் காருண்ணியம் என்னோ,—வலியினால் வேண்டிற்று எல்லாம் பல்கவே படைத்தான் ஆயின் பித்தரை பணிந்திடாய் ஏ — கர்த்தா வல்லவன் ஆகையாலே எல்லா ஆன்மாக்களும் வர்த்திக்கும்படி படைத்தான் என்று கூறின் அஃது ஓர் காரண காரியப்படாமல் பித்தர் செய்யும் குணம் ஆதலால் கர்த்தா என்று வணங்குவாயாக என்றவாறு.*

*இதுவும் பிரபஞ்சம் ஒருவன் படைக்கப்படாதது ஆதலால் கர்த்தா இல்லை என்று மறுத்தது.* (23)

செய்யுள் — 86.

பெறுவதிங் கென்ப டைத்துப்
பெற்றது விளையாட் டென்னில்
சிறுமழ விறைய தாகும்
செய்திடும் கன்மத் தென்னின்
உறுபெருங் கன்மம் செய்வோர்
முன்புள ராவ ருண்மை
அறிவுறின் ஞால மெல்லாம்.
அநாதியென் றறிந்தி டாயே.

என்பது: *பெறுவது இங்கு என் படைத்து பெற்றது விளையாட்டு என்னில் — சர்வான்மாக்களையும் இவ்விடத்துப் படைத்துப் பெறும்பேறு என் என்று கேட்டவிடத்துப் பெறும்பேறு விளையாட்டு என்று கூறின்,—சிறு மழவு இறை அது ஆகும் — உன் கர்த்தா இள அறிவினனாய்ச் சிறுபிள்ளையாகவேண்டும், —செய்திடும் கன்மத்து என்னின் உறு பெரும் கன்மம் செய்வோர் முன்பு உளர் ஆவர் — கன்மத்துக்கு ஈடாகப் படைத்தான் என்று கூறின், கன்மம் செய்வோர் அநாதியாவர்,—உண்மை அறிவு உறின்—இதனை மெய்யாக அறியின்,—ஞாலம் எல்லாம் அநாதி என்று அறிந்திடாய் ஏ — பிரபஞ்சமெல்லாம் அநாதியே உள்ளது என்று அறிவாயாக என்றவாறு.*

*இச்செய்யுளும் பிரபஞ்சம் ஒருவன் படைக்க உண்டாவதில்லை, அதனால் படைப்பானும் இல்லை என மறுத்துக் கூறிற்று.* (24)

செய்யுள் — 87.

உருவொடு நின்றா னென்னின்
உருவமுன் படைத்தார் வேண்டும்
உருவவன் இச்சை யென்னின்
உலகெலாம் இச்சை ஆகும்
உருவுல கத்து ளோர்கட்
குறுவது கன்மால் என்னின்
உருவுடை யோர்கட் கெல்லாம்
உற்றது கன்மத் தாமே.

என்பது: உருவொடு நின்றான் என்னின் உருவம் முன் படைத்தார் வேண்டும் – உன் கர்த்தா உரூபி என்று சொல்லின் அவ்வுருவத்தை முன்பு உண்டாக்கினார் வேண்டும்,—உருவு அவன் இச்சை என்னின் உலகு எலாம் இச்சை ஆகும் – அவனது இச்சையாலே உருவத்தை யெடுத்துக்கொண்டான் என்னின் உலகத்துள்ளோரும் தமது இச்சையாலே உரு எடுத்துக் கொண்டார் ஆவார்,—உரு உலகத்து உளோர்கட்கு உறுவது கன்மால் என்னின் உருவுடையோர்கட்கு எல்லாம் உற்றது கன்மத்து ஆம் ஏ – உருவம் உலகத்தினுள்ளவர்க்கு வருவது அவரவர் கன்மத்தால் என்று நீ சொல்லின் உருவமுடையவர்கள் எல்லார்க்கும் உருவம் உறுவது கன்மத்தாலேயே ஆகவேண்டும் என்றவாறு.

கன்மத்தால் என்பது கன்மால் என விகாரப்பட்டது.

இச்செய்யுள் கர்த்தா உரு என்பதனை மறுத்தது. (25)

*செய்யுள் — 88*

அருவெனிற் பவத்தி னின்று
 மெடுத்திடான் ஆகா சம்போல்
மருவினன் நிழல்போ லென்னில்
 மருவினோர்க் காகு மாட்சி
பெருகிய அறிவுண் டென்று
 பேசிடின் நேசத் தோடும்
கருதிட வுருவம் வேண்டும்
 இல்லையேற் கருத லின்றே.

என்பது: *அரு எனில் பவத்தில் நின்றும் எடுத்திடான் ஆகாசம்போல் – உன் கர்த்தா அரூபி என்று கூறில் ஆகாசம்போல் சேட்டையிலன் ஆகையால் ஆன்மாக்களைப் பிறவித்துன்பத்தினின்றும் எடுத்திட மாட்டாதவன் ஆவன்,—மருவினன் நிழல்போல் என்னில் மருவினோர்க்கு ஆகும் மாட்சி – யாவரும் சென்று அடையத்தக்க நிழல் போல்வன் என்னில், அந்நிழல் தன்னிடத்து வந்து மருவினோர்க்கே நன்மையைக் கொடுத்தலால் அவனும் வியாபி அல்லன்,—பெருகிய அறிவு உண்டு என்று பேசிடின் நேசத்தோடும் கருதிட உருவம் வேண்டும் – ஏகதேசி ஆயினும் நிறைந்த அறிவினையுடையன் என்று கூறின் விருப்போடும் சிந்தித்து அறியத்தக்கதோர் உருவு உண்டாதல் வேண்டும்,— இல்லையேல் கருதல் இன்று ஏ – அப்படி அறியத்தக்க உரு இல்லையாயின் அறிவும் இல்லையாம் என்றவாறு.*

*இச்செய்யுள் கர்த்தா அரூபி என்பதனை மறுத்துக் கூறிற்று.* (26)

செய்யுள் — 89

எங்கள்நூல் அநாதி யாக
இறைவனுண் டென்னும் என்னின்
உங்கள்நூல் உரைப்பா ரின்றி
ஓதுவ தழகி தாகும்
அங்கவன் தன்னை நூல்கொண்
டறிந்தனம் அவனைக் கொண்டே
இங்குநூல் அறிந்தோ மென்னில்
ஈதொராச் சரிய மாமே.

என்பது: *எங்கள் நூல் அநாதியாக இறைவன் உண்டு என்னும் என்னின் உங்கள் நூல் உரைப்பார் இன்றி ஓதுவது அழகிது ஆகும் — எங்கள் நூலாகிய வேதாகமங்கள் அநாதியும் ஆகிக் கர்த்தா உண்டு என்று சொல்லும் என்று கூறின் உங்கள் நூலாகிய வேதாகமங்கள் சொல்லுவாரும் இன்றித் தோன்றும் என்பது அழகிதாய் இருக்கும்,—அங்கு அவன் தன்னை நூல்கொண்டு அறிந்தனம் அவனைக்கொண்டே இங்கு நூல் அறிந்தோம் என்னில் ஈது ஓர் ஆச்சரியம் ஆம் ஏ — அவ்விடத்துக் கர்த்தா உண்டு என்று வேதங் கொண்டு அறிந்தனம் என்றும், அந்தக் கர்த்தாவைக் கொண்டே வேதம் கேட்கப்பட்டது என்றும் கூறின் இஃது இங்ஙனமே மயங்கினது இதனை முன்கேட்டும் கண்டும் அறிந்தன அல்லவாம் என்றவாறு.*

*ஆச்சரியம் என்றது இகழ்ச்சிக்குறிப்பு.*

*இச்செய்யுள் நூற்பிரமாணத்தை இல்லையென மறுத்துக்கூறிற்று. இந்தத் திருவிருத்தத்தின் முடிபு வேறே பாடம் ஓதில் 'பராற்பார தோடம்' என்கிற குற்றம் உண்டாம் என்றபடி.*

இது முதலிய செய்யுட்கள் முன்னர்ப் பாரிப்பிற் கூறு தொழிந்தனவும் கூறுகின்றன. (27)

செய்யுள் — 90

உற்றெழு மரங்க ளாதி
உயிரின்றிப் பூத ரூபம்
பற்றியிப் பாரின் மீது
பாங்கினாற் பலவு மாகிப்
புற்றொடு மயிர்கொம் பாதி
போலவே தோன்றி மாயும்
மற்றுள யோனி கட்குப்
பயனென வழங்கு மன்றே

என்பது: உற்று எழு மரங்கள் ஆதி உயிர் இன்றி பூத ரூபம் பற்றி இ பாரின் மீது பாங்கினால் பலவும் ஆகி புற்றொடு மயிர் கொம்பு ஆதிபோலவே தோன்றி மாயும் — பூமியினிடமாக நின்று வளரும் மரங்கள் முதல் புல் ஈறாக உள்ளன தாவரங்களாம், அவை உயிர்வர்க்க மல்லவாய்ப் பிருதிவி அப்புத் தேயு வாயு என்னும் பூத ரூபத்தைப் பொருந்திய பகுதிகளாகப் பலபேதப்பட்டுப் புற்றுப் போலவும் மயிர் போலவும் கொம்பு போலவும் உண்டாய் வளர்ந்து மீளவும் தோன்றின முறைமைப் பாட்டிலே கெடும்; இஃது யாது? காரணமாய் உண்டாயது என்னின்?— மற்று உள யோனிகட்கு பயன் என வழங்கும் அன்றே — அண்டசம் சுவேதசம் சராயுசம் என்னும் மூன்று பேதத்திலும் உண்டாகிய ஆன்மாக்களுக்குப் பிரயோசன காரணத்தால் அநாதியே உண்டாய் வழங்கும் என்றவாறு.

இச்செய்யுள் உற்பீச வர்க்கம் ஆன்மவர்க்கத்தது அல்ல என்று மறுத்துக் கூறிற்று. (28)

செய்யுள் — 91

கொன்றிட லாகா தென்றும்
கொன்றவை கொண்டு நாளும்
தின்றிட லாகும் மண்ணோ
டொத்திடும் செத்த வெல்லாம்
ஒன்றிய வாசம் ஊட்டி
உண்ணுநீர் வைத்த வர்க்கோ
சென்றுநின் றுண்ட வர்க்கோ
புண்ணியம் செப்பி டாயே.

என்பது: கொன்றிடல் ஆகாது என்றும் — தான் ஓர் ஆன்மாவைக் கோறல் ஒருக்காலும் நியாயமன்று,— கொன்றவை கொண்டு நாளும் தின்றிடல் ஆகும் மண்ணோடு ஒத்திடும் செத்த எல்லாம் — மாண்ட எல்லாம் மண்ணோடு ஒக்கும்; ஆதலால், ஒருவர் கொல்லப்பட்டவற்றைக் கைக்கொண்டு எப்பொழுதும் புசிக்கலாம்: அதனால், தோடம் உண்டாகாது,—ஒன்றிய வாசம் ஊட்டி உண்ணு நீர் வைத்தவர்க்கோ சென்று நின்று உண்டவர்க்கோ புண்ணியம் செப்பிடாய் ஏ — மணங்களாலே கட்டப்பட்டு நீர் அருமையாய வழிகளிலே வைக்கப்பட்ட தண்ணீரதனை உண்டாக்கி வைத்தவர்க்குப் புண்ணியம் உண்டாயதோ? வழிநடந்து தாகித்துக் குடித்தவர்க்குப் புண்ணியம் உண்டாயதோ? சொல்லாய்; வைத்தவர்க்கே புண்ணியம் உண்டாம்: ஆதலால், கொன்றவர்க்கே பாவம் உண்டாவது, தின்றவர்க்குப் பாவம் இல்லையாம் என்றவாறு.

இச்செய்யுள் உயிர்களைக்கொல்லலாகாது, தின்னலாகும் தின்றாற் பாவமில்லை என்பது கூறிற்று.

தின்றவர்க்கும் ஏவல் உடம்பாடுண்டாகிற குற்றமாம் அல்லது குற்றமில்லை எனக்கொள்க. கொண்டு தின்றவனுக்குக்கொலைத்தோடம் வரும் என்னில், ஓர் ஆற்றுக்குள்ளே கருவாட்டுப் பொதி இட்டுவைத்தால் இரவு ஆற்றுநீர் வந்து எடுத்துப்போக நாட்டில் கொள்ள இருந்தவர்க்குத் தோடம் ஆமோ? தோடம் வரலாறு யாவர்க்குளதாம்? ஆதலாற் கொண்டு தின்றவர்க்குப் பாவமில்லை என்க. (29)

செய்யுள் — 92

ஓங்கிய வுருவ மோடும்
வேதனை குறிப்பி னோடும்
தாங்குபா வனைவிஞ் ஞானம்
தாமிவை ஐந்தும் கூடிப்
பாங்கினாற் சந்தா னத்திற்
கெடுவது பந்த துக்கம்
ஆங்கவை பொன்றக் கேடாய்
அழிவது முத்தி யின்பம்.

என்பது: ஓங்கிய உருவமோடும் வேதனை குறிப்பினோடும் தாங்கு பாவனை விஞ்ஞானம் தாம் இவை ஐந்தும் கூடி பாங்கினால் சந்தானத்தில் கெடுவது பந்த துக்கம் — மிக்க உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தமும் ஒருமைப்பட்டு ஒழுங்கிலே காரியம் கெடக் காரணம் கிடக்கும் என்பது மிகுத்துரையில் வழக்குமாய்ப் பந்த துக்கமும் ஆம்; இது குற்றவீடு,—ஆங்கு அவை பொன்ற கேடு ஆய் அழிவது முத்தி இன்பம் — அவ்விடத்துச் சொல்லப்பட்ட கந்தங்கள் ஐந்தும் நேராகக்கெட்டு வீட்டை அடையும் என்பது முத்தியின்பமாம்; இது கந்தவீடு என்றவாறு.

இனி, உருவமாவது எட்டு. அவை பூதவுருநாலும், உபதானவுரு நாலும் ஆம். மேல் வரலாறு:– பிருதிவி, அப்பு, தேயு, வாயு எனும் நாலும் பூதவுரு. வலி, கந்தம், இரதம், வன்னம் எனும் நாலும் உபாதானவுரு. ஆக-8. வேதனை யாவது மூன்று அவை வருமாறு:–குசலாவேதனை, அகுசலா வேதனை, குசலாகுசலாவேதனை ஆக-3. குறிப்பாவது ஆறு. அவை வருமாறு:– சோத்திரம், துவக்கு, சக்ஷு சிங்குவை, ஆக்கிராணம், மனம் ஆக-6. பாவனை இருபது அவை வருமாறு:– தீக்குணம் பத்து, நற்குணம் பத்து. தீக்குணங்களாவன – பொய் சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல் பயனில சொல்லல் என வாக்கின் குணம்-4. களவிற்குப் போகுதல், வறிதே தொழில் செய்தல், கொலை செய்தல் எனக் காயத்தின் குணம்-3. கொலை நினைக்கை, காமபபற்று, ஆசை என மனத்தின் குணம்-3. ஆகப்பத்து.

இனி, நற்குணங்களாவன -மெய்யுரை, நல்வார்த்தை இனியன கூறல், பயன்படுசொல் எனவாக்கின் குணம்-4, பள்ளி வலம்வரல், தவம்புரிதல், தானம் செய்தல் எனக் காயத்தின் குணம்—3. அருள்நினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என மனத்தின் குணம்—3. ஆக நற்குணம் பத்து; ஆகபபாவனை இருபதும் மானச வாசிக காயங்களான் வருவனவாம். விஞ்ஞானம் ஆறு. அவையாவன:–சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சித்தம் – ஆக 6. ஆகப் பஞ்சகந்த பேதம் நாற்பத்து மூன்று. இதற்கு அவன் வசனம் – "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞானம், ஒட்டிய குறிப்போ ராறு செய்கையும் இருப தாகக், கட்டிய பஞ்ச கந்தம் கணத்தினில் பங்க மாகும், தொட்டநாற் பத்து மூன்றும் சுகதனூற் றுணிவு தானே." என்பதாம். சந்தானமாவது–தொடர்ச்சி. அந்தத்தொடர்ச்சி நால்வகையாம்.

அவை வாயுசந்தானம் தீபசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என்பனவாம்.

இச்செய்யுள் குற்றவீடும், கந்தவீடும் கூறிற்று விஞ்ஞானகந்தம் ஆறவன — இந்திரியங்களையும், மனத்தையும் பற்றிப்பிறக்கும் அறிவுகள். (30)

செய்யுள் — 93

அழித்திடும் அராக மாதி
அகற்றிநல் லறங்கள் பூரித்
திழித்திடும் புலன்கள் போக்கி
இன்பொடு துன்பம் வாட்டிப்
பழித்திடாப் பழுதில் வாழ்க்கை
எட்டையும் பாரித் தெல்லாம்
ஒழித்திடும் ஞான சீலம்
சமாதியின் உறுதி யாமே.

என்பது: *அழித்திடும் அராகம் ஆதி அகற்றி* — நன்மையைக் கெடுக்கும் காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்களை நீக்கி,—*நல் அறங்கள் பூரித்து* — நன்றான தன்மங்களை நிறையச் செய்து,—*இழித்திடும் புலன்கள் போக்கி* — பொல்லாங்கைச் செய்யும் புலன் வழிச் சேறலைக் கைவிட்டு,—*இன்பொடு துன்பம் வாட்டி* — துன்ப இன்பங்களை ஒழித்துப் புண்ணிய பாவங்களைக் கெடுத்து,—*பழித்திடா பழுது இல் வாழ்க்கை எட்டையும் பாரித்து* — பிறரால் பழிக்கப்படாத குற்றமில்லாத எட்டையும் விரித்து (எனவே பழிபடு தீவாழ்க்கை எட்டையும் சுருக்கி),—*எல்லாம் ஒழித்திடும் ஞான சீலம் சமாதியின்*

உறுதி ஆம் ஏ — மற்றும் தோஷங்களானவை யெல்லாம் ஒழித்திடும் ஞானகுணமாவது (தீவாழ்க்கை எட்டையும் கெடுத்திடும் அறிவின் குணம்) சமாதியின் உறுதியாம் என்றவாறு.

பழுதிலா வாழ்க்கை எட்டாவன — நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு என்பன. தீவாழ்க்கை எட்டாவன — நற்காட்சி முதலாயினவற்றை மாறிக்கொள்க. சமாதியின் உறுதி வாழ்க்கை இவை எட்டும் கெட இருத்தல். இதற்கு அவன் வசனம்—

"ககனமும் ஆன்மாவும் காரணனு மில்லை
சகலமு மாமநித்தம் சார்வாற் பிறவி
வகைவினை யுண்டா மதுபொன்ற மாய்தல்
சுகதநூன் முத்தித் துணிவு" என்பதாம்.

இச்செய்யுள் சமாதியின் முறைமை கூறிற்று.

'நீதியார்' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் செய்யுள் முப்பத்தொன்றானும் பௌத்த மதம் கூறிற்று. (31)

## இரண்டாவது சௌத்திராந்திகன் மதம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—93.

---

உறுதி ஆம் ஏ — மற்றும் தோஷங்களானவை யெல்லாம் ஒழித்திடும் ஞானகுணமாவது (தீவாழ்க்கை எட்டையும் கெடுத்திடும் அறிவின் குணம்) சமாதியின் உறுதியாம் என்றவாறு.

பழுதிலா வாழ்க்கை எட்டாவன — நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு என்பன. தீவாழ்க்கை எட்டாவன — நற்காட்சி முதலாயினவற்றை மாறிக்கொள்க. சமாதியின் உறுதி வாழ்க்கை இவை எட்டும் கெட இருத்தல். இதற்கு அவன் வசனம்—

''ககனமும் ஆன்மாவும் காரணனு மில்லை
சகலமு மாமநித்தம் சார்வாற் பிறவி
வகைவினை யுண்டா மதுபோன்ற மாய்தல்
சுகதநூன் முத்தித் துணிவு'' என்பதாம்.

இச்செய்யுள் சமாதியின் முறைமை கூறிற்று.

'நீதியார்' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் செய்யுள் முப்பத்தொன்றனும் பௌத்த மதம் கூறிற்று. (31)

## இரண்டாவது சௌத்திராந்திகன் மதம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—93.

சிவஞான சித்தியார் பரபக்கம்

# 2. சௌத்திராந்திகன் மதமறுதலை

திருவிருத்தம் — 40.

## 2. சௌத்திராந்திகன் மதமறுதலை

*எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

*செய்யுள்* — 94.

அனைத்தினையும் உணர்ந்தானெம் இறைவ னென்றிங்
கறியாது புத்தநீ அறைந்தாய் என்றும்
அனைத்தினையும் அறிந்திடான் அளவி லாமை
ஒன்றொன்றா அனைத்தினையும் அறிந்தான் என்னின்
அனைத்தினையும் அளவிறந்த தென்ன வேண்டா
அளவிலா ஞானத்தால் அறியின் ஞானம்
அனைத்தினையும் அறியாது கணத்தில் தோன்றி
அழிதலால் அறிந்தமையின் றாகு மன்றே.

என்பது: *அனைத்தினையும் உணர்ந்தான் எம் இறைவன் என்று இங்கு அறியாது புத்த நீ அறைந் தாய்*—புத்த! நீ முழுவதையும் உணர்ந்தான் எம்முடைய சுவாமி என்று அறியாமற் கூறினாய்,—*என்றும் அனைத்தினையும் அறிந்திடான் அளவு இலாமை* — எப்போதும் சர்வமும் உணர்ந்தறியமாட்டான் பிரபஞ்ச பேதம் அளவிட அரிது ஆகையால்,—*ஒன்று ஒன்றா அனைத்தினையும் அறிந்தான் என்னின் அனைத்தினையும் அளவு இறந்தது என்ன வேண்டா* — முழுவதையும் ஓரொன்றாக அறிந்தான் என்று நீ கூறின் அப்படி அறியுமிடத்துச் செல்வு கலப்பு நீக்கத்தால் அறிய வேண்டும்; ஆதலால், அதனை அளவிறந்தது என்று கூறவேண்டா,—*அளவு இலா ஞானத்தால் அறியின்*

ஞானம் அனைத்தினையும் அறியாது — எல்லையில்லாத ஞானத்தால் அறிந்தான் என்று நீ கூறின் உனது ஞானம் அனைத்தினையும் அறியமாட்டாது; அஃது யாங்ஙனம்? என்னில்,—கணத்தில் தோன்றி அழிதலால் அறிந்தமை இன்று ஆகும் அன்று ஏ — ஒரு மாத்திரையில் அறிவு தோன்றிக் கெடும் என்று நீ கூறுகையால் அனைத்தினையும் அறிந்தான் என்கை இல்லையாம் என்றவாறு.

இச்செய்யுள் புத்தனுக்கு சர்வஞ்ஞத்துவம் இல்லை என்பது நிற்கிற மலையினையும், குளிர்கிற சலத்தினையும், சுடுகிற நெருப்பையும், உளரும் காற்றினையும் கணமொன்றில் அறியக்கூடாது ஆகையால் என்று கூறிற்று. (1)

செய்யுள் — 95

சிலபொருளை அறிந்தவற்றின் திறத்தே ஓட்டிச்
சிந்திப்பன் எப்பொருளும் என்னிற் சென்று
பலபொருளாய் ஒன்றுபல பேத மாகிப்
பயின்றுவரும் ஆதலால் பார்க்கு மாறென்
உலகுதனில் ஒருபொருளங் குணரும் போதின்
உற்றுணர்தல் ஆராய்தல் தெளிதல் உண்டாய்
நிலவுமத னல்உணர்வு பன்மை முன்பின்
நின்றிடா தென்பையெல்லாம் நினைப்ப தெங்கே.

என்பது: சில பொருளை அறிந்து அவற்றின் திறத்தே ஓட்டி சிந்திப்பன் எ பொருளும் என்னில் — பிரபஞ்சத்தில் சில பொருள்களை அறிந்து அவற்றின் பகுதியிலே எல்லாப் பொருள்களையும் ஓட்டிச் சிந்திப்பன் என்று புத்த! நீ கூறின்,—சென்று பல பொருள் ஆய் ஒன்று பல பேதம் ஆகி பயின்றுவரும் ஆதலால்

பார்க்கும் ஆறு என் — அறிவால் அறியும் பொருள் பலவாய்ச்சென்று அவற்றின் பகுதி பல பேதமாகிப் பொருந்திவரும் ஆகையால் ஒன்றைக்கொண்டு அதன் பேதம் அறியுமாறு எத்தன்மைத்து ? அன்றியும்,— உலகுதனில் ஒருபொருள் அங்கு உணரும் போதின் உற்று உணர்தல் ஆராய்தல் தெளிதல் உண்டாய் நிலவும் அதனால் உணர்வு பன்மை முன்பின் நின்றிடாது என்பை எல்லாம் நினைப்பது எங்கே — பிரபஞ்சத்தில் ஒரு பொருளை அறியுமிடத்துக்கூடி அறிந்து ஆராய்ந்து தெளிதல் வேண்டும்; ஆதலால், ஒன்றை அறியும்பொழுது பலபேதப்படுகையாலும் நீ முன்பு உண்டான அறிவு பின்பு இல்லை என்று சொல்லுவை ஆகையாலும் ஒரு பொருளை அறிந்து அதனோடு மற்றொரு பொருளைச் சேர்த்து அறியும் நெறி எவ்விடத்தே உளது என்றவாறு.

இச்செய்யுள் இரண்டும் புத்தர் இருபத்துநால்வரில் ஒருத்தன் முழுதும் உணர்ந்தான் என்றதனை மறுத்துக் கூறிற்று.

புண்ணியபாவம் மறுமையிலே பலிக்கையாலும், "யான் கண்டீர் நோன்பு தான்முற் பிறப்பினு லவண் முய லாதேன்" என்கையாலும் எல்லாம் கணபங்கம் அல்ல என்க. (2)

செய்யுள் — 96.

முத்திநிலம் கண்டறங்கள் மொழிந்தா னுயின்
முதல்முழுதும் பொன்றிப்பின் மொழிந்த வண்ணம்
ஒத்திடும்தேன் நெய்கூட்டி உண்டிறந்தோன் ஒருவன்
உலகினில்வந் திதுதீதென் றுரைத்தால் ஒக்கும்

செத்ததுபின் என்றுரைக்கில் கதியில் செல்லாத்
தேரைநுரை நீர்பெருகிச் சென்றாறாகும்
அத்தினள வறியாதிக் கரையோர் தம்மை
அக்கரைக்கே செல்லவிடும் ஆசை யாமே.

என்பது: *முத்திநிலம் கண்டு அறங்கள் மொழிந் தான் ஆயின் முதல் முழுதும் பொன்றி பின் மொழிந்த வண்ணம் ஒத்திடும் — வீட்டின்பத்தைக்கண்டு பின்பு அறம் முதலியவற்றைச் சொன்னான் என்று புத்த! நீ கூறினாய்; ஒரு பொருள் சேரக் கெட்டுப்போய்ப் பின் வந்து சொன்னது என்னும் முறைமையை ஒக்கும்; அஃது என்போல? என்னில்,—தேன் நெய் கூட்டி உண்டு இறந்தோன் ஒருவன் உலகினில் வந்து இது தீது என்று உரைத்தால் ஒக்கும் — தேனையும் நெய்யை யும் கூட்டிக்குடித்துச் செத்தோன் மீள உலகின்கண் வந்து தேனும் நெய்யும் கூடின் விடம் என்று சொன்ன தன்மைத்து,—செத்தது பின் என்று உரைக்கில் கதியில் செல்லா — (இதனைப் பொருளுக்கேற்பமாறுக) அறம் முதலியவற்றைக் கூறிப் பின்பு வீட்டின்பத்தை அடைந்தான் என்னில் அவன் முத்தியை அறிந்தவன் அல்லன்; ஆதலால், அவன் சொன்ன அறமும் கதியில் செலுத்தமாட்டாது,—தேரை நுரை நீர் பெருகி சென்று ஆறு ஆகும் அத்தின் அளவு அறியாது இ கரையோர் தம்மை அக்கரைக்கே செல்லவிடும் ஆசை ஆம் ஏ — தவளை வாயினுண்டாகிய நுரை நீர் வெள்ள மாய்ச் சென்று பொருந்திய ஆறாகும்; அதன் அளவு அறியாமல் இக்கரைக்கே நிற்போரை அக்கரைக்கே போகவிடுவோம் என்பார் மயக்க ஆசை உனக்கு உண்டாம் என்றவாறு.*

*அச்சுப்பிரதிகளில் 'தோரன் உரை' எனப் பிரித்து புத்தனுரையானது ஜலமானது பெருகிச்சென்று ஓடும் ஆற்றின் அளவு அறியாதான் ஒருவன் இக்கரையில் நின்றோரை அக்கரையிலே செலுத்திவிடுவேன் என்று ஆசைப்படுதற்கு ஒக்கும் என்று எனக் காணப்படுகிறது.*

*இச்செய்யுள் புத்தர் இருபத்து நால்வரில் ஒருவன் முத்தியின்பமும் கண்டு இவ்விடமும் கண்டு அறம் முதலியன கூறினன் என்பதனை மறுத்துக் கூறிற்று.*

*தேரை நுரை நீர் பெருகி என்றது பாடம்.* (3)

*செய்யுள்* — 97.

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே
நெருப்பாய துயர்ப்பிறப்பின் நிகழ்ந்து நின்று
பாரோருக் களித்தபடி வலையிற் பட்ட
பலகலைமான் கண்டொருநீள் கலைபாய்ந் தோடி
நேரேசென் றவ்வலைக்கே நேர்ந்தா லொக்கும்
நீள்பாவக் குழியில்விழும் நீர்மை யாகும்
ஆரோவிங் குனையொப்பார் அறத்தை ஆக்கப்
பிறந்தறமாக் கினனென்னில் அடங்க வாமே.

என்பது: *நீர்போல நின்று உயிர்கட்கு அளித்திடாதே நெருப்பு ஆய துயர் பிறப்பின் நிகழ்ந்து நின்று பாரோருக்கு அளித்தபடி வலையில் பட்ட பல கலைமான் கண்டு ஒரு நீள் கலை பாய்ந்து ஓடி நேரே சென்று அவ்வலைக்கே நேர்ந்தால் ஒக்கும் – கர்த்தா சலமும் அதன் இரதமும் போலச் சர்வான்மாக்களிடத்திலும் நீங்காமல் நின்று இரட்சிப்பன் என்னுமிதே கொடிதாகிய தீத்தன்மையையுடைய துன்பப் பிறவியின் கண்ணே*

தோன்றி நின்று பிரபஞ்சத்தார்க்கு அருள் செய்வன் என்னும்அதாவது வலையிடைப்பட்டபலமான் கலையைக்கண்டு ஒருகலை குதித்தோடித் தவறுமற் சென்று அந்தவலைக் குள் அகப்பட்ட படியை ஒக்கும்,—நீள் பாவ குழியில் விழும் நீர்மை ஆகும் – அது மிக்க நரகத்திற் செல் லும் இத்தனை ஆதலால்,—ஆரோ இங்கு உனை ஒப்பார்– மெய்யே இரட்சிக்கும் வழி என்று சொல்லுகிற உன்னை ஒப்பார் யார்,—அறத்தை ஆக்க பிறந்து அறம் ஆக்கி னன் என்னில் – அறம் முதலியவற்றை உண்டாக்க வேண்டித் தான் பிறந்து அறத்தை உண்டாக்கினன் என்னில்,—அடங்க ஆம் ஏ – சர்வான்மாக்களும் தரு மத்தை உண்டாக்க வேண்டிப் பிறந்தார்களாம் என்ற வாறு.

ஆரோ – இகழ்ச்சிக் குறிப்பு.

இச்செய்யுளால் இரட்சை காரணமாயினும் தன்மம் காரணமாயினும் கர்த்தா பிறந்தான் என்னில், கர்த்தா அன்று என்பது தோடம் என மறுத்துக் கூறிற்று.

நீர்போல நின்று உயிர்கட்கு என்பது, பானீயம் ஆன் மாக்களுக்கு இரட்சை சலமாம் என்கையால். நீள் பாவக்குழி யில் என்றதனுல் மாம்சம் தின்று தன்மம் சொல்லுதல் காக எதுவாம் என்க. (4)

செய்யுள் — 98

அலகிறந்த யோனிகளில் புகுந்த தெல்லாம்
அறத்தையளித் திடவென்னில் அவற்றின் எல்லாம்
நிலவுவது கன்மத்தால் ஆகு மன்றி
நினைந்ததோ ரிச்சையினுல் நிகழ்ந்தா ஞகில்

உலகுதனில் உள்ளோர்க்கும் அதுவே யாகும்
ஒருத்திவயிற் றினிலிருந்தங் குதரம் தள்ளித்
தலமதில்வந் தானென்னில் தாயைக் கொன்றான்
தருமத்தை இன்றெனக்குச் சாற்றி டேலே.

என்பது: *அலகு இறந்த யோனிகளில் புகுந்தது எல்லாம் அறத்தை அளித்திட என்னில் — எண்ணிறந்த யோனிகளில் சாதனான தெல்லாம் தன்மத்தை உண்டாக்கவேண்டி என்று புத்த! நீ கூறின்,—அவற்றின் எல்லாம் நிலவுவது கன்மத்தால் ஆகும் — அங்ஙனம் பல யோனிகளில் சாதனானது கன்மத்தால் ஆக வேண்டும்,—அன்றி நினைந்தது ஓர் இச்சையினால் நிகழ்ந்தான் ஆகில் — அற்றன்று, தான் கருதிய விருப்புக் காரணத்தால் காயம் எடுத்துக் கொண்டான் என்று கூறின்,—உலகுதனில் உள்ளோர்க்கும் அதுவே ஆகும் — பிரபஞ்சத்தில் உள்ளோர் காயம் எடுத்ததும் தன்மம் செய விரும்பி எடுத்துக்கொண்டதேயாம், —ஒருத்தி வயிற்றினில் இருந்து அங்கு உதரம் தள்ளி தலம் அதில் வந்தான் என்னில் — அங்ஙனம் ஆன்மாக்கள் போல யோனி சாதன் ஆனதில்லை, மாதாவின் உதரத்தே இருந்து அவ்வுதரத்தைப் பிளந்து பூமியின் கண்ணே வந்து அறத்தை உண்டாக்கினான் என்று நீ கூறின்,—தாயைக் கொன்றான் தன்மத்தை இன்று எனக்கு சாற்றிடேல் ஏ — அங்ஙனம் மாதாவைக் கொன்று அறத்தை உண்டாக்கினான் என்னில், அத்தாயைக் கொன்றான் கூறிய தன்மத்தை இப்போது எனக்குக் கூறுவாயல்லை என்றவாறு.*

*புத்தன் பிறக்கிறகாலத்து மாதாவினுடைய வலமருங்குலால் பிறந்தான். அவளும் ஆறுநாள் குற்றுயிரோடே கிடந்து ஏழாம்நாள் இறந்தாள். இது புத்தர் மாதாக்கள் இருபத்துநால்வர்க்கும் ஒக்கும். இதனை,*

"உலும்பிலி வனத்துள் ஒண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோய் உறாமல்
ஆன்றோன் அவ்வழித் தோன்றினன் ஆதலின்
ஈன்றோள் ஏழாநாள் இன்னுயிர் வதைத்தான்"

*என்னும் விம்பசாரகதையால் தெளிக. இக்காவியம் பௌத்தருடைய நூல்.*

"முத்தராம் புத்தர் தோன்றித் தாய்பழுவை முறித்தே விட்டார், கொத்துவாழ் குழலா ளாகும் குண்டல கேசி தானும், கத்திருவாம் கணவ னக்காள் தனையுங் கொன்றிட்டார், இத்துணையா ரிருவ ரும்வந் திங்ஙனே தவமு ரைப்பார்" *இது சிவபத்தர்கள் வசனம்*

*செய்யுள்* — 99.

அரியினொடு நரியுழுவை ஆதி யாக
ஆனபோ தறம்திரிந்து கோற லாகிப்
பரிவினொடும் செய்தனனும் இல்லை யாகில்
பசிதனக்குத் தின்பதவன் பழுதை யோதான்
கருதிலவன் பரதுக்க துக்க னாகில்
கணவனிழந் தோர்கட்கும் கண்ணரி குத்தித்
திரியுமவர் துயரினுக்கும் இரங்கு வோன்தன்
செயலறத்துக் கழகியதாம் செப்புங் காலே.

என்பது: அரியினொடு நரி உழுவை ஆதி ஆக ஆனபோது அறம் திரிந்து கோறல் ஆதி பரிவினொடும் செய்தன ஆம் — உன் ஆதி புத்தன் அலகிறந்த யோனிகளில் பிறந்தான் என்றும், அப்படிப் பிறந்தது கொலை முதலிய பாவங்களை நீங்கித் தன்மத்தைப் பரிபாலிக்க விரும்பி என்றும் கூறினாய், அங்ஙனமாயின் புத்தன் சிங்கம் நரி புலி முதலிய யோனிகளிலே சாதனைவிடத்துத் தன்மத்தைவிட்டுக் கொலையை விரும்பிப் பல ஆன்மாக்களையும் கொன்றுதின்ற இது பிரியத்தோடும் செய்தானாகவேண்டும்,—இல்லையாகில் பசி தனக்கு தின்பது ;அவன் பழுதையோ தான்—அப்படிக் கொன்றுதின்றானில்லை என்று சொல்லுவையாமாயின் அந்த யோனிசாதனைத் திரிந்தவிடத்து உண்டான பசிக்குப் புத்தன் தின்பது பழுதையோ ? அன்றேல், மாமிசம் அன்றோ! இஃதன்றியும்,—கருதில் அவன் பரதுக்கன் ஆகில் கணவன் இழந்தோர்கட்கும் கண்ணிகுத்தித் திரியும் அவர் துயரினுக்கும் இரங்குவோன் தன் செயல் அறத்துக்கு அழகியது ஆம் செப்பும் கால் ஏ — பரதுக்கன் என்று நீ சொல்லின் பூகேதனைப் பல ஆன்மாக்களைக் கோறலால் பொல்லாதவன் ஆனதன்றியும், கணவனை நீங்கிச் சோரத்திற் செல்லும் மகளிர் உறும் துயரத்தினுக்கும், கண்ணி முதலிய கொண்டு கொலைத்தொழில் புரிவோர் துயரத்தினுக்கும் இரங்குவன் என்னில் அச்செய்தி அவன் தன்மத்துக்கு அழகிதாம் சொல்லும் காலத்தும் கருதும் காலத்தும் என்றவாறு.

*ஆதி என்பதனை ஆதிபுத்தன் என்று முன்னே கூட்டுக. கருதில் என்பதனைக் கருதும் காலத்து என்று பின்னே கூட்டுக. ஆம் என்பதனை அல்ல என்க. அழகிதாம் என்பது இகழ்ச்சிக்குறிப்பு.*

*'அலகிறந்த யோனிகளும்' என்னும் செய்யுளும், இச் செய்யுளும் ஒரு தொடர்.*

அலகிறந்த யோனிகளிற் பிறந்து, கொலை முதலியன கடிந்து, தன்மம் பாலித்தான் என்பதனையும், பரதுக்கன் என்பதனையும் மறுத்துக் கூறிற்று.

*'கணவன் இறந்த'தென்றும் பாடம்.*

*ஊன் உண்டு உயிர்க்கு அருளுடையோம் என்கை மித்தியாவாதம் எனக் கொள்க, 'கோறல் பொருளல்ல தவ்வூன் தினல்' என்றும் பெரியோர் சொல்லுகையால்.* (6)

*செய்யுள்* — 100.

ஒருபொருளைத் தேடியதற் குரையுந் தேடி
  உரைப்பதன்முன் னுணர்விறக்குமுனக்கு நூலென்
மருவிவருஞ் சந்தான வழியி லென்னில்
  வாயுரைத்த தேயுரைத்து வழங்கு மாகும்
பெருகுவது கெட்டென்னி லதுபோ லாம்பின்
  பித்துரைத்த தறியாது பேதை சொல்லும்
தருவதுநூ லெப்பரிசு முதனடுவோ டிறுதி
  தான்விருத்த மின்றியது சாற்றி டாயே.

என்பது: *ஒரு பொருளை தேடி அதற்கு உரையும் தேடி உரைப்பதன்முன் உணர்வு இறக்கும் உனக்கு நூல் என்—ஒருபொருளைத்தேடி அதற்கு ஏற்றதோர் சொல்லையும் தேடிச் சொல்லொடு பொருளைக் கூட்டி நூலாகக் கூறுதன் முன்னே உன் ஞானம் கெடும்*

ஆதலால் உனக்கு நூல் உண்டாம்படி என்? அற்றன்று,—மருவி வரும் சந்தான வழியில் என்னில் வாய் உரைத்ததே உரைத்து வழங்குமாகும்—அவ்வறிவு பொருந்திவரும் தொடர்ச்சிவழித் தோன்றின நூல் ஆம் என்று புத்த! நீ கூறின், முன் சொன்ன அக்கரம் ஒன்றையே பின் சொல்லி நிற்கவேண்டும்; அற்றன்று,—பெருகுவது கெட்டு என்னில் அதுபோல் ஆம் பின் – முன் அறிவு கெட்டுப் பின் தோன்றும் அறிவு மிக்க அறிவாம் என்று கூறின் அங்ஙனம் பின் தோன்றும் அறிவும் கணத்தில் கெடுகையாலே முன்னறிவேயாம்,—பித்து உரைத்தது அறியாது பேதை சொல்லும் தருவது நூல் – உனது நூல் பித்தர் சொல்லும் சொல்லிற்றும்,—எ பரிசு முதல் நடுவோடு இறுதிதான் விருத்தம் இன்றி அது சாற்றிடாய் ஏ—நூலாவது முதல் நடு இறுதி மாறுபாடு இல்லாதது ஆதலால் எப்பெற்றியது? உனது நூல், உன்னுடைய பழுதுநூலை என்னுடன் சொல்வாயல்லை என்றவாறு.

**பித்துரையும் என உம்மை விரிக்க.**

சந்தான வழியாவன நால்வகை; அவை தீபசந்தானம், வாயுசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என்க. பெருகுவது கெட்டென்பது—கெடுதல் நால்வகையில் கெட்டு வர்த்தித்தல்.

இச்செய்யுள் முதற்புத்தன் பிடகநூலை மறுத்துக் கூறிற்று. (7)

செய்யுள் — 101.

முன்னாகப் பலவறங்கள் பூரித்தெம் மிறைவன்
முழுதுணர்ந்திங்கருளினாலுயிர்கண்முத்தியடையப்
பின்னாகப் பிடகநூ லுரைத்தா னென்று
பேசினா யிவன்முன்பு பேரறங்கள் புரிநூல்
சொன்னா ரிவனைப்போன் முன்னொருவ னென்னில்
அவனுக்குச் சொன்னா ரெனத்தொடர்ச்சி யாகி
அன்னாய்பி னனவத்தைப் படுமொருவ னின்றாம்
ஆரோவுன் பாழியிருப் பாரிதனை யறையே.

என்பது: *முன் ஆக பல அறங்கள் பூரித்து எம் இறைவன் முழுது உணர்ந்து இங்கு அருளினால் உயிர்கள் முத்தி அடைய பின் ஆக பிடகநூல் உரைத்தான் என்று பேசினாய் – ஆதியிலே எம்முடைய சுவாமி பல தருமங்களைச் செய்து நிறைந்து சருவஞ்ஞனாய்க் கிருபையாலே ஆன்மாக்கள் வீட்டின்பம் அடைதற்கும் பின்பு அறம் செய்தற்கும் வழியாகிய பிடகநூலை அருளினான் என்று புத்த! நீ சொன்னாய்,—இவன் முன்பு பேர் அறங்கள் புரி நூல் சொன்னார் ஆர் இவனை போல் முன் ஒருவன் என்னில்–பெரிய அறங்களை உண்டாக்க இவனுக்கு முன்பு நூல் சொன்னவர் ஆர் என்று கூறின்,—அவனுக்கு சொன்னார் ஆர் என தொடர்ச்சி ஆகி அன்னாய் பின் அனவத்தை படும் ஒருவன் இன்றாம் – அவன் ஆசாரியன் தனக்குச் சொன்னார் ஆர் என மேல்மேல் தொடர்ச்சிப்பட்டுப் பின் சொற்கு உத்தரம் இன்றி முட்டுப்படும்; ஆகையால், கர்த்தாவும் இல்லையாம்,—(இ ஃ த ன் றி யு ம்) ஆரோ உன் பாழி*

இருப்பார் இதனை அறை ஏ—உன் பள்ளியுள் நீ தெய்வ மென்று ஏத்த இருப்பார் ஆரோ? நீ கூறுவாயாக என்றவாறு.

அனவத்தைப் படும் ஒருவன் என்றாய், அநவத்தை என்பது ஒரு தோடம்கொண்டு நின்று சொன்னான் ஒருவன் என்றாய் என்பது. அநவத்தையாவது—தலை காணாதது அல்லது முடிவு காணாதது. அன்னாய் – அசை. (8)

செய்யுள் — 102.

இந்நூலைச் சொன்னவன்றா னிங்கிருந்தா னென்னில்
இவனிருத்தி யேத்துமவ னெங்கிருந்தா னெவனோ
அந்நூலோ குருவந்த வடைவுமுனக் கில்லை
யடைவுதரின் முடிவின்க ணநாதி போதன்
சொன்னாலு மவைவேதா கமங்க ளாகும்
சுருக்கியூண் டவம்புரியச்சொல்லுவதெல்லோரும்
முன்னூல்கண் கழுவாதே யுதிப்பதன்முன் புலாலோ
டுண்பானே ரூன்பிரிய னுரைத்ததொரு நூலே.

என்பது: இ நூலை சொன்னவன் தான் இங்கு இருந்தான் என்னில்—இந்தப்பிடக சாத்திரம் சொன்ன புத்தாசாரியன் இப் பள்ளியில் இருந்தானாகில்,—இவன் இருத்தி ஏத்தும் அவன் எங்கு இருந்தான் எவனோ அ நூலோ குரு வந்த அடைவும் உனக்கு இல்லை—இவன் ஆசாரியனாக ஏத்தப்பட்டவன் ஆவான் எவ்விடத்தான்? கடவுளாவான் எவன்? அவனால் சொல்லப் பட்ட நூல் எவ்விடத்தது? அவை காணப்பட்டதில்லை ஆதலால் குருசந்தான அடைவும் உனக்கு இல்லையாம்,—அடைவு தரின் முடிவின் கண் அநாதி போதன்

சொன்னும் அவை வேத ஆகமங்கள் ஆகும் — நூலடைவு சொல்லப் புகின் சங்காரத்தின்கண் அழிவில்லாத பரமேசுவரன் சொல்லப்பட்டனவாம், அவை வேதாகமங்கள் என்பர்,—சுருக்கி ஊண் தவம் புரிய சொல்லுவது எல்லோரும் — இவ் ஆகமங்களின் சார்வுளார் சொல்லுவது உணவைச் சுருக்கித் தவத்தைப் புரிதலே: இங்ஙனம் அன்றி,—உன் நூல் கண் கழுவாதே உதிப்பதன் முன் புலாலோடு உண்பான் ஓர் ஊன் பிரியன் உரைத்தது ஒரு நூலே—உன்னுடைய பிடகநூல் கண் கழுவாது உதிக்கும் முன்னே புலாலுடன் உண்பான் ஒரு போசனப்பிரியன் சொல்லப்பட்ட நூலாம் என்றவாறு.

ஊண் சுருக்குதல் தபசுபண்ணுமவா முத்திரையும் பார்த்து, வாயுவுக்கு வழக்கமும் சலத்துக்கு இடமுமாக ஊணைச் சுருக்குவது என்க. (9)

செய்யுள் — 103.

முன்னூலும் வழிநூலுஞ் சார்பு நூலும்
மூன்றுகு முலகத்து மொழிந்த நூல்கள்
இந்நூலி லுன்னூலிங் கெந்நூ லென்னில்
இந்நூல்கா ணென்னூலென் றியம்ப மாட்டாய்
உன்னூலு மொருநூலா யுரைப்ப தென்னே
யுலட்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்கள்
அந்நூலு மல்லாதே பொய்ந்நூல் கொண்டிங்
கறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே.

என்பது: முன்னூலும் வழிநூலும் சார்புநூலும் மூன்று ஆகும் உலகத்து மொழிந்த நூல்கள் — பரமேசுவரன் அருளிச் செய்யப்பட்டு இவ்வுலகின்கண் வழங்கும் நூல்கள் முதல்நூலும் வழிநூலும் சார்புநூலும்

என மூன்று விதமாம்: அவை வேதாகம புராணங்கள்,—இ நூலில் உன்நூல் இங்கு எ நூல் என்னில் இ நூல் காண் என் நூல் என்று இயம்பமாட்டாய் — இங்ஙனம் மூன்று விதமான நூல்களில் உன்நூல் எந்த நூல் என்று கேட்டால் இந்த நூல்களில் என்னுடைய நூல் இந்நூல் என்று சொல்லவல்லாய் அல்லை; ஆதலால்,—உன் நூலும் ஒரு நூலாய் உரைப்பது என்னே — உன்நூலை ஒரு நூலாய்ச் சொல்வது எப்படி?—உலட்டு நூல் பருத்தி நூல் சிலம்பி நூல்கள் அ நூலும் அல்லாதே பொய் நூல் கொண்டு இங்கு அறம் நோற்று திரிந்தவாறு அழகிது ஆம் ஏ — உலண்டாற் செய்த நூல் பருத்தியாற் செய்தநூல் சிலம்பியாற் செய்தநூல் என்று சொல்லப்பட்ட நூல்களின் தகுதியும் அல்லாத உனது பொய்யாகிய நூலைக் கொண்டு இங்கு அறத்தை உண்டாக்கி நடந்தது ஆச்சரியம் என்றவாறு.

'ஒரு பொருளைத்தேடி' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் பிடகநூலை மறுத்துக் கூறிற்று. (10)

செய்யுள் — 104

புத்தனவன் பொன்றக்கெட் டுப்போனு னென்று
  போற்றுவதிங் காரைநீ பொய்த்தவஞ்செய் புத்தா
செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய விங்குச்
  செய்தவர்க்கும் புண்ணியமா மென்று செப்பில்
நித்தமுயி ராதலாற் பலிக்குஞ் செய்தி
  நினைந்துதரு வானுமுள னுனக்கிவ்வா றில்லை
வைத்தசுடர்த் தீபமற மாய்ந்தக்கா லதற்கு
  மருவுதிரி நெய்கூட்டு மதிகேடுன் வழக்கே.

என்பது: புத்தன் அவன் பொன்ற கெட்டு போனான் என்று போற்றுவது இங்கு ஆரை நீ பொய் தவம் செய் புத்தா—பொய்த்தவத்தைச் செய்யும் புத்தா! நீ உன் ஆசாரியன் முதலறக் கெட்டுப்போயினான் என்று சொல்லி இவ்விடத்துப் போற்றுவது யாவரை,— செத்தவர்க்கு சில கிரியை செய்ய இங்கு செய்தவர்க் கும் புண்ணியம் ஆம் என்று செப்பின்—இறந்தோரை நோக்கிச் செய்த சில நன்மை இருந்தோர்க்கும் புண் ணியம் ஆம் என்று கூறின்,—நித்தம் உயிர்—உயிர்கள் நித்தம் ஆதல் வேண்டும்,—ஆதலால் பலிக்கும் செய்தி நினைந்து தருவானும் உளன் உனக்கு இ ஆறு இல்லை— ஆகையால் நீ கொடுக்கும் பலியால் உண்டாகிய புண்ணி யம் இத்தன்மை என்று நினைந்து அப்புண்ணிய பலம் அருளுவானாகிய ஒரு கர்த்தாவும் உண்டாகவேண்டும்; இ நெறி உன் நூல் நெறி அன்று,—வைத்த சுடர் தீபம் அற மாய்ந்த கால் அதற்கு மருவு திரி நெய் கூட் டும் மதிகேடு உன் வழக்கு ஏ – பொன்றக்கெட்டவர்க் குச் செய்யும் சிறப்பாகிய உனது வழக்கு, தீபம் பொன்றக் கெட்ட இடத்து இறந்த தீபத்துக்கு உப காரம் என்று கருதி நெய்யும் திரியும் கூட்டும் அறி வின்மைபோலும் என்றவாறு.

இச்செய்யுள் புத்தன் 'கர்த்தா இல்லை' என் கையால், 'செய்யும் கன்மத்தாலும் பலம் இல்லை' என்று மறுத்துக் கூறிற்று.

உருவ கந்தமாகிய புத்தர் என்பு தாதுநாயனார் என்றும், தாடக நாயனார் என்றும் இன்றும் ஸ்மிருதி காட்டுகிறார் என்கையால் உருவகந்தம் கெட்டதில்லையாம். ஆகவே,

மற்ற காலுகந்தமும் கெடா. அதனால், அவர் பொன்றக் கெடலாகிய முத்தியும் அடைந்திலர் என்க. புத்தன் சுகதன் மகன்.

உன் நூல் நெறியன்று என்றதனால் எமது மதக்கோள் நெறி என்பது கருத்து. (11)

செய்யுள் — 105

நூலுரைத்தா னொருவனுள னென்றநுமா னத்தால்
  நூல்கொண்டிங் கறிந்தாற்போல் நூலா நூலின்
பாலுரைத்த பொருள்களெல்லா மநுமான மென்னில்
  பரலோக பாதாள லோகங்க ளொருசொல்
லாலுரைத்த நூலின்றி யறையா யின்றேல்
  அவையறிந்த படியெனுன தநுமான மன்றே
மேலுரைக்கும் பிரமாண முனக்கில்லை காட்சி
  அநுமானம் விட்டபொருள் விளக்குவதா கமமே.

என்பது: நூல் உரைத்தான் ஒருவன் உளன் என்று அனுமானத்தால் நூல் கொண்டு இங்கு அறிந்தால் போல் நூலா நூலின் பால் உரைத்த பொருள்கள் எல்லாம் அநுமானம் என்னில்—நூலைச் சொன்னவன் ஒருவன் உண்டு என்று நூலைக்கொண்டு அனுமித்தாற் போல, சிறந்த நூலின் பகுதியிற் சொன்ன பொருள் கள் எல்லாம் அறிகை அனுமானம் என்று புத்த! நீ கூறின்,—பரலோக பாதாள லோகங்கள் ஒரு சொல் லால் உரைத்த நூல் இன்றி அறையாய் – பூமிக்கு மேலான உலகங்களின் செய்தியும் கீழான உலகங் களின் செய்தியும் நூல்கொண்டு சொல்லுவதின்று அநுமித்துச் சொல்லலாமாயிற் சொல்லாய்,—இன்றேல்

அவை அறிந்தபடி என் உனது அனுமானம் அன்றே—அந்த நூல் இல்லையாயின் அந்த உலகங்களின் செய்தி அறிந்தபடி என்? உனது அனுமானத்தால் அறியும் பகுதியன்றே! ஆகையால்,—மேல் உரைக்கும் பிரமாணம் உனக்கு இல்லை காட்சி அனுமானம் விட்ட பொருள் விளக்குவது ஆகமமே—காட்சியானும் அனுமானத்தானும் அறியாத பொருளை அறிவிப்பது நூல்; அந்நூற் பிரமாணம் உனக்கு இல்லை என்று நீ கூறின், நீ முன் சொன்ன பிடகநூற் பிரமாணமும் உனக்கு இல்லையாம் என்றவாறு.

இச் செய்யுள் 'பிரமாணம் இல்லை' என்பதனை மறுத்துக் கூறிற்று.

'நூல் உண்டேல் அறையாய்' என்பது பாடபேதம்.(12)

செய்யுள்—106

எப்பொருளு மநித்தமென இயம்பிடுவை யநித்தம்
இல்லதற்கோ வுள்ளதற்கோ வுளதிலதா னதற்கோ
செப்பிடினில் லதற்கில்ல தென்று மில்லை
சென்றடைவதுள்ளதற்கேலுள்ளதென்றுமுண்டாம்
அப்படித்தா னுளதிலதா மப்பொருளுக் கென்னில்
உளதிலதா காதிலது முள்ள தாகா
திப்பொருளுக்கநித்தமில்லையென் றொன்றைக்காட்டாய்
எனிற்றேன் றும் பொருணின் றிங் கிறுதி யாமே.

என்பது: எ பொருளும் அநித்தம் என இயம்பிடுவை — எல்லாப் பொருளும் நித்தமில்லை அநித்தம் என்று புத்தா! நீ சொல்லா நிற்பை,— அநித்தம் இல்லதற்கோ உள்ளதற்கோ உளது இலது ஆனதற்கோ—

நீ கூறிய அநித்தம் இல்லாத பொருளுக்கோ உள்ள பொருளுக்கோ? உளது இலதான பொருளுக்கோ,—செப்பிடின் இல்லதற்கு இல்லது என்றும் இல்லை சென்று அடைவது உள்ளதற்கேல் உள்ளது என்றும் உண்டாம் அப்படி தான் உளது இலதாம் அபொருளுக்கு என்னில் உளது இலதாகாது இலதும் உள்ளது ஆகாது —அநித்தம் இல்லாததற்கு என்று நீ கூறின் இல்லாதது என்றும் இல்லையாம்; ஆகையால், இல்லாததற்கு உண்டாவதில்லை; உள்ளதற்கு என்று கூறின் உளது இல்லை ஆகாது என்றும் உண்டாகவேண்டும்; உளது இலதாம் பொருட்டு என்று கூறின் அதுவும் உளதிலது ஆகையால், உள்ளது இல்லை ஆகாது, இல்லாதது உண்டாகாது; அதனால், இவை அநித்தியம் அன்று,—இ பொருளுக்கு அநித்தம் இல்லை என்று ஒன்றை காட்டாய் எனில் — தோன்றும் பொருள்களின் இப் பொருள் அநித்தம் அல்லாத நித்தம் என்று ஒன்றைக் காட்டாய் என்று கூறின்,—தோன்றும் பொருள் நின்று இங்கு இறுதி ஆம் ஏ — தோன்றும் பொருளாகிய தூல வுடல் தோன்றி நின்று கெடுதலை உடைத்தாம் என்றவாறு.

ஆதலால், சூக்கும உடலுக்கு அநித்தமில்லை என்பது கருத்து. அன்றியும், தோன்றியிடும் தூலதேகமும் வன்ன பேதமும் ஒருக்காலும் இடையறாமல் தொன்று தொட்டு வருதலால் அதுவும் நித்தியம் என்னும் கருத்தாகக் கொள்ளினும் அமையும். (13)

*செய்யுள் — 107*

அங்குரம்வித் தின்கேட்டிற் ருேன்றுமது போல
அனைத்துருவுங் கெட்டுவழி யாகு மென்னின்
அங்கவற்றுக் காக்கக்கே டறைந்தா யெல்லாம்
அநித்தமெனு முரைமறந்தா யருகனுமா ணுய்நீ
இங்குமுளை யிலைமரமா யெழுந்தீண்டிச் செல்லா
திறந்ததே யெழுந்தபடி நில்லா தென்னின்
மங்கியிடா தேபால தருணவிருத் தையாய்
வரும்வடிவு திரிந்துநின்று மாயுங் காணே.

என்பது: *அங்குரம் வித்தின் கேட்டில் தோன்றும் அதுபோல அனைத்து உருவும் கெட்டு வழி ஆகும் என்னின்* — முளையானது வித்துக்கெடத் தோன்றும் அதுபோல எல்லா உருவங்களும் கெட்டுப் பின்பு அவ் வழியே தோன்றும் என்று புத்த! நீ கூறின்,—*அங்கு அவற்றுக்கு ஆக்கக்கேடு அறைந்தாய் எல்லாம் அநித்தம் எனும் உரை மறந்தாய் அருகனும் ஆணுய் நீ* — எல்லாம் அநித்தம் எனும் சொல்லை மறந்து உருக்களுக்கு ஆக்கக்கேடு கூறிஞய், அதனால் நீயும் சமணன் மத வழியிலே ஆயினுய், அற்றன்று,—*இங்கு முளை இலை மரம் ஆய் எழுந்து ஈண்டி செல்லாது இறந்ததே எழுந்தபடி நில்லாது என்னின்*—இவ்விடத்து அம்முளை இலையும் மரமுமாய் வளர்ந்து செல்லாத வளர்ச்சியைக் கைவிடுவானேன்; ஆதலால், எழுந்தபடி நில்லாது என்று நீ கூறின்,—*மங்கியிடாதே பால தருண விருத்தை ஆய் வரும் வடிவு திரிந்து நின்று மாயும் காண் ஏ* — தோன்றின வடிவு உருவம் கெடாமல் நின்று பால தருண விருத்த அவத்தைகளைப் பொருந்தி அவ் அவ் அவத்தைகள்தோறும் பேதப்பட்டுப் பின்பு தூல உடல் கெட்டுப்போம் என்றவாறு.

எனவே, தூல உடல் கெட்டுச் சூக்கும உடல் நிற்கும் என்பது கருத்து.

எப்பொருளும் அநித்தம்' என்னும் செய்யுளும் இச் செய்யுளும் 'அநித்தியம்' என்பதனை மறுத்துக்கூறின.

சமணன் ஆதல் அஸ்திநாஸ்திவாதம் சொல்லலால் (14)

செய்யுள் — 108

உடல்பூத மெனிலொன்றுக் கொன்றுபகை யொன்று
உதிரசுக் கிலமென்னின் மரத்தினுளுக் கல்லின்
இடமாகத் தவளையுரு வந்தவா றியம்பாய்
இருவினைகாணெனின்வினைகளிரண்டுருவாய்நிற்கும்
திடமாக வன்னமுரு வெனினுண்ண வுண்ணச்
சென்றுவள ருங்காயந் தேயுமுணர் வென்னின்
மடவோனே யருவுணர்விங் கசேதனமா யுருவாய்
வளராது வருமில்லா தெனின்மலர்வான் வருமே.

என்பது: உடல் பூதம் எனின் ஒன்றுக்கு ஒன்று பகை ஒன்று—புத்த! நீ உருக்கள் பூதரூபம் என்று கூறின் பூதங்கள் ஒன்றோடொன்று பகையாதலால் அவை தம்மிற் கூடி உரு ஆகா,—உதிர சுக்கிலம் என்னின் மரத்தின் உளு கல்லின் இடமாக தவளை உரு வந்த ஆறு இயம்பாய்—சுக்கில சுரோணிதங்கள் கூடி உருவாம் என்று நீ கூறின் மரம் இடமாகத்தோன்றும் உளுவும், கல்லினிடமாகத்தோன்றும் தவளையும் உருப் பெற்றதற்குச் சுக்கில சுரோணிதங்கள் கூடிவந்தவாறு சொல்லாய்,—இருவினை காண் எனின் வினைகள் இரண்டு உருவாய் நிற்கும்—புண்ணியபாவங்கள் தாமே உருவமாம் என்று கூறில் புண்ணியமும் பாவமும் இரண்டும் தம்மிற் கூடி ஓர் உருவம் திரண்டதாகவேண்டும்; அது கூடாது,—திடம் ஆக அன்னம் உரு எனின் உண்ண

உண்ண சென்று வளரும் காயம் தேயும்-நிச்சயமாகவே அன்னசாரமே உருவாம் என்று கூறில் போசனத்தால் வளரும் காயம் விருத்த அவத்தையில் வளராது தேய்தல் காண்டும்; அதனால், அன்னசாரமும் அன்று,— உணர்வு என்னின் மடவோனே அரு உணர்வு இங்கு அசேதனம் ஆய் உரு ஆய் வளராது – உணர்வுதானே உருவம் எடுத்துக்கொண்டது என்று கூறின் அறியாதவனே! அருவமாய் இருக்கும் அறிவு அசேதனமாயிருக்கும் உருவமாய் இவ்விடத்து வளராது,—வரும் இல்லாது எனின் மலர் வான் வரும் ஏ-இல்லாதது ஒன்று உருவமாய் வரும் என்று கூறின் இல்லையாயது இல்லையேயாம்; ஆகையால், நீ கூறிய இது ஆகாயப் பூப்போலப் பொய்யாக வரும் என்றவாறு.

இச் செய்யுள் பூதங்கள், சுக்கில சுரோணிதங்கள், கன்மம், அன்னமயம், உணர்வு என இவை தனித்தனியே உடல் எடுக்கும் என்பதனை மறுத்துக் கூறிற்று.

'மலர் வான் வருமே' என்று பாடம்; ஆகலால், ஆகாயத்தே புட்பம் வரவேண்டும் என்க. புண்ணியமும் பாவமும் மாறுகையால் இரண்டும் கூடி ஓர் உரு வாராது என்றார். (15)

செய்யுள் — 109

என்றுமிலா தொன்றின்றாய் வருமுருவம் வித்தின்
எழுமரம்போ லெனின்வித்தி னுண்டாய்நின் றெழுக்காண்
நின்றதேல் வித்தின்மரங் கண்டதில்லை யென்னி
னெற்கமுகாய் நீளாது நெல்லாயே நீளும்
ஒன்றிலொன் றங் கிலாமையினால் உதியாகா ரணம்பெற்
றுதிப்பதுகா ரியமதுவும் உள்ள தாகும்
மன்றமதிக் கலைபோலக் கந்த மைந்தும்
மருவியுள தெனுமுரையு மறந்தனையோ வின்றே.

என்பது: என்றும் இலாது ஒன்று இன்றாய் வரும் உருவம் வித்தின் எழும் மரம் போல் எனின் — யான் கூறிய பொய்யன்று, என்றும் இல்லாதது ஒன்று உண்டாய் வரும்; அஃது எங்ஙன் எனின், வித்தினிடத்திலே மரம் தோன்றுமாபோல என்று புத்த! நீ கூறின்;— வித்தின் உண்டாய நின்று எழும் காண் — அம்மரம் வித்தினிடத்திலே உண்டாய் நின்று எழுதலன்றி, இல்லையாய் நின்று எழாது காண்,— நின்றதேல் வித்தின் மரம் கண்டதில்லை என்னின் நெல் கமுகு ஆய் நீளாது நெல்லாயே நீளும் — அப்படி வித்திலே மரமுண்டாமாயின் வித்தினிடத்திலே காண வேண்டும், வித்தினிடத்தின் மரம் கண்டதில்லை என்று கூறின் நெல்வித்துக் கமுகாய் வளராது நெல்லே ஆம் இத்தனை,—ஒன்றில் ஒன்று அங்கு இலாமையினால் உதியா — ஒரு மரத்தில் ஒருமரம் உண்டாகாது ஆகையால் இல்லாதது உண்டாகாது,—காரணம் பெற்று உதிப்பது காரியம் அதுவும் உள்ளது ஆகும் — வித்துக் காரணமாக மரம் காரியப்படுதல் உள்ளதாம்,—மன்ற மதி கலை போல கந்தம் ஐந்தும் மருவி உளது எனும் உரையும் மறந்தனையோ இன்று ஏ — நிச்சயமாக மதியும் கலையும் போலக் கந்தங்கள் ஐந்தும் பொருந்தி உருவுண்டாம் என்னும் சொல்லும் இன்று மறந்தாயோ என்றவாறு.

மதியும் கலையும் என்ற உம்மை தொக்கது. அது காரணத்திலே காரியம் தோன்றும் என்று அறிவித்தது. உதியாது என்றது ஈறுகெட்டது.

இச்செய்யுள் இல்லாதது உண்டாம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (16)

செய்யுள் — 110

உருவமெலாம் பூதவுபா தாய சுத்தாட்
 டகவுருவ மென்னினீ யுலவத் துக்கு
மருவுமன லோடுநீர் மண்கந்த மிரதம்
 வன்னமிலை வன்னிக்கு வளிநீர்மண் வாசம்
தருமிரத மிலைநீர்க்குத் தழல்கான்மண் கந்தம்
 தானில்லைத் தலத்தினுக்குச் சலமனல்கால் கூடி
வருவதிலை யிந்திரிய விடய மான
 மாபூதங் களுமறியாய் மதிகெட் டாயே.

என்பது: *உருவம் எலாம் பூத உபாதாய சுத்த அட்டக உருவம் என்னின் நீ* — புத்த! நீ உருவமெல்லாம் பூதஉரு நான்கும் உபாதானஉரு நான்கும் ஆகிய எட்டும் கூடியே வரும் என்று கூறின்,—*உலவத்துக்கு மருவும் அனலோடு நீர் மண் கந்தம் இரதம் வன்னம் இலை*—அவை எட்டும் ஒன்றோடொன்று கூடா, அஃது எங்ஙனம்? என்னில், காற்றுக்குத் தன்குணம் ஆகிய சலித்தல் ஒழிந்து அனலும் நீரும் மண்ணும் இவையிற்றின் குணமாகிய உருவம் இரதம் கந்தங்களாகிய இவையும் கூடுவதில்லையாம்.—*வன்னிக்கு வளி நீர் மண் வாசம் தரும் இரதம் இலை* — அக்கினிக்குத் தன் குணமாகிய உருவம் ஒழிந்து வாயுவும் நீரும் மண்ணும் இவையிற்றின் குணமாகிய பரிச ரச கந்தங்கள் கூடுவதில்லையாம்,—*நீர்க்கு தழல் கால் மண் கந்தம் தான் இல்லை* — அப்புவுக்குத் தன் குணமாகிய இரதம் ஒழிந்து அக்கினியும் வாயுவும் பிருதிவியும் இவையிற்றின் குணமாகிய ரூப சலன கந்தம் என்னும் இவை கூடுவதில்லையாம்,—*தலத்தினுக்கு சலம் அனல் கால்*

*கூடி வருவது இலை — பூமிக்குத் தன் குணமாகிய கந்தம் ஒழிந்து சலமும் அக்கினியும் வாயுவும் இவையிற்றின் குணமாகிய இரதமும் உருவமும் சலித்தலும் என்னும் இவையும் கூடுவதில்லையாம்; ஆகையால், இவை எட்டும் கூடி உரு ஆகா,—இந்திரிய விடயமான மாபூதங்களும் அறியாய் மதி கெட்டாய் ஏ — அந்த மகாபூதமும் குணமும் இந்திரிய விடயங்கள் என்பதும் அறியாய் புத்தியில்லாதாய் என்றவாறு.*

*நீருக்குப் பரிசம் இல்லை என்பது நெருப்புக்கே பரிசம் என்று நீ சொன்ன நூலிலே கண்டுகொள்க. கூடிவருவது— கடைநிலைத் தீபகம்.*

இச் செய்யுள் பூதவுருநாலும் உபாதாய உரு நாலும் கூடித் தூலவுடல் எடுக்கும் என்றதனை மறுத்துக் கூறிற்று. (17)

*செய்யுள்* — 111

மருத்தெண்ணெய் தனின்மருந்து நின்ருற் போல
மறைந்தெட்டுஞ் சூக்குமமாய் மருவு மென்னில்
திருத்துமவன் மருந்தெண்ணெய் சேர்த்தாற் போலச்
சேர்பவன்வே றுண்டெல்லா வுருவு மெட்டும்
பொருத்தியதே லொருதன்மை யாம்பொருள்க ளொன்றின்
குணமொன்றிற் புகாதறைகை பொருளறியாய்பூத
உருப்பொருள்வே றுபாதாயப் பொருள்வேறு காட்டாய்
உபாதாயம் பூதகுணங் குணகுணியா முலகே.

என்பது: *மருத்து எண்ணெய் தனில் மருந்து நின்றுற்போல மறைந்து எட்டும் சூக்குமம் ஆய் மருவும் என்னில் — மருத்தெண்ணெயில் மருந்து தோன்றுமல்*

கரந்து நின்று நன்மையைத் தருமாபோலப் பூதவுருவும் உபாதாய உருவும் ஆகிய எண்வகையும் தூலங் கெட்டுச் சூக்கும உருப்பெற்று நிற்கும் என்று புத்த நீ கூறின்,—திருத்தும் அவன் மருந்து எண்ணெய் சேர்த்தாற்போல சேர்ப்பவன் வேறு உண்டு – வியாதியைத் தீர்க்கும் மருத்துவன் அவ் எண்ணெயையும் மருந்தையும் சேர்த்தாற்போல பூதவுருவையும் உபாதாய உருவையும் கூட்டி உண்டாக்குவான் ஒரு கர்த்தா வேண்டும்,—எல்லா உருவும் எட்டும் பொருத்தியதேல் ஒரு தன்மை ஆம் பொருள்கள் – எல்லா உருவத்தையும் இவ்வெட்டுமே உண்டாக்குகின்றன என்று கூறின் அப்பொருள்கள் எல்லாம் ஒரு தன்மைப்பட வேண்டும்,—ஒன்றின் குணம் ஒன்றில் புகாது அறைகை பொருள் அறியாய்–அவ்வுருக்களின் குணங்களில் ஒன்றின் குணம் ஒன்றில் கூடாது ஆகையால், சொல்லுகைக்குப் பொருள் அறியாய்,—பூத உருப் பொருள் வேறு உபாதாயப் பொருள்வேறு காட்டாய் உபாதாயம் பூதகுணம் குணகுணி ஆம் உலகு ஏ – அன்றி, பூதவுருப் பொருளையும் உபாதாய வுருப் பொருளையும் வேறு காட்ட வல்லையாயிற் காட்டாய்; உபாதாயமாவது பூதகுணமாம், அந்தக் குணத்தையுடையது பிரபஞ்சமாம் என்றவாறு.

இச்செய்யுள் பூதவுருவும் உபாதாயவுருவும் ஆகிய எட்டும் தம்மிற் கூடி, சூக்குமமாக நின்று, பின்பு தூலவுடல் எடுக்கும் என்பதனை மறுத்துக்கூறிற்று.

(18)

*செய்யுள் — 112*

அழிந்துணர்வை யுணர்வுதரு மெனினழிந்த தாக்கா
தாமுணர்விற் பொருள்வினைக ளணையா வாகும்
அழிந்திடுவ தாக்கியெனின் முன்னொருகா லத்தே
அறிவிரண்டு நில்லாதங் கறக்கே டின்றி
அழிந்துணர்வை யுணர்வுதரு மெனினித்தா நித்தம்
அடையுமுணர் வுனக்கநித்த மாயே செல்லா
தழிந்தெருவை யாக்குவது போலாக்கு மென்னின்
ஆம்பொருள்வேறழிந்துசத்திகிடந்தாக்குமவையே

என்பது: *அழிந்து உணர்வை உணர்வு தரும் எனின்—தோன்றிய அறிவு கெட்டுப் பின் ஓர் அறிவை உண்டாக்கும் என்று புத்த! நீ கூறின்,—அழிந்தது ஆக்காதாம் உணர்வில் பொருள் வினைகள் அணையா ஆகும்—கெட்ட அறிவு மற்றோர் அறிவை உண்டாக்க மாட்டாது, அன்றியும் ஆகிற அறிவும் முன் அறிவு கெடுதலால் கெட்ட அறிவும் அறியும் பொருளையும் செய்யும் வினையையும் அறிந்து செய்யவும் மாட்டாது,— அழிந்திடுவது ஆக்கி எனின் முன் ஒரு காலத்தே அறிவு இரண்டும் நில்லாது – முன்னை அறிவு பின்னை அறிவை உண்டாக்கிக் கெடும் என்று கூறின் ஒரு காலத்தே இரண்டு அறிவு தோன்றி நில்லா,—அங்கு அற கேடு இன்றி அழிந்து உணர்வை உணர்வுதரும் எனின் நித்த அநித்தம் அடையும் உணர்வுக்கு அநித்த மாயே செல்லாது – அவ்விடத்து முன் அறிவு முற்றக் கெடாது சிறிது நின்று மேல் ஓர் அறிவையுண்டாக்கிப் பின் இறந்திடும் என்று நீ கூறின், உணர்வுக்குச் சுபாவம் நித்த அநித்தம் ஆதலால் உணர்வு அநித்தம் என்று*

கூறியது பொருந்தாதாம்,—அழிந்து எருவை ஆக்கு வதுபோல் ஆக்கும் என்னின் ஆம் பொருள் வேறு அழிந்து சத்தி கிடந்து ஆக்கும் அவையே – பயிருக்கு இடும் எருவும் வைக்கோலும் தாம் கெட்டுப் பயிருக்கு நன்மை கொடுப்பதுபோல முன்னை அறிவுகெட்டுப் பின்னை அறிவையும் உண்டாக்கும் என்று கூறின், அவ்வெருவும் வைக்கோலும் தூலம் கெட்டுச் சூக்கும மாகிய வீரியம் கிடந்து பயிர்க்கு நன்மை கொடுக்கும்; அதுபோல, உன் அறிவு சேரக்கெடாது என்னவேண் டும் ஆகையால், நீ கூறிய அதற்கு நித்தியமில்லை என்ன வேண்டா என்றவாறு.

ஆம்பொருள் வேறு என்றதனுல் எருவால் நன்மை பெறும் பயிர் வேருனுற்போல அறிவாலாம் பொருளும் வேறு என்க.

இச்செய்யுள் அறிவு அநித்தம் என்பதனை அநித்தம் அல்ல என மறுத்துக் கூறிற்று. (19)

செய்யுள் — 113.

கேடிலாச் சந்தானத் தேபலிக்கு மென்று
  கிளக்குநீ சந்தான நித்த மாகும்
ஓடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னின்
  ஒழுகுநீ ரிட்டதெல்லா முடன்கழிதல் போலத்
தேடுபொருள் சீலம்பா வனைகுறிவிஞ் ஞானம்
  சென்றவுணர் வோடேகு நின்றுணர்வி னேயா
நீடுநீர் முன்னொழுகிக் கெடாதுநிறைந் தோடும்
  நிகழுணர்வுங் கேடின்றி நிறைந்துசெலுங் காணே.

என்பது: கேடு இலா சந்தானத்தே பலிக்கும் என்று கிளக்கும் நீ சந்தானம் நித்தம் ஆகும்—உணர்வு கெடாத தொடர்ச்சியாலே உணர்வு தோன்றும் என்று புத்த! நீ கூறின் அந்தத் தொடர்ச்சிதான் நித்தம் ஆக வேண்டும்,—ஓடும் நீர்போல் அழிந்து ஆம் உணர்வு ஒழுக்கம் என்னின்—ஆற்றின்கண் ஓடும் நீர் முன் சென்றது வற்றப் பின் சென்றது அவ்வெல்லையின் இறந்துபோமாறு போல, முன்னை அறிவுகெடப் பின்னை உண்டாகிய அறிவு மிக்க அறிவாம் என்று நீ கூறின்,—ஒழுகுநீர் இட்டது எல்லாம் உடன் கழிதல்போல தேடு பொருள் சீலம் பாவனை குறி விஞ்ஞானம் சென்ற உணர்வோடு ஏகும் நின்று உணர்வின் ஏயா—ஓடுகின்ற நீரின்கண் உண்டானவை எல்லாம் அந்நீரோடு கூடக் கழிந்துபோகப் பின்னர்ச் செல்லும் நீர் அவற்றைக் கூடமாட்டா; அதுபோல, முந்தை அறிவால் தேடும் பொருள்கள் சீலம் பாவனை குறி விஞ்ஞானம் இவை யெல்லாம் முன்னை அறிவோடு கெடும்; ஆகையால் பின்னை உண்டாம் அறிவில் கூடமாட்டா,—நீடு நீர் முன் ஒழுகி கெடாது நிறைந்து ஓடும் நிகழ் உணர்வும் கேடு இன்றி நிறைந்து செலும் காண் ஏ—விடாமல் ஓடும் நீர் முன் ஒழுகிய தன்மை கெடாமல் நிறைந்து ஓடியவாறு போல அறிவு இடையறாமல் தோன்றும் என்று நீ கூறின் அப்படி உண்டாம் அறிவு அநித்தியம் அன்று; நித்தியமாய் நிறைவு பெற்றுச் செல்லவேண்டும் என்றவாறு.

இச்செய்யுளும் அநித்தம் என்பதனை மறுத்துக்கூறிற்று.

(20)

செய்யுள் — 114

சந்தானங் காரணமோ காரியமோ விரண்டின்
தன்மையதோ காரணமுங் காரியமு நித்தம்
வந்தாருஞ் சந்தானத் தொடர்ச்சியெனி னதற்கும்
வருநித்தந்தோற்றக்கேடடைதலின்மற்றென்றேல்
ஐந்தான கந்தங்க ளன்றாய் நித்த
மடைபொருளா மறிவுமறி வடைவு மின்றிச்
சிந்தாமுன் பின்னாகிப் பின்முன் னாகித்
திரிந்துவருந் திரிவறிந்து தேரா தேரே.

என்பது: *சந்தானம் காரணமோ காரியமோ இரண்டின் தன்மையதோ — நீ தொடர்ச்சி என்றது காரணமாய் நின்றதோ? காரியமாய் நின்றதோ? காரணகாரியமாய் நின்றதோ?,—காரணமும் காரியமும் நித்தம்—காரணம் என்னில் என்றும் காரணப்பட்டு வருகையால் நித்தமாம், காரியம் என்னில் என்றும் காரியப்பட்டு வருகையால் அதுவும் நித்தமாம்,—வந்து ஆரும் சந்தான தொடர்ச்சி எனின் அதற்கும் வரும் நித்தம் தோற்ற கேடு அடைதலின்—காரணகாரியமாகிய தொடர்ச்சி மீளவந்து பொருந்தும் என்று நீ கூறின் அப்படிக் காரணகாரியப்படுதலுமாய்த் தோன்றுதலும் கெடுதலுமாய்த் தொன்றுதொட்டு வருதலால் அதற்கும் நித்தியத்துவம் உண்டாம்,—மற்று ஒன்றேல் ஐந்து ஆன கந்தங்கள் அன்றாய் நித்தம் அடைபொருள் ஆம்—மற்றோர் அறிவு என்னில் அப்படிக் காரண காரியப்படுதற்கு இந்திரியங்களோடு ஒருபொருள் ஆகாமல் அவ்வறிவு வேறொரு பொருள் ஆகலானும் இந்திரியங்கள் அவ்வறிவுக்கு மூலம் அல்ல ஆகையாலும்*

*அவ்வறிவு நித்தியமாக அடையும் பொருளாம்; அங்ஙன மாயின்,—அறிவும் அறிவு அடைவும் இன்றி சிந்தா முன்பின் ஆகி பின்முன் ஆகி திரிந்துவரும் திரிவு அறிந்து தேரா தேரே—ஆன்மாவும் ஆன்மாவால் அடையும் பொருளுமாக அறிதலின்றி முறையே கெட்டு இந்திரியங்கள் அறிவாகவும் அறிவு இந்திரியங் களாகவும் முறைபிறழ்ந்துவரும்; இவையிற்றின் திரிவை அறிந்து விசாரியாய்; புத்தனே! என்றவாறு.*

இச்செய்யுள் அறிவு அநித்தியம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (21)

*செய்யுள்* — 115.

ஒருகாலத்துணர்வுகெட்டாமெனினுதிப்பீறொன்றும்
ஒருபொருளின் றிரிவுனக்குக் காலமானால்
வருகால நிகழ்காலங் கழிகாலமென்று
வழங்குவதென்பொருள் வரவுநிலைகழிவாலின்றேல்
திரிகாலஞ் செப்பிடாய் பொருட்செயலு மொன்றும்
செயன்மூன்று மொருகணத்தே சேரு மென்னில்
தருகால மூன்றுகுந் தாமரைநூ றிதழில்
தள்ளூசி யுங்கால மூன்றினையுந் தருமே.

என்பது: *ஒரு காலத்து உணர்வு கெட்டு ஆம் எனின் உதிப்பு ஈறு ஒன்று ஆம்—காலம் பேதப்படாது ஒரு காலத்திலே அறிவு கெடுதலும் உண்டாதலும் செய்யும் என்று புத்த! நீ கூறில் சங்காரமும் சிருட்டியும் ஒரு தொழில் ஆகவேண்டும்,—ஒரு பொருளின் திரிவு உனக்கு காலம் ஆனால்—ஒரு பொருளின் திரிவே உனக்குக் காலம் என்று சொல்லுவையானால்,— வருகாலம் நிகழ்காலம் கழிகாலம் என்று வழங்குவது*

என்—எதிர்காலம் என்றும் நிகழ்காலம் என்றும் கழி காலம் என்றும் வழங்குவானேன்,—பொருள் வரவு நிலை கழிவால் இன்றேல்—அப்படி வழங்கியது பொருள் களானவை வருதலும் நிற்றலும் கழிதலும் ஆதலால் காலம் இல்லை என்று சொல்லுவையாயின்,—திரிகாலம் செப்பிடாய் பொருட்செயலும் ஒன்றும்—மூன்று வித மான காலத்தின்பெயரைநீ சொல்லுவாயல்லை,அங்ஙனம் காலபேதம் இல்லையாயின் இருது பேதாதிகளும் குண பேதாதிகளும் இல்லையாய்ப் பொருள்கள் எல்லாம் ஒரு செயலாகவேண்டும்,—செயல் மூன்றும் ஒரு கணத்தே சேரும் என்னில் – அப்படிப் பேதித்த மூன்று செய லும் ஒரு கணத்திலே சேரும் என்னில்,—தரு காலம் மூன்று ஆகும் தாமரை நூறு இதழில் தள் ஊசியும் காலம் மூன்றினையும் தரும் ஏ—அப்படிக் கணத்திலே உண்டாயதுவும் காலம் மூன்றினையும் உடைத்தாம் அஃது எங்ஙன்? என்னில், தாமரை இதழ் நூறு அடுக் கில் செலுத்தின ஊசியும் இதழ்தோறும் பற்றுகையும் உருவுகையும் கழிகையுமாய் மூன்று காலத்தைத்தரும் ஆதலால் பொருட்செயல் அல்ல காலம் உண்டாம் என்று அறிவாயாக என்றவாறு.

பஞ்சகந்தம் ஒரு கணத்திலே கெடும் என்பதனை மறந் தாயோ, இதனைக் கருதிக் கொள்வாய் என்க.

இச்செய்யுள் காலம் இல்லை என்பதனை மறுத்துக் கூறிற்று. (22)

செய்யுள் — 116

உணர்வுகா ரணமுணர்வுக் கென்னி னித்தம்
 உணர்வுக்குண் டாகிநின் றுணர்வையுதிப் பியாதிங்
குணர்வுசந் தானவிடத் தொழிந்தாற் பின்னை
 உண்டாகா துடலுணர்வுக் குபாதான மென்னில்
உணர்வுடலி னிடையரு துதிக்க வேண்டும்
 உடலுணர்வின் வினையினாலுணர்வுதிக்கு மென்னில்
உணர்வினை யுளதோடுங்கா துணர்வுதருஞ் செய்தி
 உணர்வைவினைதரிலொருவன்செயல்வினையின்றாமே.

என்பது: உணர்வு காரணம் உணர்வுக்கு என்னின் — அறிவு காரணமாக மற்றோர் அறிவு உண்டாம் என்று புத்த! நீ கூறின்,—நித்தம் உணர்வுக்கு உண்டாகி நின்று உணர்வை உதிப்பியாது இங்கு—நீ அநித்தியம் என்று கூறுகையால் அறிவுக்கு நித்தியம் உண்டாகி நின்று மற்றோர் அறிவை உண்டாக்கமாட்டாது; அன்றியும்,—உணர்வு சந்தான இடத்து ஒழிந்தால் பின்னை உண்டாகாது — அவ்வறிவு தான் வருகிற தொடர்ச்சியிலே கெட்டால் பின்னை அறிவு தோன்றாது,—உடல் உணர்வுக்கு உபாதானம் என்னில் — உணர்வுக்கு மூல காரணம் ஆகிநின்று உடலம் தோற்றுவிக்கும் என்னில்,—உணர்வு உடலின் இடையறாது உதிக்கவேண்டும் — அவ்வறிவு உடலின் உறக்கத்தின் கண்ணும் இடையறாமல் உண்டாகவேண்டும்,—உடல் உணர்வின் வினையினால் உணர்வு உதிக்கும் என்னில் — உடல் உணர்வின் வினையாலே உணர்வு தோற்றும் என்று கூறின்,—உணர்வு வினை உளது ஒடுங்காது —

*இந்திரியங்கள் எப்பொழுதும் கன்மத்தை உடைத்தாத லால் அதனால் உண்டாகும் அறிவு அழியப்படாது,— உணர்வுதரும் செய்தி உணர்வை வினை தரின் ஒருவன் செயல்வினை இன்றாம் ஏ.— அதுவன்றி உணர்வு வினை யைத்தரும் என்றும் வினை உணர்வைத்தரும் என்றும் நீ கூறின் ஒருவர்க்குச் செய்யப்பட்ட கன்மம் என்பது அன்றே என்றவாறு.*

*இச்செய்யுள் உணர்வு ஆன்மாவிடத்தொழிந்து உடலி னும், வினையினும் தோன்றாது என மறுத்துக் கூறிற்று* (23)

*செய்யுள்* — 117

வினையுணர்வு தரும்வினையை யுணர்வுதரு மென்று
 விளம்பினீ யுணர்வுபோல் வினையி னுக்கு
நினைவுவரு மொன்றையொன்று நிகழ்த்தி டாபின்
 நிலையின்மை யானிகழ்த்திக் கெடுதல் செய்யா
கனல்விறகிற் பிறந்ததனைப் பொடிசெய் தாற்போல்
 கருத்துவினையிற்றோன் றிக்கழிக்கும்வினையென் னின்
முனமுணர்வு பிறந்தளவே வினைகெடுக்கு முன்பின்
 உதியாது முகிழ்நெருப்பின் விறகுதியா வாறே.

என்பது: *வினை உணர்வு தரும் வினையை உணர்வு தரும் என்று விளம்பில் நீ—கன்மம் அறிவை உண்டாக் கும் என்றும் கன்மத்தை அறிவு உண்டாக்கும் என்றும் புத்த! நீ கூறின்,—உணர்வுபோல் வினையினுக்கும் நினைவுவரும் – அறிவுக்கு நினைவு உண்டானாற்போலக் கன்மத்துக்கும் நினைவு உண்டாகவேண்டும்,—ஒன்றை ஒன்று நிகழ்த்திடா பின்—அப்படிக் கன்மத்துக்கு அறி வில்லை ஆகையால் ஒன்றையொன்று உண்டாக்க மாட் டாது,—நிலையின்மைபால் நிகழ்த்தி கெடுதல் செய்யா—*

அவை அநித்தியம் என்று சொல்லுகையால் ஒன்றை யொன்று உண்டாக்கிக் கெடமாட்டா,—கனல் விற கில் பிறந்து அதனை பொடி செய்தால் போல் கருத்து வினையில் தோன்றி கழிக்கும் வினை என்னின்—காட்டத் திலே அக்கினி தோன்றி அந்தக் காட்டத்தைத் தகித் தாற்போல அறிவு கன்மத்திலே பிறந்து மீளவும் அக் கன்மத்தையே கெடுக்கும் என்று நீ கூறின்,—முனம் உணர்வு பிறந்த அளவே வினை கெடுக்கும் முன்பின் உதியாது முகிழ் நெருப்பின் விறகு உதியா வாறே — முன்பிறந்த அறிவு பிறந்தபோதே கன்மத்தைக் கெடுக் கும், பின் அக்கன்மம் அறிவை உதிப்பிக்கமாட்டாது, அறிவும் பின்னர்க் கன்மத்தை உதிப்பிக்கமாட்டாது, அஃது என்போல? என்னில், காட்டத்தில் உண்டாம் அக்கினி அக்காட்டத்தைச் சுட்டால் மீண்டு ஒரு காட்டத்தை உண்டாக்கமாட்டாது அதுபோல் என்றவாறு.

*இச்செய்யுள் கன்மம் அறிவினை உண்டாக்கும் என்ப தனையும் அறிவு கன்மத்தை உண்டாக்கும் என்பதனையும் மறுத்துக் கூறிற்று.* (24)

செய்யுள் — 118

பேயுநர கருஞ்சுரரும் பிரமருமா யுலகில்
பிதாமாதா வாதார மொன்று மின்றிக்
காயமொடு தாம்வருவ ரென்றுரைப்பை காயம்
காரியமாய் வருதலினுற் காரணமுண் டாகும்
ஆயுமுணர் வோசுத்த வட்டகமோ கன்மம்
வடித்ததோ வடிவுசெய்து வைத்தாரு முண்டோ
ஆயுமுணர் வுண்டாகி லறைந்திடா யுலகுக்
காதிதுணை நிமித்தகா ரணமறிவ தறிவே.

என்பது: பேயும் நரகரும் சுரரும் பிரமரும் ஆய் உலகில் பிதா மாதா ஆதாரம் ஒன்றும் இன்றி காய மொடு தாம் வருவர் என்று உரைப்பை—பேய் என்றும் நரகர் என்றும் சுரர் என்றும் பிரமர் முதலாயினோர் என்றும் சொல்லப்படுவார் உலகின் மாதா பிதாக்களும் இன்றி இருப்பும் இன்றிக் காயத்தோடு கூடின வடிவம் உடையராய் வருவர் என்று புத்த! நீ கூறுவை,—காயம் காரியம் ஆய் வருதலினால் காரணம் உண்டாகும்—அக்காயம் காரியப்பட்டு வருகையினால் ஒரு காரணத்தான் அன்றி உண்டாகாது, அக் காரண காரியம் நீ அறியாய், அறிவையாகில்,—ஆயும் உணர்வோடு சுத்த அட்டகமோ கன்மம் வடித்ததோ வடிவு செய்து வைத்தாரும் உண்டோ ஆயும் உணர்வு உண்டாகில் அறைந்திடாய் — அக் காயங்கள் நீ ஆராய்ந்த உணர்வுதானோ? சுத்தாட்டகமோ? அன்றிக் கன்மம் உண்டாக்கியதோ? அன்றி அவ்வடிவை உண்டாக்கினோர் ஒருவர் உண்டோ? உனக்கு ஆராயத்தக்க அறிவு உண்டாயின் சொல்லாய்,—உலகுக்கு ஆதி துணை நிமித்தகாரணம் அறிவது அறிவே — அவற்றை உண்மையாக அறியும் காலத்துப் பிரபஞ்ச உற்பத்திக்கு ஆதிகாரணம் என்றும் துணைக்காரணம் என்றும் நிமித்தகாரணம் என்றும் உண்டாம்; அதனை அறிவது காண் அறிவு என்றவாறு.

இச்செய்யுள் பேய்முதல் பிரமர் ஈறுகிய நால்வகைக் காயத்திற்கும் காரணத்தான் அன்றிக் காயம் உண்டாம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (25)

செய்யுள் — 119

உருவாதி கந்தங்க ளைந்துங் கூடி
ஒருவன்வே றொருவனிலை யென்றுரைக்கும்புத்தா
உருவாதி யைந்தினையு முணர்பவன்வே றென்ன
உணரும்விஞ்ஞானமென்றாயஞ்ஞானமுணர்ந்தவரார்
உருவாதிபொருள்காட்டித்தனைக்காட்டுஞ்சுடர்போல்
உணர்வுபிறிதினையுணர்த்தித்தனையுணர்த்துமென்னின்
உருவாதி பொருளினையுஞ் சுடரினையுங் காணும்
உலோசனம்போ லுணர்வுபொரு ளுணர்வதுவேறுண்டே.

என்பது: உரு ஆதி கந்தங்கள் ஐந்தும் கூடி ஒருவன் வேறு ஒருவன் இலை என்று உரைக்கும் புத்தா— உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கின்ற கந்தங்கள் ஐந்தும்கூடி ஆன்மா அன்றித் தனித்து ஓர் ஆன்மா இல்லை என்று கூறும் புத்தா!—உரு ஆதி ஐந்தினையும் உணர்பவன் வேறு என்ன உணரும் விஞ்ஞானம் என்றாய் – அவ்வுருவம் முதலிய கந்தங்கள் ஐந்தையும் அறிவான் ஒருவன் உளன் என்று நாம் கூறுவது அல்ல, அவற்றை அறிவது சித்தமே என்று கூறினாய்,—அ ஞானம் உணர்ந்தவர் ஆர் – அந்தச் சித்தத்தை உணர்ந்தவர் ஆர் என்று வினயவிடத்து,— உரு ஆதி பொருள் காட்டி தனை காட்டும் சுடர்போல் உணர்வு பிறிதினை உணர்த்தி தனை உணர்த்தும் என்னில்—உருவங்கள் முதலாய பொருள்களையும் காட்டித் தன்னையும் காட்டும் விளக்குப்போல, சித்தமும் பிறிதுண்டாகியவற்றையும் அறிவித்துத் தன்னையும் அறிவித்து நிற்கும் என்று கூறின்,—உரு ஆதி பொருளினையும் சுடரினையும் காணும் உலோசனம்போல்

உணர்வு பொருள் உணர்வது வேறு உண்டே—உருவங்கள் முதலாகிய பொருள்களையும் அவற்றைக் காட்டி நிற்கும் விளக்கையும் கண்டு நிற்கும் கண்போல, சித்தத்தையும் விடயத்தால் அறியும் இந்திரியங்களையும் உணர்வான் ஒருவன் வேறு உண்டு என்று அறிவாயாக என்றவாறு.

*இச்செய்யுள் உருவாதிகளாகிய கந்தங்களும் அவற்றின் விஞ்ஞானமும் ஆன்மா என்றதனை மறுத்துக் கூறிற்று.* (26)

செய்யுள் — 120

காயமுட னிந்திரிய மனநா னென்று
  கதறுவாய் காயமுறக் கத்தறியா வாகும்
வாயில்களு மப்படியி லொன்றையொன் றங் கறியா
  மனங்கணத்திற் கெடுங்கால மூன்றின் வரவறியா
தாயுமறி வாகியுடல் பொறிமனமூன் றறிந்தாங்
  கவைநானல் லேனென்று மறிந்துமனத் தாலே
ஏயுமொரு பொருள்கருதி யிந்திரியப் பாலே
  இசைவித்துக் காயத்தா லியற்றுவதான் மாவே.

என்பது: காயமுடன் இந்திரியம் மனம் நான் என்று கதறுவாய்—உடம்புடன் இந்திரியங்களும் மனமுமே ஆன்மா, வேறே ஆன்மா என்று ஒன்றில்லை என்று கூப்பிடும் புத்தா,—காயம் உறக்கத்து அறியா ஆகும்—அக்காயம் உறக்கத்தினிடத்து அறியாமையை உடைத்தாம்,—வாயில்களும் அ படியில் ஒன்றை ஒன்று அங்கு அறியா—இந்திரியங்களும் உறக்கத்திலும் வியாத்தியிலும் அக்காயம்போல் ஒன்று அறிந்த விடயத்தை ஒன்று அறியமாட்டா,—மனம் கணத்தில் கெடும்

காலம் மூன்றின் வரவு அறியாது—மனமும் கணத்தில் கெடும் ஆகையால் காலம் மூன்றின் செய்தியையும் அறியமாட்டாது, ஆகையால் இவை ஆன்மா அன்று,— ஆயும் அறிவு ஆகி உடல்பொறி மனம் மூன்று அறிந்து ஆங்கு அவை நான் அல்லேன் என்றும் அறிந்து மனத்தாலே ஏயும் ஒரு பொருள் கருதி இந்திரியப் பாலே இசைவித்து காயத்தால் இயற்றுவது ஆன்மா ஏ — உடல் முதலாயின மூன்றையும் ஆராயத்தக்க அறிவாய் அவற்றின் குணங்களை அறிந்தும் அவை யிற்றை என் உடல் என் பொறி என் மனம் என்று சொல்லியும் அவையும் நான் அல்லேன் என்று அறிந்து மனத்தால் பொருந்தத்தக்கதொரு பொருளைக் கருதி இந்திரியங்களின் பகுதி காட்டக்கண்டு காயத்தாலே தொழிலைச்செய்வது ஆன்மா என்று அறிவாயாக என்றவாறு.

காலம் மூன்ருவன—பூத பௌஷிய வர்த்தமானமாம்.

இச்செய்யுள் காயமும், இந்திரியமும், மனமும் ஆன்மா அன்று என்று மறுத்துக் கூறிற்று. (27)

செய்யுள் — 121

கழிந்தவுணர் வேயின்னு மியானறிந்தே னென்று
கருதலினவ் வுணர்வறிந்த தென்னின் முன்னே
மொழிந்தமொழி நான்மொழிந்தே னென்ருல் வாய்தான்
மொழிந்ததோ மொழிந்தவன்வே ருறுற் போல
எழுந்தவுணர் வெல்லாங்கொண் டியானறிந்தே னென்ற
தெதுவதுகா ணுயிருணர்வால் வாக்கான் மற்றை
ஒழிந்தகா யந்தன்னு லுணர்ந்துரைத்துச் செய்தங்
குணர்வினுக்கு மாதார மாய்நிற்கு முயிரே.

என்பது: கழிந்த உணர்வே பின்னும் யான் அறிந்தேன் என்று கருதலின் அ உணர்வு அறிந்தது என்னின்—முன் ஒரு பொருளை அடுத்துக் கெட்ட அறிவு தானே பின்பு உண்டாகியவற்றை யான் அறிந்தேன் என்று விசாரிக்கையாலே அவ்வறிவே காணும் அறிவதன்றி ஆன்மா என்று ஒன்று இல்லை என்று புத்த! நீ கூறின்,—முன்னே மொழிந்த மொழி நான் மொழிந்தேன் என்றால் வாய்தான் மொழிந்ததோ மொழிந்தவன் வேறு ஆனல் போல — முன்னே சொன்ன சொல்லும் நான் சொன்னேன் என்று சொல்லுதல் வாயாற் பிறத்தலால் வாய் சொன்னதோ? அன்றே, அச்சொல்லைச் சொன்னவன் ஒருவன் உண்டானற்போல,—எழுந்த உணர்வு எல்லாம் கொண்டு யான் அறிந்தேன் என்றது எது? அதுகாண் உயிர் — உண்டாய அறிவுகள் எல்லாவற்றையும் கொண்டு அறிந்து அதனை யான் அறிந்தேன் என்றது எது? அதுகாண் ஆன்மா,—உணர்வால் வாக்கால் மற்றை ஒழிந்த காயம் தன்னால் உணர்ந்து உரைத்து செய்து அங்கு உணர்வினுக்கும் ஆதாரமாய் நிற்கும் உயிர் ஏ — மனத்தாலும் வாக்காலும் ஒழிந்ததாகச் சொல்லப் பட்ட காயத்தாலும் அறிந்தும் சொல்லியும் தொழில் செய்தும் அம்மனத்திற்குப் பற்றாய் நிற்கும் ஆன்மா என்றவாறு.

ஈண்டு உணர்வு என்றது மனத்தை.

இச்செய்யுள் மனது ஆன்மா அல்ல என்று மறுத்துக் கூறிற்று. (28)

*செய்யுள் — 122*

இந்திரிய வீதியெழுஞ் சித்த நெஞ்சத்
*தெழுஞ்சித்த மென்றிரண்டு மொன்றுகெட்டே யொன்று*
வந்தெழுவ தெனிற்கனவிற் கண்டபடி நனவின்
வாய்திறவார் நனவுகண்ட படிகனவிற் காணார்
அந்தனுரு வன்னங்க ளறிந்திடா னின்றேல்
அறிகனவு மிறந்துணர்வு மழிந்துறக்கமடைந்தால்
உந்துவதோர் சந்தான மில்லையுணர் வுதிப்ப
உயிர்கனவு நனவினையு முணருங் காணே.

என்பது: *இந்திரிய வீதி எழும் சித்தம் நெஞ்சத்து எழும் சித்தம் என்று இரண்டும் ஒன்று கெட்டே ஒன்று வந்து எழுவது எனில் – இந்திரிய வியாபாரத் தால் உண்டாம் அறிவு என்றும், மனத்தில் உண்டாம் அறிவு என்றும் இரண்டாய் ஒன்று கெட்டு ஒன்று தோன்றும் என்று புத்த! நீ கூறின்,—கனவில் கண்ட படி நனவின் வாய் திறவார் நனவு கண்டபடி கனவில் காணார்–கனவில் கண்டதெல்லாம் நனவில் சொல்ல மாட்டார், நனவில் கண்டதெல்லாம் கனவில் காண மாட்டார்; அன்றியும்,—அந்தன் உரு வன்னங்கள் அறிந்திடான்–பிறவிக்குருடன் பிறர் வடிவத்தையும் வன்னத்தையும் அறியமாட்டான்,—இன்றேல்–இந்திரி யக்குறைவாலே அறிவு தோன்றிற்றில்லை என்று நீ கூறின்,—அறி கனவும் இறந்து உணர்வும் அழிந்து உறக்கம் அடைந்தால் உந்துவது ஓர் சந்தானம் இல்லை– அறியத்தக்க கனவும் அழிந்து, உணர்வும் அழிந்து, உறக்கத்தையும் அடைந்தால் உண்டாகத் தக்க தொடர்ச்சி இல்லை,—உணர்வு உதிப்ப உயிர் கனவும்*

நனவினையும் உணரும் காண் ஏ — ஆன்மாக்களுக்கு இச்சா ஞானக்கிரியைகள் உண்டாகக் கனவினையும் நனவினையும் அறியா நிற்கும் என்றவாறு.

இன்றேல் எனவே இந்திரியங்கள் அறிவிக்கும் என்பது புலப்பட்டது. வீதி—நேரே செல்லுதல். அந்தன்—அந்தகன்.

இச்செய்யுள் இந்திரியம் ஆன்மாவுக்குக் கருவியாக உள்ளதன்றி, இந்திரியம் ஆன்மா அல்ல என்று மறுத்துக் கூறிற்று. (29)

செய்யுள் — 123

ஒருகாலத் தோரிடத்தி லோருணர்வேற் செவிதான்
ஒன்றுணரா திருசெவியு முணரு மோசை
ஒருகாலத் திருகண்ணு மிருசெவியு மனமும்
ஒருவனைக்கண் டவனுரைகேட் டுணர்ந்திடுமைம் பொறியும்
ஒருகாலு முணராவுள் ளுணர்வின்றிப் பொறிகள்
ஒன்றொன்றுவுணர்வதுமுள்ளுணர்வைந்துமுணரா
ஒருகாலும்பொறிவிகற்பித்துணராவுள் ளுணர்வுக்
குள்ளதுகாண் விகற்பமிரண் டும்முணர்வ துயிரே.

என்பது: ஒரு காலத்து ஓர் இடத்தில் ஓர் உணர்வு ஏல்—ஒரு காலத்திலே ஒரு பொறியிடத்திலே ஓர் உணர்வாக அறியும் என்று புத்த! நீ கூறினாய்; அப்படி ஆயின்,—செவிதான் ஒன்று உணராது இரு செவியும் உணரும் ஓசை — இரண்டு செவியும் அறியும் ஓசையை ஒரு செவியாக அறியமாட்டாது, இரண்டு செவியாலும் அறியவேண்டும்; அஃதன்றியும்,—ஒரு காலத்து இரு கண்ணும் இரு செவியும் மனமும் ஒருவனை கண்டு அவன் உரை கேட்டு உணர்ந்திடும் — ஒரு காலத்தே இரண்டு கண்ணும் இரண்டு செவியும்

*மனமும் கூடி ஒருவனைக்கண்டு அவன் வார்த்தை கேட்டு அதனை அறியா நிற்கும்,—ஐம்பொறியும் ஒரு காலும் உணரா உள் உணர்வு இன்றி—ஐம்பொறிகளும் மனம் கூடாமல் தனித்து ஒருகாலும் அறியமாட்டா,— பொறிகள் ஒன்று ஒன்று உணர்வது – பொறிகள் ஒரோவொன்றாகத் தாம் அறியும் விஷயத்தை அறியும் அத்தனையே,—உள் உணர்வு ஐந்தும் உணரா – அம் மனமும் ஏககாலத்து ஐம்பொறியின் விஷய அறிவுகள் ஐந்தும் கூடி அறியமாட்டா; அதுவுமன்றி,—ஒருகா லும் பொறி விகற்பித்து உணரா – பொறிகள் ஒருக் காலும் தாம் அறியும் அறிவின்றி விகற்பித்து அறிய மாட்டா,—உள் உணர்வுக்கு உள்ளதுகாண் விகற்பம் – அந்தப் பொறிகளுடனே கூடிநின்று விகற்பித்தறிவது மனத்துக்குள்ள குணம் காண்,—இரண்டும் உணர்வது உயிரே—இப்பொறிகளையும் மனத்தையும் கொண்டு அறிவது ஆன்மாவாம் என்றவாறு.*

*இச்செய்யுள் பொறிகளையும், மனத்தையும் கொண்டு அறிவது ஆன்மா என்று கூறிற்று.* (30)

*செய்யுள்* — 124

அருவுணர்வு மாயாறு மாறி மாறி
அங்கங்கே தோன்றியிடி னகத்துநிலை யின்றி
உருவிரெடு பாலதரு ணவிருத்தா வத்தை
உண்டாகா துறக்கத்தி னுடறட்ட வழைப்ப
வருவதுணர் வெங்கிருந்து நெஞ்சிலிருந் தென்னில்
வாயில்வினை யறிந்தெழுப்ப வாயுவறி யாதாம்
திரியொழிய விடிஞ்சிரெடுத் தீபமெழா வடக்கம்
சென்றபொழு தாலுணர்வு நின்றநிலை செப்பே.

என்பது: அரு உணர்வும் ஆய் ஆறும் மாறி மாறி அங்கங்கே தோன்றியிடின் அகத்து நிலை இன்றி உருவிணொடு பாலதருண விருத்த அவத்தை உண்டாகாது — மனமானது அருவுமாய் உணர்வுமாய்ப் பொறிகள் ஐந்தோடும் கூடி ஆறுவிதமாய் மாறிமாறித் தோன்றியிடுவது என்று புத்த! நீ கூறின், மனம் அருவம் ஆகையால், உருவினும் நிலையுடையதுமன்றாய், காயத்தோடு கூடி, பால தருண விருத்தாவத்தையும் உண்டாகாது ஆதல்வேண்டும்; அஃதன்றியும்,—உறக்கத்தின் உடல் தட்ட அழைப்ப வருவது உணர்வு எங்கு இருந்து நெஞ்சில் இருந்து என்னில்—அவத்தைப்பட்ட இடத்து உடலில் தட்டவும் அழைப்பவும் அறிந்து வரும் அறிவு எவ்விடத்திருந்து? என்று சொல்லாய்; நெஞ்சிலிருந்து என்று நீ கூறின்,—வாயில் வினை அறிந்து எழுப்ப ஆயு அறியாதாம் — சத்தாதிவிடயங்களிலே செல்லும் தொழிலை அறிந்து செலுத்த மனம் அறியாதாம்; அஃது என்போல்? என்னில்,—திரி ஒழிய இடிஞ்சில் தொட தீபம் எழா — திரியைப் பற்றி நின்ற ஒளி அத்திரி மாய்ந்தால் உடன் மாய்தல் அன்றி இடிஞ்சிலைப்பற்றித் தோன்றாது ஆகையால்,—அடக்கம் சென்றபொழுது ஆல் உணர்வு நின்ற நிலை செப்பு ஏ — உணர்வுக்கு மூர்ச்சை வந்தபொழுது அறிவு நின்ற நிலை சொல்வாயாக என்றவாறு.

ஆயு—மனம். உரு—தேகம். ஆல்—அசை. இடிஞ்சில்—அகல்.

இச்செய்யுள் பொறியும் மனமும் கூடி அறுவகையாய் அறியும் என்பதனை மறுத்து அவை கருவியாகக்கொண்டு அறிவது ஆன்மா என்று கூறிற்று. (31)

*செய்யுள் — 125*

இச்சைவெறுப் பியற்றலின்பத் துன்பம் ஞானம்
இவையணுவின் குறியாகு மிவற்றி லிச்சை
நச்சிநுகர்ந் தொருபழத்தி னினங்கண்டு முன்பு
நானுகர்ந்த கனியினின மென்றுநச்சல் பின்பும்
எச்சவெறுப் பாதிகளு மிப்படியே யாகும்
இவைமுன்பும் பின்புமுணர்ந் திடுத லாலே
நிச்சயகர்த் தாவொருவ னுளனென்று நல்லோர்
நிறுத்திடுவர்வெறுத்திடுவர் நின்னுடையபொருளே.

என்பது: *இச்சை வெறுப்பு இயற்றல் இன்பம் துன்பம் ஞானம் இவை அணுவின் குறி ஆகும் — ஆசை வெறுத்தல் தொழில்செய்தல் சுகதுக்கப்படுதல் அறிவு இவை முதலிய எல்லாம் ஆன்மாவின் குணங்களாம்,—இவற்றில் இச்சை நச்சி நுகர்ந்து ஒரு பழத்தின் இனம் கண்டு முன்பு நான் நுகர்ந்த கனியின் இனம் என்று நச்சல் பின்பும் — இவையிற்றில் ஆசையாவது முன் ஒரு பழத்தை ஆசைப்பட்டு நுகர்ந்து பின்பு அதனை ஒப்பது ஒரு கனியைக்கண்டு முன்பு நான் நுகர்ந்த கனியின் இனம் ஈது என்று பின்பும் அதனை ஆசைப்படுதல்,—எச்ச வெறுப்பு ஆதிகளும் இப்படியே ஆகும் — ஒழிந்த முதலாயினவும் இத் தன்மையே ஆகும்,—இவை முன்பும் பின்பும் உணர்ந் திடுதலாலே நிச்சய கர்த்தா ஒருவன் உளன் என்று நல்லோர் நிறுத்திடுவர் வெறுத்திடுவர் நின்னுடைய பொருள் ஏ — அவ்விச்சா ஞானக்கிரியை முதலாயின வற்றை ஆன்மா முன்பும் பின்பும் அறிகையாலே நிச் சயமாக ஆன்மா ஒருவன் உளன் என்று சொல்லுவர்*

*பெரியோர்; நீ ஆன்மா இல்லை என்று சொல்லும் சொல்லை அப்பெரியோர் தள்ளாநிற்பர் என்றவாறு.*

***இவ்விடத்துக் கர்த்தா என்பது ஆன்மாவை; கன்மத்துக்குக் கர்த்தா என்றபடி.***

***'உருவாதி' என்ற செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் 'ஆன்மா இல்லை' என்பதனை மறுத்து உண்டு என்று கூறிற்று.*** (32)

*செய்யுள்* — 126

எப்பொருட்கு மிரந்தரமா யிடங்கொடுத்து நீங்கா
திருளொளிதானன்றியிரண் டினுக்குமிடவகையாய்
ஒப்பில்குணஞ் சத்தமதாய் வாயு வாதி
உதித்தொடுங்கநிற்கும்வா னுயிர்முன்னே சொன்னேம்
செப்பிடுங்கா லம்பொழுது நாளாதி யாகித்
திரிவிதமாய்த் தீமைநன்மை செய்யுந் திக்குத்
தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி
தானுகித் திரியாதே நின்றுபலந் தருமே.

என்பது: *எ பொருட்கும் இரந்தரம் ஆய் இடம் கொடுத்து நீங்காது இருள் ஒளி தான் அன்றி இரண்டினுக்கும் இடவகை ஆய் ஒப்பு இல் குணம் சத்தம் அது ஆய் வாயு ஆதி உதித்து ஒடுங்க நிற்கும் வான் — முன்னர் வானமும் ஆன்மாவும் காலமும் திக்கும் இல்லை என்ற புத்தனே! நீ கேட்பாயாக; எல்லாப் பொருளும் செல்லுதற்கு வழியுமாய் இடம் கொடுத்து நீக்கம் இன்றி இருளும் வெளியும் அல்லவாய் இரண்டும் நிற்கத்தக்க இடமுமாய் உவமை இல்லாத குணம் சத்தமாய் வாயு முதலிய பூதங்கள் நாலும் தோன்றி ஒடுங்குதற்குத் தாரகமுமாய் நிற்கும் வானம்;—உயிர் முன்னே*

சொன்னோம்—ஆன்மா உண்டு என்று முன்னமே சொன்னோம்,—செப்பிடும் காலம் பொழுது நாள் ஆதி ஆகி திரிவிதமாய் தீமை நன்மை செய்யும் – சொல்லத் தக்க காலமானது காலையும் உச்சியும் மாலையும் என்னும் பொழுதாயும், நெருநல் இன்று நாளை என்னும் நாளாயும், இத்தன்மையிலே மூன்றுவிதமாய் வேற்றுமைப்பட நன்மை தீமைகளைச் செய்யும்,—திக்கு தப்பு இல் குணக்கு குடக்கு தெற்கு வடக்கு ஆதிதான் ஆகி திரியாது ஏ நின்று பலம் தரும் ஏ—திக்கானது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்று தவறில்லாததாய் அநாதியிலும் ஆதியிலும் உள்ளதாய்ப் பிறழாமல் அத்திசைகளை நோக்கிக் கன்மம் செய்தோர்க்குக் கன்ம பலத்தைக் கொடுக்கும். ஆகையால் ஆகாசமும் ஆன்மாவும் காலமும் திக்கும் உண்டு என்று அறிவாயாக என்றவாறு.

நெருநல் இன்று நாளை—பூத பௌஷிய வர்த்தமானம்; அதுவே இறந்தகால எதிர்கால நிகழ்காலங்கள்.

இச்செய்யுள் ஆகாசமும் ஆன்மாவும் காலமும் திக்கும் உண்டு என்று கூறிற்று. (33)

செய்யுள் — 127

காரியமா யுலகமெலா மிருத்த லாலே
கடாதிகள்போற்காரியகர்த்தாவொருவன்வேண்டும்
ஆரியமா யறம்பொருளோ டின்பவீ டெல்லாம்
அறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பது நூ லந்நூல்
கூரியரா யுள்ளவர்க ளோத வோதிக்
கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்
சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டும்
செயலினுக்குங்கரிவேண்டுஞ்சிவனுளனென்றறியே

என்பது: காரியம் ஆய் உலகம் எலாம் இருத்த லால் ஏ கடாதிகள் போல் காரிய கர்த்தா ஒருவன் வேண்டும் – கர்த்தாவும் நூலும் இல்லை என்று கூறிய புத்தனே! பிரபஞ்சம் எல்லாம் கடாதிகள் போலக் காரியப்பட்டு வருதலாலே இதனைச் செய்வான் ஒரு கர்த்தா வேண்டும்,—ஆரியம் ஆய் அறம் பொருளோடு இன்பம் வீடு எல்லாம் அறைந்து உயிர்கட்கு அறிவு செயல் அளிப்பது நூல் – வடமொழியாய் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு காரியமும் சொல்லி ஆன்மாவுக்கு அறிவையும் செயலையும் கொடுப்பது வேத ஆகமங்கள் காண்,—அ நூல் சூரியர் ஆய் உள்ளவர்கள் ஓத ஓதிக் கொண்டு வரலால் முன்னே குற்றம் இன்றி சீரிய பேர் அறிவு உடையோன் செப்ப வேண்டும் செயலினுக்கும் கரிவேண்டும் சிவன் உளன் என்று அறி ஏ – அவ்வேதாகமங்கள் குசலராய் உள்ள பிரமாதிகள் ஓதுவிக்க மகா இருடிகளாலே ஓதப்பட்டு அவர்கள் வழியாகத் தொன்று தொட்டு வருதலால் தவறின்றி மிக்க பெரிய அறிவை உடையோராலே சொல்லப்படவேண்டும்; அவ் வேதாகமங்களால் சொல்லப்பட்ட கன்மத்துக்குக் காண்பான் ஒரு சாட்சி யும் வேண்டும்; ஆகையாலே சிவனாலே நூல் சொல்லப் பட்டது என்றும், அவனே கர்த்தா என்றும் அறிவா யாக என்றவாறு.

இச்செய்யுள் கர்த்தாவும் சாத்திரமும் உண்டு என்ப தனைக் கூறிற்று. (34)

*செய்யுள்* — 128

மரங்களுயி ரல்லவென்று மறுத்துச் சொன்னாய்
வாடுதல்பூ ரித்தலான் மரங்களுயி ராகும்
திரங்குநீர் பெறாதொழியிற் பெறிற்சிரத்தை சேரும்
சீவனல வெனினுலகிற் சீவ னெல்லாம்
உரங்கொள்வ தூண்பெறிற்சோ ரூணபெ றாவேல்
உலர்ந்தமர நீர்பெற்றா லுய்யாதுள் ளுயிர்கள்
கரந்தசினை முட்டைகட்கு வாயிலின்று வாயில்
கண்டிலதேற்பூத்துக்காய்த்தெழன்மரங்களுயிரே.

என்பது: *மரங்கள் உயிர் அல்ல என்று மறுத்து சொன்னாய் வாடுதல் பூரித்தலால் மரங்கள் உயிர் ஆகும்—மரம் முதலியன உயிர் உள்ளனவல்ல என்று புத்த! நீ சொன்னாய், அவை மெலிதலாலும் பருத்த லாலும் மரம் முதலியவை உயிர் உள்ளன ஆகும்,— திரங்கும் நீர் பெறாது ஒழியின் பெறின் சிரத்தை சேரும் சீவன் அல எனின்—மரம் முதலியன நீர் பெறாது ஒழியில் வாடுதலும் அந்நீர் பெற்றால் பூரித் தலும் இயல்பு, ஆன்மா அல்ல என்று நீ கூறில்,— உலகில் சீவன் எல்லாம் உரம் கொள்வது ஊண் பெறில் சோரும் ஊண்பெறாவேல் உலர்ந்த மரம் நீர் பெற்றால் உய்யாது—உயிருள்ளவற்றிற்கெல்லாம் ஊண்பெற்றால் பருத்தலும் ஊண் குறைந்தால் மெலிதலும் குணம்; ஆகையால் உலர்ந்த மரத்துக்கு நீரைவிட்டால் பரிணமம் இல்லை; ஆதலால் மரம் முதலிய உயிர் உடைத்தாம்; அற்றன்று, மரம் முதலியவற்றுக்கு இந்திரியங்கள் இல்லை ஆகையால் உயிர் அல்ல என்று கூறின், உள் உயிர்கள் கரந்த சினை முட்டைகட்கு வாயில் இன்று —*

ஆன்மாவை உள்ளடக்கி நிற்கும் முட்டை சினை முதலியவற்றிற்கு வாயில் தோன்ருவாறு போல மரம் முதலியவற்றுக்கும் வ ா யி ல் தோன்ருது,—வாயில் கண்டிலது ஏல் – அம்முட்டை சினை முதலியவற்றுக்கு வாயில் பின்பு தோன்றக் கண்டனம். இதற்கு வாயில் தோன்றக் கண்டதில்லை எ ன் று கூறில்,—பூத்து காய்த்து எழலால் மரங்கள் உயிர் ஏ—அம்மரம் முதலிய வற்றுக்கு இந்திரியம் கட்புலன் ஆகாதாயினும் பூத்துக் காய்த்து வளர்தலும் காண்டலால் இ ந் தி ரி ய மு ம் உயிரும் மரம் முதலியனவற்றுக்கு உண்டென்று அறிவாயாக என்றவாறு.

மரம் முதலியன எனவே புல் ஈருயின கொள்க. (35)

செய்யுள் — 129

ஒருமரத்தினுயிரொன்றேற்கொம்பொசித்துநட்டால்
உய்யுமுயி ரொன் றுபல வாமோ வென்னிற்
கருமரத்தின் வித்துவேர் கொம்புகொடி கிழங்கு
கண்கலந்து கொள்ளுமுயி ரண்டம் வேர்ப்புத்
தருபிறப்புச் சராயுசங்கள் சனனமும்பெற்றுற்போல்
தானடையு முற்பீசந் தலநடவா வென்னில்
பெருநிலத்திற் காலிலார் நடப்பரோ பேதாய்
பிறப்பின்வித மநேகங்காண் பேசுங் காலே.

என்பது: ஒரு மரத்தின் உயிர் ஒன்றேல் கொம்பு ஒசித்து நட்டால் உய்யும் உயிர் ஒன்று பல ஆமோ என்னில் – மரத்துக்கு ஆன்மா உண்டாகின் ஒரு மரத்தின் கொம்பை முறித்து நட்டால் அதனைப் போல வளர்தலால் ஓர் உயிர் ஆமோ என்று புத்த! நீ கூறில்,—கரு மரத்தின் வித்து வேர் கொம்பு கொடி

கிழங்கு கண் கலந்து கொள்ளும் உயிர் — மரத்தின் உண்டாகிய வித்து வேர் கொம்பு இவையிற்றையும் கருப்பமாகக் கொண்டு ஆன்மாக்கள் தோன்றும்,— அண்டம் வேர்ப்பு தருபிறப்பு சராயுசங்கள் சனனமும் பெற்றால் போல் தான் அடையும் உற்பீசம் தலம் நடவா என்னில்—முட்டையிலும் கசிவிலும் தோன்றிய ஆன்மாக்கள் பையில் தோன்றும் ஆன்மாக்கள் போல நடைபெற்று வித்தில் தோன்றும் மரம் முதலியன பூமியிடத்து நடைபெறா ஆகையால் ஆன்மா அன்று என்று நீ கூறில்,—பெருநிலத்தில் கால் இலார் நடப்பரோ பேதாய் பிறப்பின் விதம் அநேகம் காண் பேசும் கால் ஏ — சொல்லுங் காலத்துக் கால் இலார் பெரியபூமி யிடத்து நடக்கவல்லரோ? அப்படி இந்திரியம் குறைவான ஆன்மபேதம் அநேகமாக உண்டுகாண் அறியாதாய்! என்றவாறு.

கண்—கணு.

இச்செய்யுள் இரண்டும் மரங்கட்கு உயிர் உண்டு என்று கூறிற்று. (36)

செய்யுள் — 130

தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா
 தின்பையெனக்கொன்றுனக்குத்தீற்றினர்க்குப்பாவ
மன்னுவதுன் காரணத்தாற் றின்னு தார்க்கு
 வதைத்தொன்றையிடாமையினல்வதைத்தவர்க்கேபாவம்
என்னிலூனை யூட்டினர்க்குப் பாவஞ் சேர
 என்னதவம் புரிகின்றாய் புலால்கடவுட் கிடாயோ
உன்னுடல மசுசியென நாணி வேறோர்
 உடலுண்ணி லசுசியென வுணர்ந்திலைகாணீயே.

என்பது: தின்னும் அது குற்றம் இலே செத்தது எனும் புத்தா—தான் கொல்லுமது குற்றமுடைத்து செத்தது தின்னும் அது குற்றம் இல்லை என்று கூறும் புத்தா!,—தின்பை என கொன்று உனக்கு தீற்றினர்க்கு பாவம் மன்னுவது உன் காரணத்தில் தின்னுதார்க்கு வதைத்து ஒன்றை இடாமையினுல்—நீ தின்பை என்று கருதி உனக்கு ஒன்றைக் கொன்று ஊட்டினர்க்குப் பாவம் உன் காரணத்தால் உண்டாம்; அஃது எங்ஙனம்? என்னில், தின்னுதார்க்குக் கொன்று ஊட்டுவார் இல்லை; ஆகையால்,—வதைத்தவர்க்கே பாவம் என்னில்-என் காரணத்தால் பாவம் உண்டாகாது கொன்றவர்க்கே பாவம் உண்டு,—ஊனை ஊட்டினர்க்கு பாவம் சேர என்ன தவம் புரிகின்றாய்—உன்னைப் பரிந்து ஊட்டினர்க்குப் பாவம் உண்டாக நீ என்ன தவத்தைச் செய்கின்றாய்; அஃதன்றியும்,—புலால் கடவுட்கு இடாயோ—நீ புலால் நுகருங்காலத்து உன் கடவுளுக்கும் புலாலை ஊட்டுவை; அஃதன்றியும்,—உன் உடலம் அசுசி என நாணி வேறு ஓர் உடல் உண்ணில் அசுசி என உணர்ந்திலை காண் நீ ஏ—உன் உடம்பு சுத்தம் இல்லை என்று வெட்கி நீ பிற ஊனை நுகரும் அது சுத்தம் இல்லை என்று அறிந்தாய் இல்லை என்றவாறு.

நாணி என்றது தொழிற்பெயர்.

இச்செய்யுள் பிறர் கொன்றிடத் தின்னலாம் என்பதை மறுத்துக் கூறிற்று. (37)

செய்யுள் — 131

குடைநிழலுங் கண்ணாடிச் சாயையும்போற் பிறப்புக்
கொள்ளுமுணர் வென்னிற்கா ரணமழிய வழியும்
அடைநிழல்போற் கந்தமைந்து மழியுமுனக் கிங்கே
அவையழிந்தா லருங்கதியினணையுமுணர் வின்றாம்
இடைகனவிலெழுமுணர்வு நனவுணர்வா னாற்போல்
எழுமுணர்வு கன்மத்தா னினைந்துகதி யென்னின்
மிடைசினையு மந்தனுமுட் டையுமுயிர்விட் டக்கால்
மேவுவதென்பிறப்பினுடல்விடா துகன்மவுணர்வே.

என்பது: *குடைநிழலும் கண்ணாடி சாயையும் போல் பிறப்பு கொள்ளும் உணர்வு என்னில்* — குடையின் கண் குடைபோல நிழல் தோன்றும் தன்மையும் கண்ணாடியில் காட்டின உருப்போல உருத் தோன்றும் தன்மையும் போலவும், இக் காயம் விட மற்றொரு காயத்தை எடுத்துக்கொள்ளும் என்று புத்த! நீ கூறின்,—*காரணம் அழிய அழியும் அடைநிழல் போல் கந்தம் ஐந்தும் அழியும் உனக்கு இங்கே* — குடையும் கண்ணாடியும் ஆகிய காரணங் கெட அதில் பொருந்திய நிழலாகிய காரியம் கெட்டாற் போலக் கந்தங்கள் ஐந்தும் உனக்கு இவ்விடத்தே கெடும்; அவை கெடவே இந்திரியம் காரணமாகக் காரியப்படும் அறிவும் இங்கே அழியும் ஆகையால்,—*அவை அழிந்தால் அரு கதியின் அணையும் உணர்வு இன்றாம்* — காரணமாகிய கந்தங்கள் ஐந்தும் அழிந்தால் கதியை அடையும் அறிவும் இல்லையாம்,—*இடை கனவில் எழும் உணர்வு நனவு உணர்வு ஆனால் போல் எழும் உணர்வு கன்மத்தால் நினைந்து கதி என்னில்*—கனவிடை எழும் அறிவு மெய்யறிவாய்ப்

*பரிணமித்தாற்போலக் கன்மங்கட்கீடாக நினைந்து உண்டாம் உணர்வு கதியிற் கூடும் என்று நீ கூறின்,— மிடை சினையும் அந்தனும் முட்டையும் உயிர் விட்டகால் மேவுவது என் – இந்திரிய அறிவு கெட்டால் தம்மில் நெருங்கிய சினையும் பிறவிக் குருடனும் முட்டையும் உயிர் போனால் பெறும் கதி யாது? அதனால்,—பிறப்பின் உடல் விடாது கன்ம உணர்வு ஏ – பிறப்பின் உடலைக் கன்ம உணர்வு விடாது காண் என்றவாறு.*

***கன்ம உணர்வு என்பது ஆன்மஞானம். சினையும் அந்தனும் முட்டையும் பூர்வகன்மத்துக்கு ஈடாகத் தொழில் மறந்து நிற்கையால் கதி அடையார் என்பது ஆயிற்று.***

***கதி என்றது நற்பிறப்பு.***

*இச்செய்யுள் கன்மமும் உணர்வும் கெட்டுக் கதியடையும் என்பதனை மறுத்துக் கூறிற்று.* (38)

*செய்யுள்* — 132

ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த துக்கம்
அறக்கெடுகைமுத்தியின்பமென்றறைந்தாய்கந்தம்
ஐந்துமழிந் தான்முத்தி யணைபவர்யா ரென்ன
அணைபவர்வேறில்லையென்றுயார்க்குமுத்தியின்பம்
ஐந்தினுணர் வினுக்கென்னி லழியாத வுணர்வுண்
டாகவே யவ்விடத்து முருவாதி கந்தம்
ஐந்துமுள வாமதுவும் பந்த மாகி
அரந்தைதரு முத்தியின்ப மறிந்திலகா ணியே.

என்பது: *ஐந்து கந்தம் சந்தானத்து அழிதல் பந்த துக்கம் அற கெடுகை முத்தி இன்பம் என்று அறைந்தாய் – கந்தங்கள் ஐந்தும் தொடர்ச்சியிலே*

சேட்டை கெடுதல் பந்ததுக்கம் என்றும் அவை கற்பூர தீபம்போலச் சோக்கெடுகை முத்தியின்பம் என்றும் புத்த! நீ கூறினய்,—கந்தம் ஐந்தும் அழிந்தால் முத்தி அணைபவர் யார் என்ன அணைபவர் வேறு இல்லை என்ருய்—கந்தம் ஐந்தும் கெட்டால் முத்தியிற் செல்வார் யார் என்றுழிச்செல்வார் ஒருவரும் இல்லை என்று கூறினய்,—ஆர்க்கு முத்தி இன்பம் – முத்திபெறுவார் இல்லையாயின் முத்தியின்பம் யாவர்க்கு,—ஐந்தின் உணர்வினுக்கு என்னில்—கந்தங்கள் ஐந்தில் தோன்றும் அறிவிற்கு என்று கூறின்,—அழியாத உணர்வு உண்டாகவே அ இடத்து உரு ஆதி கந்தம் ஐந்தும் உளஆம் அதுவும் பந்தம் ஆகி அரந்தை தரும் முத்தி இன்பம் அறிந்திலை காண் நீ ஏ – மனத்தால் அறியும் அறிவு கெடாது இருக்குமாயின் அவ்விடத்திலும் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் எனும் கந்தங்கள் ஐந்தும் உண்டாதல் வேண்டும்; அவை உண்டாகவே முத்தியிடத்திலும் பந்த துக்கம் உண்டாய்க் கிலேசத்தையும் தரும், ஆதலால் நீ மோக்ஷ சுகத்தை அறிந்திலை அதனைக் கேட்பாயாக என்றவாறு.

கேட்பாயாக என்ற தொடர்ச்சி பின்னர் வரும் செய்யுளின் கருத்துப்பற்றி.

இச்செய்யுள் கந்தங்கள் ஐந்தின் அறிவே அறிவுமாய் மோக்ஷ சுகத்தை அடையும் என்பதனை மறுத்துக்கூறிற்று.39

செய்யுள் — 133

அநாதிமுத்த னய்ப்பரனு யசலனு யெல்லா
அறிவுதொழி லநுக்கிரக முடையவரன் கன்ம
நுனதிகமற் றெுத்தவிடத் தேசத்தி நிபாதம்
நுழைவித்து மலங்களெல்லா நுங்க நோக்கி

மனுதிகர ணங்களெல்லா மடக்கித் தன்னை
வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால்
இறுதபிறப் பினினின்று மெடுத்து மாறு
இன்பமுத்திக் கேவைப்ப னெங்கள்முத்தி யிதுவே.

என்பது: *அநாதியிலே மலரகிதனாய் எப்பொருட்கும் மேலாய்ச் சலனம் இல்லாதவனுமாய்ச் சர்வஞ்ஞத்துவமும், சர்வ கிருத்தியமும் சர்வானுக்கிரகமும் உடையனாகிய பரமேசுவரன் ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவ மிகுதி குறைவறத் துலை யொத்த இடத்துக் குருமூர்த்தியாய் எழுந்தருளிச் சத்திநிபாதம் பதிவித்து மலங்கள் கெடத் திருக்கண் சாத்தியருளி மனம் முதலாகிய உட்காரணங்களையும், இந்திரியம் முதலாகிய புறக்காரணங்களையும் கெடுத்துத் தன்னை வழிபடும் நால்வகையாகிய வழிபாட்டையும் அருளி மிகுத்த காருண்ணியக் கையாலே பொல்லாப் பிறவிக் கடலில் விழாமல் எடுத்து ஒழியாத இன்ப முத்திக் கரையிலே வைத்தருளுவன். இதுவே எங்கள் முத்தி; ஆகையால், நீயும் இவ்வழியினின்று முத்தி இன்பத்தை அநுபவிப்பாயாக என்றவாறு.*

*நூனுதிகம் நுனுதிகம் என விகாரப்பட்டது.*

*இச்செய்யுள் பௌத்தரில் சௌத்திராந்திகன் மதத்தை மறுத்து மோட்சசுகம் கூறிற்று.* (40)

## இரண்டாவது

## சௌத்திராந்திகன் மதமறுதலை முற்றிற்று.

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—133.

---

# 3. (க) யோகாசாரன் மதம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 134

போதமே பொருளாய்த் தோன்றும்
　　பொருளதா யெழலாற் போதம்
வாதனை யதனாற் கூடி
　　வருதலால் வடிவி லாமை
ஆதலாற் கனவே போலும்
　　சகமுள தறிவே யாமென்
றோதினு னோதா னுய
　　உணர்வினல் யோகா சாரன்.

என்பது: *போதமே பொருள் ஆய் தோன்றும் பொருளதாய் எழலால் போதம் வாதனை அதனல் கூடி வருதலால் வடிவு இலாமை ஆதலால் கனவே போலும் சகம் — அறிவே இந்திரியங்களுமாய் தோன்றப்பட்ட உருக்களுமாய் வருதலானும், அவ்வறிவு இந்திரிய வாதனையினலே கூடி வருதலானும், அவ்வறிவு அரூபம்*

ஆதலானும் அநித்திய ரூபம் ஆகிய பிரபஞ்சம் சொப்ப னம் போலும்,—உளது அறிவே ஆம் என்று ஓதினன் ஓதான் ஆய உணர்வினால் யோகாசாரன் – யோகா சாரன் சாத்திரத்தை உணராத அறிவினாலே சௌத்தி ராந்திகனின் வேறுபட்டு இந்திரிய வாதனையால் அறிவு உண்டாம் என்றும், பிரபஞ்சம் கனவே போலும் என் றும், அறிவே உள்ளது என்றும் கூறினான் என்றவாறு.

*இச்செய்யுள் யோகாசாரன் மதம் கூறிற்று.* (1)

**மூன்றாவது—யோகாசாரன் மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—134

---



# 3. (உ) யோகாசாரன் மத மறுதலை

*செய்யுள்* — 135

போதமுந் தவிர வேறோர்
வாதனை புகன்றாய் போதம்
வாதனை யிரண்டுண் டென்றாய்
போதவா தனையு மென்னிற்
காதலாற் பொருளி னோடு
கலந்தபி னெழுங்க ருத்தாம்
வாதனை கனவு கண்ட
பொருளின்மேல் வருங்க ருத்தே.

என்பது: *போதமும் தவிர வேறு ஓர் வாதனைபுகன்றாய்* — *யோகாசார! நீ அறிவொழிய வேறொரு வாதனை உண்டு என்று சொன்னாய்; அப்படியாயின்,—போதம் வாதனை இரண்டு உண்டு என்னாய்-போதம் என்றும் வாதனை என்றும் இரண்டுண்டு என்று கூறாய்,—போதம் வாதனையும் என்னில்—வாதனை தானும் அறிவே என்று கூறின்,—காதலால் பொருளினோடு கலந்தபின் எழும் கருத்து ஆம் வாதனை—அறிவு சத்தாதி விடயத்திலே கலக்கவேண்டும் என்னும் இராகத்தால் கலக்க அக் கலப்பிலே பலகால் கருத்தைச் செலுத்துதலே வாதனை; ஆகையால், வாதனை அறிவன்று,—கனவு கண்ட பொருளின்மேல் வரும் கருத்தே — கனவாவது நனவிற் கண்ட பொருளின்மேல் கருத்துச் செலுத்துவது ஆதலால் பிரபஞ்சம் கனவும் அன்று; அதனால், நீ கூறியது மித்தையே ஆம் என்றவாறு.*

*மித்தை* — பொய். (1)

செய்யுள் — 136.

அறிவதே பொருள தாயின்
அகஞ்சட மென்ன வேண்டும்
பிறிபொரு ளாகும் பேதித்
திதம்பிர பஞ்ச மென்னில்
உறுபொரு ளுருவந் தோய்ந்தால்
உணர்வுமவ் வுருவாய் நிற்கும்
செறிபொரு ளதுவாய் நிற்கும்
தெளிபளிங் கதுவே போல.

என்பது: *அறிவு அதே பொருளது ஆயின் — யோகசார! நீ கூறிய அறிவு தானே பிரபஞ்சரூபம் என்று கூறின்,—அகம் சடம் என்ன வேண்டும் – நான் உடம்பு என்று சொல்லவேண்டும் சடங்கள்,—பிறி பொருள் ஆகும் – அறிவும் உருவும் வேறுபாட்டை யுடையன,—பேதித்து இதம் பிரபஞ்சம் என்னில் – அறிவும் உருவும் வேறுபாட்டையுடைத்தாம் என்னில் உருவை நீங்கி நின்று அறிவுதானே நான் பொருள் என்று கூறும் பகுதியாம்,—உறு பொருள் உருவம் தோய்ந்தால் உணர்வும் அ உருவாய் நிற்கும் — அறிவு உருவத்தோடு கூடினுல் அவ்வறிவு உருவந்தானுய் நிற்கும்; அஃது என்போல என்னில்,—செறி பொருள் அது ஆய் நிற்கும் தெளி பளிங்கு அதுவே போல — அடுத்த வன்னத்தோடு கூடிய பளிங்கு அவ்வன்னம் தானுகத் தோன்றுமாறுபோல அறிவு உருவத்தோடு கூடினுல் உருவம் தானுக நிற்கும்காண் என்றவாறு.*

*இச்செய்யுள் இரண்டும் யோகாசாரன் மதத்தை மறுத்துக் கூறியதாம்.* (2)

**மூன்றுவது யோகாசாரன் மதமறுதலே முற்றிற்று.**

பாயிரம் உள்படத் திருவிருத்தம்—136.

---

# 4. (க) மாத்தியமிகன் மதம்

*செய்யுள் — 137*

அவயவம் பொருளாய்த் தோன்றும்
அவயவ மொழிந்தாற் பின்னை
இவைபொரு ளென்ன வேறொன்
றிலாமையாற் பொருள்க ளின்றும்
அவைபொரு ளிலாமை யாலே
அறிவுமின் றுகு மென்று
நவைதரு மொழியி னாலே
நவிலுமாத் தியமி கன்றான்.

என்பது: *அவயவம் பொருள் ஆய் தோன்றும் — இந்திரியம் பத்தும் பொருளாய்த் தோன்றும், — அவயவம் ஒழிந்தால் பின்னை இவை பொருள் என்ன வேறு ஒன்று இலாமையால் பொருள்கள் இன்றும் — இந்திரியங்கள் கெட்டால் பொருள் இவை யென்று அறிதற்கு இலாமையால்பொருளும் இல்லையாம்,—அவை பொருள் இலாமையாலே அறிவும் இன்றாகும் — அந்தப் பொருள்கள் இலாமையாலே பொருளைக் கூடி நின்று அறியும்*

*அறிவும் இல்லையாம்,—என்று நவை தரு மொழியி னாலே நவிலும் மாத்தியமிகன் தான் ஏ — என்று இப்படிக் குற்றத்தைத் தரும் சொல்லாலே மாத்திய மிகன் சொல்லுவான் என்றவாறு.*

*பொருள் — சரீரம். அவயவி இல்லை என்பது கருத்து.*

*இச் செய்யுள் மாத்தியமிகன் மதம் கூறிற்று.* (1)

**நான்காவது—மாத்தியமிகன் மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம் 137.

---



# 4. (உ) மாத்தியமிகன் மதமறுதலை

செய்யுள் — 138

கடத்தினி லவய வங்கள்
படத்தினிற் புகாமற் காத்தும்
படத்தினி லவய வங்கள்
கடத்தினிற் புகாமற் கொண்டும்
இடத்தினி னிற்கு மாகும்
அவயவி யிரண்டுங் கூடி
உடைத்தொரு பொருளுண் டாகப்
பொருளுமுண் டுணர்வு முண்டே.

என்பது: *கடத்தினில் அவயவங்கள் படத்தினில் புகாமல் காத்தும் படத்தினில் அவயவங்கள் கடத்தினில் புகாமல் கொண்டும் இடத்தினில் நிற்கும் ஆகும் அவயவி — மாத்தியமிக! நீ அவயவமே பொருளாவது அவயவி இல்லை என்று கூறினாய்; கடாதிகளின் அவயவங்கள் படாதிகளில் செல்லாமை நீக்கிக்கொண்டும், படாதிகளின் அவயவங்கள் கடாதியில் செல்லாமை நீக்கிக் கொண்டும் அவ்வவ் அவயவங்களிலே அவ்வவ் அவயவி நிற்கும் ஆகையால்,—இரண்டும் கூடி உடைத்து ஒரு பொருள் — அவயவமும் அவயவியும் கூடியே ஒரு பொருளாக உண்டாவது,—உண்டாக பொருளும் உண்டு உணர்வும் உண்டு ஏ — அப்படி உண்டாகவே அது போலப் பொருளாகிய சரீரமும் உண்டு உணர்வும் உண்டு என்று அறிவாயாக என்றவாறு.*

*கடாதிகட்கு அவயவி மண். படாதிகட்கு அவயவி நூல். பொருள் — அவயவம். உணர்வு — அவயவி ஆகிய ஆன்மா.* (1)

செய்யுள் — 139

கருவியு மொளியும் வேறு
கருதிடுங் கருத்தும் நிற்கப்
பொருள்புண ராமை யாலே
போதம்வந் தெழுவ தின்றாம்
மருவிடும் பொருளுண் டாக
வந்தெழும் புத்தி யானாற்
பொருளுள தாகு மாகப்
போதமு முள்ள தாமே

என்பது: கருவியும் ஒளியும் வேறு கருதிடும் கருத்து நிற்க பொருள் புணராமையாலே போதம் வந்து எழுவது இன்றாம் – இந்திரியங்களும் இந்திரிய விடமாகிய சத்தாதியும் அதனால் காணப்படும் பொருள்களை வேறுபட ஆராயும் அந்தக் கரணங்களும் உண்டாய் நிற்கவும் ஆன்மா வந்து கூடாதது கொண்டு ஒரு பொருளையும் துணிந்து அறியும் அறிவு இல்லையாம்,—மருவிடும் பொருள் உண்டாக வந்து எழும் புத்தி ஆனால் – இந்திரிய விடயங்களோடும் அந்தக் கரணங்களோடும் கூடி நின்று அறியும் ஆன்மா உண்டாக அறிவும் உண்டாம் ஆகையால் பொருள் உளது ஆகும்,—ஆக போதமும் உள்ளது ஆம் ஏ – ஆன்மா உண்டாகும் அஃது உண்டாகவே அறிவும் உள்ளதாம் என்றவாறு.

இவ்விடத்துப் பொருள் என்றது ஆன்மாவை.

இச் செய்யுள் இரண்டும் மாத்தியமிகன் மதத்தை மறுத்துக் கூறிற்று. (2)

**நான்காவது–மாத்தியமிகன் மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம் 139.

# 5. (க) வைபாடிகன் மதம்

செய்யுள் — 140

அரிசன நூறு கூட
 வருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கண் ஞானம்
 விரவிட மேவித் தோன்றும்
தெரிசன மிதுவே யென்று
 தெளிந்திடுந் தேரர் வீடு
பரிவொடு மடைவீ ரென்று
 பகரும்வை பாடி கன்றான்.

என்பது: *அரிசனம் நூறு கூட வருணம் வந்து எழுந்தால் போல*—மஞ்சளும் சுண்ணும்புங்கூட ஓர் சிவப்புத் தோன்றுமாபோல,—*விரி சகம் பொருள்கள் ஞானம் விரவிட மேவி தோன்றும்* — காணப்பட்ட பொருள்களும் இந்திரிய விடயமான அறிவும் கூடின போது பிரபஞ்சப் பொருள்கள் தோன்றும்,—*தெரிசனம் இதுவே என்று தெளிந்திடும்* — இதுவே ஞான

தெரிசனம் என்று தேர்வீராக,—தேரர் வீடு பரிவொடும் அடைவீர் என்று பகரும் வைபாடிகன் தான்-அப்படித் தெளிந்தீராயின் புத்தர் வீடு தரும் இன்பத்தை அடைவீர் என்று பரிவோடும் சொல்லா நிற்பன் வைபாடிகன் என்றவாறு.

இச்செய்யுள் வைபாடிகன் மதம் கூறிற்று. (1)

**ஐந்தாவது வைபாடிகன்மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—140.

---



# 5. (உ) வைபாடிகன் மதமறுதலை

*செய்யுள் — 141*

பொருளது புறம்ப தாகும்
　　போதமந் தரம தாகும்
தெருளிடி னிரண்டுஞ் சென்று
　　சேர்ந்திடு மாற தின்றும்
அருவுணர் வுருவ ஞேயம்
　　ஆதலி னுலுங் கூடா
உருவரு வுடைய வைபா
　　டிகற்கினி மாற்ற மின்றே.

என்பது: *பொருள் அது புறம்பது ஆகும் போதம் அந்தரமது ஆகும் தெருளிடின் இரண்டும் சென்று சேர்ந்திடுமாறு அது இன்றும்—அறியப்படும் பொருள் புறத்தது ஆகும், அறியும் அறிவு அகத்தது ஆகும்; ஆதலால், தெளிய அறியுமிடத்து இரண்டும் சென்று கூடும் தொழில் இல்லையாம்,—அரு உணர்வு உருவம் ஞேயம் ஆதலினுலும் கூடா—அன்றியும் ஞான மாகிய அறிவு அரூபம் ஆகையாலும் ஞேயமாகிய*

பொருள் உருவம் ஆகையாலும் கூடா,—உரு அரு உடைய வைபாடிகற்கு இனி மாற்றம் இன்றே—உருவும் அருவும் கூடும் என்ற வைபாடிகனுக்கு இனிச் சொல்லும் உத்தரம் இல்லையாம் என்றவாறு.

உணர்வுடையன் என்றது இழிவின் கண் வந்தது. பொருள் – பிரபஞ்சம், ஞேயமும் அது.

இச் செய்யுள் வைபாடிகன் மதத்தை மறுத்துக் கூறிற்று. (1)

**ஐந்தாவது—வைபாடிகன் மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம் 141.

---



# 6. (க) நிகண்டவாதி மதம்

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

*செய்யுள்* — 142

வாச மாமல ரசோகு பேணிமறை
நீதி யோடுமலை யுந்தவத்
தாசை யாலுடை யகன்று மாசினை
யடைந்தில் வாழ்தரு மறத்தினில்
பாச மானது தவிர்ந்து பண்டிபட
வுண்டு பாயினெடு பீலிமேல்
நேச மாயவை தரித்து ளோர்களில்
நிகண்ட வாதியை நிகழ்த்துவாம்.

என்பது: *மணமும் வண்டும் பொருந்திய மலர்களை உடைய அசோக விருட்சத்தைத் தெய்வம் போலப் பேணி வேத மார்க்கத்தோடு மறுதலைப் பட்டு உரைக்கும் தவத்தினை ஆசைப்பட்டு உடுக்கையை விட்டுக் குளிக்கும் தன்மை யின்மையின் அழுக்கடைந்து பிரமசரியம் முதலாகிய ஆச்சிரமம் மூன்றுக்கும் பற்று யிருக்கிற கிருகத்த ஆச்சிரமத்தை விட்டு வயிறு*

பெருக்க உண்டு பாய் உடுத்துப் பீலி கைப்பிடித்து இங்ஙனம் சொல்லியவற்றிலே சிநேகமாய் அவையிற்றைத் தரித்துளோர்களின் நிகண்டவாதி மதத்தைச் சொல்லுகின்றேம் என்றவாறு.

இச் செய்யுள் நிகண்டவாதி மதம் கூறுவான் அவன் இத்தன்மையன் என்று கூறிற்று.

வாசமாமலர் — வாசம் நாற்றத்தையும் மா வண்மையும் உடைய மலர் கண்டம் — உடை நிகண்டம் — உடையின்மை, அஃது கூமணரில் நிகண்டவாதியெனக் கொள்க. ஆசீவகர்க்கு உடை உளதாம். மறை நீதியோடு மலையும் தவம். எக்கியாதி கர்மம் கொள்ளாமையாலும் கர்த்திருவாதம் சொல்லாமையாலும் பஸ்ம ருத்திராக்ஷம் இல்லாமையாலும் எனக்கொள்க. (1)

செய்யுள் — 143.

ஈறி லாதன வனந்த ஞானமுதல்
எண்கு ணங்களெனு மொண்குணம்
மாறி லாதமதி மேவு சீதமென
மன்னி வானவர் வணங்கவே
வேறு லாவுகுண ஞான வாவரணி
ஆதி யெட்டினையும் விட்டசீர்
ஏறு பான்மையுடை நீடு வாழருகன்
எங்க ளுக்கிறைவ னென்றனன்.

என்பது: ஈறு இலாதன அனந்த ஞானம் முதல் எண்குணங்கள் எனும் ஒண்குணம் ஆறும் மாறுஇலாத மதிமேவு சீதம் என மன்னி — கேடு இல்லாதனவான அநந்தஞானம் முதலிய நற்குணம் எட்டையும் மதிக்குக்

குளிர்ச்சி தன்னிடத்திலே தோன்றினாலொப்பத் தோற்றுவித்து,—வேறு உலாவு குணம் ஞானம் ஆவ ரணி ஆதி எட்டினையும் விட்ட சீர் — அந்த நற்குணங்க ளோடு கூடாது பரந்த தீக்குணங்கள் என்று சொல்லப் பட்ட ஞானாவர்ணியம் ஆதியாகிய எட்டுக் குணங் களையும் விட்ட அழகினையும்,—வானவர் வணங்கவே ஏறு பான்மை உடை நீடுவாழ் அருகன் எங்களுக்கு இறைவன் என்றனன் — இந்திராதி தேவர்கள் போற்ற மிக்க பான்மையை யுடைத்தாய் நெடிது வாழ்கின்ற அருக பரமன் எங்கள் கர்த்தா என்று கூறினான் என்ற வாறு.

நற்குணம் எட்டாவன :— அநந்தஞானம் அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம், நிர்நாமம், நிர்க் கோத்திரம், நிராயுஷியம், சம்மியதாபாவம் என்பன. சம் மியதாபாவம்-அழிவின்மை. ஞானாவர்ணியம் எட்டாவன: ஞானாவர்ணியம், தரிசனாவர்ணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷியநாமம், கோத்திரநாமம், ஆயுவந்தராயம, காயவந்த ராயம் என்பன. இவையே தீக்குணங்கள் என்றும் பெயர் பெறும். சீரேறு பான்மை என்பது — நின் மலத்துவம் முதலியன. (2)

செய்யுள் — 144

கருவி கண்படு தொடக்கொ ழிந்துவரு
கால மூன்றினிகழ் காரியம்
பெருக நின்றொரு கணத்தி லேயுணர்
பெருந்த வக்கடவுள் பீடினான்
மருவி நின்றுவழி பட்ட வர்க்குமலை
வுற்ற வர்க்குமன மொத்திடும்
குரிசி லெங்களிறை யென்று பின்னுநிகழ்
குற்ற மின்மையது கூறுவான்.

என்பது: கருவி கண்படு தொடக்கு ஒழிந்து வருகாலம் மூன்றின் நிகழ் காரியம் பெருக நின்ற ஒரு கணத்திலே உணர் பெரு தவ கடவுள் – இந்திரிய விடயத்தால் வரும் தொடக்கைத் தன்னிடத்து நின்றும் கைவிட்டுப் பெருங்காலம் முதலாக மூன்று காலத்திலும் உள்ள காரியங்களை மிகவும் ஒரு கண மாத்திரத்திலே அநந்த ஞானத்தாலே அறியத்தக்க பெரிய தவத்தை யுடைய தேவன்,—பீடினுல் மருவி நின்று வழிபட்டவர்க்கும் மலைவு உற்றவர்க்கும் மனம் ஒத்திடும் குரிசில்—தனது பெருமையினுலே பொருந்த நின்று வழிபாடு செய்தவர்க்கும் மாறுபட்டவர்க்கும் ஒரு நீர்மையான தலைவன்,—எங்கள் இறை என்று பின்னும் நிகழ் குற்றம் இன்மையது கூறுவான் – எங்கள் சுவாமி என்று கூறி அவனுக்குக் குற்றமில்லாத தன்மையைப் பின்னும் சொல்லுவான் என்றவாறு.

மனம் ஒத்திடுகை சமதரிசனமாகை. (3)

செய்யுள் — 145

பசித்தல் தாகபய செற்ற மோடுவகை
மோக சிந்தனை பழித்தனேய்
நசித்தல் வேர்விெனுடு கேத மோடுமதம்
வேண்ட லீண்டதி சயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமிவை
விட்டொ ரட்டகுண பூதனுய்
வசித்த வன்னுலகின் மேலி ருந்தொருசொல்
இகல னுக்கருளு மென்றனன்.

என்பது: பசித்தல் – பசியுண்டாதல், தாகம் – ஆசை, பயம் – அச்சம், செற்றமோடு – மாற்சரியம்

ஆகிய இவற்றுடனே,—உவகை—ஒன்றன்மேல் பிரியப் படுகை, மோகம்—மயக்கம், சிந்தனை – ஒன்றைச் சிந்தித் தல், பழித்தல்—ஒன்றை நிந்தித்தல், நோய்—வாதபித்த சிலேஷ்மம், நசித்தல்—சாதல், வேர்வினெடு—வியர்வோ டும், கேதமோடு—கிலேசப்படுதலோடும், மதம் வேண் டல்—கர்வத்தை விரும்பல், ஈண்டு அதிசயித்தலும் – இவ்விடத்து அதிசயப்படுதலும், புசிப்பு – உணவு, வந்திடு பிறப்பு – ஜனித்தல், உறக்கம் – மூவகை நித் திரை, இவை விட்டு—இவை பதினெட்டையும் முற்றக் கைவிட்டு, ஓர் அட்டகுண பூதன் ஆய் – அநந்தகுணம் ஆதியாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களை உடைய ஞய், வசித்தவன் உலகின் மேல் இருந்து ஒரு சொல் இகலனுக்கு அருளும் என்றனன்—உலகத்துக்கு மே லாகிய பொன்எயில் வட்டத்திருந்து சித்த பரமேட்டி கள் கேட்டதொரு சொல்லினுக்கு உத்தரம் அருளும் என்று கூறினன் என்றவாறு.

ஓடு எண்ணின் கண் வந்தது. ஈண்டு என்பதனை எல்லா வற்றோடும் கூட்டுக வசித்தல்—சொல்லுதல். பிறப்பு – தேவமனுஷிய நரக விலங்கு என நால்வகை. மூவகை நித்திரையாவன – நித்திராநித்திரை, பிரசலாப்பிரசலை, நிக்கிரககதி அநுக்கிரககதி என்க.

இதற்கு அருகன் கூறிய சொல்லாவது பொன்னெயில் வட்டத்து இருக்கிற சித்தபரமேட்டி என்னும் சகலாத்தரை இகலாத்தர் ''தன்மம் பகவ'' என்று கேட்க முரசுதாக்கச் சத்தம் கிளம்பினற்போல ஒரு சொல் ''பஞ்சாஸ்தமயம்'' என்று சகலாத்தர் சொல்ல, இது கொண்டு விசாரித்தான் எனக்கொள்க.

உலகின்மேல் இருந்து ஒரு சொல் இகலனுக்கு அருளும் என்றனன் பொன்னெயில் முதல்வனைச் சித்த பரமேட்டி கேட்ப.

இச் செய்யுள்கள் மூன்றும் நிகண்டவாதி தனது கர்த்தாவினுடைய நிர்ணயம் கூறியவாறு கூறிற்று. (4)

செய்யுள் — 146

அந்த வாய்மொழியி னுலவன் சரணம்
ஆதி யோகமுத லானநூல்
இந்த மாநில மயங்கி டாதவகை
இங்கி யம்பின னிதன்பொருள்
வந்த காலமுயிர் தன்ம தன்மியறம்
மற்றும் விண்மருவு புற்கலம்
பந்தம் வீட்டினொ டநாதி யாயிவை
படைப்ப தின்றியுள பத்துமே

என்பது: அந்த வாய் மொழியினால் அவன் சரணம் ஆதியோகம் முதலானநூல் இந்த மா நிலம் மயங்கிடாத வகை இங்கு இயம்பினன் – அந்தப் பஞ்சாஸ்தமயமாகிய வாக்கியத்தினாலே அந்தச் சித்த பரமேட்டி சரணமாதி ஆகிய முதல்நூலை இப் பெரிய நிலத்துள்ளோர் மயங்காதவகை இவ்விடத்துச் சொன்னான்,—இதன் பொருள் – இந்த நூலிற் கூறிய பொருள்,—வந்த காலம் உயிர் தன்மதன்மி அறம் மற்றும் விண் மருவு புற்கலம் பந்தம் வீட்டினொடு அநாதி ஆய் இவை படைப்பது அன்றி உள பத்தும் ஏ – உண்டான காலம், ஆன்மா, தன்மம், அதன்மம், புண்ணியம், பாவம், ஆகாசம், அணுவாய்த் திரண்டு

*ஆன்மத் தன்மை பொருந்தின புற்கலம், பந்தம், வீட்டோடு கூடப் பத்தும் ஒருவரால் படைக்கப்படாத தாய் அநாதியே உள்ளனவாம் என்றவாறு.*

***தன்மம் என்பது தன்மாத்திகாயத்தை, தன்மி என்பது அதன்மாத்திகாயத்தை, சரணம் – ஆதிசரணம், சித்த சரணம், ஆசாரியசரணம், தன்மசரணம் என நான்கு. மற்றுள்ளனவும் கொள்க.***

***இச் செய்யுள் நிகண்டவாதி சாத்திரம் தோன்றின முறைமையும், அந்தச் சாத்திரத்தில் கூறும் பத்துவகைப் பதார்த்தமும் கூறிற்று.*** (5)

செய்யுள் — 147

நிற்ற லோடுதலை போத லன்மையை
நிகழ்த்து நீடுவெதி ரேகமும்
உற்ற தாமிவை கணத்தி லேமருவி
யுள்ள வாபுரியு மாறுதான்
கற்ற காலமன வெய்தி வாழுமுயிர்
காய மேவிநிறை வானதே
பெற்று வேறுவரு தன்மை நேரறிவு
பெற்ற தாகியுள பேசிலே.

என்பது: *நிற்றலோடு தலை போதல் அன்மையை நிகழ்த்தும் நீடு வெதிரேகமும் உற்றது ஆம்—அநாதிப் பொருள் பத்திலே காலமானது நிகழ்காலமும் இறந்த காலமும் இவை அல்லாமையை விளக்கா நின்ற நிலை பெற்ற எதிர்காலமும் ஆகிய மூன்றையும் நிலைபெற்றுப் பொருந்தியதாம்,—இவை கணத்திலே மருவி உள்ளவா புரியுமாறு தான் கற்ற காலம் – அதுவன்றியும்,*

*இம்மூன்று காலத்தையும் ஒரு கணப் பொழுதிலே பொருந்தி உண்டான தகுதியைச் செய்யும் தொழிலையும் அந்தக் காலம் கற்றதாம்,—அளவு எய்தி வாழும் உயிர் காயம் மேவி நிறைவு ஆனதே பெற்று வேறு வரு தன்மை நேர் அறிவு பெற்றது ஆகி உள் பேசில் ஏ – அக்காலத்து எல்லையைப் பொருந்தி வாழும் ஆன்மாவானது சரீரியாய் அந்தச் சரீரம் முழுதும் நிறைந்த தன்மையைப் பொருந்திப் பால தருண விருத்த அவத்தைகளினும் வேறுவேறாக வரும் தன்மையோடு, பொருந்தின அறிவு பெற்றதாகி உள்ளதாம் சொல்லும் காலத்து என்றவாறு.*

*இச்செய்யுள் அநாதிப்பொருள் பத்தில் காலத்தின் பகுதியையும் உயிரின் பகுதியையும் கூறிற்று.* (6)

செய்யுள் — 148

பரந்து மீதுதரு மாத்தி காயமழி
வித்த நித்தமது பண்ணிடும்
நிரந்து கீழதரு மாத்தி காயமது
நித்த மாய்மிக நிறுத்திடும்
புரந்த புண்ணிய மிதற்கு நன்மைபுகல்
பாவ மானவது தீமையே
தரும்பொ ருட்கிடம தாகும் வானமிகு
புற்க லன்களவை சாற்றுவாம்.

என்பது: *பரந்து மீது தருமாத்தி காயம் அழிவித்து அநித்தம் அது பண்ணிடும் – விரிந்து மேலாகத் தரப்பட்ட தன்மாத்திகாயமானது பூதகாயத்தை மேலும் எடாதபடி அழிவித்து அதனை அநித்தியத்தைச் செய்யும்,—நிரந்து கீழ் அதருமாத்திகாயம் அது*

*நித்தம் ஆய் மிக நிறுத்திடும் — நிரைபட்டுக் கீழாகத் தரப்பட்ட அதன்மாத்திகாயமானது ஆன்மாவோடு கூடி நித்தமாய் மிகவும் நிலைபெறுவித்திடும்,—புரந்த புண்ணியம் இதற்கு நன்மை—மன வாக்குக்காயங்களாற் செய்யப்பட்ட புண்ணியமானது இத்தன்மாத்தி காயத்தைத் தருவதற்கு நன்மையாம்,—புகல் பாவம் ஆன அது தீமையே தரும் — சொல்லப்பட்ட மனவாக்குக் காயங்களால் உண்டான பாவமானது தீமைகளையே தரும் அதன்மாத்திகாயத்துக்கு ஏதுவாம்,—பொருட்கு இடம் அது ஆகும் வானம் — எல்லாப்பொருட்கும் இடங்கொடுத்து நிற்கும் ஆகாயம்,—மிகு புற்கலன்கள் அவை சாற்றுவாம் — இதனிடத்தில் தோன்றும் புற்கலப்பொருளை மேலே சொல்லுவாம் என்றவாறு.*

*தன்மாத்திகாயமாவது — புண்ணியத்தால் எடுக்கும் தேகம். அதன்மாத்திகாயமாவது — பாவத்தால் எடுக்கும் தேகம்.*

*இச்செய்யுள் முன் அநாதியென்று கூறிய பத்தினுள்ளும் தன்மதன்மி அறம் பாவம் ஆகாசம் என்னும் ஐவகைப் பதார்த்தங்களைக் கூறிற்று.* (7)

செய்யுள் — 149.

ஏணு மொன்றுடைய வாகி யெங்குமணு
வாயி ரும்புகன் மரங்களும்
பூணு மங்குருவெ லாமு மாகுமிவை
புற்க லப்பொருள்க ளென்னலாம்
காணு மங்கறு வகைத்தொ ழில்களவை
கட்டு விட்டநெறி கன்மமேல்
மாண நின்றுவரு மாறி மாறிமுன்
வகைந்த துண்டுவிட மாட்சியே.

என்பது: ஏ ணும் ஒன்று உடைய ஆகிஎங்கும் அணு ஆய் இரும்பு கல் மரங்களும் பூணும் அங்கு உரு எலாமும் ஆகும் இவை புற்கல பொருள்கள் என்ன லாம் – ஓர் வ லி யு ம் உடையவாய் எவ்விடத்திலும் உருவமாய்த் திரண்டு இரும்பு கல் மரங்கள் முதலியனவு மாய் இவை ஒழிந்து எடுத்துக்கொள்ளப்பட்ட உருக் கள் எல்லாமுமாய்த் திரியக் அணுபூர்வம் என்னும் ஆன்மப்பெயரையும் உடையவாய் நிற்கும்; அவை யிற்றைப் புற்கலப்பொருள் என்று சொல்லலாம்,— கா ணும் அங்கு அறுவகைத்தொழில்கள் அவை கட்டு – பொல்லாங்காய்க் காணப்பட்டுள்ள அ று வ கை த் தொழில்களே பந்தம்,—விட்ட நெறி கன்மம் – அந்தப் பந்தத்தை விட்ட ஒழுங்கே தவம்,—மேல் மாண நின்று வரும்–அத்தவத்தான் உடல் மேன்மேல் வரும் தவ மாட்சிமை உண்டாய் நிலைபெற்று வர்த்திக்கும்,— மாறி மாறி முன் வகைந்தது உண்டுவிட மாட்சி ஏ – ஆன்மாவுக்கு முன்பே புசிப்பதாக உண்டாக்கப்பட்ட புண்ணிய பாவங்கள் தொலையப் புசித்துவிட்ட மாட்சி மையே வீட்டைத்தரும் என்றவாறு.

அணுபூர்வமாவன: தெய்வகதியாவைபூர்வம், மனுஷியகதியாவைபூர்வம், நரககதியாவைபூர்வம், பக்ஷிமிருக கதியாவைபூர்வம், திரியக்காதியாவைபூர்வம் என இவை. இவற்றுள் திரியக்காதி யாவைபூர்வம்–புற்கலப் பொருள். அறுவகைத் தொழிலாவன–கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம், பரிணமம் என இவை: காமாதி அறுவகை யும் ஆம்.

இச்செய்யுள் முறையானே முன்னர்ப் பத்தினுள் புற்கலப் பொருளும், பந்தமும், வீடும் ஆகிய பொருள்கள் மூன்றையும் கூறிற்று.

எண் — வலி.

வாசமாமலர் என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் நிகண்டவாதி மதம் கூறிற்று. (8)

## ஆருவது—நிகண்டவாதி மதம் முற்றிற்று.

பாயிரம் உள்படத்திருவிருத்தம் 149.

---



# 6. (உ) நிகண்டவாதி மதமறுதலை

செய்யுள் — 150

அருக னுக்க னந்த ஞான
மாதி யாதி யாகவே
பெருக நிற்றல் சீத மாம
திக்க டைந்த பெற்றியேல்
ஒருவு மிட்ட வொப்ப வன்னு
யிர்த்தி றத்தி னுள்ளபின்
மருவு மிக்க குற்ற மேல
றத்தின் மன்னி னேனில்.

என்பது: *அருகனுக்கு அனந்த ஞானம் ஆதி ஆதி ஆகவே பெருக நிற்றல் சீத மா மதிக்குஅடைந்த பெற்றி ஏல் – அருக பரமனுக்கு ஞானவாரணியம் ஆதியாகிய தீக் குணங்கள் எட்டும் நீங்கப்பட்டு, அனந்த ஞானம் ஆதியாகிய நற்குணங்கள் எட்டும் சந்திரனுக்குச் சைத்தியம் போல உண்டாம் என்று கூறினாய்; அதுவே முறையாயின்,—ஒருவும் இட்ட ஒப்பு – நீ*

*கூறிய உவமையின் நீங்கப்படும்; அஃது எங்ஙனம்? என்னில்,—அவன் உயிர் திறத்தின் உள்ள பின் மருவும் மிக்க குற்றம் – கர்த்திரு குணம் இன்றியே சில குணத்தை விட்டுச் சில குணம் வந்து கூடிற்று என்பது ஆன்ம குணம் ஆகையால், அவனும் ஆன்ம குணத்தை உடையன் ஆவன்; ஆகவே, விடப்பட்ட தீக்குணங்கள் எட்டும் முன்பு உண்டாய் விட்டவாம்,— மேல் அறத்தின் மன்னினுன் எனில் – அற்றன்று, அவன் ஞானுவரணியம் ஆதியாகிய குணங்களை நீங்கி அநந்த ஞானம் ஆதியாகிய குணங்களைக் கூடுதல் மேலான அறத்தின் கண்ணே பொருந்துகையினுல் என்றவாறு.* (1)

*செய்யுள்* — 151

அறத்தின் மன்னு வித்த வன்னெ
 ருத்த ஞய வன்னறத்
திறத்தினிற்றன் மற்றெ ருத்த
 ஞல்வி ளைந்த செய்தியால்
அறத்தி னற்ற வர்க்கெ லாம்வ
 ணக்க முன்னி றைக்குமேற்
பிறக்கு மிங்க வத்தை கொண்ட
 தாரை யின்று பேசிடே.

என்பது: *அறத்தின் மன்னுவித்தவன் ஒருத்தன் ஆய் அவன் அறத்திறத்தின் நிற்றல் மற்று ஒருத்தனுல் விளைந்த செய்தி ஆம்—ஆங்கு அவன் அந்த தருமத்தினுலே பொருந்தினுன் ஆயின் அந்தத் தன்மத்திலே நிலைபெறுவித்தவன் ஒருவன் உளனுய் அவனுல் கூறப் பட்ட தன்மநெறியிலே நிற்கும் தகுதி ஒருவன்*

கற்பித்த தொழிலை ஒருவன் செய்த செய்தியாம்,— மறத்தின் அற்றவர்க்கு எலாம் வணக்கம் உன் இறைக்கு மேல் பிறக்கும். இங்கு அவத்தை—கொலையை நீங்கின வர்க்கெல்லாம் வணக்கமாகப்பட்ட உன் கர்த்தாவுக்கு மேலும் ஒருவன் உளன் என்பது ஓர் எல்லை உண்டாம் ஆகையால்,—கொண்டது ஆரை இன்று பேசிடு ஏ — முன்னர்க் கூறியவனையோ ? அவன் கீழ் நின்று இந் திரியத் தொடக்குப்படாமல் தவம் செய்தவனையோ ? நீ கர்த்தாவாகக் கொண்டது யாவரை என்று சொல்லு வாயாக இப்போது என்றவாறு.

மறத்தின் அற்றவர் – கொலைத்தொழிலைக் கை விட்டவர்.

நீ தலைவனுகச் சொல்லப்பட்டவன் கன்மக்ஷயம் பிறந்த வனே ? கன்மக்ஷயம் பிறவாதவனே ? பிறந்தவனுகில் தபோபலத்தால் பெற்றவனும்; கன்மக்ஷயம் பிறவாதவனுகில் உலகத்துள்ளார்க்கு ஒப்பாவன். அநாதியே முத்தனுகில் சீவவர்க்கத்தன் அல்லனும் எனக்கொள்க.

இச்செய்யுள்கள் அருகன் சில குணங்களை நீங்கிச் சில குணங்களை வந்து கூடுகையானும், அப்படி உண்டாவது அறத்தினுல் எனின், அவ்வறனும் ஒருவன் உண்டாக்கினுன் ஆகவேண்டும். ஆகையாலும் கர்த்தா அல்லன் என்று மறுத்துக் கூறிற்று. (2)

செய்யுள் — 152

கருவி தன்ஞெ டக்கொ ழிந்து
கண்டு வாழு மென்றியேல்
உருவு கொண்டு நின்ற தென்னில்
உண்டு தான்ம நாதிகள்

ஒருவி நின்ற தென்னி லத்தம்
ஒன்றை யுமு ணர்ந்திடான்
பொருடெ ரிந்து போகை கால
மொன்றி லேபு ணர்ந்திடான்.

என்பது: கருவி தன் தொடக்கு ஒழிந்து கண்டு வாழும் என்றியேல் — உன் கர்த்தாவாகிய அருகபரமன் மனுதிகளாகிய கருவிகளின் நின்று அறியும் அறிவை நீங்கிச் சர்வமும் கண்டிருக்கும் என்று கூறினாய்; அப் படியாயின், — உருவு கொண்டு நின்றது என்னில் உண்டு தான் மனுதிகள் — அவனைச் சரீரம் பொருந்தி நின்றது என்று கூறின் மனம் முதலாகிய கருவிகள் உண்டாம், அவை ஒழிந்து காண்டற்கு வழியும் இல்லை, — ஒருவி நின்றது என்னில் அத்தம் ஒன்றையும் உணர்ந்திடான்- அவனைச் சரீரம் நீங்கிநின்றது என்று கூறின், அவன் எல்லாவற்றையும் கண்டு வாழும் என்று சொல்லுதலும் மித்தியாவாதமாய், மற்றொன்றையும் உணர்ந்ததில்லை ஆவன், — பொருள் தெரிந்து போகை காலம் ஒன்றிலே புணர்ந்திடான்—ஒரு பொருளை அறி தற்குக் கருவியான மூன்று காலத்தையும் ஒரு காலத் திலே உணரும் தன்மையன் அல்லன் என்றவாறு.

இச் செய்யுள் அருகபரமன் கருவித் தொடக்கை ஒழிந்து சர்வமும் காண்பன் என்பதனையும், மூன்று காலத்தை யும் ஒரு காலத்திலே நின்று உணர்வன் என்பதனையும் மறுத் துக் கூறிற்று. (3)

செய்யுள் — 153

ஆர்வ கோப மான வைய
டைந்தொ றுப்ப வர்க்கெலாம்
சேர்வ தின்மை செப்பி லின்று
சீவன் மேவு காயமால்
ஒரு மன்னர் போல வேயு
யிர்க்க ளித்த லென்றியேல்
ஏர்கொள் பொன்னெ யிலிடத்தி ருத்தல்
பெற்ற தென் கொலோ.

என்பது: *ஆர்வம் கோபம் ஆனவை அடைந்து ஒறுப்பவர்க்கு எலாம் சேர்வது இன்மை செப்பில் இன்று சீவன் மேவு காயம் ஆல் — காமக் குரோதம் முதலியவற்றோடும் கூடி அதனைத் தீது என்று அறிந்து நீக்கப்படுவார்க்கு எல்லாம் இன்று முத்தி அடைதல் இல்லையாம், சொல்லுமிடத்து உன் அருக பரமனும் சீவனோடு கூடின காயம் உடைமையால்; அற்றன்று,— ஒரு மன்னர் போலவே உயிர்க்கு அளித்தல் என்றி யேல் — க்ஷத்திரிய தன்மமான சாத்திரத்தை ஆராய்ந்த ஒப்பற்ற அரசரைப் போல உயிர்க்குத் தலையளி செய் தலே அருகபரமனுக்கு முறைமை என்று கூறுவை யாயின் அவ்வரசரைப் போலத் துஷ்ட நிக்கிரகமும் சிஷ்ட பரிபாலனமும் செய்ய வேண்டும்,—ஏர் கொள் பொன் எயிலிடத்து இருத்தல் பெற்றது என் கொல் ஓ — அவ்வரசரைப் போல ஒரு நிலத்தில் இருந்து துஷ்ட நிக்கிரகமும் சிஷ்ட பரிபாலனமும் செய்யாது பொன்னெயில் வட்டத்து இருக்கப் பெற்றது யாது?*

அதுவுமன்றி, "மருவி நின்று வழிபட்டவர்க்கும் மலே வுற்றவர்க்கும் மன மொத்திடும் குரிசில்" என்று நீ முன்னர்க் கூறுகையானும், அரசர் இவ்வுலகத்து இருத்தலானும் உன் அருக பரமன் அரசரை ஒக்கும் தன்மையும் உடையன் அல்லன் என்றவாறு.

இச் செய்யுள் அருகபரமன் சரீரி ஆகையால் அவனே நோக்கித் தவஞ் செய்வார் முத்தி அடைதல் இல்லே என்றும், அரசனைப் போல என்னின் 'மன மொத்திடும் குரிசில்' என்பது வழுவாம் என்றும் மறுத்துக் கூறிற்று.

'அருகன்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் அருகபரமனைக் கர்த்தா அல்லன் என்று மறுத்துக் கூறிற்று. (4)

செய்யுள் — 154.

சொல்ல தொன்று கொண்டி கலின்
 ஆத்த னுட வேசொ லின்
இல்லே யாம நாதி தானி
 யம்பு மாற தெங்ஙனே
நல்ல வாம நாதி தான
 வர்க்கு நாட வேயிலே
ஒல்லே யூம ருமருக்கு
 ரைத்த வாற தொக்குமே.

என்பது: சொல் அது ஒன்று கொண்டு இகலின் ஆத்தன் நாடவே சொலின் — உன் அநாதி அருகபரமனாகிய சகலாத்தன் ஒரு சொல்லைக் கொண்டு ஆதி அருகபரமனாகிய இகலாத்தன் கேட்க மாறுபாடு இல்லாத பொருளைச் சொன்னான் என்று கூறின்,—இல்லே யாம் அநாதி தான் இயம்பும் ஆறு அது எங்ஙனே —

உன் ஆதி அருக பரமனுக்கு அநாதிகள் இல்லை என்று நீ கூறுகையால் அநாதியில் அருக பரமனுடன் ஒரு சொல் கேட்டுப் பல விதமாக நூல் சொன்னபடி எப்படி? அஃதன்றியும்,—நல்ல ஆம் அநாதிதான் அவர்க்கு நாடவே இலை – உன் ஆதி அருகபரமனுக்கு நன்றாகிய மனம் முதலாகிய கருவியும் அறிதற்கு இல்லை, ஆகையால் அவன் கேட்டபடி எப்படி?,—ஒல்லை ஊமர் ஊமருக்கு உரைத்த ஆறு அது ஒக்கும் ஏ – அநாதி அருகபரமன் ஒரு சொல் சொல்ல அதனை ஆதி அருக பரமன் கேட்டுப் பல விதமாக நூல் செய்தான் என்று நீ சொல்லுமது, ஊமர் சொல்ல ஊமர் கேட்டு நூல் செய்தார் என்னும் தன்மையை ஒக்கும் என்றவாறு.

ஒல்லை – விரைவு, ஒரு மாத்திரை, சொல்ல தொன்று என்பது பஞ்சாத்திமயம். (5)

செய்யுள் — 155

இன்ப பூமி சேரி கலில்
நாத னிவ்வி ருநிலத்
துன்ப மங்கு ணர்ந்தி டாமை
யிங்கு வந்த சொல்லிடான்
இன்ப பூமி யில்லி ருந்தி
ருந்தி யாவு மெய்திடில்
துன்ப பூமி யாமு ணர்ந்து
சொல்ல வல்ல தில்லையே.

என்பது: இன்ப பூமி சேர் இகல் இல் நாதன் இ இரு நில துன்பம் அங்கு உணர்ந்திடாமை இங்கு வந்த சொல்லிடான் – புண்ணிய பூமியாகிய பொன்னெயில்

வட்டத்து இருக்கிற மாறுபாடு இல்லாத அநாதி அருக பரமன் இந்தப் பெரிய பூமியிடத்து உண்டாகிய துன்பங்களை அறியான் ஆகையாலும், அநாதிகள் இல்லை ஆதலானும் இந்தப் பூமியில் உண்டானவற்றை நீ இப்படிச் சொல் என்று சொல்லமாட்டான்,—இன்ப பூமியில் இருந்து இருந்து யாவும் எய்திடில்—புண்ணிய பூமிப் பொன்னெயில் வட்டத்து இருந்து அநாதி அருக பரமன் பூமியில் துன்பம் யாவையும் அறிந்து சாத்திரம் செய்யச்சொன்னன் என்று சொல்லின்,—துன்ப பூமி யாம் உணர்ந்து சொல்லவல்லது இல்லையே – புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டமும் துன்பபூமி ஆகையால் நீ தலைமயக்கச்சொல்லும் சொல்லுக்கு யாம் அறிந்து சொல்லும் சொல் இல்லையாம் என்றவாறு.

சொல்லவல்லதில்லை என்பது அருகன் தலை மயங்கிக் கூறுகையால் அவனை இகழ்ந்து கூறியது. இருந்திருந்து என்றது விரைவுச்சொல். சகலாத்தர்—ஆனந்தபூமியர் ஆதலால் அறிந்தது எங்ஙனம் என்றுயிற்று

இச்செய்யுள் இரண்டும் நிகண்டவாதி சாத்திரத்தை மறுத்துக் கூறிற்று (6)

செய்யுள் — 156.

நிறைந்து காய மோடு சீவன்
நின்ற தாகி லிவ்வுடல்
குறைந்த போது தானு மித்தொ
டொக்க வேகு றைந்திடும்
இறந்து போகு மிக்க டமி
றந்த போது நீர்குடத்
துறைந்து டைந்தி டக்கு டமு
லர்ந்த வாற தொக்குமே.

வட்டத்து இருக்கிற மாறுபாடு இல்லாத அநாதி அருக பரமன் இந்தப் பெரிய பூமியிடத்து உண்டாகிய துன்பங்களை அறியான் ஆகையாலும், அநாதிகள் இல்லை ஆதலாலும் இந்தப் பூமியில் உண்டானவற்றை நீ இப்படிச் சொல் என்று சொல்லமாட்டான்,—இன்ப பூமியில் இருந்து இருந்து யாவும் எய்திடில்—புண்ணிய பூமிப் பொன்னெயில் வட்டத்து இருந்து அநாதி அருக பரமன் பூமியில் துன்பம் யாவையும் அறிந்து சாத்திரம் செய்யச்சொன்னான் என்று சொல்லின்,—துன்ப பூமி யாம் உணர்ந்து சொல்லவல்லது இல்லையே — புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டமும் துன்பபூமி ஆகையால் நீ தலைமயர்க்கச்சொல்லும் சொல்லுக்கு யாம் அறிந்து சொல்லும் சொல் இல்லையாம் என்றவாறு.

சொல்லவல்லதில்லை என்பது அருகன் தலை மயங்கிக் கூறுகையால் அவனை இகழ்ந்து கூறியது. இருந்திருந்து என்றது விரைவுச்சொல். சகலாத்தர்—ஆனந்தபூமியர் ஆதலால் அறிந்தது எங்ஙனம் என்றாயிற்று

இச்செய்யுள் இரண்டும் நிகண்டவாதி சாத்திரத்தை மறுத்துக் கூறிற்று (6)

செய்யுள் — 156.

நிறைந்து காய மோடு சீவன்
நின்ற தாகி லிவ்வுடல்
குறைந்த போது தானு மித்தொ
டொக்க வேகு றைந்திடும்
இறந்து போகு மிக்க டமி
றந்த போது நீர்குடத்
துறைந்து டைந்தி டக்கு டமு
லர்ந்த வாற தொக்குமே.

என்பது: *நிறைந்து காயமோடு சீவன் நின்றது ஆகில் இ உடல் குறைந்தபோது தானும் இத்தொடு ஒக்கவே குறைந்திடும்—இந்தச் சரீரத்தோடு ஆன்மாவானது நிறைந்து நிற்கும் என்று கூறினுப், அங்ஙனம் நிறைந்து நின்றதாகில் ஆன்மா நின்ற காயம் குறைந்தபோது ஆன்மாவும் குறைந்து அறிவு குறைய வேண்டும்; அஃதன்றியும்,—இறந்துபோகும் இ கடம்-இந்தச் சரீரமானது கெட்டுப்போம்,—இறந்தபோது – இந்தச் சரீரம் கெட்டபோது,—நீர் குடத்து உறைந்து உடைந்திட குடம் உலர்ந்தவாறு அது ஒக்கும் ஏ – குடத்தின் கண் நிறைந்து நின்ற நீர் குடம் உடைய அந்நீரும் கெட்டாற்போல ஆன்மாவும்கூடக் கெட வேண்டும் ஆகையால், ஆன்மா சரீரம் முழுதும் நிறைந்து நிற்கும் என்று சொல்வாயல்லை என்றவாறு.*

*இச்செய்யுள் ஆன்மா சரீரம் முழுதும் நிறைந்துநிற்கும் என்பதனை மறுத்துக் கூறிற்று.* (7)

*செய்யுள்* — 157

கண்ட நூற ருந்தன் மாத்தி
    காய மோட தன்மமும்
உண்டு மீது கீழு லாவி யுற்று
    நின்றி டப்பொருள்
கொண்ட தென்னி லத்த மிவ்வி
    ரண்டு தன்மை கூடிடா
வண்டு புட்கள் போலெ னின்வ
    ழங்கி டாக ணத்திலே.

என்பது: நிறைந்து காயமோடு சீவன் நின்றது ஆகில் இ உடல் குறைந்தபோது தானும் இத்தொடு ஒக்கவே குறைந்திடும்—இந்தச் சரீரத்தோடு ஆன்மா வானது நிறைந்து நிற்கும் என்று கூறினுய், அங்ஙனம் நிறைந்து நின்றதாகில் ஆன்மா நின்ற காயம் குறைந்த போது ஆன்மாவும் குறைந்து அறிவு குறைய வேண் டும்; அஃதன்றியும்,—இறந்துபோகும் இ கடம்-இந்தச் சரீரமானது கெட்டுப்போம்,—இறந்தபோது – இந்தச் சரீரம் கெட்டபோது,—நீர் குடத்து உறைந்து உடைந் திட குடம் உலர்ந்தவாறு அது ஒக்கும் ஏ – குடத்தின் கண் நிறைந்து நின்ற நீர் குடம் உடைய அந்நீரும் கெட்டாற்போல ஆன்மாவும்கூடக் கெட வேண்டும் ஆகையால், ஆன்மா சரீரம் முழுதும் நிறைந்து நிற்கும் என்று சொல்வாயல்லை என்றவாறு.

இச்செய்யுள் ஆன்மா சரீரம் முழுதும் நிறைந்துநிற்கும் என்பதனை மறுத்துக் கூறிற்று. (7)

செய்யுள் — 157

கண்ட நூற ருந்தன் மாத்தி
காய மோட தன்மமும்
உண்டு மீது கீழு லாவி யுற்று
நின்றி டப்பொருள்
கொண்ட தென்னி லத்த மிவ்வி
ரண்டு தன்மை கூடிடா
வண்டு புட்கள் போலெ னின்வ
ழங்கி டாக ணத்திலே.

என்பது: கண்ட நூல் தரும் தன்மாத்தி காய மோடு அதன்மமும் உண்டு மீது கீழ் உலாவி உற்று நின்றிட பொருள் கொண்டது என்னில் — ஆன்மா வானது தான் செய்த புண்ணியத்தாலே தன்மாத்தி காயத்தை எடுத்துக்கொண்டு மேலாகப் பொருந்தி நன்மையைப் புசித்து அதிலே பரந்திடும் என்றும், தான் செய்த பாவத்தாலே அதன்மாத்திகாயத்தை எடுத்துக்கொண்டு கீழாகப் பொருந்தித் தீமையைப் புசித்து அதிலே பரந்திடும் என்றும் இப்படி இரண்டு காயத்தை ஒரு காலத்திலே மாறிமாறிக் கைக்கொண் டது என்று அருகபரமன் அருளிய நூல் சொல்லிற்று என்னில்,—அத்தம் இ இரண்டு தன்மை கூடிடா — ஆன்மா ஒரு காலத்திலே நின்று இரண்டு உரு எடுத்துக்கொள்ளமாட்டாது,—வண்டு புட்கள் போல் எனின்—மயிர்க்குட்டிப் புழு வண்டு ஆனாற் போலவும், மற்றொரு புழு வேட்டுவாளி ஆனாற்போலவும் வேறு படக் காயம் எடுத்துக்கொள்ளும் என்று நீ கூறின்,— வழங்கிடா கணத்திலே — அந்த ஜந்துக்களும் கணப் பொழுதில் பேதித்தன இல்லையாம்; ஆகையால், ஆன்மா வேற்றுருவத்தை விரைய எடுத்துக்கொள்ளமாட்டாது என்றவாறு.

ஆன்மா தான் நின்ற தூலகாயத்தை விட்டுப்போய்ச் சூக்கும காயத்துடனே நின்று நன்மை தீமைப்பயனை அநு பவிக்குமது ஒழிந்து நின்ற தூலகாயத்திலே பேதப்பட்டு வேற்றுரு எடாது என்பது கருத்து.

அதன்மம்—அதன்மாத்திகாயத்தை. பொருள் அத்தம் இரண்டும் ஆன்மா. புட்கள் என்றது விகாரம். (8)

செய்யுள் — 158

நீடு பாவ புண்ணி யங்க
ளானி ரய வானகம்
கூடு வோர்க ளின்று நின்று
கூட்டு வோர்க ளின்மையின்
ஓடு மாக ணைத்தி றத்தின்
உற்ற வாறு ரைத்திரையேல்
வீடு மாக ணைக்கு நாடும்
வில்லி போல வேண்டுமே.

என்பது: *நீடு பாவ புண்ணியங்களால் நிரய வானகம் கூட்டுவோர்கள் இன்று நின்று கூட்டு வோர்கள் இன்மையின்*—ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களை அறிந்து நின்று அவற்றிலே செலுத்து விப்போன் ஒரு கர்த்தா இல்லை என்று நீ சொல்லின், மிக்க பாவங்களால் நரகங்களையும் மிக்க புண்ணியங் களால் சுவர்க்கங்களையும் பொருந்தி நின்று அநுபவிப் பார் இல்லையாம்,—*ஓடும் மா கணை திறத்தின் உற்ற வாறு உரைத்தியேல்*—விரைந்த செலவையுடைய பெரிய அம்பு இலக்கிலே பட்டாற்போலச் செய்யப்பட்ட புண்ணிய பாவங்கள் செய்தவனிடத்தே விரையத் தானே சென்று பற்றும் என்று நீ சொல்லுகின்றாய் ஆயின்,—*வீடு மா கணைக்கு நாடும் வில்லி போல வேண்டும் ஏ*—அப்படி விடப்பட்ட பெரிய கணைக்கும் இலக்கை நாடி எய்வான் ஒரு வில்லிபோல வேண்டும்; ஆதலால், ஆன்மாக்கள் செய்த கன்மங்களை அநுபவிக் கும்படி கூட்டுவான் ஒரு கர்த்தா வேண்டும் என்ற வாறு.

கூட்டுவோரும் இன்று என உம்மை தொக்கது. வீடு மாகணை விகாரம்.

இச்செய்யுள் நரக சுவர்க்கம் கர்த்தா இல்லை என்பதனை மறுத்துக் கூறிற்று. (9)

செய்யுள் — 159

ஏண தொன்று புற்க லத்தின்
எய்து மென்னி னுசமே
காண லாகு மக்க டங்க
ழிந்த தன்மை யில்லவை
பூண வேணு மேலு றும்பொ
ருத்த மின்மை யொன்றினின்
மாண வேய ணுப்பொ ருணி
கண்ட வாதி வைத்ததே.

என்பது: *ஏணது ஒன்று புற்கலத்தின் எய்தும் என்னின் – நீ கூறிய புற்கலப் பொருளாகிய கல்லும் இரும்பும் மரமும் ஓர் அறிவை உடைத்து என்று நீ கூறின்,—நாசமே காணல் ஆகும் அ கடம் கழிந்த தன்மை இல் அவை – ஓர் அறிவை யுடைய எல்லாம் தாமே கெடுதல் காணலாகும், அக் கல் இரும்புகள் தாமே வடிவுகெடும் முறைமை காண்டலில்லை; அஃதன்றியும்,—பூண வேணும் மேல் உறும் பொருத்தம் இன்மை – பொருந்த ஓர் அறிவு உண்டாயின் கல் இரும்பு மேல் நகர சொர்க்கம் பொருந்த வேண்டும், அது பொருந்தாமையும் காணலாகும்,—ஒன்றினின் மாணவே அணு பொருள் நிகண்டவாதி வைத்தது ஏ– ஒன்றினும் ஓர் அறிவு உடைத்து என்று சொல்லப்*

*படாத கல் இரும்புகள் அணுப் பொருளாக மாட்சிமைப் படவைத்து நிகண்டவாதி! நீ சொன்னாய், இதனை வேறு சொல்வார் இல்லை என்றவாறு.*

*காணலாகும் என்பதை இரண்டிடத்தினும் கூட்டுக. பொருத்தமும் என்னும் உம்மை தொக்கு நின்றது. மாணவே என்றது இகழ்ச்சிக் குறிப்பு. ஏண தொன்று – பற்றினால் வலியுள்ளது.*

*இச் செய்யுள் கல், இரும்புகள் அணுப்பொருள் என்பதனை மறுத்துக் கூறிற்று.* (10)

செய்யுள் — 160

ஆறு காரி யங்கண் மாற
வேத வங்க ளாமெனின்
மாறி வாணி கஞ்செ யாதி
ருக்க வந்தி டாதனம்
ஈறி லாத வூழ தென்னின்
எங்கு முள்ள தூழதே
பேறு காரி யம்வி டப்பி
றப்ப தில்லை பேசிலே.

என்பது: *ஆறு காரியங்கள் மாறவே தவங்கள் ஆம் எனின் – அறுவகை உவர்ப்புக்களும் நீங்கவே தவம் ஆம் என்று நீ கூறின்,—மாறி வாணிகம் செயாது இருக்க வந்திடா தனம் – பொருள்களைப் பரிவர்த்தனை செய்து வாணிகம் செய்யாது இருப்பப் பொருள் வந்தடையாது; அது போல, உவர்ப்பு மாறி ஒரு தவம் செய்யா திருந்தால் தவம் வந்து கூடாது,—ஈறு இலாத ஊழது என்னின் எங்கும் உள்ளது ஊழதே – கேடில்லாத முன்னை வினைப்பயனாலே தவமுண்டாம் என்று*

சொல்லின், உவர்ப்பைக் கைவிடுதல் முதலாயினவும் முன்னை வினைப்பயன் ஆம் ஆதலால்,—பேறு காரியம் விட பிறப்பு அது இல்லை பேசில் ஏ – தவமாகிய பேறு தவம் செய்தலாகிய காரியத்தை விட்டால் உண்டாகாது சொல்லுங் காலத்து என்றவாறு.

இச் செய்யுள் கந்த, ரச, ரூப, பரிச, சத்த, பரிணமம் ஆகிய ஆறு உவர்ப்புக்களையும் விடுதலே தவம் என்பதனை மறுத்து, தவ ஒழுக்கங்களினின்று தவம் செய்தாலல்லது ஆறு காரியத்தை விடுதலினாலேயே தவம் சித்தியாது என்பது கூறிற்று.

ஆறு காரியம் – உழவு, தொழில், வரைவு, வாணிகம், சிக்ஷை, சிற்பம் என்பாரும் உளர். (11)

செய்யுள் — 161

உடல்வ ருந்தல் மாத வங்க
ளுறுதி யென்று ரைத்திடில்
படவ ருந்து நோயி னோர்கள்
படவர் பொன்னெ யிலெனய்
திடவ ருந்த வின்ப மிச்சை
செய்தல் செய்தல் செய்தியேல்
கெடவ ரிந்தி டாயு ளுசி
கேடி லின்ப முன்னியே.

என்பது: உடல் வருந்தல் மாதவங்கள் உறுதி என்று உரைத்திடில்—சரீரம் வருந்துதலே பெரிய தவத்திற்கு உறுதி என்று நீ சொல்லின்,—பட வருந்து நோயினோர்கள் படர்வர் பொன்னெயில் எனய் – துக்கமாக உடல் வருந்தச் சரீர இன்பத்துக்கு மாறுபாடு

செய்தலைச் செய்வதுவே கேடில்லாத மோட்சத்தின் செய்தி என்றமையான் நோயினால் மனோதுக்கிகளாய் மெலிவோர் பொன்னெயில் வட்டம் சேர்குவர் என்று நீ சொல்லாய்,—திட வருந்த இன்பம் இச்சை செய்தல் செய்தல் செய்தியேல்-முத்தியின்பத்தை ஆசை செய்தல் சரீரம் வருந்தச்செய்தல் தன்மையே என்னின்,—கெட அரிந்திடாய் உன் நாசி கேடு இல் இன்பம் உன்னியே—அந்த முத்தி இன்பத்தைக் கருதி உன் மூக்கை அறுத்திடுவாயாக என்றவாறு.

திடம் என்பது திட என நின்றது. வருந்த என்பது உடல் வருந்த என்றாயிற்று. செய்தி — தன்மை.

இச்செய்யுள் சரீரம் வருந்துதல் மோட்சம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (12)

செய்யுள் — 162

பூர்வ கன்ம மற்றி டப்பு
சித்த பின்பு பொன்னெயில்
நேர்வ தென்னி னக்கன் மத்து
நிச்ச யமிலா மையிற்
தீர்வ தின்மை தீரின் வாயில்
சேர்வ தின்மை தெண்கடல்
நீர்வ றந்த பின்பு பூனை
மீன ருந்த நின்றதே.

என்பது: பூர்வ கன்மம் அற்றிட புசித்த பின்பு பொன் எயில் நேர்வது என்னின்—முன் ஜெனனங்களில் உள்ள கருமம் தொலைய இந்த ஜெனனத்திலே புசித்தால் பொன்னெயில் வட்டத்தைச் சென்று

பொருந்தும் என்று நீ சொல்லின்,—அ கன்மத்து நிச்சயம் இலாமையில் தீர்வது இன்மை – அக்கன்மத்துக்கு அளவு இன்மையால் நியமிக்க அறிவது இல்லையாய்ப் புசித்துத் தொலையாதாம்,—தீரின் வாயில் சேர்வது இன்மை – கன்மம் புசித்துத் தொலைவுபெற்ருல் இந்திரியங்களுடன் சத்தாதி கூடுவது இன்மையாம்; அவை கூடாதொழியவே மோக்ஷ உபாயமான தவம் செய்தலும் இல்லையாம்; ஆதலால், கன்மத்தைத் தொலையப் புசித்துப் பொன்னெயில் வட்டத்தை அடைவோம் என்று நீ கருதியிருத்தல்,—தெண் கடல் நீர் வறந்த பின்பு பூனை மீன் அருந்த நின்றது ஏ – பூனை தெளிந்த சமுத்திரத்து நீர் வற்றினவுடனே மீன் தின்னக் கடவோம் என்று கருதி அது வற்றுமளவும் பார்த்திருந்த தன்மைக்கு ஒக்கும் என்றவாறு.

ஏகாரம் தேற்றம். தெண்கடல் என்றதனுல் கன்மம் அளவில்லை என்பது கருத்து.

இச்செய்யுள் கன்மம் தொலையப் புசித்துவிட்டால் மோக்ஷம் அடையலாம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (13)

செய்யுள் — 163

கூறு கூவன் மன்னு மக்கு
டங்கு றித்து நீள்கரை
ஏற லுற்ற தன்மை நீயொ
ருத்த ரின்றி யேறுதல்
வேறொ ருத்த னக்கு டத்தை
மீது நின்றெ டுக்கவே
ஏற லுற்ற தன்மை யிற்சி
வன்றி றத்து நின்றிடே.

என்பது: கூறு கூவல் மன்னும் அகுடம் குறித்து நீள் கரை ஏறல் உற்ற தன்மை நீ ஒருத்தர் இன்றி ஏறுதல் – சொல்லப்பட்ட கிணற்றின் உட் கிடக்கும் குடம் கரையை நோக்கித் தானே ஏறினாற் போலும், ஒரு கர்த்தா இன்றிப் பொன்னெயில் வட்டத்தை நீ சேர்குவம் என்னும் தன்மை,–வேறு ஒருத்தன் அ குடத்தை மீது நின்று எடுக்கவே ஏறல் உற்ற தன்மையில் சிவன் திறத்து நின்றிடு ஏ – ஒருவன் அந்தக் கிணற்றில் கிடந்த குடத்தை மேலே நின்று எடுக்க அக்குடம் கரை ஏறிய தன்மையொக்கக் கர்த்தா நின்று கன்மத்தைத் தொலைவித்து மேலாகிய வீடுபேற்றைக் கொடுக்க வேண்டும்; அப்படிக் கொடுப்பான் சிவனே ஆகையால், அந்தச் சிவனையே தெய்வமாகக் கொண்டு அவன் அருளிய வேதாகமங்களின் திறமாகிய சரியை கிரியா யோக ஞானங்களிலே நீயும் நிற்பாயாக என்றவாறு.

இச்செய்யுள் கர்த்தா கூட்டாமல் மோக்ஷம் கூடாது என்பது கூறிற்று.

அருகன் என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் பதினொன்கு திருவிருத்தம் நிகண்டவாதி மதத்தை மறுத்துக் கூறிற்று. (14)

**ஆருவது—நிகண்டவாதி மதமறுதலை முற்றிற்று**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—163.

---

# 7. (க) ஆசீவகன் மதம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 164

என் னுயி ரதற்குப் போல
எவர்க்குமொத் திருப்ப னென் று
தன் னுயிர் வருந்தத் தானும்
தலையினைப் பறித்துப் பார்மேல்
மன் னுயி ரெவற்றி னுக்கும்
வருந்தவே யறங்கள் சொல்லும்
அன்னதோர் வாய்மை யாசீ
வகனம ணர்களிற் கூறும்.

என்பது: *என் உயிர் அதற்கு போல எவர்க்கும் ஒத்து இருப்பன் என்று* — எனது ஆன்மாவுக்கு யான் கிருபை செய்யும் தன்மை போல எல்லா ஆன்மாக் களுக்கும் யான் கிருபை செய்திருப்பன் என்று சொல் லின்,—*தன் உயிர் வருந்த தானும் தலையினை பறித்து*— தன்னுடைய ஆன்மா வருத்தப்படத் தன் தலை

மயிரைப் பறித்து,—பார் மேல் மன் உயிர் எவற்றினுக்கும் வருந்தவே அறங்கள் சொல்லும் அன்னது ஓர் வாய்மை ஆசீவகன் அமணர்களில் கூறும்—உலகின்கண் நிலைபெற்ற ஆன்மாக்கள் எல்லா வற்றினுக்கும் வருத்தம் உறுவதுவே அறங்களாகச் சொல்லும் என்னும் தன்மையாகிய சொல்லை அமணர் இருவகையரில் ஆசீவகன் சொல்லும் என்றவாறு.

ஓர் – அசை. தலை – ஆகுபெயர். சினையும் முதலும் மயங்கிற்று.

மேல் ஆசீவகன் மதம் கூறுவார் அதனுள் இச்செய்யுள் ஆசீவகனது இயல்பு கூறிற்று. (1)

செய்யுள் — 165

வரம்பிலா வறிவ ஞதி
　　வைத்தநூற் பொருள்க டாமும்
நிரம்பவே யணுக்க ளைந்து
　　நிலம்புன றீகால் சீவன்
பரந்திவை நின்ற பான்மை
　　பாரது கடினஞ் சீதம்
தரும்புனல் சுடுந்தீ வாயுச்
　　சலித்திடு முயிர்போ தத்தாம்.

என்பது: வரம்பு இலா அறிவன் ஆதி வைத்த நூல் பொருள்கள் தாமும் நிரம்பவே அணுக்கள் ஐந்து—அநந்தஞானன் ஆகிய அருகபரமன் ஆதியிலே உண்டாக்கப்பட்ட நூலின் பொருள் தானும் பூரணமாக ஆன்மாக்கள் ஐந்தென்று கூறும்; அவையாவன,—நிலம் புனல் தீ கால் சீவன் – பிருதிவி அப்பு தேயு

வர்யு ஆன்மா,—பரந்து இவை நின்ற பான்மை பாரது கடினம் சீதம் தரும் புனல் சுடும் தீ வாயு சலித்திடும் போதத்து ஆம் – அவ் ஆன்மாக்கள் ஐந்தும் விரிந்து நின்ற முறைமை சொல்லில் பிருதிவி கடினமாம் அப்பு சைத்தியமாம் அக்கினி உஷ்ணமாம் வாயு சலனமாம் ஆன்மா போதத்தை யுடைத்தாம் என்றவாறு.

ஈற்றில் நூல் கூறும் என ஒரு சொல் வருவித்துரைக்க. ஆம் என்பதனை ஐந்திேனாடும் கூட்டுக.

இச் செய்யுள் ஆசீவகன் மதமாகிய அணுக்கள் ஐந்தின் பெயரும் குணமும் கூறிற்று. (2)

செய்யுள் — 166

பார்புனல் பரக்குங் கீழ்மேற்
படர்ந்திடுந் தேயு வாயுச்
சேர்வது விலங்கி னுள்ளம்
அவற்றொடுஞ் சேரும் வேறு
சார்வது பெற்ற போது
சார்ந்தவப் பொருளின் றன்மை
நேர்வது மாகி நிற்கும்
இதுபொரு ணிகழ்த்து மாறே.

என்பது: பார் புனல் பரக்கும் கீழ் – பிருதிவியும் அப்புவும் கீழே விரிவை யுடைத்தாய் நிற்கும்,—மேல் படர்ந்திடும் தேயு வாயு – தேயுவும் வாயுவும் மேலே விரிவை யுடைத்தாய் நிற்கும்,—சேர்வது விலங்கின் உள்ளம் அவற்றொடும் சேரும் – ஆன்மாவானது காயத்தோடும் சேரும் சேர்வையை நீங்கினுல் பிருதிவி அப்புத் தேயு வாயுவாகிய நாலு ஆன்மாக்களோடும்

கூடி நிற்கும்,—வேறு சார்வது பெற்ற போது சார்ந்த அ பொருளின் தன்மை நேர்வதும் ஆகி நிற்கும்— இவற்றை வேறுபடக் காயத்தைச் செறிவாகப் பெற்ற இடத்துக் காயத்தை இடமாகக் கொண்டு அதனது தன்மை தான் ஆகப் பொருந்தி நிற்கும்,—இது பொருள் நிகழ்த்தும் ஆறு ஏ — இது பஞ்சான்மாக்கள் செய்தியைச் சொல்லும் வழி என்றவாறு.

இச்செய்யுள் பஞ்சான்மாக்களும் நிற்கும் வழி கூறிற்று. (3)

செய்யுள் — 167.

உணர்தரா வணுக்க ணான்கும்
ஒன்றுகெட் டொன்ற தாகா
புணர்தரா வொன்றிற் புக்கொன்
றுயினும் பொருந்தி வாழும்
அணைதரா புதிய வந்திங்
கழிதரா பழைய வான
இணைதரா வொன்றொன் றாகி
மாறுத லொன்று மின்றே.

என்பது: உணர்தரா அணுக்கள் நான்கும் — ஜீவனை ஒழிந்த நான்கு ஆன்மாக்களும் ஒன்றை யொன்று அறியும் தன்மை அல்லவாம்,—ஒன்று கெட்டு ஒன்றது ஆகா — அவ்ஆன்மாக்கள் நான்கும் ஒரொன்று கெட்டு ஒரொன்றுமாகா,—புணர்தரா ஒன்றில் புக்கு ஒன்று — ஓர் ஆன்மாவினிடத்திலே புக்கு ஓர் ஆன்மா கூடி நில்லாது,—ஆகிலும் பொருந்தி வாழும் — அப்படிக் கூடாவாயினும் காயமாம் இடத்துப் பொருந்தியும் நிற்கும்,—அணைதரா புதிய வந்து இங்கு—

அவ்வான்மாக்கள் அநாதியிற் கூட்டமின்றி இவ்விடத்துப் புதிதாக வந்து கூடுவதும் செய்யா,—அழிதரா பழைய ஆன - பழைய ஆன்மத்தன்மை கழிதலும் உண்டாகாது,—இணைதரா ஒன்று ஒன்று ஆகி - அவ்வான்மாக்கள் கூடுமிடத்துச் சேரக்கூடுவதொழிந்து ஓரோ ஒன்றாகக் கூடுவதும் செய்யா,—மாறுதல் ஒன்றும் இன்று ஏ - இவையிற்றின் செய்தி ஒருக்காலும் ஒழிவதில்லை என்றவாறு.

இச்செய்யுள் ஆன்மா ஒழிந்த நாலுவகை அணுக்களும் வேறுபட்டு நிற்கும் முறைமையும் அறிவின்மையும் அழிவின்மையும் கூறிற்று. (4)

செய்யுள் — 168.

கொண்டுமுன் விரித்த னீட்டல்
குறுக்குதல் குவித்த லூன்றல்
உண்டுதின் றுலர்த்தன் மீட்டல்
உடைத்திட லொன்று மொண்ணு
விண்டுபின் புறம்பும் போகும்
வேறுநின் றுள்ளு மேவும்
பண்டுமின் றென்று மெங்கும்
பரந்தொரு தன்மைப் பாலே

என்பது: கொண்டு முன் விரித்தல் நீட்டல் குறுக்குதல் குவித்தல் ஊன்றல் உண்டு தின்று உலர்த்தல் மீட்டல் உடைத்திடல் ஒன்றும் ஒண்ணு - முன் கூறிய ஆன்மாக்களை முன்னே உண்டாக்கிக் கொண்டு பரப்புதலும், அதனை வர்த்திப்பித்தலும், அதனை எல்லையிலே குறுக்குதலும், சேர எடுக்குதலும்,

அவையிற்றிலே உற்று நிற்றலும், அதனை உண்டு தின்று கெடுத்தலும், மீள உண்டாக்குதலும், இவையிற்றைப் பிளந்திடுதலும் என்னும் இவையிற்றின் ஒன்றும்செய்ய ஒண்ணாது,—விண்டு பின் புறம்பும் போகும் – விரிந்த அண்டகோளகைக்கு அப்புறத்தும் போகும்,—வேறு நின்று உள்ளும் மேவும் – அதற்கு வேற்றுமைப்பட்டு உருக்கள் உள்ளும் பொருந்தும்,—பண்டும் இன்றும் என்றும் எங்கும் பரந்து ஒரு தன்மை பால் ஏ – முற் காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைந்து ஒரு தன்மைப் பகுதியாய் இருக்கும் என்ற வாறு.

விரித்தல் – பரப்புதல்; அஃதாவது சிருஷ்டி. நீட்டல் - வர்த்திப்பித்தல்; அஃதாவது திதி. குறுக்கல் – ஒடுக்குதல்; அஃதாவது சங்காரம். குவித்தல் – ஒன்றினுட்செறித்தல்; அஃதாவது சருவசங்காரம். ஊன்றல் – உற்று நிற்றல்; அஃதாவது முத்தியின்கட்சேறல், உண்டு தின்று உலர்த்தல் – உண்டு தின்று கெடுதல்; தின்ற பகுதியும் உணவாகலின் உண்டு தின்று என்று கூறிற்று. மீட்டல் – மீளவிடுதல்; அஃது உமிழ்தல். உடைத்திடல் – சின்னப்படுத்தல்; அஃது அண்டங்களைக் கெடுத்தல்.

இச் செய்யுள் இவ்வணுக்கள் ஒருவரால் நியமிக்கப் பட்டன அல்ல என்று கூறிற்று. (5)

செய்யுள் — 169

கண்ணினிற் காண வொண்ணு
சனித்தந்தக் கன்மத் தாலே
நண்ணிடு முருக்க ளாகி
நின்றபின் நரரோ காண்பார்

விண்ணினிற் றேவர் காண்பார்
ஓரணு மிக்க நான்காய்
எண்ணிய பொருள்க ளெல்லாம்
இசைவதென் றியம்பு மின்னே.

என்பது: கண்ணினில் காண ஒண்ணு சனித்து அந்த கன்மத்தாலே நண்ணிடும் உருக்கள் ஆகி – முற் கூறிய அணுக்கள் ஐந்தில் ஆன்மா என்னும் அணுப் பொருள் கண்ணில் காண்டற்கு அரிதாகி அக்கன்மத் தாலே ஜநித்து உருக்கள் ஆகப் பொருந்தி நின்றிடும்,— நின்ற பின் நரரோ காண்பார் – அக்கன்ம வுருவொடு நின்றபின் நரரோ காண்பார்,—விண்ணினில் தேவர் காண்பார் – விண்ணாகிய பொன்னெயில் வட்டத்தில் தேவனாகிய அருகபரமனே காணவல்லான்,—ஓர் அணு மிக்க நான்கு ஆய் எண்ணிய பொருள்கள் எல்லாம் இசைவது என்று இயம்பும் இன்னே – ஆன்ம அணு ஒன்றும் தன்னை ஒழிந்த அணுக்கள் நான்குமாய் எண்ணப்பட்ட உருக்கள் எல்லாவற்றுள்ளும் இப்படிச் சென்று பொருந்தும் என்று கண்ட நூல் சொல்லும் என்றவாறு.

நான்காய் என்பதனை நான்குமாய் என உம்மைவிரிக்க.

இச் செய்யுள் அணுக்கள் ஐந்தில் ஆன்ம அணுவின் இயல்பு கூறிற்று.

நரரோ காண்பார் உருவங்கள் கொண்டு நின்றால் நரரால் காணல் அரிது. விண்ணில் தேவர் காண்பார் சுவர்க்கத்தில் உள்ள தேவர் காண்பாரோ? அணுவே மிக்க நான்காக நிலஅணு முதலாக எண்ணப்படா நிற்கிற

பொருள்கள் எல்லாம் இப்படிக்கே பொருந்தும் என்றவாறு. இவை பொருள் ஐந்தின் நிலைமை எனக் கொள்க. நான்காக எண்ணிய பொருள் நிலம், நீர், தீ, வளி. (5)

செய்யுள் — 170

ஒன்றினை யொருவி மூன்றங்
குற்றிடா திரண்டு விட்டு
நின்றிடா திரண்டு கூடும்
நெறிநில நான்கு நீர்மூன்
றின்றிரண் டழல்கா லொன்றா
யிசைந்திடும் பூமி யிவ்வா
றென்றுநீர் தீகா லாகி
ஈண்டுவ தென்றி யம்பும்.

என்பது: ஒன்றினை ஒருவி மூன்று அங்கு உற்றிடாது – ஆன்மா ஒழிந்து நிலன் ஆதியான அணுக்கள் நான்கும் தம்மில் கூடுமிடத்து ஓர் அணுவை விட்டு மூன்று அணுத் தம்மில்கூடி நில்லாது,—இரண்டு விட்டு நின்றிடாது இரண்டு – இரண்டணுவை விட்டு இரண்டணுக் கூடாது, (எனவே கூடும் இடத்து இவை நான்கும் கூடி நிற்கும் என்பது கருத்து) கூடும் நெறி— இவை நான்கும் தம்மில் கூடி நிற்கும் என்று சொல்லும் முறைமையாவது எங்ஙனம்? என்னில்,—நிலம் நான்கு நீர் மூன்று இன்று இரண்டு அழல் கால் ஒன்றாய் இசைந்திடும் – இப்பொழுது பிருதிவியில் கந்த ரச ரூப பரிசம் நான்கும், அப்புவில் இரச ரூப பரிசம் மூன்றும், அக்கினியில் ரூப பரிசம் இரண்டும், வாயுவில் பரிசம் ஒன்றும் ஆகிய குணங்கள் பொருந்தி யிருக்கும்,— பூமி இவ்வாறு என்று நீர் தீ கால் ஆகி ஈண்டுவது

என்று இயம்பும் — இந்த முறைமையிலே பிருதிவி அப்புத் தேயு வாயு என்று கூறும் அணுக்களின் குணங்கள் கூடிநிற்கும் என்று சொல்லும் நூல்கள் என்றவாறு.

இச்செய்யுள் அணுக்கள் நான்கின் குணங்களே உருக்களில் கூடி நிற்கும் என்பது கூறிற்று. (7)

செய்யுள் — 171.

வெண்மைநன் பொன்மை செம்மை
நீல்கழி வெண்மை பச்சை
உண்மையிவ் வாறி னுள்ளும்
கழிவெண்மை யோங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரும்
மற்றவை யுருவம் பற்றி
உண்மையவ் வொட்டுத் தீட்டுக்
கலப்பினி னுணரு மென்றான்.

என்பது: வெண்மை நன்பொன்மை செம்மை நீல் கழி வெண்மை பச்சை உண்மை இ ஆறின் உள்ளும் — வெண்மையும் நன்றாகிய பொன்மையும் சிவப்பும் நீலமும் மிக்க வெண்மையும் பச்சையும் ஆகிய ஆறு வன்னம் உள; இவ்வாறு வன்னத்தினுள்ளும்,—கழி வெண்மை ஓங்கு வீட்டின் வண்மையது ஆக சேரும் — மிக்க வெண்மை என்று கூறிய வன்னமே பெரிய பொன்னெயில் வட்டத்துக்குச் சிறப்புடைத்தான வன்னமாகச் சேரும்,—மற்றவை உருவம் பற்றி — ஒழிந்த வெண்மை பொன்மை சிவப்பு நீலம் பச்சை என்னும் ஐந்து வன்னமும் மற்றை அணுக்கள் நான்கின் ஆன வடிவுகளைக் கூடிநிற்க,—உண்மை அ ஒட்டு

*திட்டு கலப்பினில் உணரும் என்றான் — அந்த ஆன்மா வானது இவ்வுருக்களைப் பற்றுதல் இழிதல் கூடுதல் இவையிற்றால் அறியும் என்றான் என்றவாறு.*

**உண்மை என்றது ஆன்மாவிற்கு ஆகுபெயர். அவ் என்றது சுட்டு; அவ்வுண்மை எனக் கூட்டுக. இன் ஐந்தன் உருபு, ஏதுப் பொருண்மைக்கண் வந்தது.**

**இச்செய்யுள் வன்னம் ஆறு என்பதூஉம், அவற்றுள் வீட்டுலகைப் பற்றி நிற்கும் வன்னம் இன்ன தென்பதூஉம், உருக்களைப் பற்றி நிற்கும் வன்னம் இன்னதென்பதூஉம் கூறிற்று.** (8)

செய்யுள் — 172

பேறிழ விடையூ றின்பம்
　　பிரிவிலா திருக்கை மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல்
　　விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய வெட்டு முன்னே
　　கருவினுட் கொண்ட தாகும்
தேறிய வூழிற் பட்டுச்
　　செல்வதிவ் வுலக மென்றான்.

என்பது: *பேறு இழவு இடையூறு இன்பம் பிரிவு இலாது இருக்கை மற்றும் வேறு ஒரு நாட்டில் சேறல் விளைந்திடும் மூப்பு சாதல் கூறிய எட்டும் முன்னே கருவினுள் கொண்டது ஆகும்—செல்வம் முதலிய கூடுதலும் அவை நீங்குதலும் துக்கம் உறுதலும் சுகமுறுதலும் உடலொடு நீங்காமையும் வேற்று நாட்டுச் சேறலும் விருத்த அவத்தையும் மரணமும் என்று*

சொல்லப்பட்ட எட்டும் முற்பிறப்பின் வினையின் உள்ள வாய்க் கர்ப்பகோளகையிலே கைக்கொள்ளப் பட்டுள்ள வாம்,—தேறிய ஊழில் பட்டு செல்வது இ உலகம் என்றான் – ஆதலால், தெளிவாக முற்பிறப்பில் செய்த வினையில் அகப்பட்டு இம்முறைமையிலே நடந்து செல்வது இவ்வுலகம் என்றான் என்றவாறு.

இச்செய்யுள் ஊழ்வினைப் பயன் எட்டு வகையாகக் கருவிலே வந்து பொருந்தும் என்பதூஉம், அவ்வூழ்வினைப் பயனில் அகப்பட்டுச் செல்வதே உலக முறைமை என்பதூஉம் கூறிற்று. (9)

செய்யுள் — 173

புண்ணிய பாவ மென்னும்
　　இரண்டணுப் பொருந்த வைத்தே
எண்ணிய விவற்றி னோடும்
　　ஏழென வெங்க ளோடும்
நண்ணிய வொருவன் கூறும்
　　ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள்
　　கதியினைக் காண்ப ரென்றான்.

என்பது: புண்ணியம் பாவம் என்னும் இரண்டு அணு பொருந்த வைத்தே எண்ணிய இவற்றினோடும் ஏழ் என – புண்ணிய பாவம் என்னும் இரண்டினோடும் அணுக்கள் ஐந்தையும் கூடவைத்து இவற்றினோடும் ஏழ் என எண்ணி,—எங்களோடு நண்ணிய ஒருவன் கூறும் ஞானம் இ ஆறது என்று கண்ணிய கருத்தி னோர்கள் கதியினை காண்பர் என்றான்—எங்கள் சமயத்தி

னோடு பொருந்திய கர்த்தாவான ஒப்பற்ற அருகபரமன் அருளிய ஞானம் இத்தன்மைத்து என்று அதனைக் கூடக் கருதும் கருத்தை உடையவர்களே நற்கதியாகிய பொன்னெயில் வட்டத்தைக் காணலுறுவார் என்றான் என்றவாறு.

ஏழ் என ஒருவன் கூறும் என்க. ஊழ் என்பதனை ஏழாம் வேற்றுமை ஆக்கி உரைப்பினும் அமையும். எண்ணிய என்பது வினையெச்சம்.

இச்செய்யுள் அணுக்கள் ஐந்தினுடன் புண்ணிய பாவத்தையும் கூட்டி ஏழ் என்பதே நூல் முடிவு என்றும் முத்தி முடிவு என்றும் கூறிற்று.

என்னுயிர் என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் செய்யுள் பத்தினும் ஆசீவகன் மதம் கூறிற்று.

ஞானம் இவ்வாறு என்பது ஞானம் இவ்வாறது என்றும் பாடம். (10)

ஏழாவது—ஆசீவகன்மதம் முற்றிற்று.

பாயிரம் உள்படத் திருவிருத்தம் 173.

---

# 7. (உ) ஆசீவகன் மதமறுதலை

கலிவிருத்தம்

செய்யுள் — 174

வாராநெறி வீடானபின்
மண்மேலவன் வந்து
தாராமையி னூலானது
தானேவுள தின்றாம்
சேராமையி லணுவானவை
யைந்தும்மொரு தேயத்
தோரானொரு காலத்தினி
லொன்றாமுணர் வின்றாம்.

என்பது: *வாரா நெறி வீடு — மோக்ஷம் என்பது மீண்டு காயம் எடுத்து வாரா வழியால் அடையத் தக்க தாம்,—ஆன பின் — அப்படியான விடத்து வீடுபெற்ற வன் பூமியிடத்து வாரான்,—மண்மேல் அவன் வந்து தாராமையின் நூலானது தானே உளது இன்று ஆம்— வீட்டுலகத்து இருந்த அருகபரமன் பூமியிடத்து*

வந்து நூல்தரும் முறைமை இல்லை ஆகையால் நூலானது தான் உண்டாம்வழி இல்லையாம்,—சேராமையில் அணு ஆனவை ஐந்தும் ஒரு தேயத்து – ஒப்பற்ற தேசமாகிய பொன்னெயில் வட்டத்தில் ஐவகை அணுவும் சேராது ஆகையால் சரீரி ஆம் தன்மை இல்லையாகும்; அதனால்,—ஓரான் ஒரு காலத்தினில் – ஒன்றையும் ஒருகாலத்தில் விசாரிக்க மாட்டானும்,—ஒன்று ஆம் உணர்வு இன்றும் – அன்றியும் கீழான அணுக்கள் இரண்டின் செய்தியை அறியவும் மாட்டான்; ஆகையால் அணுக்கள் எல்லாவற்றையும் கூட்டி ஒன்றாகவும் உணரும் உணர்வையும் உடையன் அல்லன் என்றவாறு.

பின் என்றது ஏழாம்வேற்றுமை இடப்பொருள். ஓகாரம் தெரிநிலை. உணர்வும் இன்றும் என உம்மை விரிக்க.

ஆசீவகன் மதத்தை மறுப்பான் எடுத்துக்கொண்டார்; அதனுள், இச்செய்யுள் பொன்னெயில் வட்டத்து ஐவகை அணுவும் சேரா; ஆகையால், அவ் அருகபரமன் சரீரியாய் நூல்சொல்லும் தன்மை இலன் என்று மறுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 175

இருபான்மைய ரிவர்மண்டலர்
செம்போதக ரென்றே
வருபான்மைய ரிவர்மண்டலர்
மண்மேல்வரு நூலும்
தருபான்மைய ரெனினீதல
மதில்வாழ்பவர் தம்போல்
ஒருபான்மையி னுளராகுவ
ருணராதுரை செய்தாய்.

என்பது: இரு பான்மையர் இவர் – இவ்வருக சுவாமிகள் இரண்டு பகுதியராய் இருப்பர்,—மண்டலர் செம்போதகர் என்று ஏ–மண்டலர் என்றும் செம்போ தகர் என்றும் அவ்விருவரின்,—வருபான்மையர் இவர் மண்டலர் – இப்படி வரும்பகுதியை உடைய இவர் மண்டலர்,—மண்மேல் வருநாலும் தருபான்மையர் எனின் நீ – மண்டலராகிய இவர் உலகத்தின் கண்ணே வந்து அணுக்கள் ஐந்தின் செய்தியும் ஒருங்கே அறிந்து உலகத்தின்கண் நடக்கும் நூல் செய்த பகுதியை உடையர் என்று நீ சொல்லுகின்ருய் ஆயின்,—தலம் அதில் வாழ்பவர் தம்போல் ஒரு பான்மையின் உளர் ஆகுவர் – அம்மண்டலர் பூமியில் வாழும் ஆன்மாக் களைப் போல் ஒரு பகுதியிலே ஆகுவர்; ஆகவே ஓர்உரு இரண்டு பேதப்பட்டதில் ஒன்று மானுடத் தன்மையும் ஒன்று தெய்வத் தன்மையும் பெறுதல் இல்லையாம்; ஆதலால்,—உணராது உரை செய்தாய் – விசாரியாமல் சொன்ஞய் என்றவாறு.

இவர் – ஒருவரைக் கூறும் பன்மை. இவர் இரு பான்மையர் என மாறுக. மண்டலர் இவர் எனவும் மாறுக. மண்டலர் – பூமியில் உள்ளார். செம்போதகர் – மிக்க அறிவுடையார்.

இச்செய்யுள் அருகபரமர் இருவகைப்பட்டு மண்டலத் தின்கண் வந்து நூல் சொன்னுர் என்பதனை மறுத்துக் கூறிற்று. (2)

செய்யுள் — 176

உயிரானவை யுடறீண்டிடல்
ஒட்டுக்கலப் பெய்தும்
பயில்வாலுணர் வெய்தும்மெனு
மொழியானவை பழுதாம்

துயிலார்தரு மவர்பாலகர்
தொடராரறி வினைநீ
செயிரார்தரு முரையேதரு
மதுவோவுன செயலே.

என்பது: உயிர் ஆனவை உடல் தீண்டில் ஒட்டு கலப்பு எய்தும் பயில்வால் உணர்வு எய்தும் எனும் மொழி ஆனவை பழுது ஆம் – ஆன்மாக்களானவை உடலைப் பற்றியும் உற்றும் கலந்தும் செய்யும் தொழிலாலே அறிவைப் பொருந்தும் என்று நீ சொல்லும் சொல் குற்றம் உடைத்தாகும்; அஃது எங்ஙனம்? என்னில்,—துயில் ஆர் தரும் அவர் பாலகர் தொடரார் அறிவினை – மிக்க உறக்கம் பொருந்தினவரும் பால அவத்தை அடைந்தவரும் பற்றியும் உற்றும் கலந்தும் அறிவினை அறியமாட்டார்,—நீ செயிர் ஆர் தரும் உரையே தரும்—நீ சொல்லும் சொல்தானே குற்றத்தை மிகவும் தரும்,—அதுவோ உன் செயல் ஏ—உன் தொழிலும் அத்தனையோ? என்றவாறு.

இச்செய்யுள் ஆன்மா உடலில் ஒட்டியும் தீண்டியும் கலந்தும் அறியும் என்பதனை மறுத்துக் கூறிற்று. (3)

செய்யுள் — 177

அணுவானவை கீழ்மேலுள
வானுலவ யவமும்
நணுகாவென லாமேவரின்
நாசம்மவை யெய்தும்
அணுகாவெனி னிவைதொள்ளைகொள்
ஆகம்முள வாகும்
துணிவாலிவை கலவாபல
தொகையாம்வகை யிலவாம்.

என்பது: அணு ஆனவை கீழ்மேல் உள ஆனல்—ஆன்மா ஒழிந்து அணுக்கள் என்று கூறப்பட்ட பிருதிவி முதலான நான்கிலே கீழே இரண்டு உளவாயும் மேலே இரண்டு உளவாயும் நிற்குமாயின்,—அவயவமும் நணுகா எனல் ஆம் ஏ — அவை காரணமான சரீர அவயவங்களும் கூடாவாய்க் கீழும் மேலுமாய் வேறுபட்டு நிற்கும் என்று சொல்லலாமே; அஃதன்றியும்,—வரின் — அவ்வணுக்கள் நான்கும் சரீர அவயவத்தில் கூடிவருமாயின்,—நாசம் அவை எய்தும் — அவ்வணுக்களை நித்தியம் என்று நீ முன்னர்க் கூறியது மித்தியை ஆம்,—அணுகா எனின் — அவை சரீர அவயவங்களிலே பொருந்தாது என்று நீ கூறின்,—இவை தொள்ளை கொள் ஆகம் உள ஆகும் துணிவால் இவை கலவா பல தொகை ஆம் வகை இல ஆம்—அவ்வணுக்களின் குணங்களாகிய உதிரம் மாமிசாதிகளும் கலந்து நில்லாததுமாய், அணுக்கள் நான்கின் கூறு பலவும் கூடிய திரட்சியும் காயத்திற்கு இல்லையுமாய், துணிந்து அறியுமிடத்துச் சரீர முறைமை ஆகாததுமாய், புரைபட்டு நிகழ்ந்ததில்லையாம் என்றவாறு.

ஏ, ஓ—வினை. வகையும் இலவாம் என்ற உம்மை தொக்கு நின்றது.

இச்செய்யுள் நான்கும் சரீரத்தோடு கூடாது என்பதனை மறுத்துக் கூடும் என்பதனோனே பூதகாரியம் நித்தம் என்பதனையும் மறுத்துக் கூறிற்று. (4)

செய்யுள் — 178

மிகையாமணு வுளவாகையின்
அவையாமிக வென்னில்
தொகைநாலிடை யறலாலவை
தொகுமாறில வாகும்
பகையாகையின் மிசைதாழ்மையின்
நிலையாவகை பண்ணும்
நகையாமுரை கழியாயிர
மவைதூணென நண்ணு.

என்பது: *மிகை ஆம் அணு உள ஆகையின் அவை ஆம் மிக என்னில்* — இவ்வணுக்கள் நான்கும் அன்றி வேறே அறியத்தக்கது ஒரு மிக்க அணு உண்டாகையினாலே மிகவும் யோனி பேதங்களாகிய உருக்கள் ஆம் என்று நீ கூறின்,—*தொகை நால் இடை அறலால் அவை தொகும் ஆறு இல ஆகும்*—அணுக்கள் நாலின் கூட்டம் மிகவும் பொருந்தாமல் நடு நீங்கிக் கிடக்கையால் அறியும் அணு இவற்றைக் கூட்ட அவை கூடிநிற்கும் வழி இல்லையாம்; அஃதன்றியும்,—*பகை ஆகையின் மிசை தாழ்மையின் நிலையாவகை பண்ணும்*—அவ்வணுக்கள் நாலும் மேலும் கீழுமாய் நிற்கையாலும் தம்மில் பகை ஆகையாலும் ஆன்மா ஓரிடத்துக் கூடாவகையைச் செய்யா நிற்கும்,—*நகை ஆம் உரை கழி ஆயிரம் அவை தூண் என நண்ணு* — கோல் ஆயிரம் கூடினாலும் தூண் ஆகாத தன்மைபோல அணுக்கள் கூடியது கொண்டே உருக்கள் ஆகாது, ஆகையால் நீ கூறியது நகையாம் என்றவாறு.

இச் செய்யுள் அணுக்கள் கூடியே உருக்கள் ஆம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (5)

செய்யுள் — 179

கூடாவணு வறியாமையின்
வளிகூட்டு தல்கூறின்
நாடாவளி யணுவானவை
நணுகச்செயு மவரை
நீடாவினை தன்னலெனின்
நினைவின்றது வின்றும்
தேடாயொரு வனைநீயிவை
செய்வானுள னென்றே,

என்பது: *கூடா அணு அறியாமையின்—நீ கூறிய ஐவகை அணுக்களும் தமக்கென அறிவில்லாதன ஆகையால் அவ்வடிவு எடுத்துக்கொள்ள வல்லன அல்ல,—வளி கூட்டுதல் கூறின் – வாயுவாகிய அணு ஒழிந்த அணுக்கள் மூன்றையும் ஆன்மாவாகிய அணுக் கூட்டும் படிக்குக் கூட்டும் என்று நீ கூறின்,—நாடா வளி அணு ஆனவை நணுக செய்யும் அவரை – வாயுவானது அவ்வணுக்களைக் கூட்டுதற்குக் கன்மம் செய்யும் ஆன்மாக்களை அறியமாட்டாது;—நீடா வினை தன்னால் எனின் – பழைய கன்மத்தினாலே வாயுக் கூட்டும் என்னில்,—நினைவு இன்று அது இன்றும் – அந்தக் கன்மமும் அறிவையுடையதல்ல ஆகையால் தானும் கூடமாட்டாது, வாயுவைக் கொண்டு கூட்டுவிக்கவும் மாட்டாது,—தேடாய் ஒருவனை நீ இவை செய்வான் உளன் என்று ஏ—இவ்வணுக்கள் ஐந்தையும் கன்மத்தையும் கூட்டிக் காயம் உண்டாக்குவான் ஒரு கர்த்தா உளன் என்பதனை ஆராய்வாய் என்றவாறு.*

*சம்சார ரோகம் தீர்ப்பது ஞானமே, கன்மத்தால் தீராது என்பது கருத்து.*

*இச் செய்யுள் அணுக்கள் நான்கும் காயமாகத் தாமே கூடும் என்பதனையும், வாயு காயத்தைக் கூட்டும் என்பதனையும், கன்மம் கூட்டும் என்பதனையும் மறுத்துக் கூறிற்று.*

*'வாரா நெறி' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் ஆசீவகன் மதத்தை மறுத்துக் கூறியதாம் என்க.* (6)

**ஏழாவது—ஆசீவகன் மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத் திருவிருத்தம்—179.

---



# 8. (க) பட்டாசாரியன் மதம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செய்யுள் — 180

வேதமே யோதி நாதன்
இலையென்று விண்ணி லேறச்
சேதமாங் கன்மஞ் செய்யச்
சைமினி செப்பு நூலின்
நீதியே கொண்டு பட்டா
சாரிய னிகழ்த்து நீர்மை
ஓதநீர் ஞாலத் துள்ளே
யுள்ளவா றுரைக்க லுற்றும்.

என்பது: இருக்கு யசு சாமம் அதர்வணம் என்னும் நாலு வேதத்தையும் ஓதி, அவ்வேதம் ஒழியக் கர்த்தா இல்லை என்று சுவர்க்கம் புகுதற்குத் தனச் சேதமாம்படி சோமயாகம் முதலாகிய கன்மங்களைச் செய்தற்குச் சைமினி பகவானாலே அருளப்பட்ட சூத்திரத்தின் வழியைக் கொண்டு பட்டாசாரியன் என்பான் பாட்டமாகச் சொல்லும் முறைமையை ஒலி

பொருந்தின சமுத்திரத்தால் சூழப்பட்ட பூமியிடத்தே உள்ளபடி சொல்லாநின்றேம் என்றவாறு.

பட்டாச்சாரியன் மதம் கூறுவான் எடுத்துக் கொண்டார்; அதனுள், இச் செய்யுள் பட்டாச்சாரியன் மதம் சொல்லுகின்றேன் என்பதனைக் கூறிற்று. (1)

செய்யுள் — 181

உற்றிடுங் காம மாதி
குணங்கடா முயிர்கட் குண்டாம்
மற்றிவை தருமே யாகின்
மறைமொழி வாய்மை யின்றும்
கற்றநூ லளவாற் போதம்
கலப்பது கல்வி யின்றேல்
பெற்றிடு மழவு மூங்கை
யென்னவே பேச லாமே.

என்பது: உற்றிடும் காமம் ஆதி குணங்கள் தாம் உயிர்கட்கு உண்டாம் — ஆன்மாக்களுக்கு அநாதியே பொருந்திய காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் அகங்காரம் இடம்பம் ஆகிய குணங்கள் கூடி நிற்கும்,—மற்று இவை தருமே ஆகில் மறை மொழி வாய்மை இன்றும் — இக் குணங்களே ஆன்மாவுக்கு அறிவைத் தருமாகில் வேத வசனத்தால் ஒரு நன்மையும் இல்லையாம்; ஆகையால்,—கற்ற நூல் அளவால் போதம் கலப்பது — ஆன்மாக்கள் கற்றநூல் எவ்வளவோ? அவ்வளவே அறிவு உண்டாம்,—கல்வி இன்றேல் பெற்றிடும் மழவும் மூங்கை என்னவே பேச லாம் ஏ—நூல் கற்றல் இல்லாத ஆன்மாக்களைப் பிறந்து முதிராத பாலர் என்றும் ஊமை என்றும் சொல்லலாம் என்றவாறு.

இச்செய்யுள் கல்வியில்லாத ஆன்மாக்கள் அறிவதொன்றில்லை எனக் கூறிற்று. (2)

செய்யுள் — 182

உண்டொரு கடவுள் வேதம்
உரைத்திட வுயிரின் தன்மை
கொண்டவ னல்ல னென்றும்
கூறிடி னுருவங் கூடில்
பண்டைய வுயிரே யாகும்
படித்தநூ லளவு ஞானம்
கண்டிடு முருவ மின்றேல்
கருதுவ தில்லை யென்றான்

என்பது: உண்டு ஒரு கடவுள் வேதம் உரைத்திட உயிரின் தன்மை கொண்டவன் அல்லன் என்றும் கூறிடின் – சுயம்புவாகிய வேதத்தைக் கூறுதற்கு ஒரு கர்த்தா உண்டு என்றும் அந்தக் கர்த்தா ஆன்மத் தன்மையன் அல்லன் என்றும் சொல்லின்,—உருவம் கூடில் பண்டைய உயிரே ஆகும் – வேதத்தைச் சொன்னான் என்ற கர்த்தாவானவன் வேதம் சொல்லுமிடத்துச் சரீரியாய்ச் சொல்லவேண்டும்; ஆகையால், அப்படிச் சரீரியாகில் ஆன்மத்தன்மையன் ஆவன்,— படித்த நூல் அளவும் ஞானம் கண்டிடும் – அப்படிச் சரீரியான ஆன்மா தான் கற்ற நூல் அளவே அறிவை யுடைத்தாம் இத்தனையே,—உருவம் இன்றேல் கருதுவது இல்லை என்றான் – வடிவு இல்லையாயின் நூலைக் கருதிச் சொல்லும் தன்மையும் இல்லையாம்; ஆதலால், வேதம் சுயம்புவேயாம் என்றவாறு. (3)

செய்யுள் — 183

தேவரு முனிவர் தாமும்
சித்தரு நரரு மற்றும்
யாவரு முரைப்பர் வேதம்
இயம்பின ரின்ன ரென்னப்
போவதன் றென்று நாளும்
பரம்பரை புகல்வ தாகும்
கூவனீ ரென்னிற் கொள்ளேம்
மறுமையைக் குறித்த லாலே.

என்பது: தேவரும் முனிவர் தாமும் சித்தரும் நரரும் மற்றும் யாவரும் உரைப்பர் வேதம் இயம்பினர் இன்னர் என்ன போவது அன்று என்று — பிரம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்களும் அகத்தியர் வசிட்டாதி இருடிகளும் சித்தர்களும் ஒழிந்த வித்தியாதரர் கந்தருவர் கின்னரர் கிம்புருடர் பைசாசர் இயக்கர் முதலாயினோரும் நரர்களும் வேதம் இன்னார் சொன்னார் என்று தம்மால் அறியப்படுவதன்று என்று சொல்லாநிற்பர்; ஆகையால், நாளும் பரம்பரை புகல்வது ஆகும் — காலந்தோறும் பழையதாக வரும் என்றே சொல்லப்படுவதாம்,—கூவல் நீர் என்னில் கொள்ளேம் மறுமையை குறித்தலால் ஏ — கூவலின் நீர் போலத் தானே வந்து தோன்றப்பட்டதென்று சொல்லும் உவமையும் கொள்ளேம், அஃது ஒருவனால் செய்யப் படுதலானும் மறுமை எய்தத்தக்கதாய் இருத்தலானும் என்றவாறு.

இச் செய்யுள் இரண்டும் வேதம் ஒருவரால் செய்யப் பட்டதல்ல சுயம்பு என்பது கூறின. (4)

செய்யுள் — 184

உன்னிய வங்க மாறும்
 மூன்றுப வேதந் தானும்
தன்னுளே யடக்கி வேறு
 தங்கிடா வகையைச் சார்ந்து
முன்னமோர் தோற்ற மின்றி
 முடிவின்றி நித்த மாகி
மன்னியோ ரியல்பே யாகி
 வழங்கிடு மறைய தென்றான்

என்பது: உன்னிய அங்கம் ஆறும் மூன்று உப வேதம் தானும் தன்னுளே அடக்கி – வேதம் என்னது கருதப்பட்ட ஆறு அங்கங்களையும் மூன்று உபவேதங்களையும் தனக்குள் அடக்கி,—வேறு தங்கிடா வகையை சார்ந்து – அர்த்தங்கள் எல்லாம் தன்னிடத்து அடங்குவது ஒழிந்து வேறு ஒரு நூலின் அர்த்தம் தன்னிடத்து இல்லை என்னுமையைப் பொருந்தி,—முன்னம் ஓர் தோற்றம் இன்றி – ஆதியிலும் ஓர் இடத்தில் தோன்றிற்று என்னும் முறைமையும் இன்றி,—முடிவு இன்றி நித்தம் ஆகி – ஒரு காலத்திலும் கேடின்றி நித்தமும் ஆய்,—மன்னி ஓர் இயல்பே ஆகி – ஒரு தன்மையாய் நிலைபெற்றுப் போதிக்கப்படாததாய்,—வழங்கிடும் மறை அது என்றான்–இப்படி வழங்கா நிற்கும் வேதம் என்று கூறினன் என்றவாறு.

ஆறங்கமாவன–சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சோதிடம் சந்தோவிசிதி என்பன. மூன்று உபவேதமாவன–ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம் என்க. முடிவின்றி – அளவிறந்து.

*இச் செய்யுள் வேதம் தோற்றமும் முடிவும் இன்றி, அழிவின்றி, ஆறு அங்கத்தோடும் மூன்று உபவேதத்தோடும் கூடிநிற்கும் என்று கூறிற்று.* (5)

*செய்யுள்* — 185

செய்தியு நெறியு மேவும்
தேவரும் பொருளு மெல்லாம்
எய்திய பன்மை யாலே
ஓரியல் பியம்பா தாகும்
ஐயமில் கால மூன்றும்
அறிந்தபின் னெஞ்ச கத்தாய்
மெய்யதாய் வந்து தோன்றி
விளங்கிடும் வேத நூலே.

என்பது: *செய்தியும் நெறியும் மேவும் தேவரும் பொருளும் எல்லாம் எய்திய பன்மையால் ஏ ஓர் இயல்பு இயம்பாது ஆகும் — படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் பல செய்திகளும், செய்தி செய்யும் வழியும், அவ்வழியிலே மேவும் தேவரும், அவர்களால் கொடுக்கப்பட்ட இகலோக பரலோக சாத்தியமான அர்த்தங்களும் இவை யெல்லாம் பன்மையாகப் பொருந்திநின்றன ஆகையாலும் இவற்றைச் சொல்ல வேண்டுகையாலும் வேதமும் ஒரு நெறிப்படச் சொல்லாதாம்,—ஐயம் இல் காலம் மூன்றும் அறிந்த பின் — அந்த மூன்று தொழிலாலே மூன்றுவிதப்பட்டு இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்று எல்லாரா லும் அறியப்பட்டபின்,—நெஞ்சகத்தாய் மெய்யதாய் வந்து தோன்றி விளங்கிடும் வேத நூல் ஏ — வேத மானது ஒரு வடிவைப் பொருந்திஅவ்வடிவின் நெஞ்ச கத்தே பொருந்தி உலகத்திலே விளங்காநிற்கும் என்றவாறு.*

காலம் மூன்றும் அறிந்த பின் வேதம் உருவாம் என்பதனால் அநாதியில் அருவாம் என்னும் பொருள்பயந்தது. செய்தியும் - கன்மங்களும். ஐயம் இல் காலம் — சந்தேக மற்ற காலம்.

வெஞ்சகத்தாய் எனப்பாடமாகில் விளக்கத்தையுடைத் தாய் என்க.

இச்செய்யுள் வேதம் நிற்கும்முறைமையும்சொல்லும் முறைமையும் கூறிற்று. (6)

செய்யுள் — 186

தப்பிலா வாகுந் தாதுப்
பிரத்தியந் தன்னி னோடே
ஒப்பிலா தாம்பி ராதி
பதிகமா முறுப்புங் கொண்டு
செப்புமாம் வேதஞ் சொன்ன
விதிப்படி செய்யச் சேம
வைப்பதாம் வீடு பாசம்
மருவலா மொருவ லாமே.

என்பது: தப்பு இலா ஆகும் தாது பிரத்தியம் தன்னினோடு ஏ ஒப்பு இலா தாம் பிராதிபதிகம் ஆம் உறுப்பும் கொண்டு செப்பும் ஆம் வேதம் — வேதமானது தவறில்லாததாகிய தாதுப் பிரத்தியங்கள் இவையிற்றினோடும் உவமை இல்லாததாகிய பிராதிபதிகம் என்னும் உறுப்புக்களையும் தன்னிடத்திலே அடக்கிக் கொண்டு சொல்லுவதாம்,—சொன்ன விதிப்படி செய்ய சேமவைப்பது ஆம் வீடு பாசம் மருவலாம் ஒருவலாம் ஏ — அந்த வேதம் சொன்ன விதிப்படியிலே கன்மத்தைச் செய்யப் பாசக்கட்டு விட்டு நீங்கலாம், அது நீங்கவே வீட்டின்பமும் ஆப்ததனமாகக் கூடும் என்றவாறு.

சேம வைப்பதாம் என்பது அறத்தினாகிய அர்த்தம் ஆப்த தனமாகக் கூடும் என்பது கருத்து. தாதுவாவது — ஞானத்துக்கு அவபோதனம். பிரத்தியம் — எழுவேற்றுமையும். பிராதிபதிகம் — கிரியாவிகற்பங்கள்.

இச்செய்யுள் கன்மம் செய்யவே மோக்ஷம் ஆம் என்று கூறிற்று. (7)

செய்யுள் — 187

போக்கொடு வரவு கால
மொன்றினிற் புணர்வ தின்றி
ஆக்கவே றொருவ ரின்றி
அநாதியா யணுக்க ளாகி
நீக்கிடா வினையிற் கூடி
நிலமுத லாக நீடி
ஊக்கமா ருலக மென்று
முள்ளதென் றுரைக்க லாமே

என்பது: (ஊக்கம் ஆர் உலகம் போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வது இன்றி எனமாறுக) போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வது இன்றி — மிருதியையுடைய பிரபஞ்சமானது சங்காரமும் சிருட்டியும் ஒரு காலத்தில் உண்டாகாததாய்,—ஆக்க வேறு ஒருவர் இன்றி — இதனை இரக்ஷிக்க ஒரு கர்த்தாவும் இல்லையாய்,—அநாதி ஆய் — அநாதியேயுள்ளதாய், அணுக்கள் ஆகி — ஆன்மசம்பந்தியாய்,—நீக்கிடா வினையில் கூடி — நீக்கப்படாத புண்ணிய பாவங்களோடு கூடி,—நிலம் முதல் ஆக நீடி — பிருதிவி முதலாகிய தத்துவங்களாக நிலைபெற்று,—என்றும் உள்ளது என்று உரைக்கலாம் ஏ — என்றும் உள்ளதென்று சொல்லலாம் என்றவாறு.

*ஊக்கம் — மனவெழுச்சி மிகுதிப்பட்டது, வலி. அணுக்களாய் — அணுசம்பந்திகளாய்.*

*இச்செய்யுள் கர்த்தா இல்லை, பிரபஞ்சம் அநாதி என்பது கூறிற்று.* (8)

*செய்யுள்* — 188

நித்தமா யெங்கு முண்டாய்
 நீடுயி ரறிவு தானாய்ப்
புத்திதா னாதி யாய
 கருவியின் புறத்த தாகிச்
சுத்தமா யருவ மாகித்
 தொல்லைவல் வினையின் தன்மைக்
கொத்ததோ ருருவம் பற்றிப்
 புலன்வழி யுணர்ந்து நிற்கும்.

என்பது: *நித்தம் ஆய் எங்கும் உண்டாய் நீடு உயிர் — பிரபஞ்சத்திலே நிலைபெற்ற ஆன்மாவானது அழிவில்லாததாய் நிறைவையுமுடைத்தாய்,— அறிவு தான் ஆய் — அறிவே தனக்கு வடிவுமாய்,— புத்திதான் ஆதி ஆய கருவியின் புறத்தது ஆகி — புத்தி முதலாகிய தத்துவங்களிடத்துக் கலவாது நிற்பதுமாய்,— சுத்தம் ஆய் — தத்துவங்கள் நீங்கின இடத்து அழுக்கற்று நிற்பனவுமாய்,— அருவம் ஆகி தொல்லை வல்வினையின் தன்மைக்கு ஒத்தது ஓர் உருவம் பற்றி புலன் வழி உணர்ந்து நிற்கும் — அருவமாய்ப் பழையதாய்வரும் புண்ணிய பாவங்களினது முறைமைக்கு ஈடான காயத்துடனே கூடி இந்திரியங்கள் வழியாகக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியா நிற்கும் என்றவாறு.*

*புத்திதான் ஆதியாய கருவிகளாவன — இந்திரியம் முதல் பிரகிருதி ஈறாய தத்துவம் இருபத்தொலும். புறம்— ஏழாம் வேற்றுமை இடப்பொருள். ஒத்ததோர் உருவம் — வினைகளுக்கு ஏற்ற வடிவம். சுத்தமாகிறது கன்மவசமாய் உழலுமோ? என்னில், சுத்தமாகாதாகின் முத்தியிலும் சுத்தன் ஆகான், சத்காரியவாதமும் கெடும் என்பது கருத்து.*

இஃது ஆன்மலக்ஷணம்.

*இச்செய்யுள் ஆன்மா நிற்கும் முறைமை கூறிற்று.* (9)

*செய்யுள்* — 189.

செயறரு வினைகள் மாய்ந்து
சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும்
பலாலமும் தழையு மெல்லாம்
வயறனின் மருவி நாசம்
வந்தபின் பலத்தை வந்திங்
கியல்பொடுந் தந்தாற் போல
வென்றும்பி னியம்பு கின்றான்.

என்பது: *செயல் தரு வினைகள் மாய்ந்து சிந்தையில் சேர்ந்து நின்று பயனொடு பலியா நிற்கும் — முற்சனனத்தின் மன வாக்குக் காயங்களின் தொழில்களாலே உண்டாகிய புண்ணிய பாவங்கள் அந்தக் காயத்துடனே தூலம் கெட்டுச் சூக்குமமாக ஆன்மாவோடும் பொருந்தி இந்தச் சனனத்தில் பிரயோசனத்தோடு ஆன்மாவுக்கு உண்டாகா நிற்கும்,—(அஃது என்போல என்னின்) பலாலமும் தழையும் எல்லாம் வயல் தனில் மருவி நாசம் வந்த பின் பலத்தை வந்து*

இங்கு இயல்பொடும் தந்தால் போல என்றும் பின் இயம்புகின்றான் — வைக்கோல் தழை முதலானவைகள் எல்லாம் கழனியைப் பொருந்தி நின்று தனக்கு வடிவுக்கேடு வந்தபின்பு அவ்வயலின் பயிருக்கு நன்மையைக் கொடுத்தாற் போல என்றும் கூறி வேறும் சில சொல்லா நின்றான் என்றவாறு.

இச்செய்யுள் உம்மை வினைப்பயன் இம்மையில் ஊட்டும் என்பது கூறிற்று. (10)

செய்யுள் — 190

நீதியா நித்த கன்மம்
நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்
தீதிலா விச்சா கன்மம்
செந்தழ லோம்பிச் செய்ய
ஏதுதான் வேண்டிற் றெல்லாம்
எய்தலாஞ் சோம யாகம்
ஆதிதா னைசை வீசி
அமைத்திட வீட தாமே

என்பது: நீதி ஆ நித்த கன்மம் நிகழ்த்திட சுபத்தை நீங்கார் — அவரவர் சூத்திர முறைமையிலே சந்தியா அநுஷ்டானம் காயத்திரி செபம் முதலிய பிராமணர் செய்ய ஏனைய வருணத்தாரும் தமக்குக் கற்பித்த விதி வழாமல் செய்யவே நன்மையை எப்பொழுதும் கைவிடார்,—தீது இலா இச்சா கன்மம் செந்தழல் ஓம்பி செய்ய ஏது தான் வேண்டிற்று எல்லாம் எய்தலாம் — குற்றமில்லாத இச்சா கன்மமாகிய வைசுவதேவ பலி காணுதிகளும் தக்ஷிணாக்கினி காருகபத்தியம் ஆகவநீயம் முதலிய அக்கினிகளும் செய்யத் தான்

விரும்பியது யாது? அவையெல்லாம் எய்தலாம்,—சோமயாகம் முதலிய யாகங்களைச் செய்யுமிடத்து அர்த்தத்தை மிகவும் செலவழித்துச் செய்ய வீட்டின்பம் உண்டாகும் என்றவாறு.

இச் செய்யுள் நித்திய நைமித்தியங்களாகிய கன்மங்களாலே போக மோக்ஷம் லபிக்கும் என்பது கூறிற்று. (11)

செய்யுள் — 191

கருதிய கன்ம ஞானம்
இரண்டுங்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு
மதிதனை மதித்துச் செய்தி
ஒருவிடிற் பதித னாகும்
பதிதனைக் கதியி னுய்க்கத்
தருவதோர் நெறிதா னில்லை
என்னவுஞ் சாற்றி னானே.

என்பது: கருதிய கன்மம் ஞானம் இரண்டும் கால் ஆக கொண்டு மருவிடல் ஆகும் வீடு—சூத்திர விதிகளாலே கருதப்பட்ட கன்மமும் வேதம் சுயம்பு என்னும் ஞானமும் ஆகிய இரண்டையும் இடமாகக் கொண்டு வீட்டின்பத்தைப் பொருந்தலாகும்,—மதிதனை மதித்து செய்தி ஒருவிடில் பதிதன் ஆகும்—வேதம் சுயம்பு என்று அறியும் ஞானம் மெய்ம்மையாம் என்று வெகுமானித்துக் கன்மத்தைக் கைவிடில் கன்ம சண்டாளன் ஆகும்,—பதிதனை கதியின் உய்க்க தருவது ஓர் நெறிதான் இல்லை என்னவும் சாற்றினான் ஏ—அக்கன்ம சண்டாளனை மீள நல்ல நெறியிலே ஏற விடுவதற்கு உண்டாவதோர் வழி வேதத்திலும் இல்லை என்று சொன்னான் என்றவாறு.

*கால் ஏழாம் வேற்றுமை இடப்பொருள்.*

*இதனால் ஞானமும் கன்மமும் இரண்டும் வேண்டும் என்பது கருத்து.*

*இச் செய்யுள் கன்மம் கூடாமல் ஞானத்தால் மோக்ஷம் லபியாது என்பது கூறிற்று.* (12)

செய்யுள் — 192

பசுப்படுத் தியாகம் பண்ணப்
புண்ணிய மாவ தென்று
வசிப்பினுன் மறைகள் சொன்ன
வழக்கினுல் வாய்மை யாக
நசிப்பிலா மந்தி ரங்கள்
நவிற்றலி னின்ப மாகும்
பசிப்புளா னொருவ னுண்ணப்
பசியது தீர்ந்த பண்பே.

என்பது: *பசு படுத்து யாகம் பண்ண புண்ணியம் ஆவது என்று — எப்பொழுதும் பசுபந்தனம் செய்து யாகங்களைச் செய்வது புண்ணியம் ஆம் என்று,—வசிப்பினுல் மறைகள் சொன்ன வழக்கினுல் வாய்மை ஆக நசிப்பு இலா மந்திரங்கள் நவிற்றலின் இன்பம் ஆகும் — குற்றமில்லாத இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நாலுவேதங்களும் சொன்ன விதிப்படி உண்மையாகக் கொண்டு கேடில்லாத மந்திரங்களைச் சொல்லுதலால் போகம் மோக்ஷம் ஆகிய இன்பத்தைத் தரும். அஃது என்போல என்னில்,—பசிப்பு உளான்*

*ஒருவன் உண்ண பசி அது தீர்ந்த பண்பு ஏ – மிகவும் பசிப்புளான் ஒருவன் உண்டல் செய்தால் பசி தீர்ந்து இன்பம் உற்ற தன்மைபோல என்றவாறு.*

*இச் செய்யுள் யாகங்களுக்கு யுத்தமான பசுபந்தனம் செய்து யாகம் செய்யவே போக மோக்ஷம் லபிக்கும் என்பது கூறிற்று.*

*வேதம் என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் பட்டாசாரியன் மதம் கூறிற்று.* (13)

**எட்டாவது–பட்டாசாரியன் மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத் திருவிருத்தம்—192.

---



## 8. (உ) பட்டாசாரியன் மதமறுதலை

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 193

வேதஞ் சுயம்புவென வேதந்த வாய்மொழியில்
வேறும்ப்ர மாண முளதேல்
நீதந்து காணிங்கு மாதுங்க பாரதமும்
நேர்கண்ட தாகு மதுபோல்
ஓதுஞ் சொலாய்வருத லானுங்க டாதிபட
மோவந்தி டாவொ ருவரா
லேதந்த தாமறைக ளாய்வந்த வாய்மொழியும்
வேறிந்து சேக ரனதே

என்பது: *வேதம் சுயம்பு எனவே தந்த வாய் மொழி இல் — வேதம் சுயம்பு என்று பட்டாசாரிய! நீ கூறிய உண்மை ஒழிய நான் சுயம்பு என்று அவ்வேதந் தான் கூறிற்றில்லையாம்; அஃதன்றியும்,—வேறும் பிரமாணம் உளதேல் நீ தந்து காண் இங்கு — வேதம் அநாதி என்பதற்கு வேறு பிரமாணம் இல்லை, உண்டாயின் நீ சொல்லிக் காண் இவ்விடத்து,—மாதுங்க*

பாரதமும் நேர் கண்டதாகும் — மிகவும் பெருமையை உடைய மகாபாரதம் பிரமாணம் என்று சொல்லின் அதுவும் வியாசராலே சொல்லப்பட்டு வேதத்திற்கு ஒப்பாய் ஐந்தாம் வேதம் என்று வழங்கப்படுவதாம்,— அது போல் — அந்த மகாபாரதம் போல,—ஓதும் சொல் ஆய் வருதலானும் — ஒருத்தனாலே சொல்லும் சொல்லாய் வருதலானும்,—கடாதி படமோ வந்திடா— மண் பாவையும் கிழிப்பாவையும் செய்வார் ஒருவர் இன்றி வந்து தோன்றாமை யானும்,—ஒருவராலே தந்ததாம் — அவ்வேதமும் ஒருவனாலே சொல்லப் பட்டதே ஆம்,—மறைகளாய் வந்த வாய்மொழியும் இந்து சேகரனது ஏ — வேதம் ஒருவன் சொன்னான் என்று சொல்லப்பட்டு வேறு இரகசியங்களாய் வருகிற சத்தியவசனமும் சந்திர சேகரனிடத்ததே என்றவாறு.

எனவே, பரமேசுவரனே வேதம் அருளிச் செய்தான் என்பதாயிற்று. அதனாலும் என்பது தொக்கு நின்றது ஏகாரம் தேற்றம். கடாதி எனவே மண்பாவை முதலியன வும், படாதி எனவே கிழியிடத்து உண்டாகிய பாவை முதலியனவும் கொள்க மகாபாரதம் போல வேதம் ஒருவன் சொல்லப்படுகை யாலும் ஒருவன் ஓத வேண்டுகையாலும் கடபடாதிகளை ஒருவன் இயற்றப்படுகை யாலும் சுயம்பு அல்ல என்க (1)

செய்யுள் — 194

உரைதந்தி டாதொருவ னெனிலிந்த வானினிடை
யொலிகொண்டு மேவி யுளதாம்
புரைதந்த வாமறைக ளபிவெஞ்ச மாயொளிர்கை
பொருடந்த தீப மதுவேல்

வரைதந்த தாலிவுரை கபிலன்சொ லாகுமது
மறைகின்ற வாறும் வரவும்
விரைவின்சொ லாயிதனை யெதுகொண்டு மேவுவது
விடைகொண்ட தாலு னுரையே.

என்பது: உரை தந்திடான் ஒருவன் எனில் — வேதம் தானே உண்டானதன்றி ஒருவன் சொல்லான் என்று நீ சொல்லின்,—இந்த வானின் இடை ஒலி கொண்டு மேவி உளது ஆம் — இந்த ஆகாசத்தின் கண்ணே பொருந்திய ஓசையைக் கொண்டு உண்டான தாக வேண்டும்,—(ஆகையால்) புரை தந்த ஆம் மறைகள் — வேதங்களும் சொல்லும் பொருளும் விளங்காமல் குற்றத்தை உடையவாம்,—அபிவெஞ்சமாய் ஒளிர்கை பொருள் தந்த தீபம் அது ஏல் — அற்றன்று, வேதம் சர்வத்தையும் விளக்குவித்துத் தானே நின்று விளங்குகை பொருளைக் காட்டி நிற்கும் விளக்குத் தானே நின்று பிரகாசித்தாற் போல என்று கூறின்,— வரை தந்தது ஆல் இ உரை கபிலன் சொல் ஆகும் — வேதத்தின் பெருமை இல்லையாய் ஓர் எல்லைக்குள் அகப்பட்டதாம்; ஆகவே, நீ உவமை கூறல் அறிவில்லாத நிரீச்சுர சாங்கியன் சொல்லும் சொல்லாம்,— அது மறைகின்ற வாறும் வரவும் — அவ்வேதம் அருவாம் முறைமையும் தோன்றும் முறைமையும் இங்ஙனம் என்று,—விரைவின் சொலாய் — விரைவிலே சொல்லுவாயாக,—இதனை எது கொண்டு மேவுவது — வேதம் முன் அருவாய்ப் பின் உருவாய்த் தோன்றிச் சொல்லும் பொருளும் விளங்கச் சொல்லும் என்று நீ சொல்லுகின்ற இதனை யாது பிரமாணம் கொண்டு

பொருந்துவது,—விடை கொண்டது ஆல் உன் உரை ஏ – ஆதலால், நீ சொல்லுகின்ற சொல் பயனற்றுப் போனதாம் என்றவாறு.

புரை – குற்றம், அபிவியஞ்சகம் – அபிவெஞ்சம் என நின்றது; அது பொருளை விளக்கித் தானும் விளங்கி நிற்பது; ஆதலால், விளக்கிற்கு உவமை ஆயிற்று. விரைவிற் சொலாய் என்பது 'விரைவின் சொலாய்' என மெலிந்து நின்றது.

வரைதந்ததால் உன் உரை என்பது விளக்குப் போல் என்பையாகில் ஓர் இடத்து உண்டுமாய் இல்லையுமாய் எல்லை கள் உடையவாய் அவ்வுரை பின்னாகிய சாங்கியன் மதம் போல அசற்காரியவாத மதமாகவேண்டும். (2)

செய்யுள் — 195

உருவின்க ணேமருவி வரிலின்று தேரையுரை
உளதுங்க ணூலின் மறையும்
தருகின்ற நாதரவ ரிவரென்று நாமமது
தரவந்தி டாமை யதனால்
வருமென்று நேடியெனில் வளர்கின்ற தீவதனில்
வருகின்ற வாடை பலவால்
ஒருதந்து வாயனவ னிவனென்ற போதிலிவை
உளதென்று நீடி யவையே.

என்பது: உருவின் கணே மருவி வரில் – வேத மானது யாதொரு உருவைப்பற்றி மனத்திடத்ததாய்ப் பிரகாசிக்கும் என்று நீ சொல்லில்,—இன்று தேரை உரை உளது உங்கள் நூல் இன்மறையும் – ஓர் உரு வைப்பற்றி வரும் என்னும் நியமம் இல்லாதபடியாலே இப்பொழுது தேரையிடத்துண்டாகிய சத்தத்திலும்

உங்கள் நூலாகிய இனிய வேதம் உண்டாகும்,—தரு கின்ற நாதர் அவர் இவர் என்று நாமம் அது தர வந்திடாமை அதனால் வரும் என்று நேடி எனில்—வேதத்தை உண்டாக்கியவன் இன்னான் என்று பேர் குறித்து வேதம் சொல்லாது; ஆகையால், தானே தன்னை ஓதத் தக்க உருவைத்தேடி அஃதிடமாகத் தோன்றும் என்று சொல்லில்,—வளர்கின்ற தீவு அதனில் வருகின்ற ஆடை பல ஆல் – பலவளங்களும் வளர்கின்ற தீவின் கண்ணின்று வருகின்ற புடைவை பல பேதங்களை யுடைத்து ஆகையால்,—ஒரு தந்துவாயன் அவன் இவன் என்ற போதில் இவை உளது என்று நீடி அவையே – பல பேதப்பட்ட புடைவைகளைக் கண்ட பொழுதே தந்துவாயன் என்று சொல்லப்பட்டவனாலே இப்புடைவை உண்டானது என்று அறிந்தாற் போல வேதமும் சத்தார்த்தம் ஆகையால் ஒருவனாலே செய் யப்பட்டது என்று அறிவாயாக என்றவாறு.

எகாரம் – வினா. ஆல் – அசை.

'உருவின்கணே மருவிவரில் இன்று தோன் உரை' எனப் பாடமாயின் உருக்களாலே உள்ளார்கள் இடங்களிலே நின்று பொருந்தி வரும் என்னில் சுகதன் உரை போல அனவத்தைப்பட்டு வேதத்தைத் தருவான் ஒரு கர்த்தா அவன் இவன் என்று சொல்ல இல்லாமையும் கால எல்லை படாது என்பையாகில் தயித்திரியம் என்னும் நாமும் இல்லை யாம். (3)

*செய்யுள் — 196*

மறைநின்று நாலுதிசை யவரொன்ற தாகவரும்
உரைதந்த வாய்மை யதனல்
நிறைவென்று நீடுமெனில் வனையுங்க டாதிபல
சொலவொன்றி நீடியு ளதாம்
குறைவின்றி நாடுமொழி யவைசென்று கூடுவதோர்
குணமுண்ட தாகு மலர்தான்
உறைகின்ற மாலைதனி னுளதென்ற தாகுமெனில்
உணர்வின்ற தாழி யொலியே.

என்பது: *மறை நின்று நாலு திசையவர் ஒன்றது ஆக வரும் உரை தந்த வாய்மை அதனல் நிறைவு என்று நீடும் எனில்* — நான்கு திக்கிலும் பாஷை போதிக்கப்பட்ட ஜாதிபேதங்களும் மற்றொரு நால் போல் ஆகாமல் ஒருமைப்பட ஓதி வரும் உண்மையாலே வேதம் அநாதியாய் நிறைவை யுடையதாய் நிலை பெறும் என்று கூறின்,—*வனையும் கடாதி பல சொல ஒன்றி நீடி உளது ஆம் குறைவு இன்றி நாடும் மொழி அவை சென்று கூடுவது ஓர் குணம் உண்டது ஆகும்* — குலாலனல் உண்டாக்கப்படும் கடாதிகள் பல பேதம் பொருந்தி அநாதியிலே உள்ளதாகிறது போலக் குற்ற மின்றி அறியப்படும் சொல்லும் பொருளும் கூடும் படிக்குக் கூட்டுவது ஓர் கர்த்தா உண்டாக வேண்டும்; அற்றன்று,—*மலர் தான் உறைகின்ற மாலைதனில் உளது என்றது ஆகும் எனில்* — மாலையின் உறையும் பூவும் மணமும் அந்த மாலையினிடத்தின் உள்ளதல்லவாய் முன்பே உண்டாய் அதனைப் பின்பு மாலையாகக் கூட்டினற் போலச் சத்தமும் அர்த்தமும் முன்பே

உள்ளவாய்ப் பின்பு மூர்த்திகளாலே கூட்டப்பட்ட என்று கூறின்,—உணர்வு இன்று அ தாழி ஒலியே — அம்மூர்த்திகள் சத்தத்தை யறிந்து கூட்டப் பட்டார் கள் அல்லவாகில் உன்வேதம் கடைதலை யுற்ற தாழியின் ஓசைக்கு ஒக்கும் என்றவாறு.

எனவே, வேதம் சப்தார்த்த மாகையால் சப்தம் தந்த தாலோஷ்டங்களாலே உண்டாக வேண்டுமாகலின் அவ் வேதம் சுயம்பு அன்று என்பது கருத்து

உணர்வின்ற தாழி ஒலி என்பதற்குச் சமுத்திர சத்தம் போலத் தானே உள்ளதாம் என்னில் அதற்கு அறிவில்லை காண் எனப் பாடமோதுவாரும் உளர். அதன்கண் ஒலி வாயு காரணமாக எழும் என்க அந்த வாயுவும் ஜடமல்லவோ எனில், அந்த வாயுவும் ஒரு கடவுளால் சேட்டைப்படும் என்க.

வேதம் என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் வேதம் சுயம்பு என்பதனை மறுத்துக் கூறிற்று. (4)

செய்யுள் — 197

உடனின்று நாமுணரு மதுகண்ட வாருருவன்
உலகங்க ளேயு ருவமாய்
இடைநின்று மாமறைக ளவையன்று வாய்மொழிய
இவைகொண்டு லோக நெறியின்
கடனின்று வாழுமது கருதும்பி ணைவழி
கருமஞ்செய் காசி னியுளோர்
திடமென்று சீரரச னுரைதங்கு மோலைதிரு
முகமென்று சூடு செயலே.

என்பது: உடல் நின்று நாம் உணரும் அது கண்டவாறு ஒருவன் உலகங்களே உருவம் ஆய் இடை நின்று — சரீரத்தினின்று நாம் உணருமது கண்டபடியாலே ஒப்பற்றவன் ஒருவன் என்று சொல்லப்பட்ட கர்த்தாவானவன் பிரபஞ்சமே திருமேனியாய்ப் பிரபஞ்சத்திடையிலே எழுந்தருளி நின்று,—மா மறைகள் அவை அன்று வாய் மொழிய — மிகுதி யுடைய வேதங்களை அநாதியிலே அருளிச் செய்ய பின் இவை கொண்டு உலோகம் நெறியின் கடன் நின்று வாழும் அது கருதும் — பின்பு அவ்வநாதியைக் கொண்டு பிரபஞ்சமானது அவ்வேதங்களின் முறையிலே நின்று வாழும் அதனைக் கருதி அநாதி என்றும் சுயம்பு என்றும் சொல்லா நிற்கும்; அஃது என்போல என்னின்,—ஆணை வழி கருமம் செய் காசினி உளோர்திடம் என்று சீர் அரசன் உரை தங்கும் ஓலை திருமுகம் என்று சூடு செயல் ஏ — மண்டல நாயகனுகிய அரசன் தனது ஆக்கினை வழியிலே நிற்கும் பிரபஞ்சத்தினுள்ளோர்க்கு அவ்வரசன் உரை பொருந்திய ஓலை வர அதனைத் திருமுகம் என்று மங்கல மரபினுற் கூறித் தலையில் தரித்து அவ்வரசனைப் போலச் சிறப்புச் செய்கை போல வழங்கும் கிரமங்காண் என்றவாறு.

சுயம்புவாலே கூறப்பட்ட வேதத்தையும் சுயம்பு என்று கொண்ட முறைமையும் அதனை உலகங் கொண்ட முறைமையும் மாகனுல் சொல்லப்பட்டது மாகம் ஆனுற் போலவும், தொல்காப்பியனுற் சொல்லப்பட்டது தொல்காப்பியம் ஆனுற் போலவும் பிறவாற்றானுங் கொள்க. (5)

செய்யுள் — 198

முடிவின்றி வேதியர்கள் முதல்வந்த மூவர்களும்
மொழியுஞ்சொ லாரிய மெனில்
கடிவின்றி யேகணித ரவர்கண்ட வாறதுவென்
வடகண்ட சாதி கடியா
தொடிவின்றி யோதுவதெ னுரைதங்கு வேதமொழி
யுளதென்று கூறு மவர்தாம்
அடியின்று தானெனும தறிவின்றி யீனுமவர்
இலேயென்ற வாத ரவதே.

என்பது: *முடிவு இன்றி வேதியர்கள் முதல் வந்த மூவர்களும் மொழியும் சொல் ஆரியம் எனில் — ஆரியமாகிய வேதமே கேடில்லாத பிரம க்ஷத்திரிய வைசியர் என்னும் மூன்று சாதியும் ஓதும் சொல் என்று நீ சொல்லின்,—கடிவு இன்றியே கணிதர் அவர் கண்ட வாறு அது என் — ஏனைய வருணத்துள்ளாராய்ச் சோதிடம் சொல்லும் அவர்கள் வேதத்திற்கு அங்கமாகிய சாத்திரத்தை ஓதாமல் அறியும்படி எங்ஙனம்? அஃதன்றியும்,—வட கண்ட சாதி கடியாது ஒடிவு இன்றி ஓதுவது என் — இந்தத் தீவின் வடகூற்றின் உள்ளார் மற்ற வருணத்தார் வேதத்தை ஓதத் தக்கார் என்று நீக்கப்படாமல் எல்லாராலும் ஓதப்படுவானேன்? ஆதலால் நீக்கப்படா தாயிற்று,—உரை தங்கு வேதம் மொழி உளது என்று கூறும் அவர் தாம் — எல்லார் சொல்லும் தன்னிடத்தே உடைத்தான வேதம் சத்தமாக உள்ளதென்று கூறுமவர் தாமும்,—அடி இன்று தான் எனும் அது — வேதத்திற்கு மூல கர்த்தா இல்லை என்று சொல்லும் அது,—அறிவு*

இன்றி ஈனும் அவர் இலை என்ற ஆதரவு அது ஏ — பிறந்த பிள்ளைக்குப் பெற்றவர் இல்லை என்று அறிவிலாது விரும்பிக் கூறுதல் போலும் என்றவாறு.

கடிவு இன்றி — நீக்கமின்றி. ஒடிவு இன்றி — தவிர்தலின்றி. ஈனுமவர்—உண்டாக்குமவர். முடிவு இன்றி வேதியர்கள் — அளவிறந்த பிராமணர்கள். முதல் வந்த மூவர்களும் — பழைய பிரம விட்டுணு ருத்திரர்களும். கடிவின்றியே கணிதர் அவர் கண்டவாறு அது என் — கடியாது கணித நூல்களும் ஒருவர் சொல்லாமல் வந்ததாம் வட கண்ட சாதி கடியா — வட பூமியில் உள்ளாரும் குறைபடாமல் வேதம் சுயம்பு என்றே சொல்லா நின்றார்கள். ஈனுமவர் இலை என்றல் — தாயின்றியே பிள்ளை பிறக்கும் வசனம்.

இச்செய்யுள் வேதம் எல்லாரும் ஓத ஒண்ணாது என்பதனையும் அதற்குப் பாதம் இல்லை என்பதனையும் மறுத்துக் கூறிற்று. (6)

## செய்யுள் — 199

அறிகின்ற பான்மையவ யவநின்ற தாகிலணு
வழியுங்க டாதி யெனவே
செறிகின்ற வாறதிலை யெனின்வந்து சேருமது
திடமன்று கூட வொருவன்
குறிகொண்டு காரின்முளை வருகின்ற பீசமவை
குலையொன்றி வேனி லழியு
முறுகின்ற காலமவை யுடனின்று போயழியு
முலகென்று நீடி யிலதே.

என்பது: அறிகின்ற பான்மை அவயவம் நின்றது ஆகில் அணு அழியும் கடாதி எனவே — ஆன்மாவானது பேதப்பட்டுச் சரீர அவயவத்தைத் தான் அறியும் பகுதியிலே கூடி நின்றதாயின் அறியும் தகுதியை

உடைய சரீராதிபோல ஆன்மாவும் அழிந்துபோம்,—செறிகின்ற வாறு அது இலை எனின் வந்து சேரும் அது – ஆன்மா அந்தச் சரீர அவயவத்தைச் சேராது சரீர அவயவம் தானே சென்று ஆன்மாவைச் சேரும் என்று கூறின்,—திடம் அன்று கூட ஒருவன் குறி கொண்டு – சரீர அவயவந்தானே ஆன்மாவைக்கூடும் நிலைமை உடைத்தன்று; கர்த்தா ஒருவன் குறிக்கோளாகக் கூட்டுகையாலே ஆன்மாவும் சரீரமும் கூடி வரும்,—பீசம் அவை காரின் முளை வருகின்ற வேனில் குலை ஒன்றி அழியும் – முளைகளானவை கார்காலத்து விதையினின்று முளைத்து வரும் வேனிற்காலத்துத் தகுதி வேறுபட்டு அழியும் அங்ஙனம் போல்,—உறுகின்ற காலம் அவை உடன் நின்று போய் அழியும் உலகு என்றும் நீடி இலதே – பிரபஞ்சமானது சிருஷ்டி திதி சங்காரம் என்று கூறப்பட்ட மூவகைத் தொழில் உற்ற காலத்து உடனே கூடித் தோன்றி நின்று கெடும்; ஆகையால், காலத்தோடும் கூடி வரும் பிரபஞ்சமானது எந்நாளும் நிலைபேற்றை உடைய அல்லவாம் என்றவாறு.

**இச்செய்யுள் பிரபஞ்சம் அழியும் என்பதூஉம் அழிவில்லாத ஆன்மா பிரபஞ்ச பேதத்தில் அல்ல என்பதூஉம் கூறிற்று.** (7)

செய்யுள் — 200

நிறைவெங்கு மாகிலுயிர் நெறிநின்று போய்வருத
லணைவின்ற தாமு டலிலே
குறைவின்றெ லாமுமுள குடகந்த மாகிலவை
விடநின்ற வாறு குறியா

உறைகின்ற மாதவர்க ளுடனின்று போய்வறிதொ
ருடல்கொண்டு மீள்வ துணராய்
மறைதந்த வாய்மைதனி னிறைவின்றி யேயுலகின்
மலைகின்ற தாலு னுரையே

என்பது: *நிறைவு எங்கும் ஆகில் உயிர்* — ஆன்மாவானது பிரபஞ்சம் எங்கும் நிறைந்து நிற்குமாயின், —*நெறி நின்று போய் வருதல் அணைவு இன்றதாம்* — ஆன்மாவானது நித்திய கன்மம் முதலாகிய நெறிகளிலே நின்று அந்த நெறிக்குத் தக்க சுவர்க்காதி பதங்களிலே சென்று புண்ணியத்தைப் புசித்துப் புண்ணிய கன்மம் தொலைந்தால் மீளவும் வரும் என்னும் வேத வாய்மை இல்லையாம்; *அற்றன்று,—உடலிலே குறைவு இன்று எலாமும் உள குட கந்தம் ஆகில்* (எலாமும் உடலிலே குட கந்தம் குறைவு இன்று உள ஆகில்) — எல்லா ஆன்மாக்களும் சரீரத்திலே குடத்தில் கட்டின பூமணம் போல நிறைந்து நிற்கும் என்று கூறுகின்றாய் ஆயின்,—*அவைவிட நின்றவாறு குறியா* — அவ்வான்மாக்கள் சரீரம் கெட்டபோது தான்கெடாமல் உடலைவிட்டு நிற்கிற வழியைக் குறிக்கொள்ளமாட்டா ஆகையால்,—*உறைகின்ற மாதவர்கள் உடல் நின்று போய் வறிது ஓர் உடல் கொண்டு மீள்வது உணராய்* — உடலின்கண் உறைதலைச் செய்யும் மகா யோகிகள் அவ்வுடலை விட்டுப் பரகாயப் பிரவேசம் செய்வதும் வருவதும் அறியாய்,—*மறைதந்த வாய்மை தனில் நிறைவு இன்றியே உலகில் மலைகின்றதால் உன் உரை ஏ* — வேதம் சொன்ன சத்தியமான அர்த்தத்தில் உனக்கு நிறைவு இல்லை ஆதலால் நீ சொல்லுகின்ற சொல்லும் உலகத்தின்கண் மாறுபாடு பொருந்திற்று என்றவாறு.

குடகந்தமாகில் என்பதற்குப் போல என்பதோர் உவமைச் சொல் வருவித்துரைக்க. வறிதோர் உடல் – உயிர் போன மற்றோர் உடல்.

இச்செய்யுள் ஆன்மா எல்லாவற்றினும் சரீரத்தினும் நிறைந்து நிற்கும் என்பதனை மறுத்துக் கூறிற்று. (8)

செய்யுள் — 201

அழிகின்ற தால்வினைக ளாகின்ற வாறெனொரு
வதுமங்கி யான பரிசேல்
ஒழிவின்றி யோதநமு மறவுண்ண நாம்வினைகள்
உறுகின்ற வாற தெனலாம்
கழிகின்ற தாலறிவு வினைதந்தி டாவினைஞர்
கருமங்க ளுடி யுறுவோர்
பழுதின்றி யேயுதவு மதுபண்ப தாகவருள்
பரமன்க ளுகும் வினையே.

என்பது: *அழிகின்றதால் வினைகள் ஆகின்ற வாறு என்* – ஒருவன் செய்த கன்மங்கள் இக்காயம் கெடக் கூடக் கெடும் ஆகையால் கன்மம் மேலைக்கு வந்து உண்டாம்படி எங்ஙனம்?—*ஏரு அது மங்கி ஆன பரிசு ஏல்* – வயலுக்கு வைக்கோலும் தழையும் தனது தூல முறைமை கெட்டுச் சூக்கும முறைமை ஆகி வீரியம் கிடந்து பயிருக்கு நன்மை கொடுக்குமது போலச் செய்த கன்மம் உடலோடு தூல முறைமை கெட்டு ஆன்மாவோடு சூக்கும முறைமையாகிப் பொருந்துமென்று நீ சொல்லின்,—*ஒழிவு இன்றி ஓதநமும் அற உண்ண நாம் வினைகள் உறுகின்ற வாறு அது எனல் ஆம்* – நாம் நாடோறும் உண்ணும் உணவு

செரித்துக் கழிந்த மலம் மீளவும் நமக்கு நன்மையைத் தரும் என்பார் கூறும் கூற்று எனலாம்,—வினை கழிகின்றதால் அறிவு தந்திடா – காயத்தோடும் செய்த வினை கெடுகையால் அவ்வினை ஆன்மாவை அறிந்து கூடமாட்டாது; அது கூடும்படி,—வினைஞர் கருமங்கள் நாடி உறுவோர் பழுது இன்றியே உதவும் அது பண்பது ஆக – தொழில் செய்தோர்க்குச் செய்த தொழில் கண்டு தொழில் கொள்வோர் அவ்வவர் தொழிற்குத் தக்க தொத்துப் பழுதறக் கொடுக்கும் தன்மை போல,—அருள் பரமன்கண் ஆகும் வினையே– ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களை அறிந்து அப்புண்ணிய பாவங்களுக்கு ஈடான புசிப்புக்களைக் கொடுத்தருளிப் புசிப்பிக்குந் தொழில் பரமேசுவரனதாகும் என்றவாறு.

இச் செய்யுள் கன்மமும் ஆன்மாவும் தாமேகூடும் என்பதனை மறுத்துக் கூறிற்று. (9)

செய்யுள் — 202

கருமங்கள் ஞானமது வுடனின்ற லான்மருவு
கதிதங்க லாகு மெனின்நீ
தருமங்க ராகமுத லவைதங்க மேலறிவு
தவிரும்பின் வீடு மணையா
பொருணின்று தேடிவரு பயனுண்டு போகவினை
புரிகின்ற வாற தெனவே
திருநின்ற போகம்வள ரவிசென்று மேவியது
செலவுண்டு சூழ்வ செயலே

என்பது :கருமங்கள் ஞானம் அது உடல் நின்றலால் மருவு கதி தங்கல் ஆகும் எனின் நீ – நித்திய கன்மம்

முதலிய கன்மங்களை ஞானம் கூடி நிற்றலாலே அழிவில்லாமையைப் பொருந்தின வீட்டின்பத்தைப் பொருந்தலாம் என்று நீ கூறின்,—தரும் அங்கு அராகம் முதல்—கன்மங்கள் செய்யுமிடத்துத் திரவியார்ச்சிதம் வேண்டுகையாலே ஆசை முதலியன உண்டாம்,—அவை தங்க மேல் அறிவு தவிரும்—அவ்வாசை முதலிய உண்டாகவே ஆன்மா பாச ஞானமாய் நிற்கும்,—பின் வீடும் அணையா – அந்தப் பாசஞானத்தாலே மோக்ஷமும் அடையாது,—பொருள் நின்று தேடி வரு பயன் உண்டு போக வினை புரிகின்ற வாறு அது என ஏ – ஒருவன் பொருளைத் தேடி அதனால் உண்டாய பயனை அதிலே நின்று புசித்து அந்தப் பொருள் மாளவே மீளவும் பொருள் தேடுதற்கு முயல்கின்ற அதனை ஒப்ப,—வளர் அவி சென்று திரு நின்ற போகம் மேவி அது செல உண்டு சூழ்வ செயல் ஏ–வெகுவான ஆகுதி செய்கையினாலே அவ்வாகுதி சென்ற புண்ணியத்தால் மிக்க சுவர்க்க போகங்களைப் பொருந்தி அப்புண்ணியம் தொலையும் அளவும் புசித்துத் தொலைய மீளவும் புண்ணிய கன்மம் செய்ய நினைக்கின்ற செயல் காண் உன் செயல் என்றவாறு.

இச் செய்யுள் கன்மம் செய்யவே ஞானம் கூடி மோக்ஷம் உண்டாம் என்பதனை மறுத்துக் கூறிற்று.

வேதம் என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் பட்டாசாரியன் மதத்தை மறுத்துக் கூறிற்று. (10)

**எட்டாவது–பட்டாசாரியன் மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—202.

---

# 9. (க) பிரபாகரன் மதம்

*கொச்சகக்கலிப்பா*

*செய்யுள் — 203*

அருந்தவனுஞ் சைமினிபண்
டாரணநூ லாய்ந்தானுய்த்
திருந்துமுல கினிற்கொண்டு
செப்பியநூற் றிறமதனைப்
பரிந்துபிர பாகரன்பட்
டாசானில் வேறாகிப்
புரிந்துரைசெய் நெறியதனைப்
புவனிமிசைப் புகன்றிடுவாம்.

என்பது: *அரிய தவத்தினையுடையன் ஆகிய சைமினி என்னும் மகா இருடி முன் வேதநூலை ஆராய்ந் தானாய் நல்ல உலகின்கண்ணே தான்சொல்லுகின்ற வழிக்குப் பொருந்தத் தக்கவற்றை வேதத்திலே நின்று எடுத்துக் கொண்டு சொல்லப்பட்டவனது சூத்திர முறைமையினைப் பொருந்திப் பிரபாகரன் பட்டாசாரிய னால் சொல்லப்பட்ட பாட்டத்தின் நெறியிலே வந்து அதிற் சிறிது வேறுபடச் சொன்ன வழியதனை எடுத்து யானும் பூமியின் கண்ணே சொல்லா நின்றேன் என்ற வாறு.*

*பிரபாகரன் மதம் உணர்த்துவான் எடுத்துக் கொண் டார். அதனுள் இத்தலைச் செய்யுள்* பிரபாகரன் நெறியைக் *கூறுகின்றேன் என்று கூறிற்று.* (1)

*செய்யுள் — 204*

அருஞ்செயலி னபாவத்தே
அபூர்வமெனு மதுதோன்றித்
தருஞ்செயனின் றழியிற்பின்
பலிப்பிப்ப தாகுமது

வருஞ்செயலொன் றின்றியே
மண்சிலைபோ லாமுத்தி
தருஞ்செயலீ தெனவுணர்ந்து
தாரணிமே லவன்சாற்றும்.

என்பது: அருசெயலின் அபாவத்தே அபூர்வம் என்னும் அது தோன்றி – அரிதாகச் செய்யும் கன்மத்தை ஒழிந்த இடத்திலே அபூர்வம் என்பது ஒன்று உண்டாய்,—தரும் செயல் நின்று அழியில் – அந்தக் கன்மத்திலே அறிவு கூடி நின்று தொழிற்பட்டுக் கன்மம் முடிந்தபொழுது,—பின் பலிப்பிப்பது ஆகும் அது – பின்பு தான் இருந்து பிரயோசனப்படுப்பிப்பதாம்,—வரும் செயல் ஒன்று இன்றியே – அவ்வறிவும் கன்மமும் கூடி வரும் தொழில் ஒன்றும் இன்றியே,—மண் சிலை போல் ஆம் முத்தி தரும் செயல் – வீட்டு நெறியைத் தருகிற செய்தியாவது மண்போலவும் கல்லுப் போலவும் அறிவும் தொழிலும் அற்றிருத்தலாம்,—ஈது என உணர்ந்து தாரணி மேல் அவன் சாற்றும்—மண்போலவும் கல்லுப்போலவும் அறிவும் செயலும் அற்றிருப்பதே முத்தி என அறிந்து பூமியின்கண்ணே இத்தன்மைத்து என்று பிரபாகரன் சொல்லுவான் என்றவாறு.

இச் செய்யுள் இரண்டும் பிரபாகரன் நெறி கூறின. அபூர்வம் என்றொரு குருசொரூபம். அருஞ்செயல் என்பது செய்தற்கரிய சோதிட்டோமம் முதலியவற்றை.

**ஒன்பதாவது — பிரபாகரன் மதம் முற்றிற்று**

பாயிரம் உள்படத் திருவிருத்தம் 204.

---

# 9. (உ) பிரபாகரன் மதமறுதலை

*செய்யுள்* — 205

வேறுபலந் தருவதுதான்
　　வினையென்று வேதங்கள்
கூறவோ ரபூர்வந்தான்
　　கொடுக்குமெனக் கொண்டவுரை
மாறுதரும் மறையோடு
　　முன்பின்றி வந்ததால்
தேறியவிண் பூமுடிமேற்
　　சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்.

என்பது: *வேறு பலம் தருவது தான் வினை என்று வேதங்கள் கூற — முன் ஜனனத்திற் செய்த இருவினையும் இந்த ஜனனத்திலே பல பேதப்பட்டுச் சுக துக்கங்களைக் கொடுக்கும் என்று உன் வேதங்கள் சொல்லா நிற்கவும்,—ஓர் அபூர்வம் தான் கொடுக்கும் என கொண்ட உரை — முன் ஜனனத்தில் செய்த வினைக்கு இந்த ஜனனத்திலே பலத்தைக் கொடுப்பது*

அபூர்வம் என்பது ஒன்று என்று பிராபாகரா! நீ மெய்யாகக் கொண்டு சொல்லப்பட்ட சாத்திரம்,—மாறு தரும் மறையோடு – வேதத்தோடு மறுதலைப்படும்,—முன்பு இன்றி வந்ததால் – செய்த கன்மத்தினுடைய பலம் அநாதியில் இல்லையாய்ப் பின்பு அபூர்வம் என்பது ஒன்றினாலே வந்ததாயின்,—தேறிய விண் பூ முடிமேல் சேர்ந்து மணம் திகழ்ந்தது ஆம் – வாட்டமில்லாத குளிர்ந்த ஆகாயப்பூவுக்கு முன்பு மணமில்லாமல் தலையிலே சேர்ந்த பின்பு மணமுண்டானது என்று சொல்லும் தன்மை போலும் என்றவாறு.

***பிரபாகரன் மதத்தை எடுத்துக்கொண்டார் அதனுள் இச்செய்யுள் அபூர்வம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (1)***

செய்யுள் — 206

ஆனந்தம் கதியென்ன
அறிவழிகை வீடென்கை
ஊனம்பின் னுணர்விழந்தோர்க்
குளதாகு முயர்முத்தி
தானிங்குச் சிவப்பொழியத்
தழல்நிற்கு மாறில்லை
ஞானங்கெட் டுயிர்நிற்கும்
எனுமுறைதான் நண்ணுதால்.

என்பது: ஆனந்தம் கதி என்ன அறிவு அழிகை வீடு என்கை ஊனம் – பரமானந்தமே வீடு என்று வேதங்கள் சொல்லவும் நீ ஆன்மாவினது அறிவு கெட்டு மண்போலவும் கல்லுப்போலவும் ஆதல் வீட்டின்பம் என்று கூறியது குற்றமுடைத்து; அப்படி அறிவு

கெட்ட ஆன்மா முத்தியடைவான் ஆயின்,—பின் உணர்வு இழந்தோர்க்கு உளது ஆகும் உயர் முத்தி – மூர்ச்சை வந்து அறிவு கெட்டவர்களுக்கும் மிக்க வீட்டின்பம் உண்டாக வேண்டும்; அஃதன்றியும்,— தான் இங்கு சிவப்பு ஒழிய தழல் நிற்கும் ஆறு இல்லை— இவ்விடத்து நெருப்பானது தன் சொரூபமாகிய சிவப்புக் கெட்டால் தானும் கூடக்கெடுதல் அன்றி அந் நெருப்பு நிற்கும்வழி இல்லையாம்; அதுபோல,—ஞானம் கெட்டு உயிர் நிற்கும் எனும் உரை தான் நண்ணாது ஆல் – ஆன்மாவானது தன் சொரூபமாகிய அறிவு கெட்டால் தானும் கூடக் கெடுதலன்றி ஆன்மா நின்று வீட்டின்பத்தை அனுபவிக்கும் என்று சொல்லும் சொல் பொருந்தாது; ஆகையால், அறிவு கெட்டுக் கல்லுப்போலவும் மண்போலவும் ஆய் முத்தியடையும் என்னுமது குற்றமுடைத்து என்றவாறு.

உணர்வு இழந்தோர் – மூர்ச்சித்தோர். உணர்வு இழந் தோர்க்கும் என உம்மை விரிக்க. புவனம் என்பதனைக் கடையிலும் கூட்டுக.

இச் செய்யுள் ஆன்மா அறிவுகெட்டு முத்தியடையும் என்பதனை மறுத்துக் கூறிற்று.

இச் செய்யுள் இரண்டும் பிரபாகரன் மதத்தை மறுத்துக் கூறின. (2)

**ஒன்பதாவது — பிரபாகரன் மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—206.

---

# 10. (க) சத்தப் பிரமவாதி மதம்

**கலிவிருத்தம்**

*செய்யுள்* — 207

உரையா னதுமை யலினு லுலகாம்
புரையோ ருணரும் பொருள்பொய் யிதனை
விரையா துணரும் அதுவீ டெனவே
வரையா துரைவா திவகுத் தனனே.

என்பது: *உரை ஆனது மையலினால் உலகு ஆம்— சத்தமானது மயக்கத்தினாலே பிரபஞ்சம் ஆம்,—புரை யோர் உணரும் பொருள் பொய் – அறியாதார் அர்த்த மும் சத்தத்துக்கு உண்டு என்று விசாரிப்பது மெய் யல்லவாம்,—இதனை விரையாது உணரும் அது வீடு எனவே – சத்தமே பிரமமாவது அர்த்தமில்லை என்று அறியும் அறிவே வீட்டின்பம் ஆவது என்று,—வரை யாது உரை வாதி வகுத்தனன் ஏ – சத்தப் பிரமவாதி பிரபஞ்ச பேதத்தை எல்லைப்பட அறியாது சத்தமே உள்ளதென்று வகுத்துச் சொன்னான் என்றவாறு.*

*சத்தப்பிரமவாதி மதம் கூறுவான் எடுத்துக் கொண்டார் அதனுள் இச் செய்யுள் சத்தமே பிரபஞ்சமாக உள்ளது அர்த்தமில்லை என்பதனையும், அந்தச் சத்தமே பிரமம் என்பதனையும் கூறிற்று* (1)

செய்யுள் — 208

பரிணு மம்விவர்த் தநமா யமதில்
தருமா முலகுள் ளதுசத் தமதே
பொருளா வதுசொன் னலமல் லவெனில்
மருவா துபொருட் டிறமற் றிலையே.

என்பது: *பரிணுமம் விவர்த்தனம் மாயம்—சத்தத்தாலே பரிணமித்து மிகவும் உண்டாதலே மயக்கமாம்,—அதில் தரும் ஆம் உலகு – அந்த மயக்கத்திலே உலகத்தை உண்டாக்கப் படுவதும் ஆகையால்,—உள்ளது சத்தம் அது ஏ – உள்ளதாகக் காணப்பட்டது சத்தம் ஒன்றுமே,—பொருளாவது சொல் நலம்—சத்தத்துக்கு அர்த்தம் என்று சொல்லப்பட்டது அச் சத்தத்தின் நன்மையே ஆகும்,—அல்ல எனில்—சத்தத்தின் நன்மை அல்ல அர்த்தம், அர்த்தத்தின் நன்மையே சத்தம் என்று கூறின்,—மருவாது பொருள் திறம் மற்று இலை ஏ—சத்தம் கூடாது ஒரு பொருள் உண்டாவது இல்லை; ஆதலால் சத்தத்தின் நன்மையே அர்த்தமாவது என்றவாறு.*

*மற்று வினைமாற்று.* சொன்னலம் – பொன்னே பணியென்கை.

*இச் செய்யுள் சத்தமே பிரபஞ்சமாவதும். சொன்னலமாவதும் என்பது கூறிற்று..* (2)

செய்யுள் — 209

பூமா வெனவே யுரையும் பொருளும்
ஆமாம் பொருளொன் றிலணைந் திலதால்
நாமா தரவெய் துசொனன் கருவாய்த்
தாமாம் பொருணெற் பொரிதா னெனவே.

என்பது: *பூ மா எனவே உரையும் பொருளும் ஆம்*—பூ எனவும் மா எனவும் இரண்டு சொல் உளவாய் அவற்றிற்குப் பொருள் கூறுமிடத்துப் புட்பம் என்றும் இலக்குமி என்றும் கூறப்படும்,—*ஆம் பொருள் ஒன்றில் அணைந்திலது ஆல்*—அப்படிக் கூறப்படும் பொருள் ஒன்றிலே சத்தம் அடங்காமல் பூமி எனவும் விலங்கு எனவும் சொல்லப்பட்ட பொருளையும் கொள்ளப்படும் ஆதலால்,—*நாம் ஆதரவு எய்து சொல் நன் கருவாய் தாம் ஆம் பொருள்*—நாம் விருப்பத்தை எய்திக் கொண்டு சொல்லும் சொல்லே கருப்பமாகக் கொண்டு பல பொருள்களும் உண்டாம், அஃது என்போல? என்னில்,—*நெல் பொரி தான் என ஏ*—நெல்லில் தோன்றும் பொரிக்கு நெல்லே கருப்பம் ஆனாற் போல அர்த்தத்துக்குச் சத்தமே கருப்பமாம் என்றவாறு.

பொரிக்கு வன்ன பேதமும் நாமபேதமும உண்டாயினும் நெல்லே அதற்குக் கருப்பம் ஆனாற்போல, அர்த்தம் பல பேதப்படினும் சத்தமே கருப்பமாம் என்பது கருத்து.

இச் செய்யுள் ஒரு சத்தம் பல அர்த்தத்தைக் கொண்டு நிற்கையால் சத்தமே பிரமம் என்பது கூறிற்று. (3)

செய்யுள் — 210

சொல்வந் தெழலும் பொருடோன் றுதலால்
சொல்லே பொருளென் றுதுணிந் திடுநீ
சொல்லும் பொருளும் முடனின் றதெனில்
சொல்லும் பொருளின் றுசொனின் றதுவே.

என்பது: *சொல் வந்து எழலும் பொருள் தோன்றுதலால் சொல்லே பொருள் என்று துணிந்திடு நீ — யாதொரு சொல் தந்த தாலோஷ்டங்களாலே உண்டாக அந்தச் சொல்லிலே பொருளும் உண்டாம் ஆதலால் சொல்லே பிரதானம் என்று நீ தெளிந்திடுவாயாக, அற்றன்று,—சொல்லும் பொருளும் உடன் நின்றது எனில் — சொல்லும் பொருளும் உடன் நிற்கையால் பொருளும் தனியே ஒரு முதல் என்று கூறின்,—சொல்லும் பொருள் இன்று சொல் நின்றதுஏ — ஒரு சொற்குப் பொருளுரைக்கு மிடத்துப் பொருளும் சொல்லாம் ஆதலால், சொல்லொழிந்து பொருளென்று ஒன்று உண்டாவதில்லை; அதனால், சத்தமே பிரமம் என்று கொள்வாயாக என்றவாறு.*

*இச் செய்யுள் சத்தமே அர்த்தமாவது என்று கூறிற்று.*

*உரை என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும்* சத்தப்பிரமவாதி மதம் *கூறிற்று.* (4)

**பத்தாவது—சத்தப்பிரமவாதி மதம் முற்றிற்று**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—210.

---

# 10(உ)சத்தப்பிரமவாதிமதமறுதலை

செய்யுள் — 211

உரையா னதுமை யலினு லுலகேல்
உரையா யொருமை யலுமுள் ளதென
வரையா துணரும் மதுவண் கதியேல்
வரையா மறையோ டுமலைந் தனையே.

என்பது: *உரையானது மையலினால் உலகேல் — சத்தமானது பரிணாம விவர்த்தனம் ஆகிய மயக்கத்தினாலே பிரபஞ்சம் ஆம் என்று கூறினாய்; அங்ஙனமாயின்,—உரையாய் ஒரு மையலும் உளது என — சத்தமே சர்வமுமாம் என்பதன்றிச் சத்தத்திலே நின்று உண்டாகத்தக்கதொரு மயக்கமும் உண்டென்று சொல்லாய்,—வரையாது உணரும் அது வண் கதி ஏல்— அஃதன்றியும், பொருளை வரையாமல் சத்தத்தைப் பிரமம் என்று குறித்துணர்தலே முத்தி என்று கூறினாய்; அங்ஙனமாயின்,—வரையா மறையோடு மலைந்தனை ஏ-வேதத்திற் சொல்லப்பட்ட கன்மத்தையும்*

ஞானத்தையும் செய்வதும் உணர்வதும் செய்யாமல் முத்தி அடையும் என்று கூறுகையால் வேதத்தோடு மறுதலைப்பட்டுக் கூறினாய் என்றவாறு.

வேதம் சொன்னபடி கன்மம் செய்தானாயினும் ஞானம் உணராதார்க்கு முத்தியில்லை என்று வேதாகம சாத்திர புராணங்கள் சொல்லவும், சத்தமே பிரமம் என்று அறியும் அறிவால் முத்தி அடையலாம் என்பது மாறுபாடு என்க. விவர்த்தனம் - புரளல்.

சத்தப் பிரமவாதியை மறுப்பான் எடுத்துக் கொண்டார் அதனுள் இச் செய்யுள் சத்தமே பிரபஞ்சம் என்பதனையும் சத்தத்தை அறிதலே முத்தி என்பதனையும் மறுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 312

அருவம் முரையா தலினவ் வுருவாய்
மருவும் பரிணா மமறந் திடுமாம்
பருகுந் ததியா னதுபா லதெனில்
உருவம் மதுவா யழியும் முரையே.

என்பது: அருவம் உரை ஆதலின் அ உரு ஆய் மருவும பரிணாமம் மறந்திடும் ஆம் — அந்தச் சத்த மானது அரூபம் ஆதலால் பிரபஞ்ச ரூபமாய்ப் பரிண மித்துப் பொருந்துதலை நினைக்க மாட்டாதாம்; அற் றன்று,—பருகும் ததி ஆனது பால் அது எனில் — குடிக்கும் பகுதியான பாலானது இன்னும் பகுதி யாகிய தயிராய் உருப் பெற்றாற் போல அருவமாகிய சத்தம் உருவமாகிய பிரபஞ்சமாய் உருப்பெறும் என்று நீ கூறின்,—உருவம் அது ஆய் அழியும் உரையே —

அத்தயிர் மீளவும் பாலாகும் தன்மையின்றித் தயிராய் நின்று அழியும் தன்மை போலச் சத்தமும் பிரபஞ்சமாய் உருப்பெற்றால் மீளவும் சத்தமாகும் தன்மையின்றிப் பிரபஞ்சமேயாய் நின்று அழியும் என்றவாறு.

இச்செய்யுள் சத்தமே உருப்பெற்றுப் பிரபஞ்சம் ஆம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (2)

செய்யுள் — 213

ஆயம் முடனந் தவிவர்த் தநமு
மாயவ் வுளதென் றுசொலெவ் விடமும்
ஆய்நின் றமையின் னுரையின் னலமும்
ஆயும் பொருளுக் கறிநா மமதே.

என்பது: ஆயம் உடன் அந்த விவர்த்தநமும் மாய உளது என்று சொல்—சத்தத்தின் வரவு பிரபஞ்சமாய் வருதலும் பல ரூபங்களாய்ப் பரிணமித்து வருதலும் செய்கையால் சத்தத்துக்கு இப்போது அழிவுண்டாதல் வேண்டும் என்று சொல்லாய்; அஃதன்றியும்,— எ இடமும் ஆய் நின்றமையின் உரையின் நலமும் ஆயும் பொருளுக்கு அறி நாமம் அது ஏ – சத்தத்துக்கு நன்மை என்ற பொருள் எவ்விடமுமாய் நின்றமையின் அப்பொருளை ஆராயுமிடத்து அப் பொருளுக்குப் பெயர்ச்சொல்லாய் நின்று பொருளை விளக்குவதே நன்மை என்றறிவாயாக என்றவாறு.

எனவே, சத்தத்தினும் அர்த்தமே சிறப்பையும் நிலைபேற்றையும் உடைத்து என்பது கருத்து.

பரிணாமமாகின் நெருப்பு என்றபோது நெருப்பாய் எழுந் திருக்க வேண்டும்; விருத்தியாகின் நெருப்பு என்றபோது வாய் வேகவேண்டும்; ஆதலால், தாதான்மியமும் அன்று, ததுற்பத்தியுமன்று; இடுகுறிப்பெயராம் என்றது எனக் கொள்க. (3)

செய்யுள் — 214

உரைபோற் பொருளுக் குருவின் மையினவ்
உரையே பொருளென் றனையின் றரியென்
உரையே கவிமா லவனுக் குளதாம்
உரையாய் கவியா கவொருமா லினையே.

என்பது: உரைபோல் பொருளுக்கு உரு இன்மையின் அ உரையே பொருள் என்றனை – சத்தத்தைப் போல அர்த்தத்திற்கும் உருவம் இல்லாமையினால் சத்தமே அர்த்தம் என்று கூறினாய்,—இன்று அரி என் உரையே கவி மாலவனுக்கு உளது ஆம் உரையாய் கவி ஆக ஒரு மாலினை ஏ – இன்று அரியென்று சொல்லப்பட்ட சத்தம் திருமாலினுக்கும் குரங்குக்கும் மற்றும் பல பொருட்கும் பெயராகச் சொல்லலாம்; அதனைப் பொருட்டன்மையிலே நின்றும் சத்தம் கொள்ளாமல் சத்தத்தின் தன்மையிலே நின்றும் பொருள் கொள்ளலாமாகில், திருமாலைக் குரங்காகச் சொல்லுவாயாக என்றவாறு.

எனவே, சொல் வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் உண்டு என்பது ஆயிற்று. இதனால், சத்தமும் பொருளும் ஒன்றுபட்டிருந்தாலும் இரண்டும் வேறென்றே காண்க என்றதாம.

இச் செய்யுள் சத்தத்தின் நன்மையே அர்த்தம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (4)

செய்யுள் — 215

நெல்லிற் பொரியா வதுநீ டழலில்
சொல்லிற் பொருளொன் றொடுதொக் கிடலால்
கல்வித் திறமா முரைகாட் சியினல்
மல்லற் பொருள்சா லவளந் தருமே.

என்பது: நெல்லில் பொரி ஆவது நீடு அழலில் — பொரிக்கு நெல்லே கர்ப்பம் ஆனாற்போலப் பொருட் கெல்லாம் சொல்லே கர்ப்பம் என்று கூறினாய்; அங்ஙன மாயின், நெல்லு மிக்க நெருப்பினைச் சேர்ந்தால் பொரி ஆவது ஆதலால் நீ கூறியது உவமையன்று,—சொல்லில் பொருள் ஒன்றொடு தொக்கிடலால் கல்வி திறம் ஆம் உரை காட்சியினல் மல்லல் பொருள் சால வளம் தரும் ஏ — பூ மா முதலிய ஒரு சொல்லிலே பல பொருள் கூடி நிற்றலால் அதனை அறியக் கற்பதே சத்தம்; அப் பொருளைப் பிரித்து அறியப்பட்டால் நல்ல வளப்பத்தினை யுடைய பொருள் தானே நின்று மிகவும் நன்மையைத்தரும் ஆதலால் நீ கூறிய சத்தத்தினும் அர்த்தமே சிறப்புடைத்து என்றவாறு.

இச் செய்யுளும் சத்தத்திலும் அர்த்தமே சிறப்புடையது என்று கூறிற்று. (5)

செய்யுள் — 216

முன்கண் டபொருட் பெயரா தலினல்
பின்கண் டபிழம் புணரும் பெயரால்
நன்கண் டபொருட் கொருநா சமதின்
றென்கண் டனைகா ரணமின் றழிவே

என்பது: *முன் கண்ட பொருள் பெயர் ஆதலி னால் – முன் அறிவினால் காணப்பட்ட அர்த்தமே சத்த மான பெயராய் நிற்கையாலும்,—பின் கண்ட பிழம்பு உணரும் பெயரால் – பின் காணப்பட்ட உருக்களைச் சத்தமான பெயரைக் கொண்டு அறிகையினாலும்,— நன் கண்ட பொருட்கு ஒரு நாசம் அது இன்று – நன் ருகக் காணப்பட்ட அர்த்தத்துக்குக் கேடு இல்லையாம்; எனவே, சத்தத்துக்குக் கேடு உண்டாம்,—என் கண்டனை காரணம் இன்று அழிவு ஏ – காரியமாகிய சத்தம் அழிதலே அன்றிக் காரணம் ஆகிய அர்த்தம் அழியும் என்று சொல்லுகை எங்கே? அறிந்தாய் என்றவாறு.*

*எனவே, அர்த்தம் காரணம் என்றும், பிரதானம் என் றும் ஆயிற்று. என் கண்டனை என்பது – எது கொண்டு கண்டாய் என வினவியது.*

*இச் செய்யுளும் அர்த்தமே பிரதானம் என்று கூறிற்று.* (6)

செய்யுள் — 217

பொருளிந் திரியம் முணர்வோ டுபுமான்
இருளின் றியிடும் மொளியித் தனையும்
மருவும் பொழுதில் வருஞா னமதின்
ஒருவும் பெயரத் தமுதித் திடுமே.

என்பது: *பொருள் இந்திரியம் உணர்வோடு புமான் இருள் இன்றி இடும் ஒளி இத்தனையும் மருவும் பொழுதில் வரும் ஞானம் – ஆன்மா ஒரு விடயத்தை அறியும்போது அறியப்படுபொருளும், அதனைக் காட்டும் இந்திரியமும், அதனோடு கூடி உணரும்*

அந்தக்கரணங்களும், அவற்றிற்கு மூலமாகிய பிரகிருதியும், அவற்றை வெளியாகத் தோற்றுவிக்கிற திரோதான சத்தியுமாக இத்தனையும் கூடும் அளவில் ஆன்மாவுக்கு அறிவு உண்டாம்,—அதின் ஒருவும் பெயர் அத்தம் உதித்திடும் ஏ – அவ்விடத்தில் பெயர் நீங்கப்படும் பொருள் தோன்றப்படும் ஆதலால் அர்த்தமே பிரதானம் என்றவாறு.

இருளின்றி யிடும் ஒளி என்பது – கன்மத்துக்கு ஈடான புசிப்பில் செலுத்துகையால் திரோதாயி ஒளி என்றாயிற்று. ஒருவும் – நீங்கும். இதுவும் அது.

ஆண்பனையில் குரும்பை தோன்றினது பெரியோர் வசனமாகிய சத்தத்திலே யன்றோ? என்னில், அவர் சிவோகம் பாவனை பலத்தினால் உண்டானதொழியக் கேவலம் சத்தத்தில் உண்டானது அன்று; உண்டாகில் எல்லா வசனங்களிலும் உண்டாக வேண்டும் எனக் கொள்க. (7)

செய்யுள் — 218

அத்தந் தெளிதற் கொளியா னதுபோல்
சத்தம் பொருடா னறிதற் குளதாம்
நித்தம் மதுவன் றுரைநின் றழியும்
சித்தன் னொருவன் உரைசெய் தனனே.

என்பது: அத்தம் தெளிதற்கு ஒளி ஆனது போல் – இருளின்கண் கிடக்கும் பல பொருள்களைத் தெரிதற்குக் கைவிளக்கு உண்டான தன்மையைப் போல,—சத்தம் பொருள்தான் அறிதற்கு உளது ஆம் – பல பேதப்பட்ட பொருள்களையும் அறிதற்குச்

*சத்தம் உண்டானதாம்,—நித்தம் அது அன்று உரை நின்று அழியும் — அந்தச் சத்தம் நிலை பேறுடைய தன்றாய்ப் பொருளாகிய காரணம் இல்லையாயின் தானும் காரியப்படாது அழியும் ஆகையால்,—சித்தன் ஒருவன் உரை செய்தனன் ஏ — இந்தச் சத்தம் சித்தனாகிய பரமேசுவரனாலே உண்டாக்கப்பட்டதாதலால், அதனைப் பிரமம் என்று நீ சொல்லக் கடவை அல்லை என்றவாறு.*

*இச் செய்யுளும் பிரமம் பரமேசுவரன் அல்லது சத்தம் பிரமமல்ல என்று மறுத்துக் கூறிற்று.*

*உரையானது என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் சத்தப்பிரமவாதி மதத்தை மறுத்துக் கூறிற்று.* (8)

## பத்தாவது — சத்தப்பிரமவாதி மதமறுதலை முற்றிற்று.

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—218.

---



# 11. (க) மாயாவாதி மதம்

*செய்யுள்* — 219

நானே பிரம மென்றுரைத்து
ஞாலம் பேய்த்தே ரெனவெண்ணி
ஊனே புகுந்து நின்றுயிர்கட்
குபதே சங்க ளுரைத்துவரும்
மானு மதிகே டனுமாய
மாயா வாதி பேயாகித்
தானே யுரைக்கு மந்நூலின்
உண்மை தன்னைச் சாற்றுவாம்.

என்பது: *ஆன்மாவும் சிவமும் என்னுது அகம் பிரமம் என்று சொல்லிப் பிரபஞ்சம் எல்லாம் கானற் சலம் போலப் பொய் எனக் கருதிக் கருப்பாசயம் நீங்காமல் நின்று தான் மற்றுள்ள ஆன்மாக்களுக்கு உபதேசங்கள் சொல்லித்திரிகின்ற நாணமில்லாத அறிவீனன் ஆகிய மாயாவாதி பித்தேறி வேதாகமங்களுக்குப் பொருந்தாமல் தனக்குப் பொருந்தத் தானே சொல்லிக் கொள்ளும் அந்த நூலினது உண்மையின் தன்மையைச் சாற்றுவாம் என்றவாறு.*

*ஊனே புகுந்து நின்று என்பது – தான் பிரமம் ஆயின் ஊனிற் புகுத வேண்டா என்பது கருதி என்க. உயிர்கட்கு உபதேசங்கள் உரைத்து வரும் என்பது – சர்வ ஆன்மாக்களும் தன்னைப்போலப் பிரமம் ஆகையால் உபதேசம் சொல்ல வேண்டா என்பது கருதி என்க. பேய்த்தேர் – கானற்சலம்.*

*சத்தப்பிரமவாதியை நிஷேதமாக்கி, மாயாவாதி மதம் கூறுவான் எடுத்துக் கொண்டார். அதனுள், இச் செய்யுள் அவன் இத்தன்மையன் என்பது கூறிற்று.* (1)

செய்யுள் — 220

அறிவா யகில காரணமாய்
அநந்தா நந்த மாயருவாய்ச்
செறிவா யெங்கு நித்தமாய்த்
திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமாய்க்
குறிதான் குணங்க ளொன்றின் றிக்
கூறும் வேதந் தனக்களவாய்ப்
பிறியா வநுபூ திகந்தனக்காய்
நின்ற தந்தப் பிரமந்தான்.

என்பது: *அறிவு ஆய் அகில காரணம் ஆய் அனந்த ஆனந்தம் ஆய் அருஆய் செறிவுஆய் எங்கும் நித்தம் ஆய் திகழ்ந்த சத்து ஆய் சுத்தம் ஆய்–ஞானமே சொரூபமாய், பிரபஞ்சத்துக்குக் காரணமாய், எல்லையில்லாத ஆனந்தமாய், உருவமின்றி அருவமாய், எங்கும் நிறைந்து நிற்பதாய், கேடிலாதாய் விளங்கும் சத்தாய், அசுத்தத்துடன் கூடாது சுத்தமேயாய்,— குறிதான் குணங்கள் ஒன்று இன்றி கூறும் வேதம்*

தனக்கு அளவு ஆய் பிறியா அநுபூதிகம் தனக்கு ஆய் நின்றது அந்த பிரமம் தான் — ஓர் அடையாளமும் ஓர் குணமும் இல்லையாய்ச், சொல்லத்தக்க வேதங்கட்கு வரம்பாய், நீக்கமில்லாத அநுபூதி தனக்கே யுடைத்தாய் நின்றது உயர்ந்த பிரமம் என்றவாறு.

பிறியா அநுபூதிகம் தனக்காய் என்றதனால் ஞாதுரு ஞான பேதமில்லை யென்பதாயிற்று.

இச் செய்யுள் பிரமநிலை கூறிற்று. (2)

செய்யுள் — 221

ஒன்று மிரவி பலபாண்டத்
துண்டா முதகத் தங்கங்கே
நின்றாற் போல உடறோறும்
நிகழ்ந்து நிற்கும் பொருண்மேற்கண்
சென்றாற் போலப் புலன்களுக்கும்
சிந்தை தனக்கும் தெரிவரிதாம்
என்றாற் காட்சி முதலாய
இருமூன் றளவைக் கெட்டாதால்.

என்பது: ஒன்று ஆம் இரவி பல பாண்டத்து உண்டாம் உதகத்து அங்கு அங்கே நின்றால் போல — ஓர் ஆதித்தன் ஆகாசத்திலே நிற்கப் பல பாத்திரங்களிலும் உண்டாகிய ஜலங்களிலே தனித்தனியே தோன்றுமாறு போல,—உடல் தோறும் நிகழ்ந்து நிற்கும் பொருள்—ஏகமாகிய பிரமம் உடல்கள் தோறும் தனித்தனியே தோன்றப்பட்டு நிற்கும்,—மேற்கண் சென்றால் போல புலன்களுக்கும் சிந்தை தனக்கும்

*தெரிவு அரிதாம் — அவ்வாதித்தன் பாத்திர உதகங்களில் அகப்படாமல் மேற்பட இயங்குகின்றாற் போல, அந்தப் பிரமமும் உடலில் அகப்படாது மேற்பட்டு இந்திரியங்களுக்கும் கரணங்களுக்கும் அறிதற்கு அரிதாய் நிற்கும்,—என்றால் காட்சி முதலாய இரு மூன்று அளவைக்கு எட்டாதால் — இப்படிச் சொல்லப்படுகையாலே காட்சி முதலாய ஆறு அளவைக்கும் தெரிதற்கு அரிதாம் என்றவாறு.*

*ஆல் — அசை பொருண்மேற்கண்—பாத்திரத்திடத்துக் கண்ணுனது ஓடிக் கண்டாற்போல அறிவுகளுக்கு இராவணன் பலதலையும் கொண்டு வியாபரித்தாற் போலவும், ஆயிரம் பண முடியை உடைய அநந்தனைப் போலவும், ஒருவனுமே பல முகமாய் வழங்கா நின்றான். இரு மூன்று அளவை என்றது — பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம்.*

*இச் செய்யுள் ஆன்மா என்று ஒன்றில்லை; சர்வமும் பிரமமே என்று கூறிற்று.* (3)

செய்யுள் — 222

இருளிற் பழுதை யரவெனவே
இசைந்து நிற்கு மிருங்கதிர்கள்
அருளப் பழுதை மெய்யாகி
அரவும் பொய்யா மதுவேபோல்
மருளிற் சகமுஞ் சத்தாகி
மருவித் தோன்று மாசில்லாத்
தெருளிற் சித்தே சத்தாகும்
பித்தாஞ் சகத்தின் செயலெல்லாம்.

என்பது: *இருளில் பழுதை அரவு எனவே இசைந்து நிற்கும் இரு கதிர்கள் அருள பழுதை மெய் ஆகி அரவும் பொய் ஆம் அது ஏ போல் — இருளின் கண் புற்றருகே ஒரு பழுதை கிடப்ப அதனைக் கண்டோர் பாம்பு எனவே பொருந்தி நிற்கும் அளவில் ஆதித்த கிரணங்கள் தோன்றப் பழுதை மெய்யாய்ப் பாம்பு பொய்யாம் அது போல,—மருளில் சகமும் சத்து ஆகி மருவி தோன்றும் — பொய்யாகிய பிரபஞ்சத்தினுடைய செயலும் மயக்கத்தாலே மெய்யாகப் பொருந்தித் தோன்றும்,—மாசு இல்லா தெருளில் சித்தே சத்து ஆகும் பித்து ஆம் சகத்தின் செயல் எல்லாம் — மயக்கமற்ற பிரமஞானத்தாலே விளங்கின காலத்துப் பிரமமே உண்மையாகப் பிரபஞ்சத்தின் செயலெல்லாம் பொய்யாம் என்றவாறு.*

இச்செய்யுள் பிரபஞ்சம் பொய் என்பது *கூறிற்று*(4)

*செய்யுள்* — 223

உலகந் தானும் நிருவசனத்
துண்டா மின்றே லுதியாது
நிலவி யுண்டே லழியாது
நிற்ப தாகு மித்தையால்
இலகு சுத்தி கனல்சேர
வின்றும் வெள்ளி நின்றதாம்
குலவு சகமு மவிகாரம்
பரமார்த் தத்திற் கொள்ளாதால்.

என்பது: *உலகம் தானும் நிருவசனத்து உண்டாம் — பிரபஞ்சமானது வசனாகிதமான பிரமத்திலே நின்றும் தோன்றும்,—இன்றேல் உதியாது — அந்தப்*

பிரமத்தினின்றும் தோன்றுதாகில் வேறு ஒரு உபாதானம் உண்டாய்ப் பிரபஞ்சம் தோன்றுவதும் இல்லை,—நிலவி உண்டேல் அழியாது நிற்பது ஆகும் — பிரபஞ்சத்தை ஒருவர் தோற்றுவிக்காமல் தானே பிரகாசித்து உண்டாமாகில் அதுவும் ஒரு முதலாய் அழியாது நிற்கத் தகும்; அது அழியக்காணப்படும்: அஃது யாங்ஙனம்? என்னில்,—மித்தையால் — பிரபஞ்சம் மெய் போலத் தோன்றினும் பொய்யாகை நிச்சயமாகையால்; அஃதன்றிப் பிரபஞ்சம் மெய் போலத் தோன்றிப் பிரகாசிக்கிறபடியும், பாரமார்த்தத்தில் பொய்யாகிறபடியும் எங்ஙனம்? என்னில்,—இலகு சுத்தி கனல் சேர இன்றும் வெள்ளி நின்றதாம் குலவு சகமும் அவிகாரம் பரமார்த்தத்தில் கொள்ளாதால் — வெள்ளி போலப் பிரகாசிக்கும் இப்பியையும் வெள்ளியையும் கனலில் இட்டால் இப்பிகெட்டு வெள்ளி நின்றாற்போல மெய் போலத் தோன்றும் பிரபஞ்சமும் அவிகாரமாகிய பிரமமும் பரமார்த்தத்தில் நிரூபணம் செய்தால் அவிகாரமாகிய பிரமமே மெய்யாய்ப் பிரபஞ்சம் பொய்யாகக் கொள்ளப்படும் என்றவாறு.

அவிகாரமும் என உம்மைவிரிக்க. திருவசனம், அவிகாரம் என்பன பிரமத்துக்கு ஓர் ஆகுபெயர். சுத்தி—இப்பி, கிளிஞ்சல்.

இச் செய்யுள் பிரபஞ்சம் தோன்றும் முறைமையும், பிரபஞ்சம் பொய் என்பதும் கூறிற்று. (5)

*செய்யுள் — 224*

தாங்கு முலகுக் குபாதானம்
சத்தாம் சிலம்பி நூறன்பால்
வாங்கி வைத்துக் காப்பதுபோல்
வையமெல்லாம் தன்பக்கல்
ஓங்க வுதிப்பித் துளதாக்கி
நிறுத்தி யொடுக்கத் திலதாக்கும்
ஆங்கு வந்த வாறதனுல்
சத்தாஞ் சகத்தி னமைவெல்லாம்.

என்பது: *தாங்கும் உலகுக்கு உபாதானம் சத்து ஆம் – ஆதாரமாகிய பிரபஞ்சத்துக்கு உபாதானம் சத்தாகிய பிரமமே ஆம்; அஃது என்போல்? என்னில்,—சிலம்பி நூல் தன் பால் வாங்கி வைத்து காப்பது போல் வையம் எல்லாம் தன் பக்கல் ஓங்க உதிப்பித்து உளது ஆக்கி நிறுத்தி ஒடுக்கத்து இலது ஆக்கும் – சிலம்பியானது நூலைத் தன்னிடத்திலே நின்றும் தோற்றுவித்து அந்த நூலை ஓரிடத்திலே உண்டாக்கிவைத்துப் பாதுகாத்துப் பின்பு அந்த நூல் அழியும்படி தான் நீங்கும் தன்மை போலப் பிரமமும் பிரபஞ்ச பேதம் எல்லாவற்றையும் தன்னிடத்திலே நின்றும் விளங்கத் தோற்றுவித்தும், அவற்றை உள தாக இரக்ஷித்தும், பின் இல்லையாம்படி சங்கரித்திடும்,—ஆங்கு வந்த ஆறு அதனுல் சத்து ஆம் சகத்தின் அமைவு எல்லாம்–அப்படிப் பிரமத்திலே தோன்றி நின்று கெடுகையால் பிரமத்தினுடைய நியமமே பிரபஞ்சத்தின் செயலெல்லாம் என்றவாறு.*

*இச் செய்யுள் பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றி நின்று கெடும் என்பதூஉம், பிரபஞ்சம் அநித்தியம் என்பதூஉம் கூறிற்று.* (6)

செய்யுள் — 225

மன்னும் பிரமம் தனின்வானாய்
வானின் வளியா யந்தவளி
தன்னி னழலா யழலின்பால்
சலமாய்ச் சலத்திற் றரணியாய்ச்
சொன்ன விதனின் மருந்தாகித்
தோற்று மருந்தி லன்னமாய்
அன்ன மதனிற் றுவக்காதி
ஆறு தாது வாயினவால்,

என்பது: *மன்னும் பிரமம் தனின் வான்ஆய் வானின் வளியாய் அந்த வளிதன்னின் அழலாய் அழலின்பால் சலமாய் சலத்தில் தாரணியாய் — கேடில்லாத பிரமத்திலே ஆகாசம் தோன்றி ஆகாசத்திலே வாயுத் தோன்றி அந்த வாயுவிலே அக்கினிதோன்றி அக்கினியிலே ஜலம் தோன்றி ஜலத்திலே பிருதிவி தோன்றி,—சொன்ன இதனில் மருந்து ஆகி தோற்றும் மருந்தில் அன்னம் ஆய் அன்னம் அதனில் துவக்கு ஆதி ஆறு தாது ஆயின ஆல் — கூறிய இப் பிருதிவியிலே ஓஷதியாய்த் தோற்றிய ஓஷதியிலே உணவாய் அவ்வுணவிலே காயப் பகுதிப்பட்ட தாதுக்கள் ஆறும் உண்டாயின என்றவாறு.*

*தாதுக்கள் ஆறுவன — தோல், எலும்பு, நரம்பு, மச்சை, சோரி, சுக்கிலம் என்பவை. இவை காயத்தின் பகுதிக்கு ஓர் பொதுப் பெயர்.*

*இச் செய்யுள் பிரமத்திலே நின்றும் பிரபஞ்சம் தோன்றிவரும் முறைமை கூறிற்று.* (7)

செய்யுள் — 226

ஆறு தாதுக் களுங்கூடி
வந்த கோச மன்னமயம்
மாறில் பிராண கோசமயம்
மன்னு மதனின் மனோமயந்தான்
வேறு வரும்விஞ் ஞானமயம்
மேவு மதனி னதுதன்னில்
கூறி வருமா நந்தமயங்
கோச மயம்பின் கூடியதால்.

என்பது: *ஆறு தாதுக்களும் கூடி வந்த கோசம் அன்னமயம்* — அவ்வாறு தாதுக்களும் கூடி உண்டாகியது அன்னமய கோசம்,—*மாறு இல் பிராண கோசமயம் மன்னும் அதனில்* — பொருந்திய அந்த அன்னமய கோசத்திலே மாறில்லாது வாயுப்பரந்து துடிப்புண்டானது பிராணமய கோசம்,—*மனோமயம் தான்*— அந்தப் பிராணமய கோசத்திலே மயக்கம் நீங்கிப் பழைய மனம் கூடுவது மனோமய கோசம்,—*வேறு வரும் விஞ்ஞான மயம் மேவும் அதனின்* — பொருந்திய அந்த மனோமய கோசத்திலே வேறாகவரும் சோத்திராதிகள் கூடி அறிவாய் இருப்பது விஞ்ஞானமய கோசம்,—*அது தன்னில் கூறி வரும் ஆநந்தமயம்* — அந்த விஞ்ஞானமய கோசத்திலே கூறுகின்ற வாக்காதிகள் கூடி ஆநந்தமாயிருப்பது ஆநந்தமய கோசம்,— *கோசமயம் பின் கூடியதால்*—மயமென்னும் சொல்லின் பின்னே கோசம் என்னும் சொல் கூடியதாம் என்றவாறு.

மயம் என்னும் சொல்லின்பின் கோசம் என்னும் சொற் பெயர் கூருது பின் கோசம் எனக் கூடியது எனத் தொகுத்த ஒரு சொல்லாகக் கூறினர். கோசம் - உறுப்பு. இவற்றின் விவரங்களை ஞானவரணச் செய்யுளிற் காண்க.

இச் செய்யுள் பஞ்ச கோசங்களும் கூடிய முறைமை கூறிற்று. (8)

செய்யுள் — 227

கோச வுருவிற் பிரமந்தான்
கூடித் தோன்று நீடுமொரு
காச மருவுங் கடந்தோறும்
நின்றுற் போலக் கதிரவன்றன்
வீசு கிரண முருவின்கண்
வெளிப்பட் டிடுவ ததிற்பற்றும்
பாச மதனுக் கின்றுகும்
என்றுற் பரத்திற் பற்றுண்டோ.

என்பது: கோச உருவில் பிரமம் தான் கூடி தோன்றும் — பஞ்ச கோசமாகிய உருவின்கண்ணே பிரமமானது கூடிப் பிரகாசிக்கும், அஃது என்போல்? என்னில்,—நீடும் ஒரு காசம் மருவும் கடம் தோறும் நின்றுல் போல கதிரவன் தன் வீசு கிரணம் — எட்டு தற்கரிதாய் ஒப்பற்ற ஆகாயத்தின் கண்ணே பொருந்தி நிற்கும் ஆதித்தனது மிகுந்த கிரணமானது பூமியின் கண் வைத்த கடந்தோறும் தனித்தனியே தோன்றுமா போல,—உருவின் கண் வெளிப்பட்டிடுவது — அந்தப் பிரமமும் ஆதித்தனைப் போல எட்டாதாயினும் உருக் கள் தோறும் தானுய் நிற்கும்,—அதில் பற்றும் பாசம்

அதனுக்கு இன்றாகும் — பிரமம் அப்படிப் பாசத்தோடு கூடி நின்றதாயினும் பிரமத்தைப் பாசம் சென்று பற்றுவதில்லையாம்,—என்றால் பரத்தில் பற்று உண்டோ — பிரமத்தைப் பாசம் பற்றாதாகையால் அந்தப் பிரமத்துக்குப் பாசத்தோடு பற்றில்லை என்றவாறு.

ஆகாசம் காசம் எனத் தலைக் குறைந்து நின்றது. ஓ — எதிர்மறை.

இச் செய்யுள் பிரமம் காயத்தோடு கூடிப் பற்றிடும் முறைமையும், கூடி நிற்பினும் பாசப்பற்றில்லை என்பதுவும் கூறிற்று. (9)

செய்யுள் — 228

அலகின் மணிக ளவைகோவை
அடைந்த பொழுதி னங்கங்கே
நிலவு மொருநூல் பலநிறமாய்
நின்றாற் போல நீடுருவம்
பலவு மருவு பேதத்தாற்
பன்மை யாகும் பிரமந்தான்
குலவு போக போக்கியங்கள்
கொள்ளும் போன்று கொள்ளாதால்.

என்பது: அலகு இல் மணிகள் அவை கோவை அடைந்த பொழுதின் அங்கு அங்கே நிலவும் ஒரு நூல் பல நிறம் ஆய் நின்றால் போல நீடு உருவம் பலவும் மருவு பேதத்தால் பன்மை ஆகும் பிரமம் தான்—எண்ணிறந்த பலவன்னமாகிய மணிகளைக் கோவையாகக் கோத்த இடத்து ஒரு நிறப்பட்ட நூல் அம் மணிகளாலே பல நிறமாய் நின்றாற் போலப் பிரபஞ்சத்தில்

தோன்றப்பட்ட யோனி பேதங்கள் பலவாகப் பேதிக்கப் படுகையால் அவற்றோடும் கூடிய பிரமமும் பல பேதப்பட்டாற் போல அங்கங்கே தோன்றும்,—குலவு போக போக்கியங்கள் கொள்ளும் போன்று கொள்ளாது ஆல் — ஆகையால் மணிகளில் பொருந்தின நூலும் தன் தன்மை கெடாது நின்றாற் போல பிரமமும் போக போக்கியங்கள் கொள்வாரைப் போன்று கொள்ளாதாய் நிற்கும் என்றவாறு.

இச் செய்யுள் பிரமம் பேதிக்கப் பட்டாற் போலத் தோன்றினும் பேதப்படாது என்பது கூறிற்று. (10)

செய்யுள் — 229

போற்றுஞ் செயலாற் பலநாமம்
புனைந்து போக போக்கியத்தில்
தோற்று நனவு கனவினுடன்
சுழுத்தி துரிய மெய்துமிதற்
கேற்ற கரண நிரைநிரையே
ஈரேழ் நாலொன் றெல்லாமும்
மாற்றி நிற்குங் கேடின்றி
வந்த போக மாய்ந்திடவே.

என்பது: போற்றும் செயலால் பல நாமம் புனைந்து—பிரபஞ்சத்தோடு பொருந்தின தொழிலாலே பரமான்மா வென்றும் ஜீவான்மா வென்றும் அந்தரான்மா வென்றும் நரகான்மா வென்றும் திரியக் ஆன்மா வென்றும் பல பெயர்களையும் பொருந்தி,—போக போக்கியத்தில் தோற்றும் — போகத்திலும் போக்கியத்திலும் கூடி அநுபவிப்பாரைப் போலத் தோன்றும்,—நனவு கனவினுடன் சுழுத்தி துரியம்

எய்தும் — சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி துரியம் என்னும் நாலவத்தையும் பொருந்தும், இதற்கு ஏற்ற கரணம் நிரை நிரையே ஈரேழ் நால் ஒன்று எல்லாமும் மாற்றி நிற்கும் கேடு இன்றி வந்த போகம் மாய்ந்திட ஏ — அவ்வவத்தை நாலிற்கும் கூடி நிற்கும் கரணம் அடைவே நிரை நிரையாகக் கொள்ளு மிடத்துச் சாக்கிரத்துக்குப் பதினாலும் சொப்பனத்துக்கு நாலும் சுழுத்திக்கு ஒன்றும் துரியத்துக்குக் கேடில்லாத அந்தப் புண்ணிய பாவங்கள் கெடும்படி எல்லாவற்றையும் நீங்கி நிற்கும் இடமும் ஆக நிற்கும் என்றவாறு.

சாக்கிரத்தில் பதினான்கு கருவியாவன — சோத்திராதி ஐந்து, சத்தாதி ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆகப் பதினான்காம். சொப்பனத்தில் நாலாவன — அந்தக் கரணங்கள். சுழுத்தியில் ஒன்றுவது—உள்ளம் இதனையே சித்தம் எனக் கூறுவர். பிரகிருதி, புமான், மகான், புருடன், அவித்தை, அவ்வியத்தம், மூலப்பிரகிருதி என்பன ஒரு பொருட் கிளவி. பிரமம் ஒழிய எல்லாம் நீங்கி நின்ற இடம் துரியம். போகம்— புண்ணிய பாவம். போக்கியம் — மனம். இவை இரண்டிற்கும் சாட்சி பூதம் பிரமம் என்பது கருத்து. அவத்தை என்பது பிரமம் உபாதிகளோடும் கூடினால் பேதிக்கும் அவதாரம். சாக்கிரம் — விழிப்பு. சொப்பனம் — பிரகிருதி அவதாரம். சுழுத்தி — பிரகிருதி ரூபம். போக போக்கியம் என்பது — புசிப்பும் புசிப்புக்கு இடமாகிய பதார்த்தங்களும். துரியமாவது — கருவி நீங்கின இடமெனக் கொள்க.

இச்செய்யுள் பிரபஞ்சத்தோடு பிரமம் பலபேதப்பட்டுப் போக போக்கியத்திற்கும் அவத்தைக்கும் சாட்சி பூதமாய் நிற்கும் முறைமை கூறிற்று. (11)

செய்யுள் — 230

கருவி யெல்லா நானெனவே
கருதல் பந்த மக்கருத்தை
ஒருவ முத்தி யுண்டாகும்
உள்ளம் வித்தாஞ் செய்தியினுன்
மருவு மாயா காரியங்கள்
அவித்தை மாய வேமாயை
பிரியும் பிரிய ஞானமது
பிறக்கும் பிறவா பேதமே.

என்பது: *கருவி எல்லாம் நான் எனவே கருதல் பந்தம் – கருவிகள் பதினுலோடும் கூடி அவற்றை நான் என்று கருதி நிற்பது பந்தமாம்,—அ கருத்தை ஒருவ முத்தி உண்டாகும் – அக்கருவிகள் பதினுலோடும் கூடாமல் நீங்கித் துரியத்து நிற்கவே தற்சொரூபம் ஆகிய சிவோகம் பாவம் பிறந்து முத்தி யுண்டாம்,— உள்ளம் வித்தாம் – பந்தத்திற்கு வித்தாவது மூலப் பிரகிருதி,– செய்தியினுல் மருவும் மாயா காரியங்கள் – அந்த மூலப் பிரகிருதியின் செயலாலே மாயா காரியங்களாகிய சுகதுக்கங்கள் பொருந்தும்,—அவித்தை மாயவே மாயை பிரியும் – அவித்தை யாகிய மூலப் பிரகிருதியின் செயல் கெடவே மாயை நீங்கும்,—பிரிய ஞானம் அது பிறக்கும் பிறவா பேதம் ஏ – அம்மாயை நீங்கவே ஞானம் உண்டாம்; அந்த ஞானம் உண்டாகிய விடத்தே அந்த ஞானம் பெந்தம் தோன்றுமல் சிவோகம்பாவம் பிறக்கும் என்றவாறு.*

*கருவியெல்லாம் என்றது தொண்ணூற்றுறு கருவிகளும். உள்ளம் வித்தாம் செய்தியினுல் மருவும் என்பது –*

அவித்தையாகிய அறியாமையின் காரியத்திலே பொருந்தும் என்க.

இச்செய்யுள் உபாதிகளை விட்டு நீங்கும் முறைமை கூறிற்று. (12)

செய்யுள் — 231

ஆன கன்ம வநுட்டயங்கள்
அந்தக் கரண சுத்திதரும்
ஊன மின்றி யச்சுத்தி
ஞான மதனை யுண்டாக்கும்
ஞான மதுதான் பிரமத்தை
நானென் றுணர்த்து நான்பிறந்தால்
வான மதிநீர்த் துளக்கமெனக்
காணுந் தன்னை மாயையிலே.

என்பது: ஆன கன்ம அனுட்டயங்கள் அந்தக் கரண சுத்தி தரும் — உண்டான கன்மானுட் டானங்களாகிய வாகிய சுத்தியாலே அந்தக் கரணத்துக்குச் சுத்தியுண்டாம்,—ஊனம் இன்றி அ சுத்தி ஞானம் அதனை உண்டாக்கும்—குற்றம் இன்றி அச்சுத்தியானது ஞானத்தை உண்டாக்கும்,—ஞானம் அது தான் பிரமத்தை நான் என்று உணர்த்தும் — அந்த ஞானந் தானே அகம் பிரமம் என்பதனை அறிவிக்கும்,—நான் பிறந்தால் வானம் மதி நீர் துளக்கம் என காணும் தன்மை மாயையிலே — அங்ஙனம் தானான தன்மையிலே கருத்து முற்றினால் ஆகாசத்தில் உண்டாகிய சந்திரன் சலத்தின் கண்ணே நின்று விளங்கித் தோன்றும் உருவம் போலத் தற்சொரூபமும் தெரியும் என்றவாறு.

அனுட்டயம் அந்தக்காண சுத்திதரும் என்பது கன்மா னுட்டானங்கள் ஆனவற்றன் அந்தக் காண சுத்தி யுண்டாம். தளக்கப்பாடு சலத்துக்கொழியச் சந்திர பிரதிபிம்பத்துக்கு இல்லாமை போல் அலைவு கருவிகளுக்கு ஒழியப் பிரமத்திற்கு இல்லை என்க

இச்செய்யுள் பிரம நிஷ்டை கூடும் முறைமை கூறிற்று. (13)

செய்யுள் — 232

தானே தானு யநுபோகந்
 தன்னிற் றன்னை யநுபவித்திட்
டூனே யுயிரே யுணர்வேயென்
 றென்று மின்றி யுரையிறந்து
வானே முதலாம் பூதங்கள்
 மாய மாயா தேமன்னி
நானே பிரம மெனத்தெளியும்
 ஞானம் பிரம ஞானமே.

என்பது: தானே தான் ஆய் அநுபோகம் தன்னில் தன்னை அநுபவித்திட்டு—அகம்பிரமமாய் அநுபூதியும் தன்னிலே தன்னை அநுபவித்து,—ஊனே உயிரே உணர்வே என்று ஒன்றும் இன்றி உரை இறந்து – காயமென்றும் காணமென்றும் வாயுவென்றும் ஒரு பேதமுமின்றி இன்னபடி யென்று சொல்லுதற்கு ஓர் சொல்லும் இன்றி,—வானே முதல் ஆம் பூதங்கள் மாய மாயாதே மன்னி – ஆகாசம் முதலாகிய பூதங்கள் கெடவும் தான் ஒருக்காலும் கெடாதே நிலைபெற்று,—நானே பிரமம் என தெளியும் ஞானம் பிரம ஞானமே – அகம் பிரமம் எனத் தெளியும் ஞானமே பிரம ஞானம் என்றவாறு.

*தானே தானாய் - கருவி கரணாதிகளை நீங்கி.*

*இச்செய்யுள் பிரம ஞானத்தில் நிற்கும் கருத்துக் கூறிற்று.* (14)

*செய்யுள்* — 233

சாற்று மறைதத் துவமசிமா
வாக்கி யங்க டமையுணர்ந்தால்
போற்றி யதுநீ யானாயென்
றறைவ தல்லாற் பொருளின்றே
தேற்று மிதனைத் தெளியாதார்
தெளியப் பஞ்ச வாதநமேல்
ஏற்ற வியம நியமாதி
யோக மிருநான் கியற்றுவரால்.

என்பது: *சாற்றும் மறை தத்துவமசி மா வாக்கியங்கள் தமை உணர்ந்தால் போற்றி அது நீ ஆனாய் என்று அறைவது அல்லால் பொருள் இன்று ஏ — சொல்லப்படும் வேதத்தின் முடிவாகிய தத்துவமசி முதலாகிய மகாவாக்கியங்கள் சொல்லும் பகுதியை உணரும் காலத்து விரும்பி அது நீ ஆனாய் என்பது அல்லாது மற்றொரு பொருள் சொல்லுதற்கு இல்லையாம் ஆதலால், — தேற்றும் இதனை தெளியாதார் தெளிய பஞ்ச ஆதனம் மேல் ஏற்ற இயமம் நியமாதி யோகம் இரு நான்கு இயற்றுவர் ஆல் — இப்படித் துணியச் சொல்லும் மகா வாக்கியத்தின் உண்மையைக் கொண்டு சோகம் பாவகமாக அறியாதார் அந்த முறையைக் கூடித் தெளியவேண்டிப் பஞ்ச ஆதனம் முதலாகிய பூசிக்கும் கிரியையையும் மேலாகிய இயமம் முதலாகிய அட்டாங்க யோகத்தையும் செய்து திரிவர் என்றவாறு.*

எனவே சரியை கிரியை யோகமாகியவை பிரமஞானம் கூட வேண்டிச் செய்யும் தவம் என்பது கருத்து.

பஞ்ச ஆதனமாவன — கூர்மாசனம், அநந்தாசனம், சிங்காசனம், பத்மாசனம், யோகாசனம் ஆம். அஷ்டாங்க யோகமாவன — இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என இவை.

பஞ்சசாதனம் எனப் பாடமாயின் ஆசனமும், யோக பட்டமும், தண்டும், கமண்டலமும், செப மாலையும் எனப் பொருள் கொள்க.

இச்செய்யுள் பிரமஞானங் கூடாதார் சரியை, கிரியை, யோகம் இவற்றைச் செய்து ஞானம் கைகூடுவர் எனக் கூறிற்று.

நானே பிரமம் என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் மாயாவாதி மதம் கூறிற்று. (15)

## பதினொன்றாவது—மாயாவாதி மதம் முற்றிற்று.

பாயிரம் உள்படத் திருவிருத்தம் 233.

---



## 11. (உ) மாயாவாதி மதமறுதலை

*செய்யுள் — 234*

ஏக நானென வியம்பி யிப்படி
அறிந்து முத்தியடை மின்னென
மோக மானவுரை சோக மின்பொடு
முடிந்தி டாதுமல டாகிய
காக மானது கருங்க லின்றசை
பறித்த மூங்கரிய குஞ்சியின்
தாக மார்பசி தவிர்க்க வாயிடை
கொடுத்ததென் றுரைசெய் தன்மையே.

என்பது: *ஏகம் நான் என இயம்பி இப்படி அறிந்து முத்தி அடைமின் என மோகம் ஆன உரை சோகம் இன்பொடு முடிந்திடாது — மாயாவாதி! நீ நான் ஏகப் பிரமம் என்று சொல்லிப் பின்பு கருவிகளை நீங்கி இப்படித் தரிசித்து முத்தி அடையுங்கள் என்று மயங்கிச் சொல்லும் சொல் நீ எடுத்துக் காட்டின சோகம் பாவனையேல், அங்ஙனம் கூறும் இனிய காம வாக்கியத்தோடு கூடி முடியாது; அஃது எங்ஙனம்?*

என்னில், அவ்வாக்கியம் அது நான் ஆனேன் என்கை யால், இரண்டு பட்டுப் பெறுவானும் பேறுமாய் ஒன்று கையால்; அஃதன்றியும், பிரமத்தை விகாரம் அற்றதா கவும் கூறி, மீளவும் மயங்கி, அந்தப் பிரமம் சீவான்மா வாகப் பேதித்ததாகவும் கூறினாய்; அதற்குக் கன்மம் என்று ஒரு முதல் இன்றி, இல்லாததனையும் உண் டாக்கி, அதனைக் கூடிற்று என்றும் கூறியது மயக்கம். அஃது என்போல? என்னில்,—மலடு ஆகிய காகம் ஆனது கருங்கலின் தசை பறித்து அழும் கரிய குஞ்சியின் தாகம் ஆர் பசி தவிர்க்க வாயிடை கொடுத் தது என்று உரை செய் தன்மை ஏ — ஒரு மலட்டுக் காகமானது தனது கரிய நிறத்தையுடைய குஞ்சினுக்கு மிக்க பசியைத் தணிப்பான் கரிய கல்லின் உண்டான இறைச்சியை வாங்கிக் குஞ்சின் வாயிலே கொண்டு வந்து கொடுத்தது என்று சொல்லும் தன்மைக்கு ஒக்கும் என்றவாறு.

எனவே, நிர்விகற்பமாகிய பிரமத்திற்கு உவமை மலட்டுக்காகம். அப்பிரமத்திலே சீவான்மாவாகப் பேதித் தது என்றதற்கு உவமை அக் குஞ்சு. அந்தச் சீவான்மா வுக்குக் கன்மாதிகள் உண்டாக்கிக் கொடுத்ததற்கு உவமை கல்லின்மாம்சம்.

'மோகமானவுரை கொம்பு மூன்ஞெடு' எனவும் பாடம்; இதன் கருத்து மூன்று கொம்போடும்கூடி அழிவில்லாத மலட்டுக் காக்கையானது என்னும் ஆக்ஷேபயுக்தி எனக் கொள்க.

மாயாவாதிமதம் கூறி அதனை மறுப்பான் எடுத்துக் கொண்டார்; அதனுள், இச் செய்யுள் ஆன்மா உண்டு என்ப தற்கு ஓர் பிரமாணத்தால் தொகுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 235

நீடு வேதமள வாக வேகமெனும்
நீதி தானிகழ்வ தாகுமேல்
நாடி ஞாதிருவு ஞான ஞேயமுடன்
நாளு நான்மறையு மோதலால்
ஓடு மாகுமுன தேக மோதுமிவை
யூன மாகியுரை மாறுகோள்
கூடு மாகுமநு பூதி தானுமது
கூடி டாதறிவி லாமையால்.

என்பது: *நீடு வேதம் அளவு ஆக ஏகம் எனும் நீதிதான் நிகழ்வது ஆகும் ஏல்* — அநாதியே உண்டாகிய வேதம் வரையறையாகப் பிரமம் ஒன்றே என்று சொல்லுவதாக நீ சொன்னாய்; அப்படியாயின், —*நாடி ஞாதிருவும் ஞானம் ஞேயமுடன் நாளும் நான்மறையும் ஓதலால்* — அந்த வேதத்தில் ஞாதிரு ஞானம் ஞேயம் ஆகிய மூன்று முதலும் உண்டு எனவே தெரித்து நாடோறும் சொல்லுதலால், —*ஓடு மாகும் உனது ஏகம்* — நீ ஒன்று என்று சொல்லும் சொல் அவ்வேத வாக்கியம் கொண்டே பின்னிடா நிற்கும், —*ஓதும் இவை ஊனம் ஆகி உரை மாறுகோள் கூடும் ஆகும்* — இன்னும் நீ பிரமம் ஒன்றே என்றும், அகம் பிரமம் என்றும் சொல்லும் சொற்கள் குற்றப்பட்டுத் தத்துவமசி என்னும் வாக்கியத்தோடு மாறுகோடலைப் பொருந்தும், —*அநுபூதி தானும் அது கூடிடாது அறிவு இலாமையால்* — உனக்கு ஆன்மா இல்லை ஆகையாலே அநுபூதி தானும் உண்டாகமாட்டாது என்றவாறு.

*அறிவிலாமையால் அநுபூதிதானும் கூடிடாது என மாறுக. நான்மறையும் என்கையால் ஆகமத்துணிவும் பெற்றது. உரை — மகாவாக்கியம். அறிவு — ஆன்மா. ஞாதிரு— ஆன்மா. ஞானம் — ஆன்மாவிற்குச் சகாயபூதமான சிவசத்தி. ஞேயம் — அந்தச் சத்தியால் அறியப்படும் பிரமேயமான சிவம்.*

*இச் செய்யுள் ஞான ஞேயங்களன்றி ஞாதிருவும் உண்டு என்பதனை மறுத்துக் கூறிற்று.* (2)

செய்யுள் — 236

நீதி யாலொளிகொள் பானு வானதகல்
　　நீரி லேநிகழு மாறுபோல்
ஆதி தானுருவ மாய காயமதின்
　　மேவி யாவதிலை யாகுமாம்
தீதி லாவருவ மாத லானிழல்கள்
　　சேர வேறிடமி லாமையால்
ஓதி லோரகலி னீரி லேயொருவர்
　　காண லாலிலது னேகமே.

என்பது: *நீதியால் ஒளி கொள் பானுவானது அகல் நீரிலே நிகழும் ஆறு போல் — கிரணங்களையுடைய ஆதித்தனது சாயை பாத்திரோதகங்கள் தோறும் முறைமையாலே விளங்குமா போல,—ஆதி தான் உருவம் ஆய காயம் அதில் மேவி ஆவது இலை ஆகுமாம் தீது இலா அருவம் ஆதலால் — சர்வத்துக்கும் முதலாயிருக்கிற பிரமம் குற்றமில்லாத அரூபம் ஆகையால் உபாதிகளோடும் கூடி உரூபமாகிய காயத்திலே பொருந்தி உண்டாவதில்லையாம்; அன்றியும்,— நிழல்கள் சேர வேறு இடம் இலாமையால் — பாத்திரோதகம் நிழலின்கண் இருந்தால் ஆதித்த கிரணம்*

செல்லாதாற் போலப் பிரமம் கூடாத காயமும் உண்டாக வேண்டும்; ஆகையாலும்,—ஒதில் ஓர் அகலின் நீரிலே ஒருவர் காணலால் இலது உன் ஏகமே—பாத்திரோதகத்திலே ஆதித்தனைக் காண்பான் ஒருவனைப் போலக் காயத்திலே பிரமத்தைக் காண்பான் ஓர் ஆன்மா உண்டாகையால் சொல்லுங்காலத்து உனது அகம்பிரமம் என்பது இல்லையாம் என்றவாறு.

அருவம் ஆதலாலும், இடம் இல்லாமையாலும், ஒருவர் காணலாலும் என உம்மை கூட்டுக. நிழல் சேர வேறு இடம் இலாமையால் என்பது பிரமம் அருவம் ஆதலால் நிழல் சேர்தற்கு இடமில்லையாம் என்க.

இச் செய்யுள் ஆதித்தன் சாயை பாத்திரோதகங்கள் தோறும் தோன்றுமா போலக் காயங்கள் தோறும் பிரமம் நிற்கும் என்பதனைக் காண வேறோர் ஆத்மா வேண்டும் என்று மறுத்துக் கூறிற்று. (3)

செய்யுள் — 237

வேறு வாயில்புல னோடு மேன்மனமும்
மேவி டாதுபிர மாணமும்
கூறி டாதறிவு தானெ னுவுணர்தல்
கோடு நீமுயலி னுடினுய்
ஈறி லாதபர மேக மேயென
இயம்பு நீயிசையு ஞானமும்
பேற தாவதிலை பேத மானவிது
பேண வேயுளது பேசிலே.

என்பது: வேறு வாயில் புலனோடு மேல் மனமும் மேவிடாது பிரமாணமும் கூறிடாது அறிவு தான் என உணர்தல் கோடு நீ முயலின் நாடினாய் — ஒன்றோடொன்று கூடாமல் உணரும் பொறிகளும் புலன்களும் அதன்மேல் உண்டாகிய மனமும் கூடாமல் உடலில் ஓர் அறிவு தனித்து நின்று அறியா திருக்கவும், அறியும் என்று சாத்திரப் பிரமாணங்களும் சொல்லாதனவாய் இருக்கவும், நீ பிரமம் காயத்தோடு கூடித் தானே தானாய் நின்றறியும் என்று சொல்லிய அறிவு கோடு இல்லாத முயலுக்குக் கோடு உண்டு என்று அறிந்த அறிவிற்கு ஒக்கும்; அன்றியும்,—ஈறு இலாத பரம் ஏகமே என இயம்பும் நீ இசையும் ஞானமும் பேறு அது ஆவது இலை—கேடில்லாத பிரமம் சீவான்மாவுமாய் நிற்கும் என்று சொல்லுகிற நீ பொருந்தும் ஞானத்தால் உனக்குப் பயனுண்டாவதும் இல்லையாம்; அஃது எங்ஙனம்? என்னில், பரப்பிரமமே சீவான்மாவும் என நீ சொல்லுகையால், — பேதம் ஆன இது பேணவே உளது பேசில் ஏ — நீ இங்ஙனம் சொல்லும் முறைமையின்றிப் பரமான்மாவும் அதனை அறியப்படும் சீவான்மாவும் என இரண்டு முதல் உண்டு என்று சொல்லும் முறைமையே போற்ற உளது என்றவாறு.

நாடினாய் — ஆக்ஷேபம்.

இச் செய்யுள் ஆன்மாவுக் கொழியப் பிரமத்துக்குப் பந்தம் உண்டாகாது; ஆகையால் ஆன்மா ஒன்று உண்டு என்று கூறிற்று. (4)

செய்யுள் — 238

இலகு சோதிமணி யெனவு மேகமெனின்
இதனி லேகமது விலகினுய்
குலவு காசுமொளி யதுவு நீடிவளர்
குணமு நாடுவதொர் குணியுமாம்
பலவு மானகுண மொருவு மேகமது
வெனவும் நீபகரில் நிகரிலா
உலக மானதனை உதவு மாறதிலை
உணர்வு தானுமிலை யுணரிலே.

என்பது: இலகு சோதி மணி எனவும் ஏகம் எனில் — மிக்க ஒளியும் மணியும் போல ஒன்றாய் இருக்கும் என்று நீ சொல்லின், இதனில் ஏகம் அது விலகினுய் — இந்த உவமை தன்னிலே ஒன்று என்பதனை மறுத்துக் கூறினுய்; அஃது யாங்ஙனம்? எனின்,— குலவு காசும் ஒளி அதுவும் நீடி வளர் குணமும் நாடுவது ஓர் குணியும் ஆம் — விளங்குகின்ற மணியும் பிரகாசமும் மிக உண்டாகின்ற குணமும் ஆராய்ந்து அறியத்தக்க குணியும் ஆகையால்,—பலவும் ஆன குணம் ஒருவும் ஏகம் அது எனவும் நீ பகரில் — அன்றியும் ஒன்றான பிரமமானது இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்களை நீங்கி நிற்கும் என்று நீ சொல்லின்,—நிகர் இலா உலகம் ஆனதனை உதவும் ஆறு அது இலை உணர்வு தானும் இலை உணரில் ஏ — அந்தப் பிரமத்துக்கு இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்கள் இல்லையாகில் ஒப்பில்லாத பிரபஞ்சத்தை உண்டாக்கும் தொழில் இல்லையாய் அதனைக் காக்க வேண்டும் என்னும் அறிவும் இல்லையாம் விசாரிக்கும் காலத்து என்றவாறு.

மணியும் ஒளியும் குணமும் குணியும் ஆகையால் இரண்டுபடும் என்பது கருத்து.

இச்சா ஞானக் கிரியைகளை நீங்கிய நிர்விகற்பம் என்னில், இச்சா ஞானக் கிரியையோடும் கூடியே பிரபஞ்சத்தின் சிருஷ்டி திதி சங்காரம் கண்டு நடத்த வேண்டுகையால், அவை நீங்கி நிற்கும் என்னில், அறிவும் இல்லையாய்க் கர்த்தாவும் அன்றாம் என்பது கருத்து.

இராவணனையும் சகத்திர வாகுவையும் ஒன்று பல ஆனதுக்கு உவமையிட்டாய், இராவணன் ஒரு முகத்தாற் கண்டது ஒரு முகத்தாற் சொல்லுமா போல உலகத்தில் ஒருத்தன் கண்டது ஒருத்தன் அறிந்து சொல்லக் கண்டதில்லை. சகத்திரவாகுவும் பல கரங்களாலும் இயற்றப்பட்ட வில்லும் அம்பும் வலிக்கும் காலத்து வேறுபடுகை வழங்கலும் வினை ஒன்றின் மேலாம். இது அப்படி அன்று என்றுகண்டு கொள்க. (5)

செய்யுள் — 239

புற்றி னேர்பழுதை தொக்க போதுமயிர்
புளக மாகவர விரவிலே
உற்ற தாமதனை யொக்க வேயுல
குதிக்கு மாறுமொரு சத்திலே
பெற்ற தாகுமெனி னப்பி ராந்தியுடை
யோரு மப்பிரம பேதமாய்
நிற்பர் நீபகரின் முற்று மையநிலை
பெற்று மின்பம திலாததாம்.

என்பது: புற்றின் நேர் பழுதை தொக்க போது மயிர் புளகம் ஆக அரவு இரவிலே உற்றது ஆம் அதனை ஒக்கவே உலகு உதிக்குமாறும் ஒரு சத்திலே பெற்றது

ஆகும் எனின் — புற்றின் கண்ணே பழுதை கிடப்ப, இருளிடத்தே அந்தப் பழுதையைக் கண்டவர்க்குப் பயத்தாலே மயிர் புளகித்துப் பாம்பெனவே நினைக்கப் படுவதாம் அதுபோல், பிரபஞ்சமும் ஒப்பற்றதாகிய பிரமத்திலே தோன்றுமாறும் அதன் அபிக்கத்தாலே அப் பிரபஞ்சமும் மெய்போலத் தோன்றும் முறைமை யும் பெற்றதென்று நீ சொல்லின்;—அ பிராந்தி உடை யோரும் அ பிரம பேதமாய் நிற்பர் — அங்ஙனம் மயங் கின அறிவையுடைய ஆன்மாக்களும் இச்சா ஞானக் கிரியை உண்டாய்ப் பிரபஞ்ச கிருத்தியம் செய்வதில்லை என்று நீ கூறும் பிரமத்தின் பேதமாய் நிற்பராம்,— நீ பகரில் முற்றும் ஐயநிலை பெற்றும் இன்பம் அது இலாதது ஆம் — இப்படி நீ சொல்லின் நினக்கு மிக்க மயக்க அறிவே உண்டாய்ப் பிரமம் ஆம் இன்பம் உண்டாகாது என்றவாறு.

பெற்றும் — உம்மை அசை.

'முற்றும் ஐயநிலை பெற்று நின்மலமிலாததாம்' எனப் பாடமாயின், முற்றும் மயக்கநிலைபெற்று நின்மலமாகையில்லை யாம் எனக்கொள்க.

பழுதையைப் பாம்பு என்று பிரமித்தது பிரமமாக வேண்டும் அதுதான் விகாரம் என்னில், கரணங்களுக்கு அறிவில்லையாம். பிரமத்தின் சந்நிதிமாத்திரத்திலே சலிக் கும் என்னில், தெளிந்த காலத்தில் சந்நிதியில் சேட்டித்தல் இல்லையாக வேண்டும். அது பின் சலித்துத் தத்துவமும் கூடாது எனக் கொள்க.

இச் செய்யுள் பிரமத்துக்கு நிர்விகாரம் என்பதனை மறுத்துக் கூறிற்று. (6)

செய்யுள் — 240

ஓதி யேயுலக மதனை நீயுநிரு
வசந மாகவுரை செய்வதென்
பேதை யோஉளது மிலது மல்லபொருள்
பேசு வாருமுள ரோசொலாய்
ஆதி யேயுளது வருத லாலிலதி
லாவ தின்மைய தழிந்துபோம்
நீதி யாலுளதி லாமை நேர்வதெனின்
நேர்மை யாகியது நின்றதே.

என்பது: ஓதியே உலகம் அதனை நீயும் நிருவசனம் ஆக உரை செய்வது என்—நீ வேதத்தை ஓதியிருந்தும் பிரபஞ்சத்தை முன்பு இல்லையென்றும், பின்பு நிருவசனமாகிய பிரமத்திலே தோன்றப்பட்டது என்றும் சொல்லுதல் உண்டானது என்,—பேதையோய் உளதும் இலதும் அல்ல பொருள் பேசுவாரும் உளரோ சொலாய்—ஒரு பொருள் இல்லதும் அன்று உள்ளதும் அன்று என்று சொல்லுவாரும் உளரோ? ஆகையால், அறியாதவனே! சொல்லாய்; அற்றன்று,—ஆதியே வருதலால் இலதில் ஆவது இன்மையது உளது அழிந்து போம்—ஆதிதோறும் தோன்றிவருதலால் இல்லை என்பது இல்லையாய் உள்ளதானது அழிந்துபோம்,—நீதியால் உளது இலாமை – பின் இல்லையாம்படி அழிந்து போம் முறைமையாலே இல்லாமை உண்டானது; ஆகையால்,—நேர்வது எனின் – உள்ளதும் இல்லாததும் பிரபஞ்சத்துக்குப் பொருந்திற்று என்று நீ கூறின்,—நேர்மை ஆகியது நின்றது ஏ – அப்படி அழிந்துபோம்

பிரபஞ்சம் மீளவும் பிரமத்திலே உண்டாமிடத்து முன்பு போலத் தோன்றுகையால் அதற்கு மூலகாரணம் கிடந்து அழியாமல் நிற்கும் என்றவாறு.

ஓதியே உலகம் அதனை நீயும் நிருவசனமாக உரை செய்வது என் — உலகத்தை விவகாரமாத்திரையாய்ச் சொல்லா நின்றாய். பேதையே — போம். அறிவில்லையோ ஒன்றை உண்டு என்குதல் இல்லை என்குதல் அல்லாத பொருள் சொல்வாரும் உண்டோ? சொல்லாய் உள்ளது முன்னே உண்டாய் வருதலால் இல்லாதது இல்லையாயே போமாதல் நீதியாலே உள்ளதல்லாதது உண்டாம் என்னில் சுருங்கிகின்றதாம் என்றவாறு.

இவ்வுரைக்கு உலகம் விவகாரம் ஒழியப் பாமார்த்தத்து இல்லை என்றதனை நிராகரித்தது எனக் கொள்க.

இச் செய்யுள் பிரபஞ்சம் அநாதியில் உள்ளதல்ல என்றதனை மறுத்துக் கூறிற்று. (7)

செய்யுள் — 241

வேற தாகியது போலி ருந்தமையில்
வெள்ளி சுத்தியெனி லையமே
கூற லாமொரு பரத்தொ டொத்தபொருள்
கொண்டு விண்டநிலை கண்டனம்
மாறி டாதுநில நீர தாகியனல்
வாயு வாகியவை மாறியும்
சேறி லாதுவிவ கார மன்றுபர
மார்த்த மாயவை செறிந்ததே.

என்பது: வேறது ஆகியதுபோல் இருந்தமையில் வெள்ளி சுத்தி எனில் — மித்தையாகிய பிரபஞ்சம்

பிரமம்போல மெய்யாகத் தோன்றினமையால் இப்பியானது வெள்ளியை ஒக்கப் பிரகாசித்தாற் போலும் என்று கூறின்,—ஐயமே கூறலாம் – அந்த இப்பியை வெள்ளி என்று ஐயப்பட்டாற்போலப் பிரபஞ்சத்தையும் பிரமமோ? மித்தையோ? என்று ஐயப்பட்டே சொல்லலாம்,—ஒரு பரத்தோடு ஒத்த பொருள் கொண்டு விண்டநிலை கண்டனம் – முன்பு இந்தப் பிரபஞ்சம் ஒப்பற்ற பிரமத்தோடு ஒத்த பொருளாகக் கைக்கொள்ளப்பட்டு இப்பொழுது மித்தையயாக மாறிக் கண்டனம் என்னில்,—மாறு இலாது நிலம் நீர் அது ஆகி அனல் வாயு ஆகி – நிலம் நீர் ஆகியும் அனல் வாயு ஆகியும் மாறிநில்லாது,—அவை மாறியும் சேறிலாது – நீர் நிலனாகியும் வாயு அக்கினியாகியும் மாறியும் செல்லாது,—விவகாரம் அன்று பரமார்த்தம் ஆய் அது செறிந்தது ஏ – ஆதலால், இப்பிரபஞ்சமும் விவகாரத்திலே மெய்யாதல் அன்றிப் பரமார்த்தத்திலும் மெய்யாகச் செறிந்தது என்றவாறு.

வெள்ளிக்கு வேறதாகிய சுத்தியானது வெள்ளி போலத் தோன்றினது; அதுபோல் பிரபஞ்சம் எனில் சந்தேகம் சொல்லலாம்.

இச் செய்யுள் விவகாரத்தின் மெய்யாய்ப் பரமார்த்தத்தில் பொய்யாம் என்றதனை மறுத்துக் கூறிற்று. (8)

செய்யுள் — 242

மாய நூலதுசி லம்பி வாயினிடை
வந்த வாறதனை மானவே
ஆய தேயுலக மான தும்பிரம
மதனி லேயெனில டங்கிநின்

றேயு மாகுமொரு சித்து மத்துடன்
நிலாத தென்றுபி னியம்பின்நீ
பேய னேகடம் மிருத்தில் வந்தது
பிறப்ப தாவதிலே பேசிலே.

என்பது: *மாயம் நூல் அது சிலம்பி வாயின் இடை வந்த ஆறு அதனே மான ஏ ஆயது ஏ உலகம் ஆனதும் பிரமம் அதினிலே எனில் – பொய்நூலானது சிலம்பியின் வாயிடத்தே நின்று தோன்றிநின்று கெட்ட இடத்து மீளவும் அதனிடத்தே இந்த நூலாகத் தோன்றி வந்தாற்போல உலகமானதும் பிரமத்திலே தோன்றிநின்று கெட்டபின் மீளவும் பிரமத்திலே முன்பு போலே தோன்றிவரும் என்று நீ கூறின்,— அடங்கி நின்று ஏயும் ஆகும் ஒரு சித்தும் – அரூபமாய் அவிகாரம் ஆகிய பிரமமும் பிரபஞ்சத்திலே அகப்பட்டு மயங்கவும் ஆகும் ஆதலால் நீ கூறியது உவமை அன்று,—அத்துடன் நிலாதது என்று பின் இயம்பின் நீ – அந்த நூலாகிய சேடத்துக்குள் அச்சிலம்பி அகப்படாது நின்றாற்போலப் பிரபஞ்சம் ஆகிய சேடத்துக்குள்ளும் பிரமம் கூடிநில்லாது காரணமாய் நிற்கும் என்று கூறின்,—பேயனே கடம் மிருத்தில் வந்தது பிறப்பது ஆவது இலே பேசில் ஏ – அறியாதவனே! கடத்துக்கு மண் காரணமாய் இருக்கவும் காரணமாகிய மண்ணில் கடம் தானே தோன்றாது; தோன்றுமிடத்து ஆதிகாரணமாகிய மண்ணும், நிமித்த காரணமாகிய குலாலனும், துணைக் காரணமாகிய திரிகையும் கூடித் தொழில் செய்யக் கடம் தோன்றுமாபோலப் பிரபஞ்சத்துக்கும் ஆதிகாரணம் உண்டாய்த் தோன்ற வேண்டும் என்றவாறு.*

எனவே, ஆதிகாரணம் இன்றிப் பிரமமே ஆதிகாரண மாகத் தோன்றும் என்னில் சித்திலே அசித்துத்தானே தோன்றாது என்பது கருத்து.

மிருத்து—மண். மாயநூல் என்பது—இல்லாதொன்று தோன்றுவது. மாயை என்பது அவன் கருத்து ஆதலினால் 'மாயநூல்' என்றான். 'பேயனே படம்' என்பது பாடமா யின், புடைவையானது மண்ணினிடத்து உண்டாகாது எனப் பொருள் கொள்க. அஃதாவது ஒன்றின் காரணத்தில் ஒன்றின் காரியம் உண்டாகாது என்பதாம்

இச் செய்யுள் 'பிரபஞ்சத்துக்குக் காரணம் பிரமம்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (9)

செய்யுள் — 243

வேற தாகுமுரு வத்தி லேபரம்வெ
ளிப்ப டும்மென விளம்பின்நீ
ஊறி லாவுருவ சத்தி லேபிரம
முண்டு தானுணர்வி லாததென்
மாறி வாயுவும் மனுதி யானவையும்
வந்தி டாமையினி லின்றெனில்
ஈறு தானுடைய தாய தோபிரம
மென்கொ லோவிவையி றப்பதே.

என்பது: வேறது ஆகும் உருவத்திலே பரம் வெளிப்படும் என விளம்பில் நீ — வன்னபேதமாகிய வேற்றுமைப்பட்ட உருவத்திலே பிரமம் வெளிப்பட்டு நிற்கும் என்று நீ கூறின்,—ஊறு இலா உரு அசத் திலே பிரமம் உண்டு தான் உணர்வு இலாதது என் —

*குற்றமில்லாத ஜடத்தினிடத்திலே பிரமம் உண்டா யிருக்க அந்த ஜடம் அவத்தைப்பட்ட இடத்து அறி வின்றிக் கிடப்பானேன்?,—மாறி வாயுவும் மனுதி ஆனவையும் வந்திடாமையினில் இன்று எனில்—வாயு வும் அந்தக்கரணங்களும் நீங்கி வந்து கூடாமையி னுலே அறிவில்லேயானது என்று கூறின்,—ஈறு தான் உடையது ஆயதோ பிரமம் என் கொல் ஓ இவை இறப்பது ஏ—பிரமத்தின் அறிவு கெடத்தக்கதா யிற்ருே? அதுவுமின்றிப் பிரமம் நிற்க வாயுவும் அந்தக் கரணங்களும் நீங்கிய ஆயினவோ? ஆதலால், பிரமம் அறிவும் அறியாமையுமாகி உருக்களிலே நில்லாது என்றவாறு.*

*இச் செய்யுள் 'பிரமம் உருவை எடுத்து நிற்கும்' என் பதனே மறுத்துக் கூறிற்று.* (10)

*செய்யுள்* — 244

பற்ற தின்றியுடல் நின்றி டும்பரம்
எனப்ப கர்ந்தனே பரிந்துடன்
உற்று டம்புநரை திரைக ணேய்சிறை
உறுப்ப ழிந்திவையு முள்ள பின்
குற்ற மென்றிதனே விட்டி டாதுவிட
வென்ற லுங்குலேவு கொண்டிடும்
பெற்றி கண்டுமொரு பற்ற றும்பரிசு
பேச வேயுளதுன் ஆசையே.

என்பது: *பற்று அது இன்றி உடல் நின்றிடும் பரம் என பகர்ந்தனே — பிரமமானது காயத்திலே நின்றதாயினும் அக்காயத்தோடு பற்றில்லாமல் நிற்கும்*

என்று கூறினாய், அஃது அங்ஙனமாயின்,—பரிந்து உடன் உற்று உடம்பு நரை திரைகள் நோய் சிறை உறுப்பு அழிந்து இவையும் உள்ள பின் குற்றம் என்று இதனை விட்டிடாது — பிரமம் ஆர்வத்துடனே கூடி நின்ற உடம்பு நரை திரை நோய் சிறை இவையிற்றினால் உறுப்பழிவு உண்டான பின்பும் இவ்வுடம்பைப் பொல்லாதது என்று நீங்கி நிற்க மாட்டாது,—விட என்றலும் குலைவு கொண்டிடும் — அவ்வுடல் நீங்கப் படும் என்னும் இடத்தும் மிகவும் வியாகுலப்பட்டு நடு நடுங்காநிற்கும்; ஆகையால், பெற்றிகண்டும் ஒரு பற்று அறும் பரிசு பேசவே உளது உன் ஆசை ஏ—இப்படிக் காயத்தோடும் பற்றி நிற்கும் முறைமையை எவ்விடத்தி னும் கண்டிருந்தும் காயத்தோடு பிரமத்துக்குப் பற் றில்லை என்று உன் ஆசையால் சொல்ல உள்ளதன்றிப் பற்றுவிட்டதில்லை என்றவாறு.

இச் செய்யுள் 'காயத்தோடு பிரமத்துக்குப் பற்றில்லை' என்பதனை மறுத்துக் கூறிற்று. (11)

செய்யுள் — 245

சோதி மாமணிக ளூடு போனதொரு
நூலு மானநிலை சொல்லிடும்
நீதி யான்மணிகள் பேத மாகியொரு
நூலி னின்றமை நிகழ்த்தினாய்
ஆதி தானொருவ னாகி யேபல
அனாநந்த யோனியி லமர்ந்தவன்
பேதி யாதநிலை பேசி னையுலகு
பேத மேயிலதை பேதமே.

என்பது: சோதி மா மணிகள் ஊடு போனது ஒரு நூலும் ஆன நிலை சொல்லிடும் நீதியால் மணிகள்

பேதம் ஆகி ஒரு நூலின் நின்றமை நிகழ்த்தினை் - பிரகாசத்தை யுடைய மிக்க பல மணிகளுக்குள்ளே உருவி ஒன்றாய் நின்ற நூலையும் சொல்லத்தக்க முறைமையிலே கோத்த மணிகளின் நிறமாகப் பேதித்து ஒரு நூலிலே பேதப்பட்டு நின்றமையும் போலப் பிரமத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் உவமை கூறினாய்; அங்ஙனம் கூறிய உவமையால்,—ஆதி தான் ஒருவன் ஆகியே பல அனந்த யோனியில் அமர்ந்தவன் பேதியாத நிலை பேசினாய் - கர்த்தாவானவன் ஒருவனாய்ப் பல பேதப்பட்டு எண்ணிறந்த யோனிகள்தோறும் நின்றவன் பேதியாத நிலையே கூறினாய்; ஆகையால்,— உலகு பேதமே இலது அபேதம் ஏ - மணிகள் பேதம் போலப் பிரபஞ்சம் பேதமாக உள்ளது பிரமத்துக்குப் பேதம் இலதாம் என்றவாறு.

எனவே, பிரமம் சீவான்மாவாகவும், பரமான்மாவாகவும் பேதிக்கும் எனவும் கூறி; இவ்விடத்துப் பிரமம் பேதியாது எனவும் கூறியது வழுவாம். உலகானது பேதம் என்றபடியோ? இல்லையாகில் அபேதம் என்றபடியோ? சொல்லாய். இதனால், நீ அபேதம் என்றது விருத்தமாம்: பேதமே உள்ளதென்க,

இச் செய்யுள் 'பிரபஞ்சமே பேதமாவது பிரமத்துக்குப் பேதமில்லை' என்பதனை மறுத்துக் கூறிற்று. (12)

செய்யுள் — 246

ஒத்து நின்றுடலி னின்ப துன்பமவை
உற்று முற்றிடுவ தின்றெனும்
பித்த வுன்னுரையி னுற்ற தேயிலது
பெற்ற தின்றிலது பெற்றதேல்

துய்த்த லென்னுறுதல் சீவ பாவமது
சொல்லினென் றினுந்தோய் விலாமைநீ
வைத்து நித்தமன வாக்கி றந்தபர
மென்ன மானமிலை யின்னமே.

என்பது: ஒத்து நின்று உடலின் இன்ப துன்பம் அவை உற்றும் உற்றிடுவது இன்று எனும் பித்த — அஞ்ஞானமாகிய காயத்தோடு கூடிப் பிரமமும் அஞ்ஞானமாய்ச் சுகதுக்கங்களை அநுபவித்து நிற்கவும் பிரமம் காயத்தோடு கூடுவதில்லை என்று சொல்லும் பேயனே! நீ அநுபவமில்லை என்னும் வார்த்தை,— உன் உரையின் உற்றதே — உன் சாத்திரத்திலேயும் பொருந்தினதே,—இலது பெற்றது இன்று இலது — சாத்திரத்தின் அல்லது அநுபவத்தினும் அல்லாமல் உண்டானதல்ல; அஃதன்றியும்,—பெற்றதேல் — அநுபவத்தினும் இல்லாமல் உண்டானதாயின்,—துய்த்தல் என உறுதல்—பிரத்தியக்ஷத்திலே நீ அநுபவத்தை உறுவானேன்,—சீவ பாவம் அது சொல்லின் — பரமான்மா அநுபவிப்பதில்லை, ஜீவான்மாவினுடைய பாவனை என்று நீ கூறின்,—ஒன்றினும் தோய்வு இலாமை நீ வைத்து நித்தம் மன வாக்கு இறந்த பரம் என்ன மானம் இலை இன்னம் ஏ—இப்படி அநுபவிக்கிற ஜீவான்மாவை ஒன்றினும் தோய்விலாத பரமான்மாவாகக் கொண்டு நித்தமாய் மனவாக்கு இறந்தது என்றும் அகம்பிரமம் என்றும் சொல்ல உனக்கு லச்சையில்லை இன்னமும் என்றவாறு.

'உன்னுரையில் உற்றதே இலது பெற்றதின்றிலது பெற்றதே' என்பது உன்னுடைய வசனத்துக்குப் பெற்றது

ஞெதெனில்? அதில் பற்றற்ற நிற்கையாகிய இல்லாமை பெற்ற தில்லையாம், பற்றில்லாமை பெற்றதாகில் புசிப்பற்றிருக்க வேண்டும்.

இச் செய்யுள் 'பரமான்மா சீவான்மாவாய் நின்று புசிக்கும்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (13)

செய்யுள் — 247

எங்கு நின்றிடி லவத்தை யின்றிடும்
இசைந்தி டுங்கரண மென்னில்நீ
அங்கு நின்றபர மெங்கொ ளித்ததது
நின்ற தேலவை யடங்கிடா
இங்கு நின்றதொரு காந்த மானகல்
இரும்பு சந்நிதி யியங்குநேர்
தங்கி நின்றதெனி னீங்கி மீளும்வகை
தங்கி டாதுனுரை தப்பதே.

என்பது: எங்கும் நின்றிடில் அவத்தை இன்றிடும் — பிரமம் ஜீவான்மாவாய்க் காயந்தோறும் நிறைந்து நிற்கும் என்று கூறின் நீ கூறிய அவத்தையில் அகப்பட்டு அடங்குவதில்லையாம்,—இசைந்திடும் கரணம் என்னில் நீ — அப்படி அவத்தைப்படுவது ஜீவான்மா அன்று அந்தக் கரணங்களினது சம்பந்தம் என்று நீ கூறின்,—அங்கு நின்ற பரம் எங்கு ஒளித்தது—கரணங்கள் அவத்தையைப் பொருந்தின இடத்து அவ்விடத்து நின்ற ஜீவான்மா எங்கே மறைந்து நின்றது,—அது நின்றதேல் அவை அடங்கிடா — அந்தக்கரண நாயகன் ஆகிய ஜீவான்மா அவ்விடத்து நின்றதாயின் அவன் வழித்தாய கரணங்களும் அடங்க

*மாட்டா,—இங்கு நின்றது ஒரு காந்தம் ஆன கல் இரும்பு சந்நிதி இயங்கும் நேர் தங்கி நின்றது எனில்—அற்றன்று; இவ்விடத்து உண்டானது ஒரு காந்தக் கல்லின் சந்நிதியிலே இரும்பு அசைந்து அடங்கும் தன்மைபோல, ஜீவான்மாவின் சந்நிதியிலே அந்தக் கரணங்களும் சேட்டைப்பட்டு அடங்கின என்று நீ கூறின்,—நீங்கி மீளும் வகை தந்திடாது உன் உரை தப்பு அது ஏ – நீ கூறிய இரும்பு காந்தத்தோடு கூடினால் காந்தத்தை இரும்பு நீங்கமாட்டாத தன்மை போல அந்தக்கரணங்களும் ஜீவான்மாவோடு கூடினால் நீங்கப்படாது ஆகையால் நீ கூறிய உவமையும் பிறழக் கூறினாயாம் என்றவாறு.*

*இச்செய்யுள் 'கரணங்கள் அவத்தைப்படும்' என்பதனை மறுத்துக் கூறிற்று.* (14)

செய்யுள் — 248

இருள்பொ திந்தபொரு பரிதி யிவ்வுலகில்
இசையி லின்றுடல நானெனும்
மருள்பொ திந்தபொரு பிரம மிங்குளது
மருவி நின்றவுரு வொருவியே
தெருள்பொ திந்துபரம் நானெ னுந்தெளிவு
சென்ற போதுகதி யென்றிடும்
பொருள்பொ திந்தபெனி லமல னுக்குமலம்
வருத லாலுளது புன்மையே

என்பது: *இருள் பொதிந்தது ஒரு பரிதி இ உலகில் இசையில் இன்று உடலம் நான் எனும் மருள் பொதிந்தது ஒரு பிரமம் இங்கு உளது – இருளால்*

மூடப்பட்டதோர் ஆதித்தன் இந்த உலகின்கண் உண்டாகி நின்றதனை ஒக்கும் காயங்கள்தோறும் நான் என்று மருட்சியாலே மூடப்பட்ட பிரமம் இவ்விடத்து உண்டாய் நின்றது,—மருவி நின்ற உரு ஒருவி ஏ — அப்படி மருட்சி பொருந்தி நின்ற காயம் நீங்கி,—தெருள் பொதிந்து பரம் நான் எனும் தெளிவு சென்ற போது கதி என்றிடும் பொருள் பொதிந்தது எனில் — அறிவு சூழப்பட்டுப் பரப்பிரமம் நானே என்னும் தெளிவு உண்டான பொழுது முத்தியாய் நிற்கும் பொருளும் தானும் என்று கூறின்,—அமலனுக்கு மலம் வருதலால் உளது புன்மையே — மலரகிதமாகிய பிரமத்துக்கு மலம் கூடுதலும் நீங்குதலும் உண்டாகையாம் என்று நீ கூறிய உரை வெளிற்றுரை என்றவாறு.

உளது புன்மையே என்பது — நின்மலமாயிருக்கிற பிரமத்துக்கு மலமானது கூடுதலால் ஆபாசமாகை உண்டாம் என்க. இது கூடாது என்பது கருத்து.

இச் செய்யுள் 'பிரமந்தானே மருட்சியால் ஜீவான்மா என்றும், தெருட்சியால் பரப்பிரமம் என்றும் நிற்கும்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (15)

செய்யுள் — 249

சுத்த மானது பரத்தி னுக்கணவ
 தின்று சுத்தமத நாதிநீ
வைத்த மாயமுறு சித்த சுத்தமுற
 மற்ற தற்குமலம் வைத்தனை
ஒத்த சீவன்மல கன்ம மாயையுறு
 கின்ற காரண முணர்ந்திடாய்
பித்த னேவிறகி னிற்பி றப்பதெரி
 யென்னில் வேறுபொருள் பெற்றதே.

என்பது: சுத்தம் ஆனது பாத்தினுக்கு அணை வது இன்று சுத்தம் அது அநாதி – பரப்பிரமத்துக்குப் புதிதாகச் சுத்தம் உண்டாயது அன்று அநாதியே சுத் தம் உள்ளது, – நீ வைத்த மாயம் உறு சித்து அசுத்தம் உற மற்று அதற்கு மலம் வைத்தனை – நீ ஜீவான்மா என்று பிரமத்திலே பேதித்துச் சொல்லப்பட்ட சித்தா னது மயக்கமுற்று அசுத்தத்தைப் பொருந்தவே அதன் பேதமாகிய பரப்பிரமத்துக்கு மலம் உண்டென்று தோற்றுவித்தனை,—ஒத்த சீவன் மல கன்ம மாயை உறுகின்ற காரணம் உணர்ந்திடாய் பித்தனே– காயத்தோடு பொருந்தின ஆன்மா மலமும் கன்மமும் மாயையும் கூடி அநுபவிக்கும் காரியத்துக்குக் காரண மாகிய முதலை அறியாய் ஆதலால் பேயனே! நீ அற்றன்று,—விறகினில் பிறப்பது எரி என்னில் – காட்டத்திலே அக்கினி மறைப்புண்டு நின்று தோன்றிப் பிரகாசித்தாற்போலக் காயத்திலே மறைப் புண்டு நிற்கும் பொழுது ஜீவான்மா என்று நின்று பிரகாசிக்கும் பொழுது பரப்பிரமமாக நின்று பிரகா சிக்கும் என்று கூறின்,—வேறு பொருள் பெற்றது ஏ – ஓர் அக்கினி இரண்டாகப் பிரிந்து காட்டத்திலே நிற்பதன்றி வேறொரு பொருளாய்த் தோன்றுமா போல ஜீவான்மாவும் வேறொரு முதல் என்று அறிவா யாக என்றவாறு.

வேறு பொருள் பெற்றதே என்பதற்கு – விறகில் நெருப்புத் தோன்றும் தன்மை என்பையாகில் அந்நியப் பொருளைக் காட்டிநிற்கும்.

இச் செய்யுளும் 'மருட்சியால் ஜீவான்மாவுமாய்,தெருட் சியால் பரப்பிரமமும்ஆம்' என்பதனை மறுத்துக் கூறிற்று (16)

செய்யுள் — 250

உன்னி னீயுமநு போக மென்றபொழு
துற்றி டுந்துவித மற்றதிங்
கென்னி லில்லையெனி லில்லை நீயுமறி
வின்மை கண்டவிட முண்மையேல்
மன்னு மோருணர்வு வந்தி டும்முணர்வெ
லாமு மாயையெனின் மாயையே
சொன்ன தோர்பிரம மாயி டும்பிரமம்
மாயை யாயறிவு சோருமே.

என்பது: உன்னின் நீயும் அநுபோகம் என்ற பொழுது உற்றிடும் துவிதம் – நானே நானாய் அநுபவிப்பன் என்னும் இடத்துப் பெறுவானும் அநுபவிப்பதும் உண்டாய் இரண்டாம்,—மற்று அது இங்கு என்னில் இல்லை எனில் இல்லை நீயும் – பெறுவானாகை என்னிடத்தில் கண்டதில்லை என்னில் பேருகிய நீயும் இல்லையாம்,—அறிவு இன்மை கண்ட இடம் உண்மையேல் மன்னும் ஓர் உணர்வு வந்திடும் – அஞ்ஞானம் கெட்ட இடமே உண்மை என்று நீ கூறின் அந்த மயக்க அறிவுகெட்டுக் கூடுமிடத்து ஆன்ம அறிவு சிறிது உண்டாயிருக்கும்; அற்றன்று,— உணர்வு எலாமும் மாயை எனில் – அப்படி அறியும் அறிவெல்லாம் மாயை அறிவாம் என்று கூறின்,—மாயையே சொன்னது ஓர் பிரமம் ஆயிடும் – மாயை நீங்கின இடத்தில் தோன்றும் அறிவும் மாயை அறிவு என்னின் அந்தப் பிரமம் மாயை ஆகவேண்டும்,—பிரமம் மாயை ஆய் அறிவு சோரும் ஏ – ஆகையால் பிரமமும் மாயையாய் அம்மாயையாலே அறிவும் கெடும் என்பதே ஆம் என்றவாறு.

இச் செய்யுள் 'பெறுவான் இன்றியே அநுபவம் உண்டு' என்பதனை மறுத்துக் கூறிற்று. (17)

செய்யுள் — 251

ஆர ணங்கள்தரு தத்து வம்மசி
பதங்க ளின்பொரு ளறிந்திடாய்
கார ணம்மதுவு நீயு மென்றிருமை
கண்டு வேறதின்மை கருதிடாய்
நார ணன்பிரம னுலு நாடரிய
நாய கன்கழல்கள் நண்ணிநீ
ஏர ணைந்துபொலி சாத னங்கள்கொடு
யோக ஞானமு மியற்றிடே.

என்பது: ஆரணங்கள் தரு தத்துவம் அசி பதங்களின் பொருள் அறிந்திடாய் – வேத முடிவிலே சொல்லப்பட்ட 'தத்துவமசி' என்னும் மகாவாக்கியத்தையும் அதனால் தரிசிக்கப்பட்ட பத பதார்த்தங்களையும் அறியாய்,—காரணம் அதுவும் நீயும் என்று இருமைகண்டு வேறது இன்மை கருதிடாய் – காரணமாகிய கர்த்தாவும் காரியமாகிய ஆன்மாவும் இரண்டுபட்டு நின்றமையும் கண்டு கூடிநிற்கும் அதுவும் அறிந்திடாய்; ஆகையால்,—நாரணன் பிரமனும் நாட அரிய நாயகன் கழல்கள் நண்ணி நீ ஏர் அணைந்து பொலி சாதனங்கள் கொடு யோக ஞானமும் இயற்றிடு ஏ – பிரம விஷ்ணுக்களாலும் நாடுதற்கரிய கர்த்தாவினுடைய திருவடிகளைப் பொருந்துதற்கு அழகு பொருந்திப் பொலிவினையுடைத்தாகிய சிவசாதனங்களையும் பொருந்திக்கொண்டு யோக ஞானங்களை அறிந்து செய்வாயாக என்றவாறு.

எனவே, யோகத்தாலே மனத்தைப்பிரித்து ஞானத்தாலே திருவடியைச் சேர்க என்பது கருத்தாம்.

இச் செய்யுள் மாயாவாதியை நிஷித்தமாக்கிப் 'பெறுவானும் பேறும் உண்டு' என அறிவித்தது.

'ஏகனுன்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் மாயாவாதிமதத்தை மறுத்துக் கூறிற்று. (18)

## பதினொன்றுவது

## மாயாவாதி மதமறுதலை முற்றிற்று.

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—251.

---



# 12. (க) பாற்கரியன் மதம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 252

மன்னு மறையின் முடிவென்று
  மாயா வாதி யுடன்மலைந்து
பின்ன மாகிப் பிரமத்தைப்
  பேதா பேதஞ் சாதித்துப்
பன்னு மொருநூ லதுவாகப்
  பாரின் மீது பாற்கரியன்
சொன்ன விதனை யிந்நூலி
  னகத்தே தோன்றச் சொல்லுவாம்.

என்பது: *மன்னும் மறையின் முடிவு என்று மாயாவாதியுடன் மலைந்து பின்னம் ஆகி* — *சுயம்புவாக நிலைபெற்ற வேதம் இத்தன்மைத்து என்று மாயாவாதியோடு மாறுபட்டு நீங்கி,—பிரமத்தை பேத அபேதம் சாதித்து* — *மாயாவாதி கூறிய பிரமத்தைப் பேதமாகவும் அபேதமாகவும் நிலைநிறுத்தி,—பன்னும் ஒரு நூல்*

அது ஆக பாரின் மீது பாற்கரியன் சொன்ன இதனை இ நூலின் அகத்தே தோன்ற சொல்லுவாம் — ஓதும் நூலும் வேதமுமாய் இருக்க அதன் உண்மையை அறியாது பூமிமீதே பாற்கரியன் சொன்ன மதத்தை இந்தச் சிவஞான சித்தியினிடத்தே தெளியச் சொல்லுவாம் என்றவாறு.

பாற்கரியன் என்பான் ஓர் இருடி. பாற்கரியம் எனினும் பரிணாம மாயாவாதம் எனினும் ஒக்கும்.

மாயாவாதிமதம்கூறி நிஷித்தமாக்கிப் பாற்கரியன் மதம் கூறுவான் எடுத்துக்கொண்டார்; அதனுள், இச் செய்யுள் வேதநூலும் மாயாவாதி கொள்ளத்தக்கதாய் இருக்க அவனோடு வேறுபட்டுப் பாற்கரியன் கூறுவான் என்பது கூறிற்று. (1)

செய்யுள் — 253

சித்தே யுலகாய்ப் பரிணமித்துச்
சீவ ஞகித் திகழ்ந்தமையால்
சத்தே யெல்லா முத்தியினைச்
சாரக் கண்ட ஞானங்கள்
வைத்தே மொழியு மாமறைகள்
சொன்ன மரபே வந்தக்கால்
ஒத்தே கெட்டுப் பிரமத்தோ
டொன்ருய்ப் போமென் றுரைத்தனனே.

என்பது: சித்தே உலகு ஆய் பரிணமித்து சீவன் ஆகி திகழ்ந்தமையால் சத்தே எல்லாம் — அறிவாகிய பிரமமே பிரபஞ்ச பேதமாய்த் தோன்றி வளர்ந்து ஆன்மாக்களுமாய் விளங்கும் தன்மையால் சர்வமும்

அந்தப் பிரமமேயாம்,—முத்தியினை சார கண்ட ஞானங்கள் மொழியும் மா மறைகள்—வீட்டின்பத்தைச் சேர அறியும் ஞானங்களை வேத வாக்கியங்கள் சொல்லும்,—சொன்ன மரபே வைத்து ஏ வந்த கால் ஒத்தே கெட்டு பிரமத்தோடு ஒன்று ஆய் போம் என்று உரைத்தனன் ஏ — அந்த வாக்கியங்களைச் சொன்னபடியே வைத்துத் தத்துவமசி பதபதார்த்தம் கண்டால் அந்தப்பிரமத்தோடே ஆன்மாக் கூடி ஆன்மத்தன்மை கெட்டு ஒன்றிப் பிரமமாயே போம் என்று பாற்கரியன் கூறினன் என்றவாறு.

வாக்கியம் — தத்துவமசி. சத்து — நிலைநின்றது. அசத்து — நிலைநில்லாதது. ஆதலால், சத்தே சர்வமும் ஆம் என்பது அவன் கருத்து.

இச் செய்யுள் பாற்கரியன்மதம் கூறிற்று.

'மன்னுமறை' என்னும் செய்யுளும், இச் செய்யுளும் பாற்கரியன்மதம் கூறின. (2)

**பன்னிரண்டாவது — பாற்கரியன் மதம் முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—253.

---

# 12. (உ) பாற்கரியன் மதமறுதலே

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செய்யுள் — 254

இயம்பு கின்றதுல காயி டாதுசட
மின்றி நின்றுசட மாகியே
முயங்கு கின்றமையி லிலவ ணத்திரத
முழுதுமே கனதை முயல்கைபோல்
பயந்த தென்னிலறி யப்ப டும்பொருளு
மறிவு மென்றுபல வாகுமோ
தியங்கு கின்றதெ னுரைத்தி டாய்கடின
மாதி யாகிவரு சித்தனே.

என்பது: *இயம்புகின்றது உலகு ஆயிடாது — நீ சொல்லுகின்ற பிரமம் பிரபஞ்சபேதம் ஆயிடமாட்டாது; ஆகையாலே,—சடம் இன்றி நின்று சடம் ஆகியே முயங்குகின்றமை இல் — பிரமம் ஜடத்தை நீங்கி நின்றது, ஜடந்தானும் தானகவே கூடி நின்றமை உண்டாகாது; அற்றன்று,— இலவணத்து இரதம் முழுதுமே கனதை முயல்கை போல் பயந்தது என்னில் — உப்பானது ஜலத்தோடுகூடி ஒருதன்மைப்*

பட்டாற்போல, வத்துவும் ஒன்றாய் நின்றது என்னில்,—அறியப்படும் பொருளும் அறிவும் என்று பல ஆகுமோ – ஜலத்தோடு கூடிய இலவணம் பேதியாது ஏகத்துவமாய் நின்றாற்போல, பிரமமும் ஒன்றாய் நிற்கையின்றி அறியப்படும் பொருளாகிய ஜடமும் அறிவாகிய ஞானமுமாகப் பேதித்து நிற்குமோ,—தியங்குகின்றது என் உரைத்திடாய் கடினம் ஆதி ஆகி வரு சித்தனே – இப்படி மயங்குவானேன், மாபூதங்கள் முதலானவையும் நானே ஆவேன் என்று வரும் அறிவனே என்றவாறு.

கடினம் – பூதகுணம்; அந்த குணிமேல் நின்றது.

இலவணத்து இரதம் முழுதுமே கனதை மூயல்கை போல் என்றது – மண்ணின் சாரமானதை ஜலமானது கொண்டு உப்பான தொழியச் சிற்சொரூபம் திரண்டு பரிணமியாது என்பது நோக்கியாம்.

பாற்கரியன் மதத்தை மறுப்பான் எடுத்துக் கொண்டார் அதனுள் இச் செய்யுள் 'பிரமமே பிரபஞ்சம்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 255

உன்னு கின்றபிர மத்தி லேசிறிதிவ்
வுலக மானதென வோதின்நீ
மன்னு கின்றசில கால மோடழியும்
அழிய வந்துதவு மாயையால்
தன்னி லொன்றுமெனில் வருத லோடிறுதி
தருத லாலதுச டத்ததாம்
உன்னெ டச்சகமு முண்மை யன்றுசட
மென்ன வேயுறுதி மன்னுமே.

என்பது: உன்னுகின்ற பிரமத்திலே சிறிது இ உலகம் ஆனது என ஓதின் நீ—யாவரும் நினைக்கப்படா நின்ற பிரமம் சேரப் பிரபஞ்சம் ஆகாது, சிறிது பேதித்துப் பிரபஞ்சம் ஆனது என்று நீ சொல்லு கின்றாயாகில்;—மன்னுகின்ற சில காலமோடு அழியும்— அங்ஙனமாயின், பிரபஞ்சம் சிறிதுகாலம் நிலைபெற்று நின்று அழியா நிற்கும்,—அழிய வந்து உதவும் மாயை யால் – அப்படி அழிந்து மீளவும் மாயையிலே தோன்றி வருகையால் மாயையிலே ஒடுங்கி மாயை யிலே தோன்றும்; அற்றன்று,—தன்னில் ஒன்றும் எனில் – ஒடுங்கும் காலத்திலும் பிரமத்திலே ஒடுங்கித் தோன்றும் காலத்திலும் பிரமத்திலே தோன்றும் என்னில்,—வருதலோடு இறுதி தருதலால் அது சடத்தது ஆம் – இப்படித் தோன்றி ஒடுங்குவதாகிய பிரபஞ்சம் பிரமத்திலே பேதமாயின் பிரமமும் அசே தனமாக வேண்டும்; ஆகையால்;—உன்னோடு அ சக மும் உண்மை அன்று சடம் என்னவே உறுதி மன்னும் ஏ – அகம் பிரமம் என்கிற உன்னுடனே பிரபஞ்சமும் தோன்றுகையும் ஒடுங்குகையும் செய்கையால் மெய் அன்று, ஜடம் என்றே சொல்லுதலை மெய்யாக உடைத்து என்றவாறு.

'வந்துவந்துதவு மாயையால்' எனவும் பாடம்.

இச் செய்யுள் 'பிரமத்தில் சிறிது பேதம் பிரபஞ்சம்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (2)

*செய்யுள்* — 256

வித்தெ ழுந்துமர மாய்வி ளைந்தமை
விளம்பி னுயுவமை வேறுநீ
நித்த மென்றவுரை பொய்த்து நீடுசட
மாயெ ழுந்தழியும் நின்பரம்
ஒத்தெ ழும்பொழுது வித்தி னுக்கவனி
யுண்டு தாரகமு னக்கெனு
பித்த னென்றுல குரைத்தி டும்பிரம
மாயி னுயிவை பிதற்றிலே.

என்பது: *வித்து எழுந்து மரம் ஆய் விளைந்தமை விளம்பினுய் உவமை—மரம் கெட்ட இடத்து வித்திலே நின்றும் மரம் உண்டாளுற்போலப் பிரபஞ்சம் அழிந்த இடத்தும் பிரமத்திலே நின்று பிரபஞ்சம் உண்டாம் என்று உவமை கூறினுய்; அங்ஙனமாயின்,—வேறு நீ நித்தம் என்ற உரை பொய்த்து நீடு சடம் ஆய் எழுந்து அழியும் நின் பரம் – அந்த வித்து மரத்திலேயுள்ளது மாய்ப் பின்பு தானே பரிணமிக்கும் காலத்து மரம் தோன்றத் தான் கெட்டுத் தோன்றினதற்குப் பரிணமம் உண்டாய் அந்த மரம் மீளவும் வித்தை உண்டாக்கினுற்போலப், பிரமமும் பிரபஞ்சத்துக்கு வேருய் நித்தமாய் நிற்கும் என்ற உரையும் பொய் யாய்ப் பிரமமும் பிரபஞ்சத்தை உண்டாக்கியும், பிரபஞ்சமும் பிரமத்தை உண்டாக்கியும் சடத்தின் பகுதியாய்த் தோன்றிக் கெடும் நின்பிரமம்; அதுவு மன்றி,—ஒத்து எழும்பொழுது வித்தினுக்கு அவனி உண்டு தாரகம் உனக்கு என் ஆ – அந்தவித்து மரமாம்*

பொழுது பூமி தரிப்பாகத் தோன்றும், அதுபோல உன்னுடைய பிரமம் பிரபஞ்சம் ஆம் பொழுது தரிப்பதீ யாது,—பித்தன் என்று உலகு உரைத்திடும் பிரமம் ஆயினுய் இவை பிதற்றில் ஏ—பிரமம் ஆயினுய்! இப்படி மயங்கக் கூறுவையாயின் உன்னைப் பேயன் என்று மிக்கோர் சொல்லாநிற்பர் என்றவாறு.

பிரமமாயினுய் என்பது – இழிவு. உலகம் என்பது – உயர்ந்தோரை. உலகம் என்னும் வாய்பாடு உரைத்திடும் என்னும் வாய்பாடு பெற்றது.

இச் செய்யுளும் 'பிரமத்திலே பிரபஞ்சம் தோன்றும்' என்பதனை மறுத்துக் கூறிற்று. (3)

செய்யுள் — 257

சூட கங்கடக மோதி ரஞ்சவடி
தொடரொ டாரமுடி தோடுநாண்
ஆட கந்தருவ தாகு மப்படி
அனைத்து மப்பிரம மாகுமேல்
நீடு மப்பணிகள் செய்து ளோரவை
புனைந்து ளோர்களை நிகழ்த்திடும்
நாடி டுஞ்சகமி யற்று வோர்கொடு
நடத்து வோருளர் நவிற்றிலே.

என்பது: சூடகம் கடகம் மோதிரம் சவடி தொடரொடு ஆரம் முடி தோடு நாண் ஆடகம் தருவது ஆகும் – சூடகம் முதல் நாண் ஈருகச் சொல்லப்பட்ட பேதமான பணிகளைப் பொன் ஒரு முதலாக நின்று

பேதித்தாற் போலப், பிரமமும் பிரபஞ்சபேதம் எல்லாமாகப் பேதித்து முதல் கெடாமல் நிற்கும் என்று கூறின்,—அப்படி அனைத்தும் பிரமம் ஆகுமேல் – அப்பணிபோலப் பேதித்து எல்லாம் பிரமமாய் நிற்குமாகில்,—நீடும் அ பணிகள் செய்துளோர் அவை புனைந்துளோர்களை நிகழ்த்திடும் – அப்பணி பேதம் செய்தோரையும் அப்பணி அணிந்தோரையும் அப்பணி தானே உண்டாக்கி நிற்றலால் அதுபோல,—நாடிடும் சகம் இயற்றுவோர் கொடு நடத்துவோர் உளர் நவிற்றில் ஏ – ஒரு முதலைக் கொண்டு சகத்தை உண்டாக்குவோரையும், அதனை நடத்துவோரையும், சங்கரிப்போரையும் சொல்லும் காலத்து அறிந்திடும் தன்மையை உடைத்து என்றவாறு.

இச் செய்யுள் பொன்னும் பணியும் போலப் 'பிரமமும் பிரபஞ்சமாகப் பேதிக்கும்' என்பதனை மறுத்துக் கூறிற்று(4)

செய்யுள் — 258

அறிவி ைேடுசெயல் மாறில் வீடதனை
அணுகொ ணுதவைவயி ரண்டிருைல்
உறுதி யானபிர மத்தி ைேடழிய
ஒன்ற லாமெனவு ரைத்திகாண்
இறுதி யேலதனெ டிசைவு தின்றிசைவ
துள்ள தாயிடினவ் வின்பமே
பெறுதி நீயுடலொ டுயிர்க ளாயறிவு
பிரியு மாறுசெயல் பெறுவதென்.

என்பது: அறிவினேடு செயல் மாறில் வீடு அதனை அணுக ஒண்ணது அவை இரண்டினுல் உறுதி ஆன பிரமத்திஞேடு அழிய ஒன்றலாம் என உரைத்தி காண் — ஞானக் கிரியைகளை மாறினுல் வீட்டின்பம் அணைதற்கு அரிது; ஞானக் கிரியைகள் இரண்டினுலும் சென்று அவற்றிற்கு ஆ தா ர ம் ஆகிய பிரமத்திலே அழியக்கூடலாம் என்று கூறிஞய் காண்,—இறுதியேல் அதஞேடு இ சை வ து இன்று — ஞானக்கிரியைகள் நிற்கப் பிரமத்தைச் சென்று கூடுதலும் இல்லை, அந்த ஞானக்கிரியைகள் கெட்டால் பிரமத்தோடு கூடுதற்கு ஒரு முதலும் இல்லையாம்; அன்றி,—இசைவது உள்ளது ஆயிடின்-அந்த ஞானக்கிரியைகள் கெடாமல் ஒன்றுவது உள்ளதாமாயின்,—அ இன்பமே பெறுதி நீ உடலொடு உயிர்கள் ஆய் அறிவு பிரியும் ஆறு செயல் பெறுவது என் — எப்பொழுதும் அந்தச் சுகத்தை அநுபவிப்ப தன்றிக் காயத்தோடு உயிர்களின் மிக்க அறிவு நீங்கும் படி அவத்தையின் செய்தியைப் பெறுவானேன்? ஆத லால், ஆன்மா என்று ஒன்று உண்டுகாண் என்றவாறு.

'உடலோடு உயிர்களாயது பிறக்குமாறு செயல் பெற்றி யால்' எனப் பாடமாயின், இன்பத்தைப்பெற்று நிற்றலன்றி நீயும் உடலோடு உயிர்களாய் வந்து பிறக்கும் மரபு பெற்ருய் எனப் பொருள்கொள்க. இதனுல், உலகமும் உயிருமாய்ப் பிறந்து இறந்து உழலும் அவனன்ருே! நீ என்றது எனக் கொள்க

இச் செய்யுள் அறிவும் செயலும் கெடாமல் பிரமத்திற் சென்று அழியக்கூடும் என்பதனை மறுத்து 'ஆன்மா என்று

ஒரு முதல் உண்டு என்றும், அறிவும் செயலும் கெட்டுக் கூடவேண்டும்' என்றும் கூறிற்று.

'இயம்புகின்றது' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் பாற்கரியன் மதத்தை மறுத்துக் கூறிற்று. (5)

## பன்னிரண்டாவது

## பாற்கரியன் மதமறுதலை முற்றிற்று.

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—258.

---



# 13. (க) நிரீச்சுரசாங்கியன் மதம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 259

மூலம் புரியட் டகம்விகிர்தி
யாகி மூன்ருய்ப் பிரகிருதி
தூல சூக்கம் பரமாயச்
சுத்த புருடன் சந்நிதியில்
பாலன் சேட்டை புரிந்துலகம்
யோனி பலவாய்ப் பரந்தொடுங்கும்
சால வென்று நிரீச்சுவர
சாங்கி யன்ருன் சாற்றிடுமே.

என்பது: *மூலம் புரியட்டகம் விகிர்தி ஆகி மூன்று ஆய் பிரகிருதி – பிரகிருதி புமான் என்னும் இரண்டில் பிரகிருதியானது மூலம் என்றும், புரியட்டகம் என்றும், விகிர்தி என்றும், மூன்று பெயரை உடைத்தாகி,—தூலம் சூக்கம் பரம் ஆய் – அந்தப் பிரகிருதி தூலமாயும் சூக்குமமாயும் பரமாயும் நிற்கும்,—அ சுத்த புருடன் சந்நிதியில் பாலன் சேட்டை புரிந்து உலகம் யோனி பல ஆய் பரந்து – புமானாகிய சுத்தபுருடன் பிரகிருதியின் சந்நிதியிலே மழவின் செய்தியைப்போல அறியாமையைப் பொருந்திப்*

பிரபஞ்சமும் யோனிபேதங்களும் நான் என விரிந்து நின்ற இடத்து,—ஒடுங்கும் கால என்று – தனக்கு விவேகஞானம் வந்து சர்வமும் பிரகிருதிக்குள்ளது தனக்குள்ளது அன்று என்று காணவே பிரபஞ்ச வியாபாரம் நன்றாக நீங்கும் என்று,—நிரீச்சுரசாங்கியன் தான் சாற்றிடும் ஏ – நிரீச்சுரசாங்கியன் இப்படிச் சொன்னான் என்றவாறு.

மூலம் – சித்தம். புரியட்டகம் – சத்தாதிகள் ஐந்து மனம் புத்தி அகங்காரம் மூன்று ஆக எட்டாம். விகிர்தி – தூலதேகமும், பிரபஞ்சமும். இம்மூன்று வகையாகப் பிரகிருதி பேதிக்க இதனைப் புமான் தனது என்று கொண்டு நிற்பன். இந்தப் பதினாறுகருவிகளோடும் கூடிப் பிரபஞ்சத்தைப் பிரகிருதிக்கு உள்ளது என்று நீங்கப் புமான் என்றும், புருடன் என்றும் வேறற்று நிற்பன்; அதுவே முத்தியாம் என்பது கருத்து.

நிரீச்சுரசாங்கியம் – கபிலன்மதம். இதில் விகிர்தி என்றமையால், ஆங்கார பேதத்தில் தோன்றிய ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும், சத்தாதிகளில் தோன்றிய பூதங்களும், இருபத்துநாலு தத்துவங்களும் அதிற்பேதமும் எனக் கொள்க.

இதில் ஈச்சுரசாங்கியன் என்றும், நிரீச்சுரசாங்கியன் என்றும் இரண்டுவகையர். இதிலே சிவசாங்கியரையும், விஷ்ணுசாங்கியரையும் ஈச்சுரசாங்கியர் எனக் கொள்க.

இச் செய்யுள் சாங்கியன்மதம் கூறிற்று. (1)

**பதின்மூன்றாவது நிரீச்சுரசாங்கியன்மதம் முற்றிற்று**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—259.

---

# 13. (உ) நிரீச்சுரசாங்கியன் மதமறுதலை

*செய்யுள் — 260*

சுத்தன் அறிவன் புருடனெனில்
சூழா தாகும் பிரகிருதி
பெத்த நீங்கி னுலும்பின்
பெத்த னுவன் பேரறிவால்
சுத்த மேவும் பிரகிருதி
கண்டு கழிக்க மாட்டானேல்
முத்த னுகான் சுத்தனுக்கு
மூலப் பிரகி ருதியிலையாம்.

என்பது: *சுத்தன் அறிவன் புருடன் எனில் சூழாது ஆகும் பிரகிருதி—ஆன்ம புருடன் சுத்தமான அறிவையுடையனுமாகில் அவனை அசுத்தமாகிய பிரகிருதி வளையாதாகும்; அன்றியும்,—பெத்தம் நீங்கினும் பின் பெத்தன் ஆவன் – பெத்தனுய் நின்ற விடத்திலும் இவனைப் பந்தியாத அஞ்ஞானம் அது*

பிரகிருதிக்கு உள்ளதாய் நிற்கும் என்னில், பெத்தம் நீக்கின இடத்திலும் அறியாமல் நின்றான் ஆகையால் பெத்தத்தைப் பொருந்தினவன் ஆவன்,—பேர் அறிவால் கத்தம் மேவும் பிரகிருதி கண்டு கழிக்க மாட்டானேல் – மிக்க அறிவாகிய பரையோடு கூடிநின்றும் பொல்லாங்கைப் பொருந்தின பிரகிருதியின் செயலைத் தெரிசித்து நீங்கமாட்டானுயின் அஞ்ஞானப் பிரகிருதிக்கு உள்ளது என்று காணும் தகுதியுடையன் அல்லன் ஆகையால்,—முத்தன் ஆகான் – பரையுடனே கூடிநின்று பிரகிருதியை நீங்கானுயின் முத்தியடையும் ஆன்மா ஆகான்,—சுத்தனுக்கு மூலப்பிரகிருதி இலை ஆம் – சுத்தனுய் இருக்கிற பிரமத்துக்கு மூலப்பிரகிருதிகள் உண்டாகா; மூலப்பிரகிருதி கூடுவதும் நீங்குவதும் ஆன்மாவுக்கு என்று அறிவாயாக என்றவாறு.

கத்தம் – பொல்லாங்கு.

சாங்கியன் மதத்தை மறுப்பான் எடுத்துக் கொண்டார்; அதனுள், இச் செய்யுள் பரமபுருடன் பிரகிருதிக்குள் அகப்படுவன் என்பதனை மறுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 261

புருடன் பிரகி ருதிபெற்ருல்
போதஞ் சிறிதங் குண்டாகிக்
குருடன் முதுகின் முடவனிருந்
தூர்ந்தாற் போலப் பிரகிருதி
இருட னிடத்தே யிருந்தியங்கும்
கன்மா லிறையன் றிரண்டினையும்
மருட னுருவாய்ச் சேட்டிப்பித்
தறியு மமல னரனேயாம்.

என்பது: புருடன் பிரகிருதி பெற்றால் போதம் சிறிது அங்கு உண்டாகி—சுத்த புருடன் என்ற ஆன்ம புருடன் பிரகிருதியைக் கூடின இடத்துப் பிரகிருதி யாலே சிறிது அஞ்ஞான அறிவு உண்டாய்,—குருடன் முதுகில் முடவன் இருந்து ஊர்ந்தால்போல பிரகிருதி இருள் தன் இடத்தே இருந்து இயங்கும் கன்மால் — அந்தகன் முதுகிலே முடவன் இருந்து அந்தகனை நடத் தினாற்போலக் கன்மத்துக்கு ஈடான பிரகிருதியாலே சிறிது அஞ்ஞானம் பெற்ற புருடனைப் பிரகிருதிகூடி அவனிடத்தேயிருந்து கன்மத்துக்கு ஈடான தொழிலை நடத்தும்,—இறை அன்று—ஆகையால் பிரகிருதியுடன் கூடி நிற்பான் ஆன்மாவே ஆம்; கர்த்தா அன்று,— இரண்டினையும் மருள் தன் உரு ஆய் சேட்டிப்பித்து அறியும் அமலன் அரனே ஆம் — அந்த ஆன்மபுருடனை யும் அவனைக் கூடி நிற்கிற பிரகிருதியையும் கூட்டி அஞ்ஞானமே தனக்கு உருவமாகக் கொண்டு நடக்கும் படியாக நடாத்துவித்து ஆன்மாக்கள் செய்த கன்மத் தையும் அறிந்து அதற்குத்தக்க பயனையும் கொடுப்பான் மலரகிதனாகிய அரனே காண் என்றவாறு.

பிரகிருதிக்கு அஞ்ஞானமே சொரூபம்; ஆகையால், அவ் அஞ்ஞானத்தைப் பொருந்தி நின்ற புருடனை மருடன் என்று கூறப்பட்டது. அமலன் என்கையால் கர்த்தா மலர கிதன் என்பது கருத்து.

புருடனானவன் பிரகிருதி கூடினால் சிறிது அறிவு உண்டாய்க் குருடனுடைய முதுகிலே முடவன் இருந்து நடத்தினாற்போலப் பிரகிருதியாகிய இருள் தனிடத்தே புருடன் இருந்து வழங்கும் கன்மத்தாலே வேறு கர்த்தாவால்

அன்றென்று எனில், அப்பிரகிருதி புருடனாகிய இரண்டை யும் மருள் தன்உருவாய் நின்று சேட்டிப்பித்து அறியாநிற்கும் அமலனாகிய பரமேசுவரன் என்க. குருடன் முதுகில் முடவன் இருந்து ஊர்கையாவது ஒன்றுக்குள்ள குணம் ஒன்றுக்கு இல்லாமல் சேட்டைகூடாதாம்.

இச் செய்யுள் 'பிரகிருதியுடனே கூடிநிற்பவன் ஆன் மாவே, கர்த்தாஅல்லன்' என்று மறுத்துக் கூறிற்று. (2)

செய்யுள் — 262

அறியான் புருடன் பிரகிருதி
அசேத னங்கா ரியத்தினுக்குக்
குறியாய் நாத னுளனென்று
கூறு முத்தி விவேகமெனில்
செறிவாந் தனைபோ காதறியில்
சேர்த்தோன் வேண்டும் செயலிற்போம்
நெறியாற் பணிசெய் துடற்பாசம்
நீக்கிக் கொள்நீ நின்மலனால்.

என்பது : அறியான் புருடன் – ஆன்மபுருடன் தானாய் ஒன்றையும் அறியமாட்டான்,—பிரகிருதி அசேதனம்–பிரகிருதியும் சடம் ஆதலால்,—காரியத்தி னுக்கு குறியாய் நாதன் உளன் என்று–இவை காரியப் படுதற்குக் காரணமாகிய கர்த்தா ஒருவன் உளன் என்று குறிப்பாயாக,—கூறும் முத்தி விவேகம் எனில் – நீ முத்தியென்று சொல்லப்பட்டது பந்தம் நமக்குள்ளதல்ல என்று அறியும் விவேகஞானம் என் னில்,—செறிவு ஆம் தளை போகாது அறியில்–எல்லா வற்றையும் அறியுமிடத்துப் பாசஞானமும் பசு

ஞானமும் கூடி அறியவேண்டும் ஆகையால் பாசபந்தம் நீங்காதாம்,—சேர்த்தோன் வேண்டும் – அந்தப்பாசம் நீங்குமிடத்து முன்பு கூட்டினேனே நீக்கவேண்டும்,— செயலில் போம்–அந்தப் பாசத்தைக் கூட்டின கர்த்தா வின் காருண்ணியத்தாலே பாசபந்தம் நீங்கும்; அது நீங்கும்படிக்கு,—நெறியால் பணி செய்து உடல் பாசம் நீக்கிக்கொள் நீ நின்மலனால் – சரியை கிரியா யோக ஞானங்களாகிய வழிகளிலே நின்று தொண்டு செய்து நீ கர்த்தாவினாலே உன் பாசபந்தத்தை நீக்கிக் கொள் வாயாக என்றவாறு.

இச் செய்யுள் புருடனையும் பிரகிருதியையும் நடத்து வோன் ஒருவன் உளன் என்றும் அப்படி நடத்துவோனை வழிபடுவதே முத்தி என்றும் கூறிற்று.

'சுத்தன்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் நிரீச்சுரசாங்கியன்மதத்தை மறுத்துக் கூறிற்று. (3)

## பதின்மூன்றுவது

## நிரீச்சுரசாங்கியன் மதமறுதலை முற்றிற்று

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—262.

---



# 14. (க) பாஞ்சராத்திரிமதம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*செய்யுள்* — 263

ஆதியா யருவ மாகி
அகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன்
சுவேச்சையா லுருவு கொண்டு
நீதியார் கருணை யாலே
நீள்கடற் றுயின்று நூலும்
ஓதினு னென்று பாஞ்ச
ராத்திரி யுரைப்ப னுற்றே.

என்பது: *ஆதி ஆய் அருவம் ஆகி அகண்ட பூரணம் ஆய் ஞான சோதி ஆய் நின்ற மாயன்* — ஆதி பூதனுய் அரூபியாய் எவ்விடத்தும் நிறைந்து நிற்பவனுய் ஞான சொரூபியாய் நின்ற விஷ்ணுவானவன்,— *சுவேச்சையால் உருவு கொண்டு* — ஆன்மாக்களை இரக்ஷிக்க வேண்டித் தனது இச்சையாலே மீன்

ஆமை பன்றி சிங்கம் வாமனம் இராமர் மூவராயும் கிருஷ்ணனுயும் மேனிகளை எடுத்துக்கொண்டும்,—நீதி ஆர் கருணையால் ஏ நீள் கடல் துயின்று—இரக்ஷிக்க வேண்டும் முறைமையாகப் பொருந்தின கருணையாலே நெடிய திருப்பாற் கடலிலே யோகநித்திரை செய்து,—நூலும் ஓதினுன் என்று—அநாதியாகிய வேதத்தையும் அருளினுன் என்று,—பாஞ்சராத்திரி உரைப்பன் உற்று ஏ – பாஞ்சராத்திரி என்னும் சமயி சொல்லுவன் என்றவாறு.

உருவு கொண்டும், துயின்றும் என உம்மை விரிக்க. ஆதி – எல்லார்க்கும் முதல்.

*நிரீச்சுரசாங்கியன் மதத்தை நிஷேதமாக்கிப் பாஞ்சராத்திரி மதம் கூறுவான் எடுத்துக் கொண்டார்; அதனுள், இச் செய்யுள் 'விஷ்ணுவே கர்த்தா' என்று கூறிற்று.* (1)

செய்யுள் — 264

உந்தியி லயனை யீன்றும்
அவனைக்கொண் டுலகுண் டாக்கி
அந்தநல் லுலக ழிக்க
அரனையு மாக்கு வித்துத்
தந்திடும் சகத்தி னுக்குத்
திதிகர்த்தா தானே யாகி
வந்திடும் தோற்ற மீறும்
நிலைமையும் பண்ணு மாயன்.

என்பது: உந்தியில் அயனை ஈன்றும் அவனை கொண்டு உலகு உண்டாக்கி அந்த நல் உலகு அழிக்க அரனையும் ஆக்குவித்து – வைகுண்டத்திலே இருக்கும்

பரமபுருடன் சிருட்டி காரணமாகத் தனது திருவுந்தித் தாமரையிலே பிரமாவை உண்டாக்கி அவனாலே பிரபஞ்சத்தை உண்டாக்குவித்து, அப்படி அழகு பெறப் படைத்த பிரபஞ்சத்தைச் சங்கரித்தற்குப் பிரமாவினிடத்திலே நின்றும் உருத்திரனை உண்டாக்கி அவனைக் கொண்டு சங்கரிப்பித்து,—தந்திடும் சகத்தினுக்கு திதி கர்த்தா தானே ஆகி – தன்னால் உண்டாக்கப்பட்ட பிரபஞ்சத்துக்கு இரக்ஷை கர்த்தாவும் தானே ஆகி,—வந்திடும் தோற்றம் ஈறு நிலைமையும் பண்ணும் மாயன்— இப்படி வரப்பட்ட சிருஷ்டி திதி சங்காரங்களையும் செய்வன் பரமபுருஷோத்தமன் என்று பாஞ்சராத்திரி சொல்லுவன் என்றவாறு.

பஞ்சராத்திரியில் நூல் செய்கையால், பாஞ்சராத்திரி என்று பெயராயிற்று

அரனையும் ஆக்குவித்து என்றது – பிரமாவின் முகத்திலே அரனைத் தோற்றுவித்தது.

இச் செய்யுள் புருடோத்தமனே மூன்று காரியத்துக்கும் கர்த்தா என்று கூறிற்று. (2)

செய்யுள் - 265

மீனுமை கேழல் நார
    சிங்கம்வா மனனுய் வென்றி
ஆனுத விராமர் மூவர்
    ஆயனு யளித்தான் கற்கி
தானுயும் வருவ னின்ன
    மென்றவன் சாற்றித் தேவர்
கோனுயு நிற்ப னென்று
    கூறுவன் குறிப்பி னேடே.

என்பது: மீன் ஆமை கேழல் நாரசிங்கம் வாமனன் ஆய் — பிரபஞ்சத்தை இரக்ஷிக்க வேண்டி மீனாகியும் ஆமையாகியும் பன்றியாகியும் நாரசிங்கமாகியும் வாமனனாகியும்,—வென்றி ஆனாத இராமர் மூவர் ஆயன் ஆய் அளித்தான் — வெற்றி கெடாத பரசுராமனாகியும் சீராமனாகியும் பலபத்திரராமனாகியும் கிருஷ்ணனாகியும் இரக்ஷித்தான்,—கற்கி தானும் வருவன் இன்னம் என்று அவன் சாற்றி — மேற் குதிரையாகியும் வந்து இரக்ஷிப்பன் என்று பாஞ்சராத்திரி சொல்லி,—தேவர் கோன் ஆயும் நிற்பன் என்று கூறுவன் குறிப்பினோடு ஏ—இப்படித் தசாவதாரம் பிறக்கச் செய்தேயும் முத்தி தேவன் தேவர்களுக்குக் கர்த்தாவுமாய் இருப்பன் என்று அறிவோடும் சொல்லா நிற்பன் என்றவாறு.

கற்கி — பெட்டைக் குதிரையாவன் என்றது. குறிப்பினோடே என இழித்துக் கூறியது.

இச் செய்யுள் புருஷோத்தமனது தசாவதாரம் கூறிற்று. (3)

செய்யுள் — 266

ஏழ்கடல் செலுவில் ஏற்றும்
இருங்கிரி முதுகி லேற்றும்
தாழ்தல முழுதுங் கண்டும்
தபநிய னுடல்பி ளந்தும்
வாழுல களந்து மன்னாய்
மன்னர்க்கு மன்ன ராயும்
பாழ்பட வுழறிப் பாரும்
நோக்கும்பின் பரியு மாயே.

என்பது: ஏழ் கடல் செலுவில் ஏற்றும் இரு கிரி முதுகில் ஏற்றும் தாழ் தலம் முழுதும் கண்டும் தபனியன் உடல் பிளந்தும் வாழ் உலகு அளந்தும் — மச்சரூபமாய்ச் சத்த சமுத்திரங்களையும் ஓர் செலுவிலே அடக்கியும், அமுதமர்த்தனத்தில் கூர்மரூபமாய் மகாமேருவை முதுகிலே தாங்கியும், பிரளயத்திலே தாழ்ந்துபோன பூமியை வராகரூபமாய்ப் புகுந்தெடுத்தும், நாரசிங்க ரூபமாய் இரணியவதை செய்தும், வாமனரூபமாய்த் திரிவிக்கிரமம் செய்தும்,—மன் ஆய் மன்னர்க்கு மன்னர் ஆயும் பாழ்பட உழறி பாரும் நோக்கும் — இருபத்தொரு கால் க்ஷத்திரியரைச் சங்கரித்து மண்டல நாபியாய்ப் பரசுராமனுயும், இராமனுய் இராவணனை வதை செய்தும், பலபத்திர ராமனுய் லோக ரக்ஷார்த்தமாய் யோகத்தினின்றும் வாசுதேவனுய் அசுரர் மாயை பாழ்படச் சிதறியும் பிரபஞ்சத்தை ரக்ஷிக்கும்,—பின் பரியும் ஆய் ஏ—இனி வரும் பிரளய காலத்துக்குக் குதிரையாய் வந்து ரக்ஷிக்கும் மாயன் என்றவாறு.

மன்னர்க்கு மன்னராயும் என்றது — இராமாவதாரம் மூன்றிலும் பொருந்தாத இராசாக்களை வென்று அவர்களுக்கு இராசாவாயும் இருந்தது என்க.

இச்செய்யுள் முன்கூறிய அவதாரத்துச்செய்தி கூறிற்று. 4

செய்யுள் — 267

பொய்கைவாய் முதலை வாயிற்
போதகம் போத மாட்டா
தையனே நாதா வாதி
மூலமே யென்ற ழைப்ப

உய்யயாம் பணிமா லோல
ஓலவென் றேடிச் சென்று
வெய்யவாய் முதலை வீட்டிக்
கரிக்கும்வீ டருளி ஞனே.

என்பது: *பொய்கை வாய் முதலை வாயில் போதகம் போதமாட்டாது — பொய்கையிடத்தில் தங்கிய யானை அப் பொய்கையின் கண் உண்டாகிய முதலை வாயிலே அகப்பட்டுக் கரை ஏறமாட்டாமல்,—ஐயனே நாதா ஆதிமூலமே என்று அழைப்ப — சுவாமியே! கர்த்தாவே! ஆதிமூலமே! என்று நொந்து கூப்பிட்டழைப்ப,—உய்ய யாம் பணி மால் ஓலஓல என்று ஓடி சென்று வெய்ய வாய் முதலை வீட்டி — யாம் ஈடேறும்படி வணங்கப்பட்ட பரமபுருடன் கிருபை செய்து ஓடிச் சென்று கொடிய வாயினையுடைய முதலைவாயினின்றும் விடுவித்து,—கரிக்கும் வீடு அருளினன் ஏ — அந்த யானைக்கும் முதலைக்கும் வைகுண்டபதம் அளித்தருளினன் என்றவாறு.*

*ஓல ஓல என்றது — விரைவுச்சொல். கரிக்கும் என்ற உம்மையால் முதலைக்கும் என்றதாயிற்று. போதகம் போதமாட்டாது — யானை மீறிப் போதமாட்டாது.*

*இச் செய்யுள் 'ஆதிமூலமே பரமபுருஷன்' என்பது கூறிற்று.* **(5)**

செய்யுள் — 268

அலைகடல் கடைந்து வானோர்க்
கமுதினை யளித்தும் தீய
கொலைபுரி யசுரர் தம்மைக்
கொன்றுல கங்கள் காத்தும்

கலைமலி பொருளன் பர்க்குக்
கருணையா லுரைத்து மிக்க
தலைமையி னிற்பன் மாய
னென்றும்பின் சாற்றி னானே.

என்பது: *அலை கடல் கடைந்து வானோர்க்கு அமுதினை அளித்தும் – தேவர்களுக்கு நித்தியத்துவம் உண்டாகவேண்டி மகாமேரு மத்தாகவும் வாசுகி நாணாகவும் சமுத்திரத்திலே அமுதமர்த்தனம் செய்து தேவர்களுக்கு அமுதம் கொடுத்தும்,—தீய கொலைபுரி அசுரர் தம்மை கொன்று உலகங்கள் காத்தும்–பிரபஞ்சத்திலே கொடிய கொலைத்தொழிலைப் பொருந்தின அசுரரைக் கெடுத்துத் தேவர் முதலாகிய ஆன்மாக்களை இரக்ஷித்தும்,—கலை மலி பொருள் அன்பர்க்கு கருணையால் உரைத்தும் – சர்வ கலைகளும் பொருந்தின அர்த்தத்தைத் தனது கருணையாலே அடியவர்களுக்கு அருளியும்,—மிக்க தலைமையில் நிற்பன் மாயன் என்றும் பின் சாற்றினான் ஏ – இப்படி மிக்க கர்த்திருத்துவம் குன்றாமல் நிற்பன் பரமபுருடன் என்று சொன்னான் பின்னும் பாஞ்சராத்திரி என்றவாறு*

*இச்செய்யுள் 'பரமபுருடன்கர்த்திருத்துவம்' கூறிற்று*(6)

*செய்யுள்* — 269

மாயையா யுயிராய் மாயா
காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து
வாங்கிடு மவனா லன்றி

மாயைபோ காதென் றெண்ணி
மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனால் மாயன்
வைகுண்டம் வைப்ப னன்றே.

என்பது: *மாயை ஆய் உயிர் ஆய் மாயா காரியம் ஆகி மன்னி — பரமபுருடன் பிரபஞ்ச சிருஷ்டி காலத்தில் மாயா சொரூபியுமாய்த், தன்வழி மயக்கும் ஆன்மாக்களுமாய், அவ்வான்மாக்களைப் பந்திக்கும் தத்துவ ஜாலங்களும் தானேயாய் நிலைபெற்று,—மாயையால் பந்தம் செய்து வாங்கிடும் அவனால் அன்றி மாயை போகாது என்று எண்ணி—அம்மாயையாலே ஆன்மாக்களைப் பந்தித்து மீளவும் நீக்குவன் மாயன் ஆகையால் அவனால் அன்றி மாயை நீங்காது என விசாரித்து,— மாயனை வணங்க பின்னை மாயை போம்—பதிவிரதையைப் போல மற்றொரு தெய்வத்தை நினையாமல் பரமபுருடனையே வணங்கி வழிபாடு செய்யவே அந்தப் பந்தமாகிய மாயை நீங்கும்,—போனால் மாயன் வைகுண்டம் வைப்பன் அன்று ஏ — அம்மாயை நீங்கவே பரமபுருடன் விரசை ஆற்றினிடத்ததாகிய நன்னீராலே ஆன்மாவைச் சுத்தமாக்கி வைகுண்டத்திலே சாரூப்பியமாக வைப்பன் என்று பாஞ்சராத்திரி கூறினன் என்றவாறு.*

*இச் செய்யுள் 'பரமபுருடன் அளிக்கும் முத்திநிலைமை' கூறிற்று.*

*'ஆதி' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள் காறும் பாஞ்சராத்திரிமதம் கூறிற்று.* (7)

**பதினான்காவது — பாஞ்சராத்திரி மதம் முற்றிற்று**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—269.

## சிவஞான சித்தியார் பரபக்கம்

# 14. (உ) பாஞ்சராத்திரி மதமறுதலை

திருவிருத்தம்—31.

# 14. (உ) பாஞ்சராத்திரிமதமறுதலை

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

செய்யுள் — 270

ஆதிதா னாகி லாதிக்
   கந்தமுண் டாகு மந்தக்
கோதிலா னிறைவ னென்று
   கூறிடும் வேதம் ஞானச்
சோதியாய் நின்றா னாகில்
   தோய்ந்திடான் மாயை ஞானத்
தீதிலா வுருவ மென்னில்
   சேர்ந்திடான் தாதுச் சென்றே.

என்பது: *ஆதி தான் ஆகில் ஆதிக்கு அந்தம் உண்டாகும்,—பாஞ்சராத்திரீ! நீ உன் கர்த்தாவை ஆதி என்று கூறினாய்; அங்ஙனம் ஆதியாயின், ஆதிக்கு முடிவு உண்டாய்க் கர்த்தாவும் அல்லனாவன்; அஃது யாங்ஙனம்? என்னில்,—அந்த கோது இலான் இறைவன் என்று கூறிடும் வேதம் - வேதநூலும், ஆதியும்*

அந்தமும் இல்லாதவனே கர்த்தா என்று சொல்லா நிற்கும் ஆதலால்,—ஞான சோதி ஆய் நின்றான் ஆகில் தோய்ந்திடான் மாயை – ஞானப்பிரகாசமாயும் அரூபியாயும் பரிபூரணமாயும் நின்றானாயின், மாயையின் அகப்பட்டு மாயாரூபம் ஆகான்; அற்றன்று,—ஞான தீது இலா உருவம் என்னில் – அப்படி எடுத்துக் கொண்ட திருமேனிகளும் குற்றமில்லாத ஞான சொரூபமே என்னில்,—சேர்ந்திடான் தாது சென்றே – அவன் ஞான சொரூபியாயின், அந்த ஞான ஸ்வரூபத்துக்குத் தாதுக்கள் உண்டாகா; இவன் எடுத்துக் கொண்ட வடிவெல்லாம் தாதுக்கள் உண்டாய்ச் சங்காரப் படுகையால் கர்த்தா அல்லன் என்றவாறு.

பாஞ்சராத்திரிமதம் கூறி, அவனை முறையானே மறுப்பான் எடுத்துக் கொண்டார். அதனுள் இச் செய்யுள் 'ஆதியாய் அருவமாகி' என்பதனை மறுத்துக் கூறிற்று. (1)

செய்யுள் — 271

தாதுவா னதுவே தென்னில்
சங்கரன் பலிக்குச் செல்லத்
தீதிலாக் கோதண் டத்தைத்
திறந்தவன் விட்ட போது
போதுவ துதிர மன்றோ
போந்துமூர்ச் சித்து வீழ்ந்தான்
நாதனு ரெழுப்பப் பின்னே
நடந்தனன் கிடந்த வன்தான்.

என்பது: அவனுக்குத் தாதுக்கள் உண்டானபடி எங்ஙனம்? என்னில், பரமேசுவரன் விஷ்ணுவின் அகந்தையைக் கெடுப்பது காரணமாகப் பிக்ஷாபாத்திரம்

வாங்கிப் பிக்ஷைசெய்ய, அநேகம் பலிகளால் பாத்திரம் நிறையாததால், அவ்விடத்துப் புருடோத்தமன் கருவத்தாலே யான் இதனை நிறைப்பேன் என்று நெற்றியின் நரம்பினைத் திறந்துவிடப் புறப்பட்டது இரத்தமன்றோ? அந்த இரத்தம் போதுகையாலே விஷ்ணு மூர்ச்சித்துக் கிடப்பப், பிரமாதிகள் தோத்திரம் செய்யப், பரமேசுவரன் அருள் செய்து எழுப்ப எழுந்திருந்து பரமேசுவரன் பிறகே நடந்து சென்றான்; திருப்பாற்கடலிலே பள்ளிகொண்ட மூர்த்தியாகையால், தாதுக்கள் பரமேசுவரனால் உண்டு என்று அறிவாயாக என்றவாறு.

இதனால் சொல்லப்பட்டது பரமேசுவரன் பிக்ஷைக்கு எழுந்தருள விஷ்ணுவின் அம்ஸமாகிய விண்டுசேனன் துவாரத்தே நின்று தகையப் பரமேசுவரனோடு போந்த காலவேகர் அந்த விண்டுசேனனைப் பிடித்து அடித்துத் திரிசூலத்தே ஏற்றினர். அந்த ஆரவாரத்திலே விஷ்ணு எழுந்திருந்து ஈசுவரனை நமஸ்கரித்து இலாடத்தைத்திறந்து கபாலம் பூரணமாக்கக் கடவேன் என்று உதிரம்விட, அவ்வுதிரம் பாதிக் கபாலமும் நிறைக்கப்பெறாமலே மூர்ச்சித்து வீழ்ந்தான்; பின்பு ஈசுவரன் அவன் பத்திகண்டு பிரியப்பட்டுப் பலம் கொடுக்க எழுந்திருந்து பின்னே சென்றான் என்பது நூல்வரலாறு.

இச் செய்யுள் புருஷோத்தமனுக்குத் தாதுக்கள் பரமேசுவரனால் உண்டாயின என்று கூறிற்று. (2)

செய்யுள் — 272

இச்சையா லுருவம் கொள்வன்
அரியெனி லிகழ்வேள் விக்கண்
எச்சனா யுண்ணப் புக்கங்
கிருந்தவன் றீச னாலே

அச்சமார் தலைய றுப்புண்
டான்தலை யாக்கிக் கொள்ளான்
நச்சினர் போற்ற நாதன்
நாரணன் தலைகொ டுத்தான்

என்பது: இச்சையால் உருவம் கொள்வன் அரி எனில் — புருஷோத்தமன் சுவேச்சையாலே உரு எடுத்துக் கொண்டான் என்னில்,—இகழ் வேள்வி கண் எச்சன் ஆய் உண்ண புக்கு அங்கு இருந்த அன்று ஈசனாலே அச்சம் ஆர் தலை அறுப்புண்டான் தலை ஆக்கி கொள்ளான்,—பரமேசுவரியை இகழப்பட்ட வேள்வியிடத்தே எக்கிய மூர்த்தியாய் அவிகொள்ள இருந்த ஞான்று, வீரபத்திரதேவர் அச்சமுண்டாம்படி தலையறுப்ப அந்தத்தலை இழந்தவிடத்துத் தலை உண்டாக்கிக் கொள்ளாதவன் ஆனான்,—நச்சினர் போற்ற நாதன் நாரணன் தலை கொடுத்தான் — பின்பு பத்தராகிய தேவர்கள் துதிப்ப நாரணனுக்கு மீளவும் பரமேசுவரனே தலையை உண்டாக்கினான் ஆதலால் சுவேச்சையால் உரு எடுத்தான் என்று சொல்வாயல்லை என்றவாறு.

இகழ் வேள்வி — பொல்லாங்குபட்ட வேள்வி.

இச் செய்யுள் சுவைச்சையால் உருவெடுத்தான் என்பதனை மறுத்துக் கூறிற்று. (3)

செய்யுள் — 273

நூலினை யுரைத்து வேத
நூலினை நுவலும் வண்ணம்
மாலருள் செய்தா னென்றாய்
மறைநீதி யுலகி யற்கை

சாலவே தெரியா தாகிக்
கிடந்தநாள் சகத்தி யார்க்கும்
ஆலின்கீ ழிருந்து வேதம்
அருளினு னறைந்தா னூலே.'

என்பது: *நூலினை உரைத்து வேத நூலினை நவலும் வண்ணம் மால் அருள் செய்தான் என்ருய் — புருஷோத்தமன் வேதத்தையும் அருளிச் செய்து அந்த வேத நூலில் ஆராயும்பொருள்களையும் அருளிச் செய்தான் என்று கூறிஞய்,—மறை நீதி உலகு இயற்கை சாலவே தெரியாது ஆகி கிடந்த நாள் சகத்து யார்க்கும் ஆலின் கீழ் இருந்து வேதம் அருளினுன் அறைந்தான் நூல் ஏ — வேதநூல் ஒழுங்கும் உலக இயற்கையும் தெரியாதாகித் தலைமயங்கிக் கிடப்பப் பிரபஞ்சத்துள்ளோர் யாவர்க்கும் பெரிதும் தெரிய வேண்டி வடவிருக்ஷத்தின் கீழிருந்து வேதநூலையும் அருளிச்செய்து அதன் பொருள் தெளியவேண்டி ஆகமநூலும் அருளினுன்; ஆதலால், பரமேசுவரனுலே உண்டாக்கப்பட்டனகாண் வேதாகமபுராணங்கள் என்றவாறு.*

'*நூலினை யுரைத்த வேத நூலைய னுவலும் என்பது — சாத்திரத்தில் சொல்லிய அந்த வேத நூலைப் பிரமா ஓதும் படி புருடோத்தமன் அருளிச் செய்தான்' எனவும் பாடம்.*

*இச் செய்யுள் புருஷோத்தமன் வேதம் அருளினுன் என்பதனை மறுத்துக் கூறிற்று.* (4)

செய்யுள் — 274

அயன்றனைப் பயந்தா னென்றாய்
அரியயன் சிரஞ்சே திப்பப்
பயந்திடான் தலைமால் தானும்
படைத்திடான் சிரத்தைக் கிள்ளும்
சயந்தரு மரனைத் தந்தான்
அயனென்கை தப்பே யன்றோ
தியங்கிடா துணரா யெல்லாம்
சிவன்செய லென்று தேர்ந்தே.

என்பது: *அயன்தனை பயந்தான் என்றாய் அரி* — பிரமாவைப் புருஷோத்தமன் படைத்தான் என்று கூறினாய்,—*அயன் சிரம் சேதிப்ப பயந்திடான் தலைமால் தானும் படைத்திடான்*—பிரமாவைப் புருஷோத்தமன் படைத்தான் என்று கூறின் அஞ்சு முகம் உடையம் ஆதலாலே நாமும் பரமேசுவரனுக்கு ஒப்போம் என்று கருவித்த இடத்துப் பிரமாவினுடைய நடுத்தலையைப் பரமேசுவரன் அறுக்கக் கண்டு நின்ற பிதாவாகிய விஷ்ணு பயப்படானாய்ப் பிரமாவின் தலையை உண்டாக்க மாட்டுகிலன்,—*சிரத்தை கிள்ளும் சயம் தரும் அரனை தந்தான் அயன் என்கை தப்பே அன்றோ* — பிரமாவின் தலையைக் கிள்ளிப் போடத் தக்க வெற்றியை உண்டாக்கப்பட்ட பரமேசுவரன் கர்த்தா அல்லனாய்த் தலைஇழந்த பிரமா பரமேசுவரனைப் படைத்தான் என்பது தவறல்லவோ?,—*தியங்கிடாது உணராய் எல்லாம் சிவன் செயல் என்று தேர்ந்து ஏ* — ஆதலால், எல்லாம் பரமேசுவரன் செயலே என்று விசாரித்து மயங்காமல் அறிவாயாக;

அதற்குக் காரணம் மேலே சொல்லாநின்றோம் என்றவாறு.

இச் செய்யுள் பிரமாவைப் படைத்தான் அரி என்பதனையும், பிரமா உருத்திரனைப் படைத்தான் என்பதனையும் மறுத்துக் கூறிற்று. (5)

செய்யுள் — 275

சீவன்கள் சனனம் போலச்
சிலர்வயிற் றுதித்த மாலைத்
தேவென்றே யுலகங் காக்கச்
சுவேச்சையால் சனித்தா னென்பீர்
பூவன்பின் படைக்க மாட்டா
தரனடி போற்ற வேதக்
கோவந்து முகத்தில் தோன்றிச்
சிருட்டியைக் கொடுத்தல் கூறும்.

என்பது: சீவன்கள் சனனம் போல சிலர் வயிற்று உதித்த மாலை தே என்று ஏ உலகம் காக்க சுவேச்சையால் சனித்தான் என்பீர் — ஆன்மாக்களது பிறப்புப் போலே யோனி சாதனன புருஷோத்தமனைப் பிரபஞ்சத்தை இரக்ஷிக்க வேண்டிச் சுவேச்சையாலே உரு எடுத்துக் கொண்டான் என்றும் அவனிடத்திலே பிரமா தோன்றிப் பிரமாவாலே பிரபஞ்சம் தோன்றிற்று என்றும் கூறுவீர்,—பூவன் பின் படைக்கமாட்டாது அரன் அடி போற்ற வேதக்கோ வந்து முகத்தில் தோன்றி சிருட்டியை கொடுத்தல் கூறும் — சர்வசங்காரம் செய்து பரமேசுவரன் மீளவும் பிரமா முதலான காரணேசுவரரை உண்டாக்கிப் பிரபஞ்ச சிருஷ்டி செய்விக்கப் பிரமாவும் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்க

*அறியாமல் மயங்கிப், பரமேசுவரனை நோக்கித் துதிக்கவே கர்த்தாவான பரமேசுவரன் பஞ்சகிருத்தியம் நடப்பிப்பது காரணமாகப் பிரமாவின் இலாடத்திலே தோன்றிப் பிரமாவுக்குச் சிருஷ்டியை உண்டாக்கிக் கொடுத்தலைச் சர்வபுராணங்களும் சொல்லும்; ஆதலால், பரமேசுவரன் பிரமாவாலே தோற்றப்பட்டவன் அல்லன் என்று அறிவாயாக என்றவாறு.*

*இச் செய்யுள் பிரமாவினிடத்திலே பரமேசுவரன் தோன்றினன் என்பதற்குக் காரணம் காட்டி மறுத்துக் கூறியது.* (6)

செய்யுள் — 276

நாரண னயனை யீன்றும்
அயனுநா ரணனை யீன்றும்
காரண மொருவ ருக்கங்
கொருவர்தா மிருவ ருக்கும்
வாரண முரித்த வள்ளல்
காரண னென்று மன்ற
ஆரண முரைக்கும் பக்கத்
தவர்களு மடைந்தா ரன்றே.

என்பது: *நாரணன் அயனை ஈன்றும் — நாரணன் பிரமாவை உண்டாக்கியும்,— அயனும் நாரணனை ஈன்றும்—பிரமா நாரணனை உண்டாக்கியும்,—காரணம் ஒருவருக்கு அங்கு ஒருவர்தாம் — ஒருவருக் கொருவர் காரணமாய்க் காரியப்பட்டு வருவர், — இருவருக்கும் வாரணம் உரித்த வள்ளல் காரணன் என்று மன்ற ஆரணம் உரைக்கும் — அப்படி ஒருவருக் கொருவர்*

காரியப்பட்டு வருவதற்கு முதற்காரணம் ஆவான் யானையை உரித்துப் போர்த்த பரமேசுவரன் என்றே தெளியவேதம்சொல்லாநிற்கும்,—பக்கத்து அவர்களும் அடைந்தார் அன்றே – பரமேசுவரன் காரணம் ஆகையாலே விஷ்ணுவலப்பாகமும் பிரமா இடப்பாகமுமாக அடங்குவார்கள் அநாதியே என்றவாறு.

ஆரணம் உரைக்கும் பக்கத்தவர்களும் அறைந்தார் — நிச்சயம். நான்கு வேதமாகிய வைதிகநூல் ஆராய்வோரும் சொல்லா நின்றார் என்க.

இச் செய்யுள் பரமேசுவரன் காரணமாகப் பிரமா விஷ்ணு காரியப்படுவார்கள் என்பது கூறிற்று. (7)

செய்யுள் — 277

அழிப்பரி யேவ லென்றாய்
அரிதனை யழிக்கு மன்றங்
கழிப்பது தவிர்க்க மாட்டான்
அங்கமு மழித்தே பூண்டான்
அழிப்பரி யேவ லென்றங்
கறைந்தது மழிந்த தன்றோ
அழித்திடு மரனே யாக்கம்
நோக்கமு மாக்கு வானே.

என்பது: அழிப்பு அரி ஏவல் என்றாய் – சங்காரமும் புருஷோத்தமன் ஆக்கினை என்றாய்; அப்படியாயின்,—அரி தனை அழிக்கும் அன்று அங்கு அழிப்பது தவிர்க்கமாட்டான் – சர்வசங்காரத்துப் பிரம விஷ்ணுக்கள் முதலாகச் சங்காரப்பட விஷ்ணு தன்

*மேல் வராமல் நீக்கிக் கொள்ளமாட்டான்; அஃதன்றியும்,—அங்கமும் அழித்தே பூண்டான் – பிரம விஷ்ணுக்களைச் சங்கரித்த அவதாரங்களில் மீன் சேல் பன்றிக்கோடு சிங்கப்பல் ஆமைஓடு கொக்கிறகு அன்னத்தூவி முதலியன அணிகையால் புருஷோத்தமன் ஆக்கினையால் சங்கரித்ததன்றித் தான் கர்த்தாவாய்ச் சங்கரித்தவனும்,—அழிப்பு அரி ஏவல் என்று அங்கு அறைந்ததும் அழிந்தது அன்றோ – ஆதலால், சங்காரம் விஷ்ணுவினுடைய ஆக்கினை என்று கூறியதும் அழிந்ததாம்,—அழித்திடும் அரனே ஆக்கம் நோக்கமும் ஆக்குவான் ஏ – சங்கரிப்பிப்பதும் பரமேசுவரனே ஆகையால், சிருஷ்டி திதிகளும் அவனாலே உண்டாம் என்று அறிவாயாக என்றவாறு.*

***இச் செய்யுள் சங்கரிப்பவனே கர்த்தா என்பது கூறிற்று.*** **(8)**

*செய்யுள்* **— 278**

வானம்கீழ் மண்ணு மெல்லாம்
மாயனே காப்பா னென்றாய்
தானஞ்சும் சலந்த ரன்றன்
உடல்கீண்ட சக்க ரத்தை
ஆனஞ்சு மாடு வான்பால்
பெற்றுல களித்த வார்த்தை
தானெங்கு மாகு மெல்லாம்
சங்கரன் காப்பே யாமே.

என்பது: வானம் கீழ் மண்ணும் எல்லாம் *மாயனே காப்பான் என்றாய் – ஆகாசம் முதல் கீழ்ப்*

பிருதிவி ஈருக உள்ள பிரபஞ்சம் எல்லாம் புருஷோத்த மனே இரக்ஷிப்பன் என்று கூறினுய்,—தான் அஞ்சும் சலந்தரன் தன் உடல் கீண்ட சக்கரத்தை ஆன் அஞ் சும் ஆடுவான்பால் பெற்று உலகு அளித்த வார்த்தை தான் எங்கும் ஆகும்—சலந்தரன் என்னும் அசுரனுக்கு விஷ்ணு தான் பயப்பட்டுப் பரமேசுவரனை நோக்கித் தவஞ்செய்ய அந்தத்தவசு செய்கிற விஷ்ணுவைத் தவத்தைக் கெடுப்பதாகவந்த சலந்தரனைச் சக்கரத் தாலே பிளந்துபோடப் பரமேசுவரனிடத்தில் அந்தச் சக்கரத்தைப் பெறவேண்டிப் பரமேசுவரனை நெடுங் காலம் அர்ச்சித்தும் அவன் அநுக்கிரகம் செய்யாமை யால் பின்பு விஷ்ணு கண்ணை இடந்து மலராக அர்ச் சிக்கப் பஞ்சகவ்வியத்தில் மூழ்கும் பரமேசுவரன் மாட்டுச் சக்கரம் பெற்று அதனைக் கொண்டு மாலி சுமாலி மாலியவான் முதலாகிய அசுரரை வென்று பிரபஞ்சத்தை இரக்ஷித்தான் என்னும் புராணம் பிரமாணத்தாலே சொல்லப்பட்டுப் பிரபஞ்சம் எங்கும் உண்டாயதாகையால், எல்லாம் சங்கரன் காப்பு ஏ ஆம் ஏ – பிரபஞ்சத்தை விஷ்ணு இரக்ஷிப்பது பரமேசுவ ரன் இரக்ஷையே என்று அறிவாயாக என்றவாறு.

ஆனஞ்சும் ஆடுதல் – பஞ்சகவ்வியம் ஆடுதல். வானம் கீழ் மண் – சொர்க்க பாதாள பூமி.

இச் செய்யுள் புருஷோத்தமன் இரக்ஷையும் பரமேசு வரனது ஆக்கினை எனக் கூறிற்று. (9)

செய்யுள் — 279

மாலினுர் சேலி ஞராய்
    வாரிக ளடக்கிக் கொண்டன்
ருலியா வுலக மெல்லாம்
    அழிப்பவ ஞனே யென்னச்
சேலினுர் தமைப்பி டித்துச்
    செலுவினை யிடந்து கண்ணைச்
சூலியார் மேல ணிந்தான்
    சூலிதா ஞகு மன்றே.

என்பது: மாலினுர் சேலினுர் ஆய் வாரிகள் அடக்கி கொண்டு அன்று ஆலியா உலகம் எல்லாம் அழிப்பவன் நானே என்ன — பிரளய காலத்திலே பிரபஞ்சத்தை இரக்ஷிக்கவேண்டி மச்சவடிவுகொண்டு சத்த சமுத்திரங்களையும் ஒரு செலுவிலே அடக்கின ஞான்று கருவித்துப் பிரபஞ்சத்துக்குச் சங்கார கர்த்தாவும் நானே என்று சொல்ல,—சேலினுர் தமை பிடித்து செலுவினை இடந்து கண்ணை சூலி ஆர் மேல் அணிந்தான் சூலிதான் ஆகும் அன்று ஏ — விஷ்ணுவின் கருவத்தை அடக்கவேண்டி அந்த மச்சத்தைப் பிடித்துச் செலுவினையும் கண்ணினையும் இடந்து கூரிய திரிசூலத்தின்மேலே அணியாக அணிந்தான் சூலபாணியாகிய பரமேசுவரன்தானும் என்றவாறு.

சூலிக்கை — கண்ணைப்பிடுங்குதல்.

இச் செய்யுள் மச்சரூபத்தைச் சங்கரித்தது கூறிற்று. (10)

செய்யுள் — 280

ஆமையாய் மேருத் தாங்கி
அடைகலாய்க் கிடந்த போது
நாமெனு வுலகா தார
நாதனென் றகந்தை பண்ண
ஆமெனு ரன்று மென்னுர்
அமரரு மானுர் பார்த்துத்
தாமநா ளாமை யாரைத்
தகர்த்தோடு தரித்தா ரன்றே.

என்பது: ஆமை ஆய் மேரு தாங்கி அடைகல் ஆய் கிடந்தபோது நாம் எனு உலக ஆதார நாதன் என்று அகந்தை பண்ண—ஒரு காலத்துப் பிரளயம் வந்தவிடத்துப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம் ஆகிய மேரு மலை சலித்தபோது புருஷோத்தமன் கூர்மரூபமாய் மாமேருவைத்தாங்கி ஆதாரசிலைபோற் கிடந்து பிரபஞ்சத்துக்கு ஆதாரமும் அதற்குக் கர்த்தாவும் நாமே என்று அகங்கரித்த இடத்து,—ஆம் எனுர் அன்றும் என்னுர் அமரரும் ஆனுர் பார்த்து தாம் அ நாள் ஆமையாரை தகர்த்து ஓடு தரித்தார் அன்றே—விஷ்ணுவின் கருவத்தைப் பார்த்தருளிக் கர்த்தாவாம் என்றும் அன்றென்றும் சொல்லாராய் அந்தநாளிலே ஆமையைத் தகர்த்து அந்த ஓட்டை என்புமாலையோடு அணிந்தார் தேவரூபருமாய் அல்லருமாகிய பரமேசுவரர்; ஆதலால், இவரே கர்த்தா என்று அறிவாயாக என்றவாறு.

ஆமையாய் என்பது அமிர்தம் கடைகிறபொழுது மேருவைத்தாங்கி அடைகல்லாய்க் கிடந்த பலத்தாலே

காமே ஆதாரம் என்று செருவித்த கதைக்கும் ஆம். ஆம் எனுர் அன்றும் என்னுர் அமரும் அரனுர் பார்த்து என்பது தேவர்களும் ஆம் அன்று என்று சொன்னுர்களில்லை, அரனும் பார்த்தருளி எனப் பொருளுரைப்பினுமாம் அரனுர் எனவும் பாடம்.

இச் செய்யுள் கூர்மரூபத்தைச் சங்கரித்தது கூறிற்று. (11)

செய்யுள் — 281

எழுதல மிடந்து பன்றி
யாயிருங் கொம்பி லேற்றுத்
தொழுதுல கிறைஞ்ச நின்ற
சோதிநா னென்ற போதன்
றழுதல மந்து வீழ
அருங்கோடு பறித்த ணிந்தான்
கழுதல மந்து காட்டில்
ஆடிடுங் கடவு ளன்றே.

என்பது: எழு தலம் இடந்து பன்றி ஆய் இரு கொம்பில் ஏற்று தொழுது உலகு இறைஞ்ச நின்ற சோதி நான் என்றபோது – ஒரு பிரளயத்து விஷ்ணு வராக மூர்த்தியாய் அதல விதல சுதல தராதல இரசாதல மகாதல பாதலம் என்னப்பட்ட ஏழு பூமிகளையும் கீண்டு பெரிய கொம்பிலே ஏற்றுக் கொண்டு நின்ற பராக்கிரமத்தினுலே பிரபஞ்சத்தாரால் வணங்கி வழிபாடு செய்தற்கு வீடுபேருய் நின்ற கர்த்தா யானல்லது வேறில்லை என்று கர்வித்தபோது,—அன்று அழுது அலமந்து வீழ அரு கோடு பறித்து அணிந்தான் கழுது அலமந்து காட்டில் ஆடிடும் கடவுள்

அன்றே — உடனே சோகத்தினுல் துக்கித்துப் பூமியிலே விழும்படி அப் பன்றிக் கோட்டைப் பறித்து அணியாக அணிந்து கொண்டான் பேய் சுழன்றாடும் காட்டில் ஆடலை விரும்பின கர்த்தா என்றவாறு.

அலமந்து — பிரமித்து, கழுது அலமந்து — பேய் உழன்று.

இச் செய்யுள் வாராக மூர்த்தியைச் சங்கரித்தது கூறிற்று. (12)

செய்யுள் — 282

இடங்கடா வுளனே மாலென்
  றிரணியன் தூணை யெற்ற
உங்கள்தா மோத ரன்றான்
  உருநர சிங்க மாகி
எங்கடா போவ தென்று
  உடல்பிளந் திறையா னென்ன
அங்கடா சிம்பு ளாகி
  எடுத்தடர்த் தான ரன்றான்.

என்பது: இங்கு அடா உளனே மால் என்று இரணியன் தூணை எற்ற உங்கள் தாமோதரன் தான் உரு நரசிங்கம் ஆகி எங்கு அடா போவது என்று உடல் பிளந்து இறை யான் என்ன — ஒரு காலத்திலே இரணியனுகிய அசுரன் இவ்விடத்தில் உங்கள் புருஷோத்தமன் உளனே? என்று தூணைத் தட்டிக் காட்ட உங்கள் தாமோதரனுகிய புருஷோத்தமன் அந்தத் தூணிலே நாரசிங்க ரூபமாகத் தோன்றி இரணியனை, ஏடா! இனி எங்கே போவாய் என்று

*பிடித்து உடலைப் பிளந்து போடுதலால் உண்டான கருவத்தாலே பிரபஞ்சத்துக்கு நாமே கர்த்தா என்ன,—அங்கு அடா சிம்புள் ஆகி எடுத்து அடர்த்தான் அரன் தான் – அவ்விடத்துச் சிம்புள் என்னும் வடிவுகொண்டு நாரசிங்கத்தை எளிதாகத் தூக்கிச் சங்கரித்துத் தோலை ஆசனமாகக் கொண்டான் பரமேசுவரன் என்றவாறு.*

இச் செய்யுள் **நாரசிங்கத்தைச் சங்கரித்தல் கூறிற்று.** (13)

செய்யுள் — 283

தானமென் றிரந்து செல்லத்
 தனக்குமூ வடிகொ டுப்ப
வானமு மளந்து கொண்டு
 மாபலி தன்னைப் பின்னை
ஈனமாஞ் சிறையி லிட்டான்
 இறையன்றோன் றீங்தோர் தங்கட்
கூனஞ்செய் திடுவோர் தாங்கள்
 உத்தம ரல்ல ராகும்

என்பது: *தானம் என்று இரந்து செல்ல தனக்கு மூ அடி கொடுப்ப – ஒருகாலத்திலே புருஷோத்தமன் வாமன வடிவைக்கொண்டு மாபலியிடத்திலே தானம் என்று சொல்லி இரந்துகொண்டு செல்ல அவன் தானமாக மூவடி மண் கொடுப்ப,—வானமும் அளந்து கொண்டு மாபலி தன்னை பின்னை ஈனம் ஆம் சிறையில் இட்டான் இறை அன்று – தானம் என்று பெற்றுப் பூமி அந்தர சுவர்க்கங்களையும் ஓரடியாலே அளந்து*

கொண்டு மற்றை அடிக்கு இடமில்லையென்று மாபலி யைக் குற்றமான சிறையிலிட்டான் ஆதலால் அவன் கர்த்தா அல்லன்; அஃது யாங்ஙனம்? என்னில்,— ஒன்று ஈந்தோர் தங்கட்கு ஊனம் செய்திடுவோர் தாங்கள் உத்தமர் அல்லர் ஆகும் – ஒருவர் ஒன்றனைத் தானம் செய்தால் அதனை ஏற்றுக்கொண்டவர் தானம் செய்தவருக்கு நன்மை செய்தலன்றித் தீமை செய் வோர் உத்தமரல்லர்; ஆதலால், அவன் கர்த்தாவல்லன் என்றவாறு.

வாமனரூபம் – கிருத்திருமரூபம். ஊனம் செய்திடுகை— செய்ந்நன்றி கோறல்.

இச் செய்யுள் தானம் செய்தார்க்கு அகிதம் செய்வான் கர்த்தா அல்லன் என்று மறுத்துக் கூறிற்று. (14)

செய்யுள் — 284

மாயமான் தன்னைப் பொய்ம்மான்
எனவறி யாத ரக்கன்
மாயையி லகப்பட் டுத்தன்
மனைவியைக் கொடுத்தான் றன்னை
மாயைக்குக் கர்த்தா வென்பை
மதிகெட்டங் கவனைக் கொன்று
நாயனுர் தமைப்பூ சித்தான்
கொலைப்பாவ நணுகி டாதே.

என்பது: மாயமான் தன்னை பொய்ம்மான் என அறியாது அரக்கன் மாயையில் அகப்பட்டு தன் மனை வியை கொடுத்தான் தன்னை மாயைக்கு கர்த்தா

என்பை — ஒருகாலத்திலே இராமனாய் அவதரித்து இலக்குமியும் தானும் வனசரிதராகித் திரியும் நாளில் இராவணன் இராமனை நீக்கி இலக்குமியை அபகரித்துக் கொள்வான் ஓர் பொய்ம்மானை ஏவ அந்த மானை இராக்ஷதமாயை என்று அறியாமல் அம்மானின் பின்னே போய்த் தன் மனைவியைப் பிடி கொடுத்தானை மாயைக்குக் கர்த்தா என்று கூறுவாய்,—மதி கெட்டு அங்கு அவனை கொன்று நாயனார் தமை பூசித்தான் கொலை பாவம் நணுகிடாது ஏ — இலக்குமி நீங்குகை யாலே மயக்கத்தை யுடையனாய் இலங்கையிற் சென்று, இராவணனையும் அவன் சேனையையும் கொன்று கொன்ற பாவம் நீங்கச் சேதுவிலே வந்து, பரமேசுவரனை அருச்சித்து வினையைக் கெடுத்துக் கொண்டான் கர்த்தா அல்லன் என்றவாறு.

இச் செய்யுள் இராமனாய் இரக்ஷித்தான் என்பதனை மறுத்துக் கூறிற்று. (15)

செய்யுள் — 285

பரசுடன் பிறந்தான் தானும்
பத்தனாய்ப் பரசி னாலே
அரசறுத் தரனை நோக்கி
அருந்தவம் புரிந்தா னன்று
பரசிய பரசு ராமன்
பலதேவ னுலக மெல்லாம்
முறைசெயு முமையாள் கோனை
உண்ணினைந் தியோகி னின்றான்.

என்பது: பரசுடன் பிறந்தான் தானும் பத்தன் ஆய் பரசினாலே அரசு அறுத்து அரனை நோக்கி

அருந்தவம் புரிந்தான் அன்று—ஒரு காலத்திலே விஷ்ணு மழுவுடன் பிறந்து பரசுராமன் எனப் பெயரை உடைய னுய்ச் சிவபத்தனுய் மழுவைக்கொண்டு இராசாக்களை அறுத்து, அந்த இரத்தத்திலே ஸ்நானம் செய்து, அந்தத் தோஷம் தீரப் பரமேசுவரனை நோக்கி அருந் தவம் புரிந்தான் அன்று,—பரசிய பரசுராமன்—பிரபஞ் சம் போற்றத்தக்க பரசுராமனும்,—(பரசிய) பலதே வன் உலகம் எல்லாம் உரை செயும் உமையாள் கோனை உள் நினைந்து யோகில் நின்ருன்—(பிரபஞ்சம் போற்றத் தக்க) பலபத்திர ராமனும் முப்பத்துமுக்கோடி தேவர் களும் பிரபஞ்சங்களும் வழிபாடு செய்யும் உமையவள் மணுளனை ஞானக் கண்ணுலே கண்டு யோகத்தில் இருந்தே இராச்சியம் செய்தான் என்றவாறு.

அன்று — அந்நாளில், பலதேவன் — பலபத்திர ராமன் உலமெல்லாம் — உயர்ந்தோரெல்லாம்

இச் செய்யுள் பரசுராமனுய் இரக்ஷித்தான் என்பதனை மறுத்துக் கூறிற்று. (16)

செய்யுள் — 286

ஓதிய வாசு தேவர்
தமையுப மனியு தேவர்
தீதிலா நோக்கஞ் செய்து
சிவகரஞ் சிரத்திற் சேர்த்தி
ஆதிபா லடிமை யாக்க
அரியுடல் பிராண னத்தம்
ஈதெலாங் கொண்ணீ யென்றங்
கிறைஞ்சின ரறிந்தி டாயே.

என்பது: ஓதிய வாசுதேவர் தமை உபமன்னியு தேவர் தீது இலா நோக்கம் செய்து சிவகரம் சிரத்தில் சேர்த்தி ஆதி பால் அடிமை ஆக்க – புருஷோத்தமன் வாசுதேவராய்த் துவாரகாபுரியிலே யிருக்க வியாக்கிர பாத முனிவர் புத்திரராகிய உபமன்னியு மகாருஷி கயிலாயத்துக்கு எழுந்தருள அவரை வாசுதேவர் கண்டு 'எங்கே எழுந்தருளுவது' என்று கேட்ப, அவரும் 'கயிலாயத்துக்குப் போகிறோம்' என்ன, வாசுதேவரும் 'கயிலாயத்திற்குச் செல்லாமல் இங்கே கண்டிருக்க அருள் செய்யவேண்டும்' என்று வணங்க, உபமன்னியு மகாருஷியும் குற்றமற்ற ஞானக்கண்ணாலே தீக்ஷிப்பித்து சிவஹஸ்தம் சிரத்தில் வைத்துத் தரிசிப்பித்து அவரைச் சிவபத்தராக்க,—அரி உடல் பிராணன் அத்தம் ஈது எல்லாம் கொள் நீ என்று அங்கு இறைஞ்சினார் அறிந்திடாய் ஏ – வாசுதேவரும் ஞானபூரணராய் என் சரீரம் அர்த்தம் பிராணன் இவையெல்லாம் கொண்டருள வேண்டும் என்று தோத்திரம் செய்து வணங்கிச் சிவபத்தராய் இருந்தார் என்று அறிவாயாக என்றவாறு.

**இச் செய்யுள் வாசுதேவரையும் கர்த்தா அல்லர் என்று மறுத்துக் கூறிற்று.** (17)

செய்யுள் — 287

பின்வரும் பரிதா ருகி
அரியென்றாய் பின்பு வந்தால்
என்வரு மீச ருலென்
றறிகிலோ மிவுளி யார்க்கு

முன்வரு மவதா ரங்கள்
முடிந்தமை யறிந்தா யன்றே
பொன்வருஞ் சடையி னன்றன்
புகழெங்கும் புக்க தன்றே.

என்பது: *பின் வரும் பரி தான் ஆகி அரி என்ருய் பின்பு வந்தால் என் வரும் ஈசனுல் என்று அறிகிலோம் இவுளியார்க்கு — அந்தவிஷ்ணு வருகிறயுகத்துக் குதிரையாக வருவன் என்ருய் அப்படி வந்தால் பரமேசுவரனுலே அந்தக் குதிரைக்கு யாது வரும்? என்று அறிகிலோம்,—முன் வரும் அவதாரங்கள் முடிந்தமை அறிந்தாய் அன்றே பொன் வரும் சடையினன் தன் புகழ் எங்கும் புக்கது அன்று ஏ — முன்பு வந்த அவதாரங்களில் உண்டானமை நீ கேட்டறிந்தாய்; யாம் இங்ஙனம் சொன்ன முறைமையால் பொன் போன்ற கொன்றைப்பூவைத்தரிக்கப்பட்ட திருச்சடா பாரத்தையுடையவன் கீர்த்தியே எங்கும் விளங்கிற்று என்றவாறு.*

*பொன் வரும் — பொற்பிரபை வரும் என உரைப்பினுமாம். என்வரும் என்பது — நிக்கிரகமோ? அநுக்கிரகமோ? என்றது.*

*இச் செய்யுள் குதிரையாய் வந்து இரக்ஷிப்பான் அரி என்பதனை மறுத்துக் கூறிற்று.* (18)

*செய்யுள்* — 288

கைவரை மூல மேயோ
எனக்கரிக் குதவுங் காட்டின்
மொய்வரை யெடுத்தான் மூல
மாயிட வேண்டு மோதான்

ஐயனே முறையோ வென்றால்
அரசனே வங்குச் செல்வான்
வையகங் காப்பான் செய்கை
வழக்கன்றோ வூர்காப் பான்போல்.

என்பது: கைவரை மூலமே ஓ என கரிக்கு உதவும் காட்டில் மொய்வரை எடுத்தான் மூலம் ஆயிட வேண்டுமோ தான் — ஒருயானை மடுவின்கண் முதலை வாயில் அகப்பட்டு; மூலமே! என்று கூப்பிட, ஓடிச் சென்று, அவ்வியானையினது இடரைக் கெடுத்தது கொண்டே வனத்தில் வரையை எடுத்து, ஆன்மாவை யைக் காத்த விஷ்ணு கர்த்தா ஆயிடவேண்டுமோ? அவன் கர்த்தா அல்லன், அஃது எங்ஙனம்? என்னில்,— ஐயனே முறையோ என்றால் அரசனே அங்கு செல்வான் வையகம் காப்பான் செல்கை வழக்கு அன்றோ ஊர் காப்பான் போல் — இராஜாவை நோக்கி ஒருவன் முறையோ! என்று கூப்பிட்டால், அம்முறை கேட்பான் இராஜாவோ? அன்றே! பிரபஞ்சத்தைப் பரமேசுவ்ரன் ஆக்கினையினாலே இரக்ஷிப்பானாகிய விஷ்ணு ஓர் ஆன்மாவுக்கு இடர் வந்தால் அதனை ஒழிக்குமது என் போல? என்னில், அரசனது ஆக்கினையாலே நின்று ஊரைக்காக்கும் காவற்காரன் ஒருவர்க்குத் தீமை வந்த வழி அதனைச் சென்று தீர்ப்பது போலாம் என்றவாறு

அன்று ஓ — அசை.

இச்செய்யுள் ஆனை மூலம் என்றது பரமேசுவரனை நோக்கியே என்று கூறிற்று.

(19)

செய்யுள் — 289

அன்றியு மானை மாலுக்
கடிமையாய் மூல மேயோ
என்றிடு மதனல் மால்தான்
இறைவனென் றியம்ப வேண்டா
உன்றனக் கடிமை யானுர்
உன்னையெம் பெருமா னென்ருல்
இன்றுநீ வணங்கு முன்றன்
எம்பெரு மானே நீயே.

என்பது: அன்றியும் ஆனை மாலுக்கு அடிமை ஆய் மூலமே ஓ என்றிடும் அதனல் மால்தான் இறைவன் என்று இயம்பவேண்டா — அது அன்றியும் விஷ்ணுவுக்கு யானையானது அடிமையானபடியாலே தன் கர்த்தாவை மூலமே என்று கூப்பிட்டதாயின் அது கொண்டு விஷ்ணுவை மூலமாகிய கர்த்தா என்று சொல்லவேண்டா; அஃது எங்ஙனம்? என்னில்,— உன்தனக்கு அடிமை ஆனுர் உன்னை எம்பெருமான் என்ருல் இன்று நீ வணங்கும் உன் தன் எம்பெருமானே நீ ஏ — உன் அடியான் உன்னை எம்பெருமான்! என்று அழைத்தால் இப்பொழுது நீ வணங்குகிற உன்னுடைய புருஷோத்தமன் ஆவையோ நீ? அன்றே! ஆதலால், யாவர்க்கும் மூலம் என்பது பரமேசுவரனே ஆம் என்றவாறு.

இச் செய்யுள் இரண்டும் ஒரு தொடர்ச்சியாய் மூலம் என்பதனையும், புருஷோத்தமன் உதவினன் என்பதனையும் மறுத்துக் கூறிற்று. (20)

செய்யுள் — 290

ஞாலமுண் டவனு லுண்டார்
　　நல்லமு தமர ரென்றாய்
வேலைநஞ் செழமா லாதி
　　விண்ணவர் வெந்து சென்ற
காலமின் றெமக்குக் காவாய்
　　கடவுளே யென்ன நாதன்
ஆலமுண் டிலனேல் தேவர்
　　அமுதமுண் டிடுவ தெங்கே.

என்பது: ஞாலம் உண்டவனால் உண்டார் நல் அமுது அமரர் என்றாய் வேலை நஞ்சு எழ மால் ஆதி விண்ணவர் வெந்து சென்று அகாலம் இன்று எமக்கு காவாய் கடவுளே என்ன — பூமியை விழுங்கிய சாமர்த்தியத்தை உடையவனாலே தேவர்கள் நல்ல அமுதத்தைப் புசித்தார்கள் என்றாய்; சமுத்திர மர்த்தனத்திலே விஷம் பிறக்க விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாம் உஷ்ணம் பொறுக்கமாட்டாமல் ஓடிவந்து அகால மரணம் எங்களுக்கு இன்று சம்பவித்திருக்கிறது எங்களை இரக்ஷித்து அருளவேண்டும் கர்த்தாவே ! என்ன கிருபை பண்ணி,—நாதன் ஆலம் உண்டிலனேல் தேவர் அமுதம் உண்டிடுவது எங்கே — பரமேசுவரன் அந்த விடத்தை அமுது செய்திலனாயின் விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் பிழைத்துப் பின்பு அமுதத்தை உண்டாக்கி அதனை உண்பது எங்ஙனம் ? சொல்வாய் என்றவாறு

இச் செய்யுள் பரமேசுவரனே கர்த்தா என்பது கூறிற்று. (21)

செய்யுள் — 291

அஞ்சியன் றரிதா னோட
அசுரனைக் குமர னாலே
துஞ்சுவித் தொருபெண் ணாலே
தாரக னுடறு ணிப்பித்
தஞ்சிடப் புரந்தீ யூட்டிச்
சலந்தர னுடல்கீண் டோத
நஞ்சினை யுண்டு மன்றோ
நாயக னுலகங் காத்தான்.

என்பது: *அஞ்சி அன்று அரி தான் ஓட அசுரனை குமரனாலே துஞ்சுவித்து*—சூரபன்மாவுக்குப் பயப்பட்டு விஷ்ணு திருப்பாற்கடலை நீங்கிப் போய்ப் பரமேசுவரன்பால் முறையிடச் சுப்பிரமணியக்கடவுளை உண்டாக்கி அக்கடவுளாலே சூரபன்மாவைச் சங்கரிப்பித்தும், *ஒரு பெண்ணாலே தாரகன் உடல் துணிப்பித்து*—தாரகன் என்னும் அசுரனுக்கு விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாம் பயப்பட்டுப் போய்ப் பரமேசுவரன்பால் முறையிட அப்போது காளி என்னும் சத்தியைக் கொண்டு தாரகன் உடலைச் சேதிப்பித்தும்,—*அஞ்சிட புரம் தீ ஊட்டி* – திரிபுரத்து அசுரர்க்குப் பயப்பட்டு விஷ்ணு முதலாகிய தேவர்கள் எல்லாரும் பரமேசுவரன்பால் முறையிடத் திரிபுரத்தைச் சுட்டும்,—*சலந்தரன் உடல் கீண்டு* – சலந்தரன் என்னும் அசுரன் விஷ்ணுவைத் திருப்பாற் கடலில் பள்ளிகொள்ள வொட்டாமல் ஓட்டித்திரிய விஷ்ணு சலந்தரனுக்குப் பயப்பட்டுப்போய்ப் பரமேசுவரன்பால் முறையிடச் சக்கரத்தாலே சலந்தரன் உடலைப் பிளந்தும்,—*ஓத*

நஞ்சினை உண்டும் – சமுத்திரமர்த்தனத்திலே பிறந்த விடம் பதினாலு உலகத்தையும் சுட அந்த விடத்தை அமுது செய்தும்,—அன்றோ நாயகன் உலகம் காத்தான் – இப்படியன்றோ! பரமேசுவரன் பிரபஞ்சத்தை இரக்ஷித்தான் என்றவாறு.

உண்டும் என்ற உம்மை கடைநிலைத்தீபகம்.

இச் செய்யுள் பிரபஞ்சத்துக்கு இரக்ஷகர்த்தாவும் பரமேசுவரனே என்பது கூறிற்று. (22)

செய்யுள் — 292

பார்த்தனு ரிரத மேறிப்
 படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்தவம் பாலே யெய்து
 கொன்றரச சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயை
 செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய்
 புரங்கொனூன் மதித்தி டாயே.

என்பது: பார்த்தனூர் இரதம் ஏறி படைதனை பார்த்து சார்பை கூர்த்த அம்பாலே எய்து கொன்று அரசு ஆளேன் என்ன – அருச்சுனன் யுத்தம் செய்வதாகத் தேரில் ஏறி நின்று சத்துருக்களைப் பார்த்துச் சத்துருக்களாகத் தோன்றினாரெல்லாம் என்னுடைய மித்துருக்களாக இருத்தலால் இவர்களைக் கூரிய அம்பாலே கொன்று இராச்சியம் செய்வதில்லை யென்று சொல்ல,—தேர்தனில் இருந்து மாயை செய்து மால்

கொல்ல செப்பும் வார்த்தை நூல் ஆக்கி கொண்டாய் புரம் கொல் நூல் மதித்திடாய் ஏ — அவனுக்குத் தேர்ப்பாகனுகிய கிருஷ்ணன் அவன் மனம் தேறிடக், கொல்வது காரணமாகச், சர்வமும் நாமே கொல்லு வோம், நீ அன்று, என்று மயங்கச் சொன்ன சொல் லேயே, நூலாக்கிக் கொண்டாய் ஆயின்; திரிபுரத்துள் ளார் சிவபூசையைக் கைவிடும் பொருட்டாக, விஷ்ணு புத்த முனியாக இருந்து, தெய்வம் ஒன்று இல்லை என்று மயக்குவித்துச் சிவலிங்கத்தைக் கைவிடுவித்த நூலையும் நீ நூலாகக் கொள்வாயாக என்றவாறு.

இதனுல் திரிபுரத்து அசுரர்களைச் சிவபத்தி குலைத்தும், தேரிலிருந்து அருச்சுனனை மயக்குரையால் பேதித்தும் ஜயித்தது கர்த்தாவுக்கு இயல்பன்று என்பது கருத்து.

இச் செய்யுள் ஞானநூல் உரைத்தான் என்பதனையும், கிருஷ்ணன் கர்த்தா என்பதனையும் மறுத்துக் கூறிற்று.(23)

செய்யுள் — 293

மாயைதா னுயிர்க ளாகா
துயிர்கடா மாயை யாகான்
மாயவ னிவைதா னுகான்
இவைதானு மாய னுகா
ஏயுமா மநாதி யாக
இறைபசு பாச மென்றே
தூயவன் கலப்பி னாலே
எல்லாமாய்த் தோன்று வன்காண்.

என்பது: மாயை தான் உயிர்கள் ஆகாது — மாயை யானது ஜடமாகையால் ஆன்மாக்கள் ஆகாது,—உயிர்

கள் தாம் மாயை ஆகா — ஆன்மாவும் இச்சா ஞானக் கிரியைகளை உடைத்து ஆகையால் ஜடமாகிய மாயை ஆகா,—மாயவன் இவை தான் ஆகான் — புருஷோத்தமன் ஞானசொரூபி என்று நீ கூறுகையால் ஜடமாகிய மாயையும், சுத்தனாகிய ஆன்மாவும் ஆகி நில்லான்,— இவை தானும் மாயை ஆகா — மாயையும் ஆன்மாவும் கூடிப் புருஷோத்தமன் ஆகமாட்டா,—ஏயும் ஆம் அநாதி ஆக இறை பசு பாசம் என்று ஏ — மாயையாகிய பாசமும் ஆன்மாவாகிய பசுவும் இவையிற்றை நடத்துவானாகிய பதியும் அநாதியிலே பொருந்தின ஆகையால்,—தூயவன் கலப்பினால் ஏ எல்லாம் ஆய் தோன்றுவன் காண் — நின்மலனாகிய கர்த்தா சம்பூரணன் ஆகையாலே சர்வமும் தானாகித் தோன்றுவன் அல்லது ஜடமும் ஆன்மாவுமாய்ப் பிரிந்து நில்லான் என்றவாறு.

*சித்து அசித்தாகாது, அசித்துச் சித்தாகாது, சித்திற் சேஷ்டிதனே கர்த்தா: மாயவன் ஆன்மவர்க்கம் என்க.*

*இச் செய்யுள் புருஷோத்தமன் மாயையாயும், மாயைக்குக் கர்த்தாவாயும் நிற்பன் என்பதனையும் மறுத்துக் கூறிற்று.* (24)

செய்யுள் — 294

பாசத்தைப் பசுக்கள் விட்டுப்
பதியினை யடைய முத்தி
ஆசற்ற வாக மங்கள்
அறைந்திட வறிவின் றிங்கே

மாசற்ற மால்மா சாகி
மாயையு முறுவ னென்னில்
கூசிப்பின் கொள்ளார் நல்லோர்
உனக்காமிக் குழப்பு நூலே.

என்பது: *பாசத்தை பசுக்கள் விட்டு பதியினை அடைய முத்தி ஆசு அற்ற ஆகமங்கள் அறைந்திட — பாசமாகிய அஞ்ஞானங்களைப் பசுவாகிய ஆன்மாக்கள் கைவிட்டுப் பதியாகிய கர்த்தாவைக் கூடுதலே முத்தி என்று குற்றமில்லாத ஆகமங்கள் சொல்லா நிற்ப,— அறிவு இன்று இங்கே மாசு அற்ற மால் மாசு ஆகி மாயையும் உறுவன் என்னில் — இங்கே மாலாகிய புருஷோத்தமன் அஞ்ஞானமுமாய், அஞ்ஞானத்தோடு கூடிய ஆன்மாவுமாய் நிற்பன் என்று நீ அறிவின்றியே சொல்லின்;—கூசி பின் கொள்ளார் நல்லோர் உனக்கு ஆம் இ குழப்பு நூல் ஏ — இப்படி வேதாகமங்களுக்குப் பொருந்தாத மயக்கநூல் உனக்கே ஆவது, இதனை நூல் என்று சொல்ல நாணிப் பின்பு இதன் அர்த்தமும் கொள்ளார் அறிவுடையோர் என்றவாறு.*

*இச் செய்யுள் பதி பசு பாசமும் தானேயாகி நிற்பன் என்பதனை மறுத்தக் கூறிற்று.* (25)

*செய்யுள்* — 295

பிரமனா னென்ற போது
பிரமனே டரியும் கூடிப்
பரமனு ரிகலி டாமே
பார்த்திடர் பண்ணி நின்ற

உரமனு ரழலு ருபம்
தன்னையு முணர மாட்டான்
கரமனு டிகிரி யேற்றான்
கடவுளென் றறைவ தென்னே.

என்பது: *பிரமம் நான் என்றபோது பிரமனோடு அரியும் கூடி — ஒருகாலத்துப் பிரமாவும் விஷ்ணுவும் கூடித் தங்களில் மாறுபட்டுச் சிருஷ்டிக்கையாலே நானே கர்த்தா என்றும் இரக்ஷிக்கையாலே நானே கர்த்தா என்றும் சொல்ல,—பரமனார் இகலிடாமே பார்த்து — பிரம விஷ்ணுக்கள் தம்மில் மாறுபடாமல் இவர்கள் அகந்தையைக் கெடுப்பான் திருவுளம்பற்றி,— இடர்பண்ணி நின்ற உரம் அனார் அழல் உருபம் தன்னையும் உணரமாட்டான் — உங்களில் நம்முடைய அடி முடி அறிந்தவன் கர்த்தா என்றருளி, ஒரு தழற்பிழம் பாய் நிற்கப், பிரமா திருமுடியைக் கண்டுவருவேன் என்று அன்னமாகப் பறந்து தேடியும், விஷ்ணு சீர்பாதம் காண்பேன் என்று பன்றியாய்ப் பாதாளத்தைக் கீண்டும், காணாமல் இருவருக்கும் வியாகூலத்தை உண்டாக்கி நின்ற உரத்தையுடைய பரமேசுவரனது திருவுரு இன்னபடி என்று அறியமாட்டானான்,— கரம் மன் ஆள் திகிரி ஏற்றான் கடவுள் என்று அறைவது என் ஏ — சக்கரத்தைக் கையிலே ஆட்சி நிலைபெற ஏந்தின விஷ்ணுவைக் கர்த்தா என்று சொல்லுவது நீ ஏதுகொண்டு? என்றவாறு.*

**இச் செய்யுள் புருஷோத்தமன் பன்றியாய் இடந்தும், பிரமா அன்னமாய்ப் பறந்தும் காண்டற்கரிய பரமேசுவரனே கர்த்தா என்பது கூறிற்று.** (26)

செய்யுள் — 296

தேரரி யிறையன் றென்றே
சிவமுனி ததீசி யோடே
போர்புரிந் திகல மாலைப்
புக்கவன் பிடித்த டித்து
மார்பினி லுதைத்து மால்தன்
சக்கரம் வயிற்றில் வைத்திட்
டேர்மலி படைப டைத்திட்
டரிபட வெறிந்தா னன்றே.

என்பது: *சிவமுனி ததீசியோடே போர்புரிந்து இகல மாலை—புருஷோத்தமனுக்கும் சிவபத்தனாகிய ததீசி மகாருஷிக்கும் ஓர் காரணத்தால் யுத்தமுண்டாய் மகாயுத்தம் செய்யப் புருஷோத்தமனை,—புக்கு அவன் பிடித்து அடித்து மார்பினில் உதைத்து மால்தன் சக்கரம் வயிற்றில் வைத்திட்டு – ததீசி மகாருஷி உள்புக்குப் புருஷோத்தமனைப் பிடித்துப் பிரகரித்து, மார்பிலே உதைத்துச், சக்கரத்தைப் பறித்து முறித்து அப்புருஷோத்தமன் வயிற்றிலே வைத்து,—ஏர் மலி படை படைத்திட்டு அரி பட எறிந்தான் அன்று ஏ — அழகு பொருந்தினதோர் ஆயுதத்தைத் தானே உண்டாக்கிப் புருஷோத்தமன் மயங்கிவிழ எறிந்தான் மகாருஷி; ஆதலால்,—அரி இறை அன்று என்று தேர் — புருஷோத்தமன் கர்த்தா அல்லன் என்று தெளிவாயாக என்றவாறு.*

*அவன் விட்ட சக்கரம் உடைந்துபோகத் தருப்பையைப் படையாகப் படைத்து, அவன் ஜயம் தொலைத்தான் என்றது.*

இச் செய்யுள் ததீசி மகாருஷிக்குப் புருஷோத்தமன் சிளைப்புப் பட்டமை கூறிற்று. (27)

செய்யுள் — 297

சூலிகா ணிறைமா லல்லன்
 சூலியைத் தொழுந்துர் வாசன்
மாலினார் மார்மி திப்பத்
 திருமறு மார்ப ஞகி
நூலினார் மார்ப னேன்ருள்
 பட்டிடஞ் சுத்த மென்று
பாலினார் கடலா னுங்கே
 பரிவொடுந் திருவை வைத்தான்.

என்பது: சூலிகாண் இறை மால் அல்லன் சூலியை தொழும் துர்வாசன் மாலினார் மார் மிதிப்ப திரு மறு மார்பன் ஆகி – சூல பாணியே கர்த்தா விஷ்ணு அல்லன், சூலபாணியை வழிபாடு செய்யும் துருவாச மகாருஷி விஷ்ணுவை ஓர் காரணமாகக் கோபித்து மார்பிலே மிதிப்ப அத்துருவாச மகாருஷி பாதம்பட்ட தழும்புகொண்டே திருமறு மார்பன் என்னும் பெயரை யுடையனாகி,—நூலினார் மார்பன் னோன் தாள் பட்டிடம் சுத்தம் என்று பாலின் ஆர் கடலான் ஆங்கே பரிவொடும் திருவை வைத்தான் – திருப்பாற் கடலிலே பள்ளிகொள்ளுமவன் பிரமருஷி யின் பாதம்பட்ட இடம் சுத்தம் என்று பிரியத்துடன் மகாலக்ஷ்மியை அந்த மார்பிலே வைத்தான் ஆகையால் புருஷோத்தமன் மலசம்பந்தி என்று அறிவாயாக என்றவாறு.

இச் செய்யுள் புருஷோத்தமன் துர்வாச மகாருஷிக்குச் சளைப்பு அடையப்பட்டமை கூறிற்று. (28)

செய்யுள் — 298

தவகுண னய்மால் சென்று
தீவியைச் சக்க ரத்தால்
அவகுணஞ் செய்தன் றோடப்
பிருகுவந் தவளைப் பார்த்துச்
சிவனல தறியே னகில்
இதுசெய்தோன் செறிக பத்துப்
பவமென மொழிய மாலும்
பயப்பட்டுப் பதறி வீழ்ந்தான்.

என்பது: தவ குணன் ஆய் மால் சென்று தீவியை சக்கரத்தால் அவகுணம் செய்து அன்று ஓட— சிவபத்தரான பிருகு என்னும் மகாருஷியினுடைய பத்தினியாகிய திவ்வியையைப் புருஷோத்தமன் ஆசைப்பட்டு அவளைக் கிரீடிக்கும்படி இருடி இல்லாத சமயத்திலே செல்ல அந்தத் திவ்வியை உடன்படாத படியினலே அவள் உடம்பிலே சக்கரம் கொண்டு குணாகிதமாகிய குறிகளையிட்டுப்போக,—பிருகு வந்து அவளைப் பார்த்து சிவன் அலது அறியேன் ஆகில் இது செய்தோன் செறிக பத்து பவம் என மொழிய மாலும் பயப்பட்டு பதறி வீழ்ந்தான் – பிருகுமகாருஷி அவள் உடம்பைக் கண்டு "யான் சிவனல்லது வேறொரு கடவுள் இல்லை என்னும் சிவபத்தன் மெய்யே ஆகில் இது செய்தவன் பத்துப்பிறப்புப் பிறக்கக் கடவன்" என்று சபிக்கப் புருஷோத்தமனும் பயப்பட்டுத் துக்கித்து வீழ்ந்தான் என்றவாறு.

*தவகுணம் — தவவேடம். அவகுணம் — துர்க்குணம்.* (29)

*செய்யுள்* — 299

பயப்பட்டுப் பரனை நோக்கித்
தவம்பண்ணப் பரனுந் தோன்றி
நயத்தஞ்ச லென்று வேண்டிற்
றென்னென நார ணன்றான்
பெயர்த்தருள் பிருகு சாபம்
எனவன்பன் பிருகு வென்ன
உயக்கொணீ பவந்தோ றென்ன
ஓமென்றா னுலக நாதன்.

என்பது: *பயப்பட்டு பரனை நோக்கி தவம் பண்ண பரனும் தோன்றி நயத்து அஞ்சல் என்று வேண்டிற்று என் என — அந்தப் பிருகு முனிவர் சாபத்தினாலே பயப்பட்டுப் பரமேசுவரனை நோக்கித் தவஞ்பண்ணப் பரமேசுவரனும் அநுக்கிரகித்துப் பயப்படாதே! உனக்கு வேண்டியது யாது? என்று கேட்ப,— நாரணன் தான் பெயர்த்து அருள் பிருகு சாபம் என அன்பன் பிருகு என்ன உயக்கொள் நீ பவம் தோறும் என்ன ஓம் என்றான் உலகநாதன் — புருஷோத்தமன் பிருகு சாபத்தைத் தீர்த்தருள வேண்டும் என்று விண்ணப்பம் செய்யப், பரமேசுவரனும் பிருகு என்னுடைய பத்தன் என்று அருள, ஆனால் அவன் சாபத்தாலே எடுக்கும் பிறப்புத் தோறும் என்னை இரக்ஷித்தருள வேண்டும் என்ன, ஜகந்நாதனாகிய பரமேசுவரனும் அப்படியே இரக்ஷிக்கிறோம் என்றான் என்றவாறு.* (30)

செய்யுள் — 300

இப்படிப் பிருகு சாபத்
 தீரைந்து பிறப்பின் வீழ்ந்து
மெய்ப்படு துயர முற்று
 வருபவன் விமல னல்லன்
எப்படி யானுஞ் சொன்னேன்
 இறையரி யல்ல னென்றே
மைப்படி கண்ட னண்டன்
 மலரடி வணங்கி டாயே.

என்பது: இப்படி பிருகு சாபத்து ஈர் ஐந்து பிறப்பின் வீழ்ந்து மெய்ப்படு துயரம் உற்று வருப வன் விமலன் அல்லன் — இந்த முறைமையிலே பிருகு சாபத்தாலே ஒன்பது பிறப்புப் பிறந்து சரீரவருத்த முற்று மேலும் குதிரையாகப் பிறந்தும் ஜனன மரணப் படுபவன் மலாகிதனை கர்த்தா அல்லன்,—எ படியா னும் சொன்னேன் இறை அரி அல்லன் என்று ஏ — வேதாகம சாத்திரங்களானும் சொன்னேன் மோக்ஷ கர்த்தா விஷ்ணு அல்லன் என்றே; இனி, மோக்ஷ கர்த்தா யாவன்? என்ன விரும்புதியாயின், மை படி கண்டன் அண்டன் மலர் அடி வணங்கிடாய் ஏ — நீலகண்டன் ஆகிய மேலானவனே கர்த்தா, அவனது தாமரை மலர்போன்ற சீர் பாதத்தைச் சரியை கிரியா யோக ஞானத்தாலே வணங்கி நினது பவத்தை நீக்கிக் கொள்வாயாக என்றவாறு.

'தவகுணனாய்' என்னும் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் பிருகுவுக்குப் புருஷோத்தமன் அபஜெயப் பட்டமை கூறிற்று.

*'ஆதிதானுகி' என்னும் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் பாஞ்ச ராத்திரி மதத்தை மறுத்துக் கூறிற்று.* (31)

**பதினான்காவது**
**பாஞ்சராத்திரி மதமறுதலை முற்றிற்று.**

பாயிரம் உள்படத்திருவிருத்தம்—301.

---

ஸ்ரீ அருணந்திதேவநாயனார்
அருளிச்செய்த
**சிவஞான சித்தியார் பரபக்கம் மூலமும்**
**திருவொற்றியூர் தத்துவப்பிரகாசர் செய்த**
**உரையும் முற்றிற்று.**

---

## சிறப்புப்பாயிரம்

நந்துவயல் ஒற்றியூர் ஞானப்ர காசனருட்
சித்தி படவுரையைச் செப்பியபின்—வித்தகமாம்
தத்துவப்ர காசன் பதவிருத்தி தான்செய்தான்
உத்தமர்சித் தத்தொருமை யாய்.

---

உ

# சிவஞான சித்தியார் பரபக்கம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி

எண்—பக்கஎண்


| | |
|---|---|
| அங்கியான | 69 |
| அங்ஙாம்வித்தின் | 140 |
| அஞ்சியன் | 431 |
| அணுவானவை | 254 |
| அத்தம்தெளி | 317 |
| அநாதியேலமை | 67 |
| அநாதிமுத்த | 175 |
| அந்தவாய் | 208 |
| அயன்றனை | 412 |
| அரியினொடு | 128 |
| அரிசனநூறு | 195 |
| அருமறையா | 9 |
| அருவமே | 33 |
| அருகனுக்கன | 217 |
| அருஞ்செயலி | 295 |
| அருந்தவனும் | 215 |
| அருவம்முரை | 312 |
| அருவுணர்வு | 163 |
| அருவெனில் | 111 |
| அலகின்மணி | 331 |
| அலகிறந்த | 126 |
| அலைகடல் | 402 |
| அவயவம் | 187 |
| அழிகின்றதா | 289 |
| அழித்திடும் | 117 |
| அழிந்துணர்வை | 147 |
| அழிப்பரி | 415 |
| அறத்தின் | 218 |
| அறிகின்ற | 286 |
| அறிந்திடா | 99 |
| அறியான்புரு | 392 |
| அறிவதேபொரு | 184 |
| அறிவாயகி | 322 |
| அறிவினோடு | 380 |
| அறிவுபூதம | 57 |
| அறிவுடற்குண | 58 |
| அறிவுதானுட | 70 |
| அனைத்தினையும் | 121 |
| அன்றியுமா | 429 |
| ஆசையுற்றுழல் | 78 |
| ஆதிதானாகி | 407 |
| ஆதிநடு | 5 |
| ஆதியாயருவ | 397 |
| ஆமையாய் | 419 |

| | |
|---|---|
| ஆயம்முட | 313 |
| ஆரணங்க | 364 |
| ஆர்வகோபமான | 221 |
| ஆறுகாரிய | 229 |
| ஆறுதாதுக் | 329 |
| ஆனகன்ம | 335 |
| ஆனந்தம் | 300 |
| ஆனவைம்பொறி | 55 |
| இங்கடா | 421 |
| இச்சைவெறுப் | 165 |
| இச்சையா | 409 |
| இடித்துமின்னி | 48 |
| இந்திரபுரோ | 21 |
| இந்திரியவீதி | 161 |
| இந்நூலைச் | 133 |
| இப்படிப்பி | 441 |
| இப்படியன்றி | 26 |
| இயல்புகாணிவை | 61 |
| இயம்புகின்ற | 375 |
| இயம்புநூ | 8 |
| இருபான்மைய | 252 |
| இருளிற்பழு | 324 |
| இருள்பொதிந்த | 360 |
| இலகுசோதி | 347 |
| இல்லது | 108 |
| இறந்திடு | 71 |
| இறைவனையு | 17 |
| இன்பமெய்தி | 65 |
| இன்பபூமி | 223 |
| இன்பொடு | 31 |
| ஈங்குவான் | 97 |
| ஈசனரு | 6 |
| ஈசுராய | 37 |
| ஈண்டளவை | 22 |
| ஈறிலா | 204 |
| உடல்பூத | 141 |
| உடல்வருந்த | 250 |
| உடனின்று | 283 |
| உணர்வுகாரண | 153 |
| உணர்வுசார்ந் | 95 |
| உணர்தரா | 240 |
| உண்டொரு | 263 |
| உந்தியிலயனை | 398 |
| உயிரானவை | 253 |
| உயிரினை | 102 |
| உருவமு | 30 |
| உருவியல் | 88 |
| உருவொடு | 110 |
| உருவமெலாம் | 144 |
| உருவாதி | 157 |
| உருவின்கணே | 280 |
| உரைதந்திடா | 278 |
| உரைபோற் | 314 |
| உரையானது | 305 |
| உரையான | 311 |
| உலகினைப் | 106 |
| உலகந்தா | 325 |
| உள்வழக்கில் | 94 |
| உள்ளதாவது | 47 |
| உள்ளது | 107 |
| உற்றிடும் | 262 |
| உற்றெழு | 113 |
| உன்னிய | 265 |
| உன்னினீயு | 363 |
| உன்னுகின்ற | 376 |
| ஊடுவதுணர்வ | 41 |

